எளிமை, இனிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்புகளாகும்.






பேராசிரியர் முனைவர்

ந சுப்பு ரெட்டியார்

# சைவமும் தமிழும்


SAMAYAKKURAVARGAL


THILLAI SIVAGAMIAMMAYIN SAMEDHA SRI ANANDA NADARAJAPERUMAN


SANTHANAKURAVARGAL



1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

# சைவமும் தமிழும்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

சைவத்திற்கு ஓர் உயர்விடத்தை, ஆராய்ச்சியாளர்கட்கு
நல்லதொரு புள்ளிவிவரங்களை, தமிழ்
ஆர்வலர்களுக்கு வளம்கொழிக்கும்
தமிழ்ச்சுவையை அள்ளித்தரும்
பெட்டகமாகத் திகழ்கின்றது இந்நூல்

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*




ISBN: 978-81-939270-3-8

*eBOOK ~ மின் நூல்*

# சைவமும் தமிழும்

அருங்கலைக்கோன், சடகோபன் பொன்னடி, சேவா ரத்னா,
தமிழ்ப்பேரவைச் செம்மல், கலைமாமணி, ஆய்வுத்தமிழரசு,
பொதுமறைச் செம்மல், வைணவ இலக்கிய மாமணி

பேராசிரியர் முனைவர்

**ந சுப்பு ரெட்டியார்**

**முன்னாள் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்**

தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்






1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*



கொற்றவன்குடி
உமாபதி தேவ நாயனார்

# பக்திப் படையல்

எட்டு சித்தாந்த சாத்திரங்கள்
அருளிய
கொற்றவன்குடி உமாபதிசிவத்துக்குப்

# பக்திப் படையல்

நற்றவர் பராவும் சிவபரம் பொருட்கே
நாயகம் தனைநனி விளங்கும்
பெற்றிசால் புருஷ காரமாய் விளங்கும்
பெருந்தகை இருந்தமிழ்க் குரிசில்
வெற்றிகொள் சைவ சித்தாந்த மரபை
விளங்கிடும் கதிர்மணி விளக்கம்
கொற்றவன் குடிவாழ் உமாபதி சிவத்தின்
குளிரருட் குரியதிந் நூலே.

# பதிப்புரை

தமிழ் மொழியின் வளமும் வளர்ச்சியும் சமயங்கள் சார்ந்தனவாகவே உள்ளன. தங்க இலக்கியமாம் சங்க இலக்கியம் மட்டும் சமயக் கொள்கைகளுக்கு இடம் கொடாது அகம், புறம் என்ற மக்கள் வாழ்க்கை முறையை ஒட்டி எழுந்துள்ளது. அதையடுத்து காப்பியகாலம் முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை பக்தி இலக்கியம், காப்பியங்கள், புராணங்கள், சிற்றிலக்கியங்கள் எனப் பலவகை இலக்கியங்களும் சமணம், பௌத்தம், சைவம், வைணவம், கிறித்துவம், இஸ்லாம் போன்ற சமயங்களைத் தழுவியே எழுந்துள்ளன.

இலக்கிய வரலாற்றைக் காலப்போக்கில் எழுதுவது இயல்பு. ஆனால் சமயங்கள் ஒவ்வொன்றும் தமிழை எவ்வாறு வளர்த்தன என்ற கண்கொண்டு நோக்குவது என்பது ஒருவகை.

முதன் முதலில் மறைந்த தமிழ்ப் பேரறிஞர் கிறித்துவமும் தமிழும், பௌத்தமும் தமிழும், சமணமும் தமிழும் என்ற மூன்று நூல்களை இயற்றி இத்துறைக்கு வழிகாட்டினார்.

பின்னர் இதையொட்டி இஸ்லாமும் தமிழும், வைணவமும் தமிழும் என்ற இருநூல்களும் உருவாயின.

இவை அனைத்துமே கழக வெளியீடுகளாக வெளிவந்துள்ளன.

இவற்றின் அடிச்சுவட்டில் ‘சைவமும் தமிழும்’ என்ற இந்நூல் வெளிவருகின்றது. வைணவமும் தமிழும் என்ற நூலை உருவாக்கிய பெரும்புலவர், பேரறிஞர், முதுபெரும் தமிழறிஞர் டாக்டர் ந.சுப்புரெட்டியார் அவர்களே இந்த நூலையும் உருவாக்கித் தந்துள்ளார்.

இந்நூலை உருவாக்கப் பல்வேறு மூல நூல்களையும், ஆதார நூல்களையும் படித்துப் பார்வையிட்டு, குறிப்பெடுத்து அரும்பாடுபட்டு இதனை எழுதியுள்ளார். அறுபது ஆண்டுகட்கு மேலாக எழுத்துப் பணியில் ஈடுபட்டுஎண்பதுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ள எண்பத்தைந்து அகவையையடைந்த நிலையிலும் இன்னும் உளம் தளராது எடுத்த பணியை முடித்துத் தந்துள்ளார்.

இதனைப் படித்துச் சைவப் பெருமக்களும் தமிழ் இலக்கியம் பயில்வோரும் பயன்பெற வேண்டுமென்பதே எங்கள் நோக்கம்.

**—சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்**

# அணிந்துரை

(நீதியரசர் பி.ஆர்.கோகுலகிருஷ்ணன்)

தமது தள்ளாத வயதிலேயும் தமிழைத் தள்ளாது தலைசிறந்த தமிழ் இலக்கியப் புதையல்களை அள்ளித் தந்துகொண்டு இருப்பவர் நம் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள். அவர் தமிழ் அன்னைக்குப் புனைந்துள்ள மணி மகுடத்தில் பதிந்த மற்றொரு வைரக்கல் "சைவமும் தமிழும்" எனும் இந்நூல்.

ஓருரும் ஒரு பேரும் இல்லாத ஒப்புவமை அற்ற இறையினை ஓராயிரம் நாமம் சொல்லித் தெள்ளேணம் கொட்டிய புலவர்களை, அவர்கள் வடித்துத் தந்த இலக்கியங்களை, குறிப்பாக அவ்விலக்கியங்கள் முழுமுதற் கடவுளாகச் சிவனைக் குறிக்கும் சிறப்பான இடங்களை இந்த நூலில் திறம்பட எடுத்து இயம்பி உள்ளார்.

தொல்காப்பியம் முதல் கவிமணி தேசிய விநாயகம் பிள்ளைவரை கண்ணுதற் பெருங்கடவுள் கழகமோடு அமர்ந்து பண்ணுறத் தெரிந்து ஆய்ந்த இப்பசுந்தமிழில் கண்ணுதற் பெருங்கடவுள்பற்றிய குறிப்புகளை விளக்கியுள்ள பான்மை பாராட்டுதற்குரியது.

நம்மிலே பலருக்கு, டாக்டர்.ந.சுப்புரெட்டியார் அவர்கள் வகைப்படுத்தியுள்ள முறையில் சிவனைப்பற்றிய குறிப்புகள் தெரிந்திருக்க முடியாது. தொல் காப்பியத்தில் பத்துப்பாட்டில், எட்டுத் தொகையில் கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே முக்கண்ணனின் குறிப்பினைக் காண்கிறோம். பத்துப் பாட்டில் முதலாவதாகக் கூறப் பெறும் பாட்டு திருமுருகாற்றுப்படை. இதில் 317 அடிகள் உள்ளன. மாலையின் வருணனை உள்ள அகநானூறு செய்யுள் ஒன்றில் சிவனும் திருமாலும் குறிக்கப் படுகின்றனர்:

-தலைமைநீதி, குஜராத் உயர்நீதிமன்றம்.

**"வெருவரு கடுந்திறல் இரும்பெருந் தெய்வத்து
உருவுடன் இயைந்த தோற்றம் போல
அந்திவானமொடு கடலணி கொளா அ
வந்த மாலை" என்ற பாடல் அது.**

இதுபோல் எட்டுத்தொகை நூல்களில், புறநானூற்றில், கலித்தொகையில், பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில், சிவனைப்பற்றிய குறிப்புகள் இந்நூலில் காணக்கிடக்கின்றன.

**"பிறவாயாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்"**

என்ற சிலப்பதிகார அடிகளை, சிவனைப்பற்றி சிலம்பில் காணப்பெறும் பல்வேறு இடங்களையும் மணிமேகலை, சீவகசிந்தாமணியில் சிவனைப்பற்றிய குறிப்புகளையும் ஆசிரியர் தெளிவாக எடுத்து எழுதி உள்ளார். சீவக சிந்தாமணியில் :

**"போகம் ஈன்ற புண்ணியன்
எய்த கணையே போல்"**

என்ற அடிகளும்

**"கடிமதில் மூன்றும் எய்த
கடவுளிற் கனன்று சொன்னான்"**

என்ற அடிகளும்

**"திங்கள் சேர்முடியினானும்
செவ்வியும் போன்று"**

என்ற அடிகளும் சிவனைக் குறிப்பதாக விளக்கி உள்ளார்.

சங்க காலத்தையும் தாண்டி, நீதிநூல் காலத்தில், பக்தி இலக்கிய காலங்களில் கம்பராமாயண காவியத்தில் சிவனைப் பற்றிய பல குறிப்புகள் இந்நூலில் அடங்கி உள்ளன. இராமனின்

தோற்றத்தை அவன் போர்க்களத்தில் நின்ற போது கம்பன்.

**'தீ மொய்த்த அனைய செங்கண்**
**அரக்கரை முழுதும் சிந்திப்**
**பூமொய்த்த கரத்த ராகி**
**விண்ணவர் போற்றி நின்றான்**
**பேய் மொய்த்து நரிகள் ஈண்டிப்**
**பெரும் பிணம் பிறங்கித் தோன்றும்**
**ஈமத்துள் தனியன் நின்ற**
**கறைமிடத்து இறைவன் ஒத்தான்'**

என்று கூறி,. யாவரையும் அழித்து இராமன் போர்க்களத்தில் நின்றது ஊழியின் முடிவில் அனைத்து உயிர்களும் மாள சுடுகாட்டில் தனியாக நிற்கும் சிவபொருமானை ஒத்தான் எனக் குறிப்பிடுகிறார்.

இங்ஙனம், தமிழ்நூல்கள் பலவற்றில் பண்டைக்காலம்தொட்டே சைவம் பேசப்பட்டதை, போற்றப்பெற்றதை ஆசிரியர், பல சான்றுகளோடு கூறி, திருமுறைகள் அத்துணையையும் விளக்கி நம்மை யெல்லாம் சிவவழிபாட்டின் பெருமையினை உணர வைக்கிறார்.

காலில் தீண்டத் தகுதி அற்ற சாக்கடை நீரும் கங்கையில் சேர்ந்தபின் தானும் கங்கை ஆகிறது.. அங்ஙனமே, கங்காதரனைச் சேர்ந்த கயவர்களும் கடவுள் மயமாகின்றனர் அன்னவர்க்குத் திருவாசகம் ஞான விளக்காக ஒளிர்கிறது என்ற உண்மைகளை ஆசிரியர், சாதாரணமக்களும் உணரும்படி பல செய்திகளோடு, தமிழ்நூல்களில் காணப்பெறும் சைவத்தின் மேன்மையினை இந்நூலில் தெளிவாக எழுதி உள்ளார்.

இந்நூலில், சைவத்தோடு தொடர்பு கொண்ட ஏராளமான பட்டினத்தார் பாடல்கள் பலவற்றையும், தாயுமானவர் சொல் ஓவியங்களையும் படித்து மகிழலாம். திருமுறைகள் பற்றி எத்தனையோ செய்திகள் நம்மில் பலருக்குத் தெரிந்திருக்க முடியாது. இருபத்தேழு பேர் திருமுறைகளை

எழுதினார்கள், பன்னிரு திருமுறைகளிலும் ஏறத்தாழ பதினெட்டாயிரம் திருப்பாடல்கள் காணப்பெறுகின்றன. இதைப் பாடியவர்களில் மூத்தவர், காரைக்கால் அம்மையார். சேக்கிழார் காலத்தில் பிற்பட்டவர் என்பது போன்ற ஏராளமான செய்திகள் தெரிந்து கொள்ள இந்நூல் ஒரு அகராதியாக விளங்குகிறது. தேவராய சுவாமிகள் செய்த கந்தர் சட்டி கவசம், பாம்பன் குமரகுருதாசர் எழுதிய சண்முக கவசம் பல தரப்பட்ட உலாக்கள், பிள்ளைத் தமிழ் நூல்கள் போன்ற எண்ணற்ற நூல்களின் பட்டியலும், அவை கூறியுள்ள சைவத்தின் பெருமையும் இந்நூலில் ஏராளமாகக் காணக் கிடக்கிறது.

சித்தர்களைப்பற்றி, அவர் இலக்கியங்களைப் பற்றி, சிவனிடத்தில் அவர்கள் கொண்டிருந்த ஈடுபாடு பற்றி, அவர்கள் இயற்றிய பாடல்கள் மூலம் இந்நூலில், ஆசிரியர் நமக்கெல்லாம் அற்புதக் கருத்துகளை அள்ளித் தந்துள்ளார். சித்தர்களைப் பற்றி பலருக்குத் தெரியாத பல உண்மைகளை இந்நூலில் காணலாம்.

வடநாட்டில் ஒன்பது பேர் கொண்ட நவநாதர் சித்தர்கள், தமிழ் நாட்டில் ஆரம்பத்தில் பதினெட்டுச் சித்தர்கள் பிறகு ஐம்பதிற்கு மேற்பட்ட சித்தர்கள் வாழ்ந்ததும், அவர்களில் சிலர் உருவ வழிபாட்டைக் கடிந்தனர் என்பன போன்ற இலக்கியங்களை இந்நூல் விளக்குகிறது. சித்தர்களில் கோயில் வழிபாட்டைக் கடிந்த ஒருவரின்

**'கோயிலாவது ஏதடா ? குளங்களாவது ஏதடா?**
**கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே'**

என்ற அற்புதப் பாட்டை, இந்நூலில் படித்து மகிழ்ந்தேன். இதைப் போல் எத்தனையோ பாடல்கள் மனிதனைத் திருத்தி, மடமையை ஒழித்து, எல்லாம் சிவமயம் என்று காட்டிய காருண்யமுள்ளபெரியார் படைத்த காவியங்கள் இந்நூலில் ஏராளம் ஏராளம். நான் எழுதிக் கொண்டே போகலாம் காரணம், சிவமும் தமிழும் இரண்டரக் கலந்த ஒன்று. ஆகவே ஆதிகாலம்தொட்டு நிகழ்காலம் வரை எழுந்துள்ள காவியங்கள், தமிழ் இலக்கியங்கள், இன்ன பிற தமிழ்நூல்கள் அனைத்தும் சைவத்தைப்பற்றி பேசி

உள்ளன. அவைகள் எவை எவை என்று நீங்கள் அறிய வேண்டுமா? 'படியுங்கள் டாக்டர் ந.சுப்புரெட்டியாரின் 'சைவமும் தமிழும்' என்ற இந்நூலை. இதிலே தமிழ்ச்சமுதாயத்தில் எழுந்துள்ள இலக்கியங்கள் அத்தனையும், அவை எவை எவை சைவத்தைப் பற்றிப் பேசியுள்ளன என்ற குறிப்புகளையும் தொல்காப்பியக்காலம் தொட்டு, கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை காலம் வரை தமிழ் இலக்கியங்களில், சைவ தத்துவங்கள் சிறப்பிக்கப் பெற்றுள்ள பான்மைகளையும், இந்நூலில் படித்து மகிழலாம். இந்த நூல் சைவத்திற்கு ஓர் உயர்விடத்தை, ஆராய்ச்சியாளர்களுக்கு நல்ல தொரு புள்ளி விவரங்களை, தமிழ் ஆர்வலர்களுக்கு வளம் கொழிக்கும் தமிழ்ச் சுவையை அள்ளித்தரும் பெட்டகம். ஆழமான ஆராய்ச்சியைச் செய்து அழகுத் தமிழை அற்புதமாக வடித்துத்தந்து சைவ நெறி தழைத்தோங்க சீரிய சான்றுகளுடன் தமிழ் இலக்கியங்களை நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்தியுள்ள பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களை மனதாரப் பாராட்டுகிறேன். வாழ்க அவர்தம் தமிழ்த் தொண்டு.

பு. ரா. கோகுலகிருஷ்ணன்.

# நூல் முகம்

உருவாகி நிற்றி; அருவாகி நிற்றி;
உயிரோடு வைக்கும் உரவோய்
மருவாகி நிற்றி; மலராகி நிற்றி;
மறையாகி நிற்றி; மறையின்
பொருளாகி நிற்றி; உனையான்அு றிந்து
புகழ்கின்ற வாறும் அறியேன்;
கருவா புரிக்குள் உறைதேவ தேவ!
கதியேதுஎ னக்கு மொழியே[1]

*—அதிவீர ராமபாண்டியர்*

*'**சைவ சித்தாந்தம் – ஓர் அறிமுகம்**' என்ற நூலை நிறைவு செய்த நிலையில் '**சைவமும் தமிழும்**' என்ற தலைப்பில் ஆதி முதல் இன்று வரை சைவ இலக்கியங்கள் தோன்றி நின்று நிலவுவதை சைவ அன்பர்கட்கும் சைவ இலக்கியங்களை அறிய அவாவி நிற்கும் ஆர்வலர்கட்கும் ஓர் அறிமுக நூல் வரைந்தால் பேருதவியாக இருக்கும் என்று என் உளத்தில் நிறைந்திருக்கும் சிவனருள் சிந்திக்க வைத்துச் செயற்படவும் செய்தது. அதன் விளைவாக இந்நூல் எழுந்தது.*

*இந்நூல் தொல்காப்பிய காலம் முதல் திருமுறை இலக்கியங்கள் காலம் முடிய 'முற்கால இலக்கியங்கள்' என்று முதற் பகுதியாகவும், திருமுறை இலக்கியங்கட்குப் பின் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை காலம் முடிய 'பிற்கால இலக்கியங்கள்' என்று இரண்டாம் பகுதியாகவும் அமைந்துள்ளது.*

---

1. திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி-52

சமயக் காழ்ப்பின்றி எல்லாச் சமய நூல்களை வெளியிட்டு சமயத் தமிழை வளர்த்துப் புகழோங்கச் செய்யும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் குறிப்பாக அதன் அதிபர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் இந்நூல் கைப்படியையும் அன்புடன் ஏற்று வெளியிட்டமைக்கு என் உளங்கனிந்த நன்றி.

இந்நூலுக்கு அணிந்துரை நல்கிச் சிறப்பித்த குஜராத் உயர்நீதிமன்ற தலைமை நீதியரசர் (ஓய்வு) பி. ஆர். கோகுல கிருஷ்ணனை அறியாத தமிழர்களே இலர். தம் மாணாக்கப் பருவம் முதலே தமிழார்வம் மிக்கவர். தமிழ் முனிவர் திரு. வி. க. மீது அளவற்ற மதிப்பும் மரியாதையும் கொண்டு மாணக்கப் பருவ காலத்திலேயே 'மணவழகர் மன்றம்' நிறுவி இன்று வரை பல்வேறு இலக்கியக் கூட்டங்களை நடத்தி வருபவர். தமிழ்ப் பற்றும் சமயச் சிந்தனையும் அவர் மேற்கொண்டிருந்த நீதித்துறைப் பணியை மனத்தூய்மையுடன் நிறைவேறச் செய்தது என்பது அடியேனின் கருத்து. மேலும் இவையே சென்னைப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்தத்துறை, வைணவத்துறையை நிறுவச் செய்தமைக்கு உந்து விசையைத் தந்தது. துறையொன்றுக்கு இருபது லட்சம் வீதம் நன்கொடைகள் மூலம் திரட்டி வழங்கித் துறைகளை உருவாக்கினார். இவர் வழியைப் பின்பற்றியே சைன சமயத் துறை, கிறித்தவ சமயத்துறை, கிறித்தவ இலக்கியத்துறை, அண்ணா பொது வாழ்வியல் துறை போன்றவைகள் தோன்றின. என் வாழ்வில் சிறு பருவம் முதல் இன்று வரை நல்லோர் இணக்கம் இறைவன் திருவருளால் ஏற்பட்டது என்பது என் துணிவு. அரசியல் அறிஞர்கள் ஓரிரு நல்லவர்களின் இணக்கத்தைத் தவிர பெரும்பாலும் நீதியரசர்களின் இணக்கமே அதிகமாக ஏற்பட்டதும் என் நல்லூழே காரணமாக அமைந்தது. நீதியரசர்களிலும் அதிகமாக இணக்கம் ஏற்பட்ட நீதியரசர் பி. ஆர். கோகுல கிருஷ்ணனின் அணிந்துரை பெற்றது இந்நூலின் பேறு;

என் பேறும் கூட. அணிந்துரை வழங்கிய பெருமகனாருக்கு என் நெஞ்சம் நெகிழ்ந்த நன்றி என்றும் உரியது.

இந்த அரிய நூலினை சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கில் எட்டைத் தமிழ் மொழியில் படைத்து உதவிய ‘உமாபதி சிவம்’ என்ற அருளாளர் திருவடியில் சமர்ப்பித்து அவர்தம் ஆசியைப் பெறுகின்றேன்.

இந்நூல் அச்சேறுங்கால் மூலப்படியுடன் பார்வைப் படிமங்களை ஒப்பு நோக்கிச் சரிபார்த்து உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் மு. ப. சியாமளாவுக்கு என் நன்றி கலந்த ஆசி என்றும் உரியது.

இந்நூலை எழுதுவதற்கு நல்ல உடல் நலனும் மன வளமும் நல்கிய சிவனருளைச் சிந்தித்து அமைகின்றேன்.

சிந்தனை உனக்குத் தந்தேன்;
திருவருள் எனக்குத் தந்தாய்;
வந்தனை உனக்குத் தந்தேன்;
மலரடி எனக்குத் தந்தாய்;
பைந்துணர் உனக்குத் தந்தேன்;
பரகதி எனக்குத் தந்தாய்;
கந்தனைப் பயந்த நாதா!
கருவையில் இருக்கும் தேவே![2]

—அதிவீரராம பாண்டியன்

—ந. சுப்புரெட்டியார்
(உமாபதிசிவத்தின் அடியன்)

‘வேங்கடம்’
AD-13, அண்ணாநகர்,
சென்னை—600 040.

2. திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி - 63

# உள்ளுறை

# 1. சைவமும் தமிழும்

## முன்னுரை

ஓங்கல் இடைவந்து உயர்ந்தோர் தொழ விளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத்து இருள்கடியும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிர்ஒன்று; ஏனையது
தன்னேர் இலாத தமிழ்![1]

உலகம் தோன்றிய நாள் தொட்டு மக்களிடையே சமயம் என்ற ஒன்று உலவி வருகின்றது. கதிரவனையும் கதிர்களை யும் தனித்தனியே பிரித்தற்கியலாதது போலவே, சமயத்தை யும் மக்களையும் தனித்தனியாகப் பிரித்தற்கியலாது. சமயம் அவர்கள் உயிரோடும் உடலோடும் ஒன்றி நிற்கின்றது. அவர்களும் அதனை விட்டுத் தனித்து வாழ இயலாதவர் களாக உள்ளனர்.

சமயம் என்பது யாது? சமயம் என்பதற்கு நெறி, கொள்கை என்பனவாகச் சில பொருள்கள் உள்ளன. ஒருவர் அன்றாட வாழ்க்கையை ஒழுங்குபெற நடத்துவதற் குச் சில நன்னெறி அல்லது நற்கொள்கைகளை வகுத்துக் கொள்ள வேண்டும். அன்றேல் அவர்தம் வாழ்க்கை முறை யோடு நடைபெறாது. இந்த நன்னெறிகளின் தொகுப்பே சமயம் எனச் செப்பப்பெறுகின்றது. இம் முறையில் சமயம் என்பது வாழ்க்கையோடு பிரிக்க முடியாத நிலையில்

1. தண்டி - மேற்கோள் (வேற்றுமையணி - பொருள் வேற்றுமை)

பிணிப்புண்டிருக்கின்றது என்பதற்கு ஐயம் ஒன்றும் இல்லை.

தெய்வத் தமிழ்: இங்ஙனம் மக்கள் வாழ்க்கையுடன் தொடர்புற்றிருக்கும் சமயங்கள் பல. அவற்றுள் **சைவ சமயமும்** ஒன்று. இது பல உயரிய கொள்கைகளைத் தன்னகத்தே கொண்ட ஒரு பரந்த சமயமாகும். இது சிவபெருமானை முதற்கடவுளாகக் கொண்டுள்ளது. இப்பெருமானுடன் தமிழை இயைபுபடுத்திப் பேசும் வழக்கமும் உண்டு.

'கண்ணு தற்பெருங் கடவுளும்
கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந்து ஆய்ந்தஇப்
பசுந்தமிழ்'[2]

என்ற பாடலில் இதனைக் காணலாம். இஃது எம்மொழியும் பெறாத தமிழின் தனிச்சிறப்பு. சிவபெருமானே "நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி" தமிழ் ஆய்ந்த பெருமையைத் தேவாரம் எடுத்தியம்புகின்றது. பேராசிரியர் சுந்தரம்பிள்ளை தமிழ் மொழிக்குப் பரம்பொருளை உவமை கூறியுள்ளார். ஓர் எல்லையற்ற பரம்பொருள் பல் உயிர்களையும் பல உலகங்களையும் படைத்து, அளித்து, அழித்தாலும், தான் யாதொரு மாறுபாடுமின்றி அன்றும், இன்றும், என்றும் இருப்பது போலவே, நமது தமிழ் மொழியும் முன்னைப் பழமொழிக்கும் முன்னைப் பழமொழியாயும், பின்னைப் புதுமொழிக்கும் புதுமொழியாயும் பொலிகின்றது என்று பாராட்டியுள்ளார். தமிழ் மொழியும், வடமொழியும் சிவபெருமானின் இருகண்கள் என்று ஒரு புலவர் குறிப்பிடுகின்றார்.

2. பரஞ்சோதியார்: திருவிளையாடல் - நாட்டுச்சிறப்பு செய். 57

தமிழின் பெருமை: *தண்டியலங்காரத்திலுள்ள,*

ஓங்கல் இடைவந்து உயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத்து இருள்கடியும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிர்ஒன்று ஏனையது
தன்னேர் இலாத தமிழ்.[3]

*என்ற செய்யுள் இதனைக் குறிப்பிடுகின்றது. இது பகலவனுக்கும் தமிழுக்கும் சிலேடையாய் அமைந்துள்ளது. வில்லிபாரதத்தின் சிறப்புப் பாயிரமாக வரும்,*

பொருப்பிலே பிறந்து, தென்னன்
புகழிலே கிடந்து, சங்கத்து
இருப்பிலே இருந்து, வையை
ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று, கற்றோர்
நினைவிலே நடந்துஓர் ஏன
மருப்பிலே பயின்ற பாவை
மருங்கிலே வளரு கின்றாள்.[4]

*என்ற பாடல் தமிழின் பெருமையைப் பேசுகின்றது. இதில் தமிழை ஒரு குழந்தையாக உருவகித்து அதன் வளர்ச்சியை (வரலாற்றுக் குறிப்புகளுடன்) முறையே காட்டியிருப்பது அறிந்து இன்புறத் தக்கது.* **'தமிழ் விடுதூது'** *என்னும் நூலில் தமிழின் சிறப்பு விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அந்நூலாசிரியர்,*

தித்திக்கும் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான
முத்திக் கனியே! என் முத்தமிழே—புத்திக்குள்
உண்ணப் படுந்தேனே.[5]

*என்று தமிழைக் குழைந்து போற்றுவதைக் காணலாம்.*

---

3. தண்டி - மேற்கோள் (வேற்றுமையணி - பொருள் வேற்றுமை)
4. வில்லிபாரதம் - சிறப்புப் பாயிரம் - 1 (வரந்தருவார்)
5. தமிழ்விடுதூது - கண்ணி 69, 70

*நாட்டுப் பற்றும் நற்றமிழ்ப் பற்றும் மிக்க பாரதியார்,*

யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்கும் காணோம்.[6]

*என்று தமிழ் மொழியின் இனிமையைக் காட்டுவார். தமிழ் இலக்கியங்களை நன்கு சுவைத்த பாவேந்தர்,*

கன்னல், பொருள்தரும் தமிழே நீஓர், பூக்காடு,
நானோர் தும்பி[7]

*என்று தமது அநுபவத்தைப் புலப்படுத்துகின்றார்.*

*இனி, பகுதி–1:* ***முற்கால சைவ இலக்கியங்களைக்*** *காண்போம். முதலில் வருவது 'பண்டைய தமிழ் நூல்கள்'.*

6. பா.க. - தே.கீ. தமிழ்
7. அழகின் சிரிப்பு

தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பதியொரு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப[2]

என்றார் தொல்காப்பியர். மனிதனின் நுகர்பொருளாகிய உணவு முதலியவற்றுடன் தெய்வத்தைக் கூறினார் ஆசிரியர். தெய்வத்தை முதலாவதாகவும் கூறினார்.

## (2) பத்துப்பாட்டு

தொல்காப்பியத்தை அடுத்துப் பத்துப்பாட்டும் எட்டுத் தொகை நூல்களும் எழுந்தன. இவை கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியனவாகக் கூறுவர்.

(அ) திருமுருகாற்றுப்படை: பத்துப்பாட்டில் முதலாவதாகக் கூறப்பெறும் பாட்டு. இது 'புலவராற்றுப் படை' எனவும் வழங்கப்பெறும். 317 அடிகளைக் கொண்ட ஆசிரியப் பாவால் அமைந்தது. சைவர்கள் முருகன் திருவருள் வேண்டி நாடோறும் பாராயணம் செய்யும்பாட்டு. சைவத்திருமுறைகள் பன்னிரண்டனுள் பதினோராம் திருமுறையிலும் இஃது இடம் பெற்றுள்ளது. இதனை இயற்றியவர் நக்கீரர்.

'முருகாற்றுப்படை' என்ற தொடருக்கு "வீடு பெறுவதற் குச் சமைத்தானோர் இரவலனை, வீடு பெற்றான் ஒருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்தியது" என்று பொருள் கூறுவர் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர். எனவே இது மற்ற ஆற்றுப்படைகளின் அமைப்பினின்றும் மாறுபட்டுள் ளது. மற்ற ஆற்றுப்படைகள் ஆற்றுப் படுத்தப்படுபவர்களது பெயரோடு சார்த்தி வழங்கப் பெறுகின்றது. (எ.டு.) பொருநராற்றுப்படை. ஆனால் திருமுருகாற்றுப்படை பாட்டுடைத் தலைவனின் பெயரோடு சார்த்தி

2. தொல். பொருள் - அகத்திணை - 4

வழங்கப்பெறுகின்றது. பிற ஆற்றுப்படையின் விளக்கமான துறைகள் இதில் அமையாமல் அவை எல்லாம் உய்த்துணரும் வகையில் அமைந்துள்ளன.

முருகப்பெருமான் திருக்கோவில் கொண்டுள்ள **'ஆறுபடை வீடுகளை'** இது விளக்கி நிற்கின்றது. திருப்பரங்குன்றத்திலே முருகனின் தோற்றப் பொலிவு விளக்கமுறுகின்றது. திருச்சீரலைவாய் என்னும் திருச்செந்தூரில் ஆறுமுகமும் பன்னிருகையுமாய் அடியவர்கட்கு அருள் வழங்கும் பொருட்டு யானைமீது எழுந்தருளுகின்றான் திருமுருகன். திருவாவினன்குடியில் (பழநியில்) தேவர்களும் முனிவர்களும் முருகனைப் பரவுகின்றனர். திருவேரகம் என்னும் சுவாமிமலையில் அந்தணர்பற்றிய செய்திகளும் அவர் வழிபாட்டு முறைமையும் கூறப் பெறுகின்றன. குன்றுதோராடலில் குன்றில் வாழும் குறவர்களின் வாழ்வு தெரிவிக்கப்பெறுகின்றது. ஆறாவது வீடாகிய பழமுதிர் சோலையில் அடியவர்கள் மேற்கொள்ள வேண்டிய தவ நெறியினையும் அவர்கள்பால் ஆறுமுகன் அருள் சுரக்கும் தன்மையினையும் ஆசிரியர் புலப்படுத்துகின்றார்.[3]

(ஆ) மதுரைக்காஞ்சி: பத்துப்பாட்டில் மிக நீண்டதொரு பாட்டு; 782 அடிகளைக் கொண்டது. இந்த உலகின் நிலையாமையை அறிவுறுத்தித் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் பாடியது. பாடியவர் பெரும்புலவர்; பாடப் பட்டவனும் பேரரசன்; பாடப் பட்ட ஊரும் பேரூர்; பாடப்பட்ட பொருளும் பெரியது. ஆகவே பாட்டும் நீண்டு பெரிதாயிற்று.

---

3. அண்மைக் காலமாக திருமாலிருஞ்சோலை (அழகர் கோயில்) யிலிருந்து இடப்புறமாகச் செல்லும் சாலையில் 3-4 கி.மீ. தொலைவில் பேரளவில் முருகன் கோயில் கட்டப்பெற்றுள் ளது.

*இந்த நெடும் பாட்டில் மதுரையில் நடைபெறும் அந்தி விழாவினைக் குறிப்பிடுமிடத்து சிவபெருமானின் முழுமுதல் தன்மை குறிப்பிடப் பெறுகின்றது.*

நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்போ டைந்துடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவனாக
மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
வாடப் பூவின் இமையா நாட்டத்து
நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபின் உயிர்ப்பலி கொடுமார்
அந்தி விழவில் தூரியம் கறங்க (அடி 453–460)

*'திக்குகளையுடைய ஆகாயத்துடனே காற்றும் நெருப்பும் நீரும் நிலனுமாகிய ஐந்திணையும் சேரப் படைத்த மழுவாகிய வாளையுடைய பெரியோனை ஏனையோரின் முதல்வனாகக் கொண்டு' என்பது முதல் மூன்றடியின் கருத்து. இங்கு, சிவபெருமான் முழுமுதற் கடவுளாகக் குறிப்பிடப் பெறுகின்றான்.*

## (3) எட்டுத்தொகை

(அ) அகநானூறு: *அகநானூற்றில் வரும் குறிப்புகளைக் காண்போம். (i)* **அகம்–360:** *நெய்தல் திணையில் வரும் பாடல். பகற்குறி வந்த தலைமகற்குத் தோழி பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்ந்தது– என்பது துறை.*

வெருவரு கடுந்திறல் இரும்பெருந் தெய்வத்து
உருவுடன் இயைந்த தோற்றம் போல
அந்தி வான்மொடு கடலணி கொளாஅ
வந்த மாலை (அடி 6–9)

*என்று மாலைக்கால வருணனை வருகிறது. "அஞ்சத்தக்க மிக்க வலியுடைய இருபெருந் தெய்வங்களாகிய* **சிவனும்**

*திருமாலும் ஆகிய இவர்களது செந்நிறமும் கருநிறமும் ஒருங்கு பொருந்திய தோற்றத்தைப் போல, அந்தி வானத்தின் அழகொடு கடலின் அழகையும் கொண்டு வந்த மாலை" என்று மாலைக்காலம் காட்டப் பெறுகின்றது.*

(ii) ***அகம்–181:*** *இதில்,*

ஞாலம் நாறும் நலங்கெழு நல்லிசை
நான்மறை முதுநூல் முக்கண் செல்வன்
ஆலமுற்றம் (அடி15–17)

*என்பது "நான்கு வேதங்களாலாகிய பழைய நூலையருளிய முக்கண்ணையுடைய சிவனது ஆலமுற்றம் என்னுடமிடத்து" –என்பது பொருள். ஆலமுற்றம்–சிவபிரான் எழுந்தருளியுள்ள இடம்.*

(iii) ***அகம்–345:*** *இதில் வரும் குறிப்பு:*

ஓங்குபுகழ்க்
கானமர் செல்வி அருளலின் (அடி 3–4)

*என்ற அடிகளில் "மிக்க புகழ்வாய்ந்த கொற்றவை (காடு கிழாள்) அருள் கூர்ந்து அளித்தலின்" என்பது பொருள். பாடல் பாலைத் திணை பற்றியதாதலின் அந்நிலத்தின் கடவுள் குறிப்பிடப் பெற்றது.*

(ஆ) புறநானூறு: *புறநானூற்றில் வரும் குறிப்புகளைக் காண்போம்.* (i) **புறம்–1:** *(கடவுள் வாழ்த்து)*[4] *இதில் சிவனை 'அருந்தவத்தோன்' என்று குறிப்பிட்டு அவனுக்குக் கண்ணியும் மாலையும் கொன்றை; ஊர்தியும் கொடியும் ஆனேறு என்று குறித்து, அவனுடைய கறைமிடறும், பெண்ணுருவாகிய திறனும் தலையிற் சூடிய பிறையும் முறையே அந்தணராலும் பதினெண் கணங்களாலும் புகழவும் ஏத்தவும் படும் எனத் தெரிவித்து, அதனால்*

4. பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடியது.

நாமும் அவனை வணங்கி வாழ்த்துதல் வேண்டும் என்ற கருத்தை உய்த்துணர வைக்கின்றார்.

(ii) **புறம்–56:** இப்பாடலில் நான்கு கடவுளர் வழிபாடுகள் குறிக்கப்பெறுகின்றன. (i) சிவன்: எருதுக் கொடியோன், செஞ்சடையன், மழுப்படையன், நீலமணி போன்ற கழுத்துடையவன்; (ii) பலராமன்: சங்கொத்த வெண்ணிறத்தன், கலப்பைப் படையுடையவன், பனைக் கொடியோன்; (iii) திருமால்: நீலமணி போன்ற நிறத்தோன், கருடக் கொடியோன்; (iv) மயில் கொடியோன்:[5] பிணி முக ஊர்தியன், செந்நிறத்தோன்.[6] –என்பவர்கள்.

(iii) **புறம்–91**இல் சிவபெருமான்,

பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
நீலமணி மிடற்று ஒருவன் **(5, 6)**

என்று குறிப்பிடப் பெறுகின்றான். அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் வாழ்த்தும் முறையில் வந்தது இப்பாடல்.

(இ) பரிபாடல்: பலவகைப் பாவடிகளையும் ஏற்று வரும் என்னும் இலக்கணத்தால் பரிபாடல் இசை நலம் வாய்ந்தது என்பதை அறிகின்றோம். எழுபது பாடல்களில் இன்று கிடைத்தவை இருபத்திரண்டே. இவற்றில் செவ்வேளுக்கு உரியவை எட்டே. (5, 8, 9, 14, 17, 18, 19, 21). இவை யாவும் பெரும்பெயர் முருகனின் புகழ்பாடுபவை. படித்து சிவ குமாரரின் திருவருளுக்குப் பாத்திரராகலாம்.

செவ்வேளை இறைஞ்சி செந்நாப் புலவர் ஒருவர் வேண்டுபவை:

---

5. சேவற்கொடியோன் - என்பதுதான் சரி
6. சிலம்பிலும் (ஊர்காண் 7-10) இவை வருகின்றன.

யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒளிதாரோயே (5:78–81)

என்பவையாகும்.

"நுகரப்படும் பொருளும், அவற்றை உளவாக்கும் பொன்னும், அவ்விரண்டானும் நுகர்ச்சியும் கனவெனத் தோன்றியழிவனவாதலால், அவை எமக்குப் பொருளன்று. அழிவில்லாத பெரிய வீட்டையளிக்கும் நினது திருவருளும், அதனை எம்பால் சேர்ப்பிக்கும் புலப்படா அன்பும், அவ்விரண்டானும் வரும் இறைபணியறமும் ஆகிய இம்மூன்றுமே எமக்கு வேண்டும் என, நுண்ணிதின் மூன்று பொருளை விட்டு மற்றொரு மூன்றினை இரக்கும் இப்புலவரது மெய்யுணர்வு போற்றத்தக்கதன்றோ? "மெய்ப் பொருள் காண்பது அறிவு" (வள்ளுவம்).

(ஈ) **ஐங்குறுநூறு:** எட்டுத்தொகை நூல்களில் மூன்றாவது. சொற்சுவை பொருட்சுவைகளில் சிறந்தது. பொருள்களின் இயற்கை அழகையும் தமிழ் மொழியின் இனிமையையும் நன்கு தெரிவிப்பது. அகத்திணைப் பகுதிகளுக்கு இலக்கிய மாக அமைந்துள்ளது.

இதன் கடவுள் வாழ்த்து சிவபெருமானைப் பற்றியது.

நீல மேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகு முகிழ்த்தன முறையே.[7]

(வாலிழை-தூய அணிகலன்களையுடைய உமா தேவியார்; ஒருவன்-சிவபெருமான்)

இங்கு சக்தியை முதலிலும் சிவனை அடுத்தும் கூறியுள்ளது. 'சக்தியாய்ச் சிவமாகி' என்றார் பிறரும்.

7. பாரதம் பாடிய பெருந்தேவனாரால் பாடப்பெற்றது.

(உ) கலித்தொகை: '*கற்றறிந்தார் ஏத்தும் கலியில்*' *சிவனைப் பற்றி ஓர் இடம் வருகின்றது.*

இமயவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமையமர்ந்து உயர்மலை இருந்தனனாகக் **(38)**

*இதில் 'ஈர்ஞ்சடை அந்தணன்' என்ற தொடர் சிவபெருமானைக் குறிக்கும்.*

## (4) பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்

*இப்பகுதியில் அடங்கிய நூல்களை நோக்குவோம்.*

திருக்குறள்: '*கடவுள் வாழ்த்து' என்ற அதிகாரத்தில்,*

கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. **(9)**

*இதில் எண்குணங்களை: தன் வயத்தனனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசத்தின்கண் நீங்குதல், பொருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை ஆகக் கூறுவர். இவை சைவ ஆகமத்தில் உள்ளவை.*

*துறவறத்திலுள்ள புலால் மறுத்தல், கொல்லாமை என்ற அதிகாரத்திலுள்ள குறள்களின் கருத்துகள் சைவ சித்தாந்தக் கருத்துகளையொட்டியுள்ளமையைக் கண்டு தெளியலாம்.*

## (5) இரட்டைக் காப்பியங்கள்

*தமிழ் இலக்கிய வரலாற்றில் முதல் காப்பியமாகிய சிலப்பதிகாரம் படைத்தவர் (இரண்டாம் நூற்றாண்டு) இளங்கோஅடிகள். தொடர்ந்து மணிமேகலை சீத்தலைச் சாத்தனாரால் படைக்கப் பெற்றது. இந்த இரண்டும்*

***'இரட்டைக் காப்பியங்கள்'*** *என்ற பெயரால் வழங்கி வருகின்றன.*

(அ) சிலப்பதிகாரம்: *இக்காவியத்தில் சிவபெருமான் வழிபாடுபற்றிய குறிப்புகளைக் காண்போம்.*

(i) ***ஊர்காண்காதையில்,***

நுதல்விழி நாட்டத் திறையோன் கோவிலும்
.........................................................
கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்
அறத்துறை விளங்கிய அறவோர்ப் பள்ளியும்[8]

*என்ற அடிகளில் நெற்றியினிடத்து விழித்த கண்ணை யுடைய இறைவனது (சிவபெருமானது) கோயிலும் (7), கோழியின் சேவலாகிய கொடியையுடைய முருகனது கோயிலும் குறிப்பிடப்பெற்றுள்ளன.*

*அறநெறிக் கண்ணே நின்று விளக்கமுற்ற முனிவர்களு டைய பள்ளிகளும் என்பது 11-வது அடி; இவ்வடிக்கு அடியார்க்கு நல்லார் விரித்துரைக்கும் பொருள் இது: "அறமும் அதன் துறைகளும் விளங்குதற்குக் காரணமாகிய அறவோர்களுடைய இருப்பிடங்கள். ஈண்டு பள்ளி என்றது அவ் விடங்களை; அறத்துறை - அறமும் அறத்தின் துறையுமென உம்மைத்தொகை. அறமாவது இருவகைத்து; இல்லறமும் துறவறமும் என. அவற்றுள் இல்லறமென்பது கற்புடை மனைவியோடு இல்லின் கண்ணிருந்து செய்யும் அறம். அதன் துறையாவன: தன்னையொழிந்த மூவர்க்கும், துறந்தார்க்கும், துவ்வாதவர்க்கும், இறந்தார்க்கும், தேவர்க்கும், முனிவர்க்கும், விருந்தினர்க்கும், சுற்றத்தார்க் கும், பிறர்க்கும் துணையாதலும், வேள்வி செய்தலும், சீலங்காத்தலும் முதலியனவும், அருளும், அன்பும் உடையனாதலும் பிறவும்.*

8. சிலப். ஊர்காண். அடி. 7, 10, 11

இனித்துறவறமாவது; நாகம் தோலுரித்தாற்போல அகப்பற்றும் புறப்பற்றும் அற்ற இந்திரிய நுகர்ச்சியை மறுத்து முற்றத்துறத்தல். அதன் துறையாவன: சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. அவற்றுள் சரியை அலகிடல் முதலியன; கிரியை பூசை முதலியன; யோகம். எண் வகை; அவை: இயமம், நியமம், ஆசனம், வளிநிலை, தொகை நிலை, பொறை நிலை, நினைதல், சமாதி என்பன. (ஞானம் பற்றிய குறிப்பு இல்லை.)

சிலப்பதிகாரமும் மணிமேகலையும் கடைச்சங்க இறுதிக்காலக் காவியங்கள் என்பர். இக்காவியங்களின் துணை கொண்டு சைவத்தின் வளர்ச்சியை அறியக்கூடும். சங்கத் தொகை நூல்களைக் காட்டிலும் சற்று விரிவாகவே இங்கு சைவத்தைப் பற்றிய குறிப்புகள் காணப்பெறுகின்றன.

(ii) பதிகத்தில்,

அதிகாரச் சிறப்பின் மதுரை மூதூர்க்
கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில்
வெள்ளியம் பலத்து.[9]

என்ற அடிகளில் சிவபெருமானின் வெள்ளியம்பலக்கூத்து குறிக்கப்பெற்றுள்ளது.

(iii) பூம்புகார் நகரத்தில், சிவபெருமான் முதலிய தேவர்களின் திருக்கோயில் இருந்தமையை,

பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீல மேனி நெடியோன் கோயிலும்
மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்.[10]

9. பதிகம் 39-41
10. சிலப். இந்திர விழவூர் அடி. 169-173

என்ற அடிகளில் காணலாம். இங்கு பிறவாயாக்கை பெரியோன்- சிவபெருமான்; அறுமுகச் செவ்வேள்-முருகப் பெருமான்; வால்வளை மேனி வாலியோன்-பலதேவன்; நீலமேனி நெடியோன்-திருமால்; மாலை வெண்குடை மன்னவன்-இந்திரன். இவ்வாறு பல்வேறு தேவர்களின் கோயில்கள் புகார் நகரத்தில் நிறைய இருந்தன. பிற்காலத்தில் பெருங்கோயில்கள் பெருக, இவை முன்னோடிகளாக அமைந்தன.

சிவனடியார் அறுபத்து மூவரில் ஒருவரான இக்காலப் பகுதியைச் சார்ந்த கோச்செங்கட் சோழன் எண்தோள் ஈசர்க்கு எழுபது மாடக் கோயில்களை அமைத்தான் என்பர். பின் வந்த ஆழ்வார்களில் ஒருவரான திருமங்கையாழ்வார்,

இருக்குஇலங்கு திருமொழிவாய் எண்தோள் ஈசற்கு
எழில்மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின் களே.[11]

என்ற தம் பாசுரம் ஒன்றில் இச்சோழன் எழுபது மாடக் கோயில்களை அமைத்தனனாகக் குறிப்பிடுவர். இக்காலத்திலிருந்தே கோயில்களை அமைக்கும் பணி நாளுக்கு நாள் வளர்ச்சியுற்றுப் பல்கிப் பெருகிற்று எனலாம். ஊர்தோறும் கோயில் இருந்தமைக்குப் பின் வந்த ஆளுடைய பிள்ளையாரும், ஆளுடைய அடிகளும் தலந்தோறும் சென்று பதிகம் பாடியுள்ளமையால் உய்த்துணரலாம். சைவர்களின் **'கோயில்'** நகரான தில்லையின் அமைப்பும் இக்காலத்தியதாக ஆய்வு உணர்த்திச் செல்லும்.

(iv) ***விழாக்கள்:*** இக்காலத்தில் சமய வரலாற்றில் ஒரு திருப்பம் காணலாம். பொதுவாகக் கடவுளர்களின் படிமங்

11. பெரி. திரு. 6.6:8

களை வைத்து விரிவாக வழிபடும் ஒழுக்கம் மிகுந்து பொது மக்களை ஈர்த்து வந்தது. எனவே, விழா முதலிய ஆரவாரங் கள் பொதுமக்களின் கவனத்தைக் கவர்ந்து இத்தகைய விழாக்களற்ற பௌத்த, சமண சமயங்களில் நாட்டம் குறையச் செய்தது என்று கருதலாம். சிலப்பதிகாரத்தில் குறிப்பிடும் இந்திரவிழா நிகழ்ச்சியையும் அதன் தொடர் பான வழிபாடு களையும் கருத்தில் கொண்டு இவ் வுண்மையை உணரலாம்.

(v) **சிலம்பில்** சைவ மந்திரமாகிய ஐந்தெழுத்து மந்திரம் பற்றிய குறிப்பும் உள்ளது.

அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்
வருமுறை எழுத்தின் மந்திரம் இரண்டும்
வருமுறையாக உளங்கொண் டோதி
வேண்டிய தொன்றின் விரும்பினர் ஆடின.[12]

என்ற அடிகளில் எட்டெழுத்து, ஐந்தெழுத்து மந்திரங்கள் வழக்கில் இருந்தமையைக் காண முடிகின்றது.

(vi) **சமயக் குறிப்புகளோடு** சற்று அதிகமாகவே புராணக் குறிப்புகளும் சிலம்பில் இடம்பெற்றுள்ளன. இது புராண வழக்குகள் பரவலாக நிலவி வந்தமையைக் காட்டும். இது தொடங்கி புராணக் கருத்துகளின் செல்வாக்கு இக்காலம் முழுமையும் நிலவி இருந்தமையை ஏனைய நூல்களின் துணை கொண்டும் அறியலாம்.

(vii) **சிலம்பின் அமைப்பு:** மூவேந்தர்களின் தலைநகர் களைச் சார்ந்த காண்டங்களாக வகுக்கப் பெற்றுள்ளமைக் கொப்ப நகர் சார்ந்த புராண வழக்குகளும் இடம்பெற்றுள் ளன. கூடல் மாநகரைச் சார்த்தி வந்த பிற்காலத் திரு விளையாடல்கட்கு கரு இங்கு இருப்பதாகக் கருதலாம். கடல் சுவற வேல் விட்டது, இந்திரன் முடிமேல் வளை

12. சிலப். காடுகாண் - 128 - 131

எறிந்தது, இலிங்கமும், வன்னியும், கிணறும் சான்று கூறியது, வெள்ளியம்பலத்தாடியது, இந்திரன் பூட்டிய ஆரத்தைப் பூண்டது, மேகத்தைத் தளைவிட்டது[13] முதலியன பிற்காலத் திருவிளையாடற் புராணங்களிலும் தல புராணங்களிலும் இடம் பெற்றுள்ளன.

(viii) ***சக்தி வழிபாடு:*** *சக்தி வழிபாட்டைக் குறிக்கும் தாந்திரிக நெறியிலும் நம்பிக்கை அதிகரித்தது. அதன் வழிபாட்டு முறைகளும் பல்கின. சான்றாக வேட்டுவ வரியை[14]ச் சுட்டலாம். இங்கு வேட்டுவரின் கொற்றவை வழிபாடு விரிவாகக் கூறப்பெற்றுள்ளது. இளங்கோவடி களின் "பத்தினி தெய்வ" வழிபாட்டின் கருவையும் இங்கே காணலாம்.*

(ஆ) மணிமேகலை: *சிலப்பதிகார காலத்துடன், எழுந்த காப்பியம் மணிமேகலை. இதிலும் சைவம் பற்றிய குறிப்பு உள்ளது. மணிமேகலை வஞ்சிநகர்க்கண் இருந்து பலவகைச் சமயவாதிகளையும் கண்டு அவரவர் சமயப் பொருள் களைக் கேட்க விரும்பினாள். அளவை வாதி முதல் பூத வாதி ஈறாகவுள்ள அனைவரும் தத்தம் சமயக் கருத்துகளை உரைத்தனர். தன்முறை வந்ததும் சைவவாதி கூறுவான்:*

இருசுட ரோடுஇய மானன்ஐம் பூதம்என்று
எட்டு வகையும் உயிரும்யாக் கையுமாய்க்
கட்டிநிற் போனும் கலைஉருவி னோனும்
படைத்துவிளை யாடும் பண்பி னோனுந்
துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனுந்
தன்னின் வேறு தானொன் றிலோனும்
அன்னோன் இறைவன் ஆகும்என்று உரைத்தனன்[15]

---

13. சிலப். காடுகாண். அடி 18-24, 16, 23-25, 29 காண்க.
14. சிலப். வேட்டுவவரி. காதை. 12
15. மணிமேகலை: சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதை - அடி. 89-95

இங்கு இவன் சிவபிரானின் அட்ட மூர்த்தி முழுமுதல் தன்மையையும் அவனது படைப்பு, அளிப்பு, அழிப்பு ஆகிய ஆற்றலையும் எடுத்து இயம்புகின்றான்.

***விளக்கம்:*** இறைவன் முறை செய்து காக்கும் முதல்வன். உயிர்கட்கு உடலும் கருவியும், உலகும் படைத் தளித்துக் காத்தலும், அவ்வுயிர்கட்கு உண்டாகும் இளைப்பு முதலியன நீங்குதற் பொருட்டு ஒடுக்குதலும் செய்து, அவ் வுயிர்கள் செய்யும் வினைக்கேற்ப இன்பமும் துன்பமு மாகிய பலன்களை முறை செய்து வழங்குதலும் செய்த லின், **'இறைவன்'** என்றார்; இறு என்னும் சொல்லடியாகக் கொண்டு எப்பொருளினும் தாங்குபவன் என்றலும் ஒன்று. 'இரு சுடர்' முதலிய எட்டினையும் கட்டி நிற்றலாவது தனக்கென வேறு உடம்பின்றி அவற்றையே உடம்பாகவும், அவற்றில் தான் உள் நின்று இயங்குதலின் உயிராகவும் கொண்டு நிற்றல். யாக்கையும் உயிருமாய் என மாறுக. கட்டி நிற்போன் எனவே, இவ்வாறு உடம்பும் உயிருமாக அமைத்துக் கோடல் அவன் தானாகவே தன் நினைவால் (சங்கற்பத்தால்) சமைப்பதென்றும், இவ்வாறு கட்டிக் கொள்ளாதே வேறாய் நிற்றலும் அவனுக்கு உண்டென்றும் கூறியவாறாம். முதல்வன், அட்ட மூர்த்தியாய் இருத்தலை நாவுக்கரசர் பெருமானும்,

இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
இயமான னாய்எரியும் காற்று மாகி,
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
ஆகாசமாய் அட்ட மூர்த்தி யாகி **(6.94:1)**

என்று கூறியுள்ளதைக் காணலாம். கற்கப்படும் கலை பலவும் இறைவனே என்பது,

கலையவன் மறையவன் காற்றொடுதீ
மலையவன் விண்ணொடு மண்ணுமவன் (1.109:6)

என்று ஞானசம்பந்தப்பெருமானும்,

கலைஞானம் தானே யாகி (6.94:2)

என்று ஆளுடைய அடிகளும், கூறுதலைக் காணலாம். படைத்தலும், காத்தலும் அவனுக்கு மிக எளிதில் அமைவன என்பதற்கு, 'விளையாட்டும் பண்பினோன்' என்றார்;

காத்தும் படைத்தும்
கரந்தும் விளையாடி (திருவெம். 12)

என்று மணிவாசகப் பெருமானும் கூறுதலைக் காணலாம். துயர் இளைப்புத் துன்பம், தோற்றம்- சிறப்பு அடைதற்கு ஏது கூறுவார், 'துயர்தீர் தோற்றத்தோன்' என்றார். 'தன்னில்' என்றதனால் ஒப்பும்; 'வேறு' என்றதனால் மிகுதியும் கொள்ளப் பெற்றன.

(இ) சீவகசிந்தாமணி: இந்நூல் **சீவகன்** என்னும் ஓரரசன் பிறந்தது முதல் வீடுபேறு அடையும் வரை உள்ள கதையைக் கூறுவது. திருத்தக்க தேவர் என்னும் சமண முனிவரால் இயற்றப்பெற்றது. பிற்காலத்தில் அது மதுரமான காப்பியங்கள் இயற்றிய மதுரகவிகள் பலர்க்கும் வழிகாட்டிய இனிய காவியம். அந்தக் காலத்தில் சிவபெருமான் பற்றியும் அவர்தம் திருவிளையாடல்கள் பற்றியுமான செய்திகள் மக்களிடையே பெருவழக்காக இருந்ததை நேரில் கண்டவராதலால், தாம் இயற்றும் காவியம் மக்களிடையே நன்கு பரவுவதற்கு வாய்ப்பாக அமையும் என்று கருதிய திருத்தக்கதேவர் அவற்றைத் தம் காவியத்தில் பொருத்தமான இடங்களில் பெய்து அதனைச் சிறப்பித்துள்ளார்; அவற்றில் ஒன்றிரண்டு செய்திகள் ஈண்டுக் காட்டப்பெறுகின்றன.

*(1) திரிபுரம் எரித்த வரலாறு:*

(அ) போகம் ஈன்ற புண்ணியன்
எய்த – கணையேபோல் **(362)**

*இது நாமகள் இலம்பகத்தில் வருவது. போகம் ஈன்ற புண்ணியன்-சிவபெருமான். எய்த கணை- எய்த அம்பு அம்பு-இங்கே திருமால்; திரிபுரம் எரித்தபோது சிவபெருமானுக்கு திருமால் அம்பாகச் செயற்பட்ட வரலாறு குறிக்கப்பெற்றது.*

(ஆ) கடிமதில் மூன்றும் எய்த
கடவுளிற் கனன்று சொன்னான் **(1087)**

*இது குணமாலையார் இலம்பகத்தில் வருவது. கடிமதில் மூன்று-திரிபுரத்தைக் குறிப்பது. கடவுள்-சிவபெருமான்.*

*(2) சிவன்–உமை:*

(அ) திங்கள்சேர் முடியி னானும்
செல்வியும் போன்று **(1083)**

*இது குணமாலையார் இலம்பகத்தில் வருவது. சிவ பெருமானும் உமையும் போல் சீவகனும் குணமாலையும் ஒன்றாயிருந்தனர் என்பதைக் குறிப்பிட்டவாறு.*

(ஆ) கைமலர்க் காந்தள் வேலிக்
கனமாலை அரையன் மங்கை
மையலர்க் கோதை பாகம்
கொண்டதே மறுவ தாகக்
கொய்மலர்க் கொன்றை மாலை
குளிமதிக் கண்ணி யாற்குப்
பெய்ம்மலர் அலங்கல் மார்ப!
பெரும்பழி யாயிற் றன்றே **(208)**

*இது நாமகள் இலம்பகத்தில் வருவது. கங்கா தேவியை மணந்தது தெரிந்து ஊடிய உமாதேவியை மகிழ்வித்தற்*

பொருட்டுச் சிவபெருமான் தமது திருமேனியிற் பாதியைக் கொடுத்தருளினார் என்ற வரலாறு இதில் அடங்கியுள்ளது.

சங்க காலத்தையும் நீதி நூற்காலத்தையும் அடுத்துக் காணப்பெறுவது பக்தி இயக்கக் காலம். இக்காலத்தில்தான் சம்பந்தர் முதலிய நாயன்மார்கள் தோன்றிப் பக்திப்பாடல் களைப் பாடி சைவசமயத்தைச் செழிக்கச் செய்தனர். பக்தி இயக்கம் தமிழையும் செழிக்கச் செய்தது. தமிழால் பக்தி இயக்கமும் ஏற்றம் பெற்றது. இவற்றால் நமக்குக் கிடைத்த செல்வம் கருவூலம் போன்ற சமய இலக்கியங்கள். தமிழ் இலக்கியத்தில் சமய இலக்கியத்தை நீக்கிப் பார்த்தால் தமிழ் இலக்கியம் மிகுந்த வறுமை நிலையைக் காட்டும். சமய இலக்கியத்தின் அளவையையும், பெருமையையும் சுட்டும்; இவற்றால் சமய இலக்கியங்களின் அருமையையும் அறிவிக்கும்.

(ஈ) **கம்பராமாயணம்:** பக்தி இயக்கக் காலத்தில் தோன்றியது. திருமாலின் அவதாரமாகிய இராமனுடைய கதையைக் கூறுவது; அக்கதையைக் கூறும் வால்மீகி இராமாயணத் தைத் தழுவி அமைந்தது. எடுத்துக் கொண்ட கதை வைணவத்துறையைச் சார்ந்தது என்றாலும் சமயப் பொறை மிக்க கம்பர் சிவபெருமானைப் பற்றிய பல குறிப்புகளை இணைத்துள்ளார். இப்பாடல்கள் கவிக் கூற்றாகவும் காவியமாந்தர்களின் வாய்மொழியாகவும் அமைந்துள் ளன. ஒன்று மட்டும் ஈண்டுக் காட்டப் பெறுகின்றது. மூல பலம் அழிந்த நிலையில் வருவது:

தீமொய்த்த அனைய செங்கண்
        அரக்கரை முழுதும் சிந்திப்
பூமொய்த்த கரத்த ராகி
        விண்ணவர் போற்ற நின்றான்
பேய்மொய்த்து நரிகள் ஈண்டிப்
        பெரும்பிணம் பிறங்கித் தோன்றும்

ஈமத்துள் தமியன் நின்ற
கறைமிடற்று இறைவன் ஒத்தான்[16]

ஊழியின் முடிவில் அனைத்துயிர்களும் மாள சுடுகாட்டில் தனியாக நிற்கும் சிவபெருமானை ஒத்தான் இராமன் என்பது இதில் குறிப்பிடப்பெற்று. சங்காரமூர்த்தியாகிய சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்ற கருத்து இதில் பொதிந்துள்ளமையைக் கண்டு மகிழலாம்.[17] இராம காதையில் நாற்பது கதைமாந்தர்கள் சிவனைப் பற்றிப் பேசுகின்றனர். சிவன் மொழியாகவும் நான்கு பாடல்கள் வந்துள்ளன.[18]

மாயா சீதையை வாளால் வெட்டிப் போக்குக் காட்டிய இந்திரசித்து தவறாமல் வெற்றி காண வேண்டும் என்ற கருத்தினால் நிகும்பலை என்ற இடத்தில் யாகம் செய்கின்றான். இதனை வீடணனால் அறிந்த இராமன் வீடணனோடும், வானரப் படையோடும் இலக்குவனை அனுப்ப, வேள்விநடை பெறாமல் தடுத்து கடும் போர் நடைபெறுகின்றது. இந்திரசித்து மலரவன் கணையைத் தொடுக்க, இலக்குவனும் எவர்க்கும் தீங்கு விளைக்காது அரக்கன் விடுத்த கணையை மட்டிலும் ஒழிக்குமாறு மலரவன் கணையைத் தொடுக்கின்றான். அஃது அரக்கன் விடுத்த கணையை ஒழித்து எங்கும் பரவி நிற்கின்றது. தேவர்கள் இலக்குவனின் நற்குணத்தைப் பாராட்டுகின்றனர். இப்போது சிவபெருமான் இராம, லக்குமணர் களின் பெருமையைத் தேவர்கட்கு நான்கு பாடல்களில் எடுத்துரைக்கின்றான். இவற்றால் சிவபெருமான் இராமனது

16. கம்ப. யுத்த. மூல பலம் - 231
17. 'கம்பனும் - சிவனும்' என்ற தமிழ் கடல் ராய.சொ.வின் நூலில் அனைத்தும் காட்டப்பெற்றுள்ளன.
18. கம்ப. யுத்த. நிகும்பலை - 141, 142, 143, 144.

பரத்துவத்தைப் பேசுவதைக் காண்கின்றோம். இது காவியமரபு.

(உ) வில்லிபாரதம்: இங்கு இருபத்தொரு கதை மாந்தர்களில் சிவன் மொழியும் ஒன்றாக வருகின்றது. பார்வதியிடம் சிவனே பாராட்டிப் பேசுவதாக அமைந்த பாரதப் பார்த்த னின் தவநிலையைப் பகுதியை உளம்பதிய உணர்ச்சி தோன்ற வரைந்துள்ளார். தவப் பெருமை சொல்லுங்கால் வில்லி தன்னை மறந்து சைவப் புலவர் எவரையும் விஞ்சி விடுவதைக் காண்கின்றோம்.

(i) ***அர்ச்சுனன் தவநிலையை கூறுவதில் ஒரு பாடல்:***

கந்தனை அளித்த கன்னிஓர் பாகம்
கலந்தமெய்க் கண்ணுதற்கு எதிராய்,
செந்தமிழ் உரைத்த குறுமுனி இருந்த
தெய்வமால் வரையிடைத் தோன்றி
இந்துவும் அரவும் உறவுசெய் முடிமேல்
இருந்தமந் தாகினி அருவி
வந்துழி புனலும், சகிதனம் கமழ
வந்தது மந்தமா ருதமே.[19]

*(கன்னி–அம்பிகை; குறுமுனி–அகத்தியர்; இந்து–சந்திரன்; அரவு–பாம்; மந்தாகினி–கங்கை; மந்த மாருதம்–இளங்காற்று.)*

உலகம் முழுவதையும் ஈன்றும் இன்றளவும் உமை கன்னியாகவே உள்ளாள். இதனை,

சிவன்சக்தி தன்னை ஈன்றும்
சக்திதான் சிவத்தை ஈன்றும்
உவர்ந்துஇரு வரும்பு உணர்ந்துஇவ்
உலகுயிர் எல்லாம் ஈன்றும்

19. அர்ச்சுனன் தவநிலை - 54

பவன்பிரம சாரி ஆகும்;
பான்மொழி கன்னி ஆகும்;
தவந்தரு ஞானத் தோர்க்குஇத்
தன்மைதான் தெரியும் அன்றே.

*என்று சிவஞான சித்தியாரும் குறிப்பிடுகின்றது. சிவபெருமான் தமிழை உரைத்தான். அவனுக்கு எதிராக இருந்து அகத்தியன் தமிழைச் சொன்னான்.*

தழற்புரை சுடர்க்கடவுள்
தந்தமிழ் தந்தான்

*என்பார் கம்பர். பொதிகை அகத்தியன் இருந்து தமிழ் சொன்ன இடம். பொதிகையில் பிறந்த தென்றல் சிவன் முடியிலிருக்கும் கங்கையிற் கலந்து பொதிகை மலையில் மிகுந்திருக்கும் சந்தன மரத்தின் மணத்தைக் கமழச் செய்தது.*

(ii) ***இன்னொரு பாடல்:***

ஐந்துஆன னத்தோன் அருள்செய்ய
அழகின் மிக்கான்
ஐந்துஆன சொல்லால் கணவன்
தருக ஐய!" என்றாள்;
ஐந்துஆன சொல்லன் அளித்தான், மற்று
அவனும் முன்நாள்,
ஐந்து ஆன போகம் இவள் எய்திய
ஆறுஅ றிந்தே.[20]

*(ஆனனம்-முகம்; ஐந்து ஆன சொல்-ஐந்து முறை; ஐந்து எழுத்து-சிவாயநம; ஐந்தான சொல்லன்-ஐந்து எழுத்தான சொல்லை உடையவன்)*

20. திரௌபதி மாலையிட்ட சருக்கம்-81

*ஒவ்வொரு எழுத்தையும் ஒவ்வோர் முறை சொல்லுவர் பெரியோர்.*

அந்தியும் நண்பகலும்
அஞ்சுபதம் சொல்லி. **(7.83:1)**

*என்பார் சுந்தரமூர்த்திகள். மேற்கண்ட பாடலில் திரௌபதி ஐந்து புலன்களும் நுகரும் இன்பத்தைப் பெற்றாள் என்பது காட்டப் பெற்றது.*

# 3. திருமுறை இலக்கியங்கள்

## பன்னிரு திருமுறைகள்

**அருளொடு** கூடிய சிவபரம் பொருளையே திரு என வழங்குவர்; அஃதாவது அதுவே பெறத்தக்க செல்வமாகும். அதனை நாடி அடைந்ததன் பயனாக அடியார்கள் பெற்ற இன்பம் அவர்கள் உள்ளத்தினின்றும் தோத்திரப் பாடல்களாக ஊற்றெடுத்தன; அவை ஆறாகவும், அருவியாகவும், பெரு வெள்ளமாகவும் பெருக்கெடுத்துத் தமிழ் நாடெங்கும் பரவின. இவை பரவி ஓடிய காலம் ஏழாம் நூற்றாண்டு முதல் பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை என்பதாகக் கொள்வர் இலக்கிய வரலாறு ஆசிரியர்கள். இத்தோத்திரப் பாடல்களை அருளிச் செய்தவர்கள் **திருஞான சம்பந்தர்** முதல் **சேக்கிழார் பெருமான்** வரை உள்ள இருபத்தேழு அருளாசிரியப் பெருமக்கள் ஆவர். அவை தமிழரசர்களின் வேண்டுகோளின்படி பன்னிரண்டாக வகுக்கப் பெற்றுத் தொகுக்கப் பெற்றன. அத்தொகையே **'பன்னிரு திருமுறை'** என்ற தொகுப்பு. **'முறை'** என்ற சொல் **'நூல்'** என்ற பொருள் படுவது. **'திருமுறை'** என்பது நிலையான செல்வத்தை மக்கள் எளிதாக அடைவதற்கு வழிகாட்டும் நூலாகும். இத்தொகுப்பு நூலை நிரலே விளக்குவோம்.

## 1. முதல் ஏழு திருமுறைகள்

"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்"[1] என்று சேக்கிழார் பெருமானால் போற்றப்பெறும் அருளாசிரியர்கள் திருவாய் மலர்ந்தருளிய தெய்வத் திருப்பாடல்களே **திருமுறை** என வழங்கப்பெறுகின்றன. முறைப்பட இயற்றப்பெற்றமையின் **'முறை'** என்பது நூலுக்குப் பெயராயிற்று. நூல்கள் **உலக நூல், அறிவன் நூல்** என இருவகையாகப் பகுத்துப் பேசுவர் பேராசிரியர்.[2] உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத புவியியல், நிலக்கூற்றியல் போன்ற அறிவியல் நூல்களும் பிறவும் **உலக நூல் களாகும்;** இவை உடலுக்கு உறுதி தருபவை. திருவருள் துணையால், ஐம்புலன்களை வென்று முனைப்பின்றி இறைவனை வழிபாடு செய்யும் செம்புலச் செல்வர்களான பெரியோர்கள் அருளியுள்ள உயிர்க்கு உறுதி தரும் மெய்ந் நூல்களே **அறிவன் நூல்**களாகும். சிவஞானியர்களாகத் திகழ்ந்த சமயக் குரவர்களால் அருளிச் செய்யப் பெற்ற சைவத் திருமுறைகள் **'அறிவன் நூல்'** பகுதியில் அடங்கும்.

அறிவன் நூல்களே திருமுறைகள். இவை அன்பு நெறியாகிய ஒருமுறை மக்கள் மேற்கொள்ளத்தக்க பெரு முறை என்பதை விளக்குகின்றன. அவை பன்னிரண்டாகப் பகுக்கப் பெற்றுள்ளன.

மூவர் பாடிய தேவாரத் திருப்பதிகங்களை **'ஏழு திருமுறைகளாக'** வகுத்தருளியவர் **நம்பியாண்டார் நம்பி. ஞான சம்பந்தப் பெருமான்** பாடிய திருப்பதிகங் களை முதல் மூன்று திருமுறைகளாகவும், **திருநாவுக்கரசர்** அருளிய திருப்பதிகங்களை நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகளாகவும், சுந்தரர் பாடிய திருப்பதிகங்களை ஏழாம் திருமுறையாகவும் வகுத்தருளினார் நம்பியாண் டார் நம்பி.

---

1. பெரி. புரா. திருக்கூட்டச் சிறப்பு - 8
2. திருக்கோவை. முதற் செய்யுள் - பேராசிரியர் உரை

ஒன்று முதல் ஏழு வரை அமைந்த இத் தேவாரத் திருப் பதிகங்களின் வரிசை முறை அவ்வாசிரியர்களின் பிறந்த குலம், வயது முதலிய உலகியல் முறையினை ஒரு சிறிதும் கருதாமல் அப்பெருமக்கள் இவ்வுலக வாழ்வினைத் துறந்து இறைவன் திருவருளிற் கலந்து வீடு பெற்ற கால அடைவினை உளத்துட் கொண்டு அமைக்கப் பெற்றனவாகும். மேலும், முழுமுதற் பொருளாகிய சிவபெருமானை இன்னிசைச் செந்தமிழ்ப் பாடல்களால் முதன்முதல் போற்றியவர் **ஆளுடைய பிள்ளையாரே** ஆவார். இவற்றால் இவர்தம் திருப்பதிகங்கள் **முதல் மூன்று** திருமுறைகளாய் அடைவு படுத்தப்பெற்றன.

நல்லூர்ப் பெருமணத்தில் சம்பந்தப் பெருமான் ஈறில் பெருஞ்சோதியிற் கலந்து மறைந்த பின்னர்த் **திருப்புகலூரில்** நாவுக்கரசர் பெருமான் இறைவன் திருவடிகளில் கலந்து மறைந்தாராதலின் சம்பந்தர் தேவாரத் திருப் பதிகங்களை அடுத்து, இவர்தம் திருப்பதிகங்கள் **நான்கு, ஐந்து, ஆறாம்** திருமுறைகளாக வரிசைப்படுத்தப்பெற்றன.

இவ்விருவர்க்கும் காலத்தாற் பிற்பட்ட சுந்தர மூர்த்தி அருளிச் செய்த திருப்பதிகங்கள் அவ்விருவர் திருப்பதிகங்களை அடுத்து **ஏழாம் திருமுறையாக** அமைக்கப்பெற்றன.

நம்பியாண்டார் நம்பி காலத்திற்குப் பின்னும் சேக்கிழாருக்கு முன்னும் தோன்றிய பெருமக்களே **எட்டு முதல் பதினொரு திருமுறைகளைத்** தொகுத்தவர்களாகக் கூறுவர் ஆய்வாளர்கள்.

திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பதின்மர் பாடிய **திருவிசைப்பா மாலை** அவற்றைப் பகுத்து **ஒன்பதாம் திருமுறையாக** வைக்கப்பட்டது. திருமூலர் திருவாய் மலர்ந்தருளிய **திருமந்திரம் பத்தாம் திருமுறையாக** அமைந்தது. திருவாலவுடையார், காரைக்காலம்மையார்

முதலிய **பன்னிருவர்** அருளிச் செய்த பிரபந்தங்கள் **பதி னோராந் திருமுறையாகத்** தொகுக்கப்பெற்றன. சேக்கிழார் பெருமான் பாடிய திருத்தொண்டர் புராணம் **பன்னிரண்டாம் திருமுறையாக** அமைந்தது. இனி இத் திருமுறைகளை விரிவாக விளக்குவோம்.[3]

(1) முதல் திருமுறை: இதில் *1469* திருப்பாடல்கள் *136* பதிகங்களாக அமைந்துள்ளன. முதல் பதிகம் ஞானப்பால் உண்ட வரலாற்றைக் குறிப்பிடும் **'தோடுடைய செவி யன்'** என்று தொடங்கும் அற்புதத் திருப்பதிகமாகும். **கோலக்காவில்**[4] எழுந்தருளியுள்ள பெருமானை வணங் கும் பொருட்டு **'மடையில் வாளை'** *(1.23)* என்ற பதிகத்தைக் கைத்தாளம் இட்டுப் பாடுங்கால் கோலக்கா இறைவன் திருவைந்தெழுத்து எழுதப் பெற்ற செம்பொன் னாலான திருத்தாளத்தினைப் பிள்ளையாரின் கைத்தலத் தில் வைத்த நிகழ்ச்சி இத்திருமுறையில் அடங்கும்.

சமணர்களுடன் ஆளுடைய பிள்ளையார் மேற் கொண்ட வாதத்திலொன்று காட்சியளவையால் நிறுவப் பெற வேண்டிய அனல் வாதம். சமணர் பணித்த வண்ணம் பாண்டியன் தன் பேரவை முன்னர்த் தீக்குண்டம் அமைத்து அதன் முன் தீ மூட்டச் செய்தனன். சம்பந்தப் பெருமான் அடங்கன் முறையில் உள்ள ஒரு பதிகத்தை எடுக்க அது,

---

3. 'திருமுறை' என்னும் பெயர் மூவர் திருப்பதிகங்களுக்கு மட்டுமே வழங்குவதாகும். நம்பியாண்டார் நம்பியின் காலத்திற்குப் பின்னர்தான் இப்பெயர் திருவாசகம் முதலிய ஏனைய நூல்கட்கும் வழங்கப் பெற்றது என்பது திருமுறை கண்ட வரலாற்றால் பெறப்படும்.
4. திருத்தாளமுடையார் கோயில், சீகாழியிலிருந்து அரைக்கல் தொலைவிலுள்ளது.

"போகமார்த்த பூண்–முலையாள்" (1.49)

என்ற நள்ளாற்றுப்[5] பதிகமாக அமைந்தது. உடனே சம்பந்தப் பெருமான் **'தளரிள வளரொளி'** (3.87)[6] என்ற திருப்பதிகத்தைப் பாடி, இறைவனை வழிபட்டு 'என்னை ஆளுடைய இறைவனது திருநாமமே என்றும் நிலை பெற்ற மெய்ப்பொருளாகும் என உலகமாந்தர்க்கு அறிவுறுத்தும் நிலையில் இந்தத் திருப்பதிக ஏடு (1.49) தீயில் வேகாது நிலை பெறுக' என்று சொல்லி யாவரும் காணத் தீயிலிட்டார். அஃது எரிந்து சாம்பலாகாது பச்சையாய் விளங்கிற்று. இந்தப் 'பச்சைப் பதிகம்' இத்திருமுறையில் அடக்கம்.

(2) இரண்டாம் திருமுறை: இதில் 1331 திருப்பாடல்கள் அடங்கிய 122 பதிகங்கள் அமைந்துள்ளன. **"செந்நெலங் கழனி"** (2.1) என்ற முதற்குறிப்புடைய பாடலைக் கொண்ட பதிகத்தால் இத்திருமுறை தொடங்குகின்றது. சிறு பிள்ளையாக இருக்கும் பொழுது வழிநடை இளைப்பு நீங்க ஒவ்வொரு சமயம் தம் திருத்தந்தையார் தோளில் அமர்ந்து செல்லும் பழக்கமுடையவர்: **நெல் வாயில் அரத்துறை**[7] யீசனை வணங்கும் பொருட்டு விரைந்து நடந்த பிள்ளை யாரின் கால் நடை வருத்தந் தீர நெல் வாயில் அரத் துறையீசன் அத்தலத்து அந்தணர் மூலம் முத்துச்சிவிகை, குடை, சின்னம் முதலியவற்றை அனுப்பி வைத்த அற்புத

5. திருநள்ளாறு என்ற இருப்பூர்தி நிலையத்திலிருந்து அரைக் கல் தொலைவிலுள்ளது நள்ளாறு. சப்த விடங்களுள் இது நகரவிடங்கர். இங்குள்ள சனீஸ்வரனை நளன் பூசித்து கலி நீங்கப் பெற்ற தலம். சனிப் பெயர்ச்சி விழாப் புகழ் பெற்றது.
6. இதுவும் நள்ளாற்றுப் பதிகமே.
7. விருத்தாச்சலம் இருப்பூர்தி நிலையம் - பெண்ணாகடம் 4 கல் தொலைவு. சம்பந்தருக்கு முத்துச்சிவிகை முதலியவை அளித்த அற்புதத் தலம்.

*நிகழ்ச்சி நடைபெற்ற தலம். இதனைப் போற்றும் வகையில்* **எந்தையீசன் எம்பெருமான்** *(2.90) என்ற முதற்குறிப்பை யுடைய பாடலை முதலாகக் கொண்ட அற்புதத் திருப்பதிகம் இந்தத் திருமுறையில் அடக்கம்.*

*மயிலையில் பூம்பாவை என்ற வாணிகப் பெண்ணின் என்புக் குடத்தை காபாலீசுவரத்தான் சந்நிதிக்கெதிரில் கோபுர வாயிலுக்கு வெளியில் வைக்கச் சொல்லி சம்பந்தப் பெருமான் "மட்டிட்ட" (2.47) என்று தொடங்கும் திருப் பதிகம் பாடி பூம்பாவையை உயிர் பெறச் செய்த அற்புத நிகழ்ச்சி அடங்கிய பதிகம் இத்திருமுறையில் அடங்கி யுள்ளது. ஒவ்வொரு பாசுரத்தின் இறுதியிலும் 'போதியோ பூம்பாவாய்' என்று சம்பந்தர் உருக்கத்துடன் செப்பிக் கொண்டே வந்து* ***'உரிஞ்சாய வாழ்க்கை'*** *என்று தொடங் கும் பத்தாம் பாசுரம் பாடி முடிந்ததும் பூம்பாவை உயிர் பெற்று எழுந்தாள் என்பது வரலாறு.*

*பாண்டியனது வெப்பு நோயைத் தீர்க்க வேண்டிப் பாடியருளிய* ***'மந்திரமாவது நீறு'*** *(2.66) என்ற அற்புதத் திருப்பதிகம் இந்தத் திருமுறையில் உள்ளது. இதில்,*

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயன் திருநீறே
**(1)**

*என்பது முதற்பாடல். இந்தத்* **திருநீற்றுப் பதிகம்** *இத்திருமுறையில் அடக்கம்.*

(3) மூன்றாம் திருமுறை: *இதில் 1358 திருப்பாடல்கள் அடங்கிய 125 பதிகங்கள் அமைந்துள்ளன. அண்மையில் 'திருவிடைவாய்' என்ற இடத்தில் கண்டறியப்பெற்ற பதிகம். இதன் இறுதியில் சேர்க்கப் பெற்றுள்ளது. பிள்ளை*

யாருக்கு ஏழாம் வயதில் உபநயனச் சடங்கு நடைபெற்றது. அச்சமயம் மந்திரங்களெல்லாம் தோன்றுவதற்கு ஏது வாகிய மூலமந்திரம் திருஐந்தெழுத்தே என்னும் உண்மை யினை வேதியர்க்கு அறிவுறுத்தக் கருதினார் சம்பந்தப் பெருமான். **'துஞ்சலும் துஞ்சலிலாத போதினும்'** *(3.22)* என்ற பஞ்சாட்சரத் திருப்பதிகத்தைப் பாடியருளினார். இதன் கண்,

மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே. (2)

என்ற இரண்டாம் திருப்பாட்டில் நான்மறைகளில் வல்ல வேதியர் யாவரும் சந்தியா வந்தன காலங்களிலும் சிறப்பாக அந்திக் காலத்திலும் ஓத வேண்டிய திருமந்திரம் திருவைந்தெழுத்தே என அறிவுறுத்திய திறம் குறிக் கொண்டு போற்றத்தக்கது. இத்திருப்பதிகம் இத்திருமுறை யில் உள்ளது. சமணர்களுடன் நிகழ்த்திய அனல் வாதத் தின் போது இறைவனை வழிபட்ட **'தளரிளவளரொளி'** *(3.37)* என்ற பதிகம் இத்திரு முறையில் அடக்கம்.

அனல் வாதத்தில் தோற்ற சமணர்கள் புனல் வாதத்தை மேற்கொண்டனர். **அஸ்திநாஸ்தி** என்ற வசனத்தை எழுதி வையையாற்றில் இட்டனர். அது நீரினை எதிர்த்து வாராது கடலை நோக்கிச் சென்று விட்டது. சம்பந்தப் பெருமான் **'வாழ்க அந்தணர்'** *(3.54)* என்று தொடங்கும் பாசுரத்தைப் பாடியருளி, ஏட்டில் எழுதி அவ்வேட்டினை வையை யாற்றில் விட்டனர். அது பிறவி என்னும் பேராற்றை அருந்தவர் உள்ளம் எதிர்த்து எதிர் செல்வது போல் அவ்வேடு வைகைப் பெருவெள்ளத்தைக் கிழித்து எதிர் ஏகியது. குலச்சிறையார் குதிரைமீது இவர்ந்து வைகை யாற்றின் கரை வழியாகத் தொடர்ந்து சென்றார். இத்திருப்

பாசுரத்தில் **“வேந்தனும் ஓங்குக”** எனப் பிள்ளையார் பாடியதனால் முன்னர் கூன்னாயிருந்த பாண்டியன் கூன் நீங்கி **‘நின்ற சீர் நெடுமாறன்’** ஆயினான்.

வைகையாற்றில் இடப்பெற்ற ஏடு எதிரேறி விரைந்து செல்லக்கண்ட பிள்ளையார்,

வன்னியும் அத்தமும் மதிபொறி சடையினன்
பொன்னியன் திருவடி புதுமலரவையொடு
மன்னிய மறையவர் வழிபட அடியவர்
இன்னிசை பாடலார் ஏடகத் தொருவனே.

என்று தொடங்கும் **திருப்பதிகத்தைப்** (3.32) பாடிப் போற்றினார். அப்போது அவ்வேடு வைகையின் வடகரையிலமைந்த திருக்கோயிலின் பக்கத்தில் தேங்கிய நீர் நடுவே வந்து நின்றது. குலச்சிறையார் குதிரை விட்டு இழிந்து ஆற்றிலிறங்கி ஏட்டினை எடுத்துத் தலைமேற் கொண்டு மீண்டு சம்பந்தப் பெருமானை வணங்கித் தாம் கொணர்ந்த ஏட்டினை நின்ற சீர் நெடுமாறன் முதலிய அனைவர்க்கும் காட்டினார். அனைவரும் மகிழ்ந்து இறைவன் திருவருளை வியந்து போற்றினர். ஏதிரேறிச் சென்ற ஏடு **திருவேடகத்** திருக்கோயிலின் பாங்கே அணைந்து நின்ற செய்தி இப்பதிகத்தின் திருக்கடைக்காப்பில் ‘ஏடு சென்று அணைதரும் ஏடகத் தொருவனை’ என வரும் தொடரால் புலனாகும். இந்த இரண்டு அற்புதத் திருப்பதிகங்களும் இத்திருமுறையில் அடக்கம்.

(4) நான்காம் திருமுறை: இத்திருமுறையில் 1070 திருப் பாடல்கள் 113 திருப்பதிகங்களுள் அமைந்துள்ளன. இத்திருமுறையில் 22 முதல் 79 முடியவுள்ள பதிகங்கள் **திருநேரிசைப் பதிகங்கள்.** திருநேரிசை என்பது ‘கூவிளம், புளிமா, தேமா, கூவிளம், புளிமா, தேமா’ எனவரும் கட்டளையடியினையுடைய நேரிசைச் செய்யுளாகும்.

(அ) **நேரிசை:** வண்டுகள் நறுமலர்களில் மகரந்தப் பொடியையும் தேனையும் மாந்தி அம்மலர்களில் படிந்து இடையீடின்றி முரல்வது போலும் நேரிய இசையமைந்த திருப்பாடல்கள் நேரிசை என்று பெயர் பெறுவன என்பது நேரிசை பற்றிய நுண்ணிய கருத்தாகும். தேவாரத்தில் வரும் இந்நேரிசை யாப்பும் திருமங்கையாழ்வாரின் திருக்குறுந் தாண்டக யாப்பும் ஒன்றே என்பது இவ்விரு பனுவல் களிலும் வரும் திருப்பாடல்களை ஒப்பு நோக்குவதால் அறியப்பெறும்.

(ஆ) **திருவிருத்தம்:** இத்திருமுறையில் 80 முதல் 113 வரையுள்ள பதிகங்கள் கட்டளைக் கலித்துறை யாப்பாகிய திருவிருத்தப் பதிகங்கள். விருத்தம் என்பது வடசொல். விருத்தம்- நிகழ்ச்சி, விருத்தாந்தம் எனப் பொருள்படும். அப்பர் பெருமான் இறைவனிடம் முறையிட்டுத் தெரிவித் துக் கொள்ளுதற்குரிய செய்திகளாகவும், இறைவன் செய் தருளிய செயல்களாக உலகத்தார்க்கு அறிவுறுத்த வேண்டிய செய்திகளாகவும் அமைந்த நிகழ்ச்சிகளைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தவை இத்திருப்பதிகங்கள்.[8] சூலை நோய் நீங்கும் பொருட்டுத் **திருவதிகைப்** பெருமானை **'கூற்றா யின வாறு'** (4.1) என்று வழிபட்டு சூலை நோய் தீர்ந்த அற்புதத் திருப்பதிகம் முதலாக அமைந்தது இத்திருமுறை.

சமணர்கள் நாவுக்கரசர் பெருமானுக்கு நஞ்சு கலந்த பாலடிசிலை ஊட்டினார். இறைவனது ஐந்தெழுத்து மந்திரத்தை இரவும் பகலும் மறவாது ஓதும் மாண்புடைய நாவுக்கரசர் சமணர்களின் வஞ்சனையைத் தெரிந்து கொண்ட நிலையிலும் 'நாதன் அடியார்கட்கு நஞ்சும் அமுதம்' என்று கூறி நஞ்சு கலந்த பாலடிசிலை அமுது செய்து யாதொரு தீங்குமின்றி இனிதே இருந்தனர். நஞ்சி

8. இவற்றை நம்மாழ்வாரின் 'திருவிருத்தம்' என்பதனோடு ஒப்பு நோக்கலாம்.

னையும் விரும்பியுண்ணத் தக்க நல்லமிழ்தமாக மாற்றி யருளிய இறைவனது பேரருட்டிறத்தை **“துஞ்சிருள் காலை மாலை”** *(4.7:1)* என வரும் திருநேரிசை யால் தெளிவாகக் குறிப்பிடுகின்றார்.

அடுத்து சமணர்கள் அரசன் ஆணைப்படி பட்டத்து யானையைக் கட்டவிழ்த்து அரசருக்கெதிரே விடும் பொழுது, அரசர் அதனைக் கண்டு சிறிதும் அஞ்சாது சிவபெருமானைத் தியானித்துப் பணிந்த வண்ணம் யானையை நோக்கி, “நாம் இறைவனுடைய அடியார்கள்; யாதொன்றுக்கும் அஞ்ச வேண்டுவதில்லை; இனி யாம் அஞ்சும்படி வருவதாகிய இடையூறு ஏதுமில்லை” என அறிவுறுத்தும் கருத்துடன் **“சுண்ண வெண் சந்தனச் சாந்து”** *(4.2)* என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ்ப் பதிகத்தைப் பாடுகின்றார். அந்தக் கொடுங்களிறும் அன்புருவாகிய நாவுக்கரசரை வலஞ் செய்து அவருக்கெதிரே நிலத்தில் வீழ்ந்து இறைஞ்சி அவ்விடத்தை விட்டு அகன்று செல்கின்றது.

இந்த அற்புதப் பதிகங்கள் இரண்டும் இந்தத் திருமுறையில் அடக்கம். **‘சொற்றுணை வேதியன்’** *(4.11)* என்று தொடங்கும் நமச்சிவாயப் பதிகமும் இதில் அடங்கியது.

(5) ஐந்தாம் திருமுறை: இது நாவுக்கரசர் பெருமான் திருவாய்மலர்ந்தருளிய குறுந்தொகை யாப்பிலமைந்த திருப்பதிகங்கள் **நூறு** கொண்ட (1015 திருப்பாடல்கள் அமைந்த) திருமுறையாகும். குறுந்தொகை யாப்பு என்பது நாற்சீர் நாலடியாய் அடிதோறும் தேமா, புளிமா என்னும் மாச்சீர்களுள் ஒன்று முதற்சீராகவும், கருவிளம், கூவிளம் என்னும் விளச்சீர்களுள் ஒன்று நான்காம் சீராகவும் இடையிலுள்ள இரண்டு, மூன்றாஞ்சீர்கள் பெரும்பாலும் விளச்சீர்களாகவும் சிறுபான்மை மாச்சீர்களாகவும் வரும் செய்யுள் விகற்பமாகும்.

*சமணர்களால் ஏவப்பெற்றுத் தம்மைக் கொல்லவந்த மதக்களிறு இறைவனருளால் தம்மைக் கொல்லாது மீண்ட அற்புதத்தைப் பின்னொரு காலத்தில் நினைந்து பாடிய* ***'ஏயிலானை'*** *(5.91) என்று தொடங்கும் பதிகத்தின்,*

மலையே வந்து வீழினும் மனிதர்கள்
நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவ னாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே. **(5)**

*என்ற பாடல் எத்தகைய இடையூறுகள் வரினும் மனங்கலங் காது அச்சமின்றி வாழ்தல் வேண்டும் என்று உலக மக்களுக்கு அறிவுறுத்துவதாக அமைகின்றது.*

*சமணர்கள் தம்மைக் கல்லொடு பிணித்துக் கடலில் தள்ளிய போது தாம் திரு ஐந்தெழுத்தினை ஓதிக் கரையேற உய்ந்த செய்தி 'வைத்தமாடும்' (5.72) என்று தொடங்கும் நீலக்குடித் திருப்பதிகத்தின்.*

கல்லினோடெனைப் பூட்டி அமண்கையார்
ஒல்லை நீர்புக தூக்கவென் வாக்கினால்
நெல்லு நீள் வயல் நீலக் குடியான்
நல்ல நாமம் நவிற்றியுய்ந் தேனன்றே **(7)**

*என்ற திருப்பாடலில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.*

*இத்தகைய திருப்பதிகங்கள் இத்திருமுறையில் அடக்கம்.*

(6) ஆறாம் திருமுறை: *இது நாவுக்கரசர் அருளிய* ***திருத்தாண்டகப் பதிகங்கள்*** *அனைத்தும் ஒரு திருமுறை யாகத் தொகுக்கப் பெற்றதாகும். இதில் 981 திருப்பாடல்கள் அடங்கியுள்ள 99 திருப்பதிகங்களைக் கொண்டதாகும். தாண்டகம் என்பது தொல்காப்பியச் செய்யுளியலின்படி எண்சீரான் வந்த கொச்சக ஒரு போகு எனப்படும். அடிதோறும் நான்காம் சீரும் எட்டாம் சீரும் தேமாவாக*

நிற்க, மூன்றாம் சீரும் ஏழாம் சீரும் பெரும்பான்மை தேமாவாகவும், ஒரோவழிப் புளிமாவாகவும் அமைய, இவையொழிந்த ஒன்று, இரண்டு, ஐந்து ஆறாம் சீர்கள் பெரும்பான்மை காய்ச் சீர்களாகவும், சிறுபான்மை மாச்சீர் விளச்சீர்களாகவும் வருதல் தாண்டகம் என்னும் பாவின் இலக்கணம். தாண்டகம் என்னும் யாப்புக்கு அப்பர் அருளிய தாண்டகத் திருப்பாடல்களே மூல இலக்கியமாக விளங்குவன. முதன்முதலாக அருளிச் செய்த இப்பெருமான் **'தாண்டக சதுரர்'**, **'தாண்டக வேந்தர்'** எனவும் போற்றப் பெறுவர். திருமங்கைமன்னன் அருளிச் செய்த **திருநெடுந்தாண்டகம்** இவண் குறிப்பிட்ட தாண்டக யாப்பில் அமைந்த பனுவல் என்பது நினைத்தல் தகும்.

**அகப்பொருள் துறைகள்:** இந்தத் திருமுறையில் அப்பர் பெருமான் இறைவனைத் தலைவனாகவும், ஆருயிராகிய தம்மைத் தலைவியாகவும் கருதிய நிலையில் அகப்பொருள் துறையில் சில பதிகங்களை அருளியுள்ளார். இவற்றில் அடிகளார் பெற்ற சிவாநுபவம் இனிது புலனா கின்றது. இவ்வநுபவத்தை நற்றாய் கூற்றாவும், செவிலித்தாய் கூற்றாகவும் புலப்படுத்திய திருப்பாடல்கள் 'புணர்ந்துழி உவகையும், பிரிந்துழிக் கலக்கமும்' ஆகிய இரு திறத்தையும் விளக்குவனவாக உள்ளன. ஆருயிராகிய தலைவி ஆண்டவ னாகிய தன் தலைவனுடன் கொண்டிருக்கும் பிடிப்பை **"முன்னை அவனுடைய நாமம்"** (6.25:7) என்ற அற்புதப் பாடலால் புலப்படுத்துவர். இப்பாடல் வரலாற்றுப் புதினம் படைப்பதில் ஈடும் எடுப்பும் அற்ற அமரர் கல்கி (இரா.கிருட்டிணமூர்த்தி)யின் புதினமொன்றிலும் ஆளப் பெற்றுள்ளது. சங்க காலத்தில் காதலின் பெருமையைத் தலைவன்–தலைவி உறவாகக் காட்டித் தமிழர்களின் நாகரிகத்தைப் புலப்படுத்தினர் சங்கச் சான்றோர்கள்.

*நாயன்மார்கள் ஆழ்வார்கள்[9] காலத்தில் காதல் உணர்வு பக்தி உணர்வாகப் பரிணமித்து ஆருயிர்–ஆண்டவன் உறவாக மாறி ஈறிலாப் பேரின்பத்தை விளைவிப்பதாக அமைந்ததைக் கண்டு மகிழ்கின்றோம். தம்மை ஆட் கொண்ட இறைவனைச் **'செல்வன்'** என்றும் **'மணாளன்'** என்றும் மகிழ்ந்து போற்றும் பதிகங்கள் இக்கருத்தை ஒருபுடை விளக்குவனவாக உள்ளன என்று கருதுவதில் தவறில்லை.*

***பதிகங்களின் சிறப்பியல்புகள்:*** *அப்பர் பெருமான் அருளிச் செய்த பதிகங்கள் ஏனைய இருவர் (சம்பந்தர், சுந்தரர்) அருளிச் செய்த பதிகங்களினும் காணப் பெறாத திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத் தாண்டகம் என்னும் யாப்பு விகற்பங்கள் சிறப்பாக அமைந் துள்ளன. நமக்குக் கிடைத்துள்ள அப்பரடிகளின் 312 பதிகங் களுள் நான்காம் திருமுறையில் 1–21 பதிகங்கள் காழிப் பிள்ளையார், நம்பியாரூரர் ஆகிய இருவர் பதிகங்களை யொத்து அமைந்துள்ளன. ஏனைய 291 பதிகங்களும் மேற்குறிப்பிட்ட யாப்பு விகற்பங்களாய், அப்பர் பெரு மானுக்கே உரிய சொல் நடையின் சிறப்பியல்பினை விளக்கும் நிலையில் அமைந்துள்ளன.*

***பாடினோர் பெயர்கள்:*** *சம்பந்தரும், சுந்தரரும் தாம் பாடிய பதிகங்களின் இறுதிப் பாடல்களில் (திருக்கடைக் காப்பில்) பாடினோராகிய தம் பெயரையும், அத்திருப் பதிகங்களைக் காதலாகி ஓதுவோர் பெறும் பயனையும் விரித்துரைத்தமை போல, அப்பர் பெருமான் தாம் அருளிய திருப்பதிகங்களின் இறுதிப் பாடல்களில் அவற்றைக் குறிப்பிடும் வழக்கத்தை மேற்கொள்ளவில்லை. ஆனால்,*

9. ஆழ்வார்களின் அகத்துறைப் பாசுரங்கள். தோழி, தாய், மகள் என்று பிரித்து அவற்றிற்குத் தத்துவமும் புலப்படுத்தும் பாங்கு நாயன்மார்கள் பாடல்களில் அமையவில்லை.

காலத்தைப் புறச்சமய சூழலில் கழித்து, இறைவனைத் தாம் மறந்திருந்த பெருங் குற்றத்தை எண்ணி உருகிய அப்பரடிகள், இங்ஙனம் காலத்தைக் கொன்னே கழித்த தம்மையும் ஒரு பொருளாகக் கொண்டு, ஆட்கொண்டு உய்வித்த பெருமானது பெருங் கருணைத் திறத்தை உணர்த்தும் பாங்கில். "பிழை செய்த இராவணனை உய்வித்த அருளால் குற்றமுடைய என்னையும் கோது நீக்கி ஆட்கொண்டான்" என உலக மக்களுக்கு எடுத்துரைக்கும் முறையில் இராவணனைப் பற்றிய குறிப்பைப் பதிகந்தோறும் விடாது குறித்தருள்கின்றார். இது திருத்தொண்டர் புராணத்தாலும்[10] இனிது புலனாகும். இது திருக்கடைக் காப்பு போலவும் அமைந்துள்ளது.

(7) ஏழாம் திருமுறை: சுந்தரமூர்த்தி அருளிச் செய்த இத்திருமுறையில் 1026 திருப் பாடல்கள் 100 பதிகங்களாக அமைந்துள்ளன. வேதியனாய் வந்து திருமணத்தைத் தடுத்து ஓலை காட்டி சுந்தரரை ஆட்கொண்ட போது சுந்தரர் இறைவனைப் **'பித்தன்'** என்று மொழிந்த சொல்லை முதலாகக் கொண்டு **'பித்தா பிறைசூடி'** (7.1) என்று தொடங்கும் அற்புதத் திருப்பதிகத்தை முதல் பதிகமாகக் கொண்டது இத்திருமுறை.

நம்பியாரூரர் பரவையாருடன் இல்லறம் நடத்தி இறைவனை வழிபடும் நாட்களில் இறைவன் அவரை 'அடியார்க்கு அடியனாக்கும்' செயலில் நெறிப்படுத்த,

தில்லைவாழ் அந்தணர்தம்
அடியார்க்கும் அடியேன். **(7.39)**

என்று அடியெடுத்துக் கொடுத்து மறைகின்றார். நம்பியாரூரரும் தேவாசிரிய மண்டபத்தில் வீற்றிருக்கும் அடியார்களையே நெடுந்தூரத்திலேயே கண்டு தாழ்ந்து இறைஞ்சு

10. பெ.பு. திருநாவுக். 75

*கின்றார். அவர்தம் திருப்பெயரை முறையே எடுத்தோதி அவர்கள் எல்லோர்க்கும் தனித்தனியே* ***'அடியேன்'*** *என்று பணிமொழி பகர்ந்து பதிகத்தை நிறைவு செய்து அடியார் களின் நடுவே சென்று சேர்கின்றார். இந்தத்* ***'திருத் தொண்டத்தொகை'*** *என்ற அற்புதப் பதிகம் இத்திருமுறை யில் அடக்கம்.*

*திருவாரூரில் பங்குனி உத்திரத் திருவிழா நடைபெறு கின்றது. பரவையாரின் செலவுக்குப் பொன் கொண்டு வரும் பொருட்டு* ***திருப்புகலூர்***[11] *செல்லுகின்றார். திருக் கோவிலுள்ள இறைவனைப் பணிந்து போற்றி அண்மையி லுள்ள திருமடத்திற்குச் சென்று ஓய்வு கொள்ளுகின்றார். உறக்கம் வரவே திருக்கோயிலின் திருப்பணிக்காக அடுக்கினவாக்கப் பெற்றிருக்கும் ஒரு சில செங்கல்களைத் தலையணையாக வைத்துக் கொண்டு துயில் கொள்ளு கின்றார். துயிலுணர்ந்து எழுந்த பொழுது செங்கல்கள் பொற்கட்டிகளாக மாறியிருக்கக் கண்டு வியப்பெய்து கின்றார். உடனே திருக்கோயிலுக்குச் சென்று இறைவனின் திருவருளை நினைந்து வணங்கி* ***'தம்மையே புகழ்ந்து இச்சை பேசினும்'*** *(7.34) என்ற முதற்பாடலையுடைய திருப்பதிகம் பாடி இறைவனைப் போற்றுகின்றார். இப்பாடலிலுள்ள,*

தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினும்
சார்கினும் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யளரைப் பாடாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள். **(1)**

*என்ற பாடற்பகுதி,*

நாக்கொண்டு மானிடம் பாடேன்[12]

11. திருப்புகலூர் - அப்பர்சுவாமிகள் முத்தி பெற்ற தலம். நன்னிலம் வட்டத்தில் உள்ளது.
12. நான்முகன் திருவந் - 75

*என்ற திருமழிசையாரின் திருவாக்கையும்,*

சொன்னால் விரோதம்இது ஆகிலும்
சொல்லுவேன் கேண்மினோ
என்நாவில் இன்கவி யான்ஒரு
வர்க்கும் கொடுக் கிலேன்.[13]

*என்ற திருவாய்மொழியில் 'மானிடரைப் பாடாமல் மாதவனை ஏத்தும்' என்ற நம்மாழ்வாரின் திருவாக்கையும் நினைக்கச் செய்கின்றது. இந்த அற்புதத் திருப்பதிகமும் இத்திருமுறையில் அடங்கும். இங்ஙனமே பஞ்சம் ஏற்பட்ட பொழுது குண்டையூர்க் கிழவர் மலை போலும் நெற்குவி யல் தம்மூரில் இருப்பது கண்டு வியப்பெய்துகின்றார். இதனை நினைந்து அண்மையிலுள்ள திருக்கோளிலித்[14] திருக்கோவிலையடைந்து* ***'நீள நினைந்து'*** *(7.20) என்ற திருப்பதிகம் பாடிப் போற்றுகின்றார் நம்பியாரூரர். இந்த அற்புதப் பதிகமும் இத்திருமுறையில் அடக்கம். இத்தகைய பல அற்புதப் பதிகங்கள் இத்திருமுறையை அணி செய்கின்றன.*

## (2) எட்டு முதல் பத்து திருமுறைகள்

*நம்பியாண்டார் நம்பிக்குப் பிறகு பின்வந்த சிவனேசச் செல்வர்கள் ஏழினை அடுத்த ஐந்து திருமுறைகளையும் முறைப்படுத்தி வைத்தனர்.*

(8) எட்டாம் திருமுறை: *திருவாதவூரடிகள் அருளிய திருவாசகம் எட்டாம் திருமுறையாக வைக்கப் பெற்றது. இப்பெருமான் அருளிய திருச்சிற்றம்பலக் கோவையாரைக்*

13. திருவாய் 3.9:1
14. கோளிலி (திருக்குவளை): மயிலாடுதுறை - காரைக்குடி இருப் பூர்தி வழியில் திருநெல்லிக்கா என்ற நிலையத்திலிருந்து 6 கல் தொலைவு.

'கோவைத் திருவாசகம்' என வழங்கும் வழக்கு உண்மையில் திருவாசகம் திருக்கோவையார் என்னும் இரண்டினையும் திருவாசகம் என ஒன்றாகவே கொண்டு பண்டையோர் அந்நூல்களை **எட்டாம் திருமுறையாக** வகுத்தனர் என்பதாக அறியக் கிடக்கின்றது.

சிவஞான போதத்தில் **எட்டாம் சூத்திரம்** ஐம்புல வேடர்களோடு பழகி அளவுதிரிந்து தம் உண்மை நிலையையும், கடமையையும் அறியாது அலையும் அரச குமாரனாகிய ஆன்மாவுக்கு இறைவனே குருமூர்த்தமாக எழுந்தருளி உண்மை உணர்த்தி ஆட்கொள்வர் என்பதையும், ஆட்கொள்ளப்பெற்ற ஆன்மாக்கள் ஆனந்தாநுபவ நிலையில் அரண்கழல் செல்லும் என்பதையும் அறிவிக்கின்றது. எட்டாம் திருமுறையாகிய இது ஐம்புல இன்பமும் ஆரத்துய்க்கும் அரச வாழ்வில், அமைச்சர் பதவியிற் சிக்கி, பிறந்ததன் பயனைச் சிறிது மறந்திருந்த ஆன்மாவாகிய வாதவூரடிகட்கு இறைவன் குருவாக எழுந்தருளி, உண்மை ஞானத்தை உணர்த்த, அதன் விளைவாக எழுந்த அநுபவ ஞானத் திருநூல்.

சுருங்கக்கூறின் **எட்டாந்திருமுறை** இறைவன் குருவாக எழுந்தருளி ஆன்மாக்கள் ஆட்கொள்வதை உணர்த்துவது. **எட்டாந்திருமுறை**, அருள் பெற்ற அடியார் குருவாக வந்து, அன்பு நெறியை அனைவருக்கும் ஆக்கிச் சீவனைச் சிவ மாக்கிய பெருமையுடையது.

(அ) திருவாசகம்: இது ஐம்பத்தொரு திருப்பதிகங்களையுடையது. இவற்றில் அடங்கிய திருப்பாடல்களின் தொகை அறுநூற்று ஐம்பத்தாறு. மணிவாசகப் பெருமான் 'வாக்கு உன் மணிவார்த்தைக் காக்கி' (30) என்றும், 'பேச்சிறந்த மாசில் மணியின் மணிவார்த்தை' என்றும் இறைவனைப் பற்றிப் பாடும் தமது மொழியை 'வார்த்தை' என்கின்றார். 'வார்த்தை, வாசகம்' என்பன ஒரு

பொருட்கிளவி. அன்றியும், இறைவன் தம்மை ஆட் கொண்ட அருள் விசேடத்தை உலகத்தவர்க்கு உரைப்பது போலவும், பிரிந்ததனால் உண்டான வருத்தத்தைப் பற்றிப் பெருமானொடு உரையாடுதல் போலவும் இந்நூல் முழுவதும் அமைந்திருத்தலின் பேச்சுமுறையான் அமைந்த இந்நூல் 'வாசகம்' என வழங்கப்பட்டிருக்கலாம் என்று கருதவும் இடம் உண்டு.

(i) **நூலமைப்பு:** சிவபுராணம் முதலில் வைக்கப் பெற்றிருப்பது சிறப்பு. அது தத்துவ விளக்கத்திற்குத் தலை சிறந்ததாக அமைகின்றது. அதனைத் தொடர்ந்து வரும் மூன்று அகவல்களும் முறையாக இடம் பெற்றுள்ளன. சாதனங்களின் சீரிய பகுதிகள் **'திருச்சதகத்தில்'** அடங்கியுள்ளன. அவை தத்துவ விளக்கத்திற்குத் தொடர்ந்து வருவது தகும். 'நீத்தல் விண்ணப்பம்' அதன் பின் வருவதிலும் பொருள் புதைந்துள்ளது. ஏனைய பதிகங் களெல்லாம் எப்படி வேண்டுமானாலும் அமையலாம். இது சித்பவானந்த அடிகளின் கருத்து.[15]

சித்பவானந்த அடிகள் திருவாசக அமைப்பை ஓர் உயர்ந்த மலைத் தொடரின் முடிமீது நடந்து போவதோடு ஒப்பிடுகின்றார்.[16] நீண்ட மலைத் தொடரின் கொடுமுடிகள் ஒரே ஒப்பமாயிருப்பதில்லை. செங்குத்தான கொடுமுடி களும் தாழ்வுற்ற மலைப்பகுதிகளும் மாறி மாறி வந்து கொண்டுள்ளன. மலையின் முதுகில் மேடும் பள்ளமும் பின்னிப் பின்னிப் பொலிவது இயற்கையின் கூறு என லாம். திருவாசகத்தில் சிவபுராணம் மகாமேரு போன்று ஒரே செங்குத்தாக உள்ளது. அதனைப் பூலோக கயிலாயம் எனலாம். ஏனைய மூன்று அகவல்களும் கிட்டத்தட்ட

15. அடிகளாரின் திருவாசகப் பதிப்பு உபநிடத மந்திரங்களுடன் கூடியது.
16. திருவாசகம் (அடிகளார் பதிப்பு) - முகவுரை - பக். 7-8.

*அதே உயரத்தில் உள்ளன. பின்பு மலைத் தொடர்பு படிப்படியாகக் கீழே இறங்கி வருகின்றது. அதில் மேலே ஏறுவதும் கீழே இறங்குவதும் மாறி மாறி நிகழ்கின்றன. மனிதனுடைய ஆன்ம சாதனமும் அங்ஙனமே நிகழ் கின்றது. திருவாசகத்தின் இறுதிப் பகுதி திரும்பவும் மேல் நோக்கிப் போகின்றது. **'சீவ உபாதி ஒழித்தல்'** என்னும் பதிகம் (49. திருப்படையாட்சி என்னும் பதிகம்) சிவ புராணத்துக்கு நிகராக உயர் நிலை பெறுகின்றது.[17] முடிவில் ஆனந்தமாலையும் (50), அச்சோப்பதிகமும் (51) கீழிறங்கி வருவன போல் அமைகின்றன.*

*சீவான்மாக்கள் அனைத்தும் பரமனை நாடிப் பயணம் செய்கின்றன. பிறப்புகள் பலவற்றில் அவை படிப்படியாய்ப் பக்குவம் அடைகின்றன. பின்பு முடிந்த நிலையைப் பெறுத லில் படித்தரங்கள் பல உள்ளன. உறங்குபவன் கனவினின்று எழுந்திருப்பது போன்று பரஞானம் திடீரென்று வாய்க்கப் பெற்று அதிலேயே நிலைத்திருப்பவன் தலையான பக்குவி. சம்பந்தப் பெருமான் இதற்கு நல்ல சான்று ஆகின்றார். ஏணியில் முறையாக மேலே செல்பவன் போன்று பரம னிடம் போகின்றவர்கள் உள்ளனர். சுந்தரமூர்த்தி இதற்குத் தக்க எடுத்துக்காட்டாக அமைகின்றார். கயிலை மலைக்குச் செல்பவர்கள் மேலே ஏறவும் கீழே இறங்கவும் செய்து சிறிது சிறிதாக மேல் நிலைக்கு வருகின்றனர். நாவுக்கரசரும் மணிவாசகப் பெருமானும் இம்முறையில் மேலே வந்தவர் கள் ஆகின்றனர். வாதவூரரின் முன்னேற்றத்திற்கு அவர்தம் நூலே அக்சான்றாக அமைகின்றது. கீழ்மையில் இறங்கவும் மேன்மையில் ஏறவும் செய்து இறுதியில் பரமனோடு அவர் ஒன்றுபடுகின்றனர். பலதரப்பட்ட அவர்தம் கூற்று களை அந்தந்த நிலையில் இருக்கும் ஆன்ம சாதகர்கள் நன்கு பயன்படுத்திக் கொள்ளலாம்.*

17. இப்பதிகத்திற்கு அடிகளாரின் விளக்கவுரை உணர்ந்து உணர்ந்து அநுபவிக்கத் தக்கது.

*வாதவூரரைப் பற்றிய மற்றொரு கோட்பாடும் உண்டு அதனைச் சாதகர்கள் சிந்தனையில் வைப்பது இன்றியமை யாதது. மாபாதகங்கள் பல பண்ணி விட்டதாகச் சில இடங்களில் அவர் சித்திரிக்கின்றார். ஆனால், அவர்தம் வாழ்க்கை அத்தகைய கீழ்நிலைக்குப் போனதற்குச் சான்று ஒன்றுமே இல்லை. பிறந்த நாள் தொட்டு அவர் தூய வாழ்வில் நிலைத்திருந்தார்*[18] *என்று உறுதி கூறலாம். பின்பு உலகில் சீவர்களிடமிருக்கும் கீழ் நிலைகள் தம்மிடம் இருந்தனவாக வைத்துக் கொண்டு அவர் கழுவாய் தேடினார். முயலுகின்ற கடைப்பட்ட மாந்தரும் உய்வு அடையலாம் என்பது திருவாசகத்தினின்று தெளிவா கின்றது. காலில் தீண்டத் தகுதியற்ற சாக்கடை நீரும் கங்கை யில் சேர்ந்தபின் தானே கங்கையாகின்றது.*[19] *அங்ஙனமே கங்காதரனைச் சேர்ந்த கயவர்களும் கடவுள் மயமா கின்றனர். அன்னவர்கட்குத் திருவாசகம் ஞான விளக்காக ஒளிர்கின்றது.*

(ii) **திருவாசகத்தின் பெருமை:** *படிப்பவர் மனத்தைப் பரவசப்படுத்துவது. ஒரு முறை ஓதினாலும் உயிர் தன் தன்மை கெட்டுச் சிவத்தன்மையாதல் தெளிவு. அலைகின்ற மனத்திற்கு ஓய்வளிக்க வல்ல ஒப்பற்ற மருந்து. கடவுள் அருளை வாரி வழங்கும் கற்பகம். சிவானந்தப் பெருங் கடலைச் சிந்தையில் நிறைவித்துத் திருமேனி முழுதும் பரவச்செய்து புளகாங்கிதமுறுத்தும் புண்ணிய நூல். எளிய சொற்களால்- விழுமிய பொருளால்- இழுமென்*

18. நம்மாழ்வார் வாழ்க்கையும் இத்தகையது. அவரும் தம்மை இவ்வாறு குறை கூறுகின்றார். வைணவப் பெருமக்கள் இதை ‘நைச்சியாநுசந்தானம்’ (தாழ்வாகக் கூறிக் கொள்ளுதல்) என்பர்.
19. ‘ஊர் அங்கணநீர் உரவு நீர்ச் சேர்ந்தக்கால், பேரும் பிறிது ஆகித் தீர்த்தமாம்’ (நாலடியார்-18, நல்லினம் சேர்தல்-5)

ஓசையால் எல்லோரையும் தன் வயப்படுத்தும் தனிப் பெருந்தகுதியுடையது. உரை மனங்கடந்து நிற்கும் தன்மையது என்று சுருங்க உரைக்கலாம். இந்நூலைப் பற்றி தாயுமானவர் போன்ற அருளாசிரியர்கள் பலபடப் புகழ்ந்து போற்றியுள்ளனர். ஜி.யு. போப் என்பார் என்னை யும் உருக்கவல்ல ஆற்றலுள்ளது என்று கூறிப்போந்தார்.

(ஆ) திருச்சிற்றம்பலக்கோவையார்: புத்தர்களை வென்று திருவாதவூரடிகள் தில்லை அம்பலவாணனை வழிபட்டு தவச் சாலையில் தங்கியிருந்த பொழுது ஆடலரசன் அந்தணனாக வந்து தோன்றி அடிகள் அருளிய திருவாசகச் செழுமறையை தம் திருக்கையினால் எழுதிக் கொண்டு 'அகத்திணைக் கோவையொன்று பாடித்தருக' என அடிகளை வேண்டிய பொழுது அம்முதல்வனே தன் திருக்கையால் எழுதிக்கொள்ளுமாறு திருவாய் மலர்ந் தருளிய தெய்வப் பனுவலே திருச்சிற்றம்பலக்கோவை யாகும். தில்லையில் திருச்சிற்றம்பலத்தைப் பரவிப் போற்றும் முறையில்மைந்த அகத்திணைக் கோவை யாதலின் **'திருச்சிற்றம்பலக்கோவை'** என்ற திருப்பெயர் பெற்றது. இது **'கோவைத் திருவாசகம்'** என்ற பெயராலும் வழங்கும்.

வாதவூரடிகள் சிவபெருமானைத் தம் ஆருயிர்க் காத லனாகவும், அவனது திருவடிப் பேரின்பத்தை விரும்பிய தம்மைத் தலைவியாகவும் கொண்டு நெஞ்சம் நெக்குருகிப் பல திருப்பாடல்களைப் பாடிப் போற்றியுள்ளதைக் காணலாம்.

மூலமாகிய மும்மல மறுக்கும்
தூயமேனிச் சுடர்விடு சோதி
காதலனாகிக் கழுநீர் மாலை
ஏலுடைத்தாக எழில்பெற அணிந்தும்[20]

20. கீர்த்தித் திரு அகவல் - அடி 111-114

என வரும் அடிகளின் திருவாக்கு அவர் ஆண்டவனைத் தலைவனாகவும், தம்மை அவனருளுக்கு ஏக்கமுற்று வருந்தும் பெண்ணொருத்தியாகவும் கருதி நெஞ்சங் கரைந்து அன்பு நெறியில் நின்றொழுகியவர் என்பதனை நன்கு புலப்படுத்துவதாகும்.

இந்நூல் கட்டளைக் கலித்துறையில் அமைந்த 400 திருப்பாடல்களைக் கொண்டது; 400 துறைகளில் அமைந்தவை இப்பாடல்கள். அடிகள் தாம் பாட எடுத்துக்கொண்ட அகப்பொருட்கோவைக்கு 400 என்னும் பாடல் தொகையினைத் தேர்ந்து கொண்டமைக்கு நற்றிணை நானூறு, குறுந்தொகை நானூறு, நெடுந்தொகை நானூறு என அமைந்த சங்கத் தொகை நூல்களின் பாடல் தொகையே அடிப்படையாக அமைந்திருத்தல் வேண்டும். இங்ஙனம் அகத்திணையொழுகலாற்றினை 400 துறைகளாக வகுத்தமைத்துப் பொருள் தொடர்நிலையாக 400 செய்யுட்களால் முதன்முதல் கோவை பாடியவர் மணிவாசகப் பெருமானே யாவர்.

மேலும், இக்கோவை நூல் இயற்கைப்புணர்ச்சி, பாங்கற் கூட்டம், இடந்தலைப்பாடு, மதியுடம்படுதல், இருவரும் உள்வழி அவன் வர உணர்தல், முன்னுற உணர்தல், குறையுற உணர்தல், நாணநாட்டம், நடுங்க நாட்டம், மடல், குறை நயப்பித்தல், சேட்படை, பகற்குறி, இரவுக்குறி, ஒருவழித் தணத்தல், உடன்போக்கு, வரைவுமுடுக்கம், வரைபொருட் பிரிதல், மணஞ்சிறப்புரைத்தல், ஓதற்பிரிதல், காவற்பிரிதல், பகைதணி வினைப்பிரிதல், வேந்தற்குற்றுழிப் பிரிதல், பொருள் வயிற்பிரிதல், பரத்தையிற்பிரிதல் என **இருபத்தைந்து** கிளவிக் கொத்துகளாகப் பகுக்கப் பெற்ற இருபத்தைந்து இயல்களையுடையதாகும். வள்ளுவப் பெருந்தகை தாம் கூற எடுத்துக் கொண்ட காமத்துப் பாலாகிய அகனைந்திணை ஒழுகலாற்றினை இருபத்தைந்து இயல்

*களாக வகைப்படுத்தி உரைத்தாற்போன்று, வாதவூரடி களும் தமது கோவையை இருபத்தைந்து கிளவிக் கொத்து களாக அமைத்துள்ளமை ஒப்பு நோக்கத்தகும். இந்நூலுக் குப் பேராசிரியர் அரியதோர் உரையும் வரைந்துள்ளார்.*

*இப்பனுவலில் நயமான ஒரு பாடலைக் காட்டுவேன்.*

'மீண்டா ரெனஉவந்தேன் கண்டு
நும்மை, இம்மேதகவே
பூண்டார் இருவர்முன் போயின
ரே:புலி யூரெனைநின்'(று)
ஆண்டான் அருவரை ஆளியன்னானைக்
கண்டேன்; அயலே
துண்டா விளக்கனையாய்! என்னையோ
அன்னை சொல்லியதே[21]

*என்ற திருப்பாடல் 'உடன்போக்கு' என்ற துறையில் அமைந்தது. தலைவனுடன் ஏகிய தலைமகளைத் தேடிக் கொண்டு சென்ற செவிலித்தாய், தன்மகளையும் அவள் காதலனையும் ஒத்த காதற் கேண்மையினராய்த் தனக்கு எதிரே வந்த காதலர் இருவரைக் கண்டு அணுகி வினவின ளாக, அவ்விருவருள் தலைவன் அவளுக்கு மறுமொழி கூறிய நிலையில் வினாவும் விடையுமாக அமைந்தது இத்திருப்பாடல்.*

*'காதலராய் வரும் நும் இருவரது தோற்றத்தைக் கண்டு என்னால் தேடப் பெறும் மகளும் அவள் காதலனும் ஆகிய அவ்விருவரும் மீண்டு வந்தார்கள் என்று கருதி மகிழ்ந் தேன். இவ்வாறு நும்மோடொத்த பெருமை வாய்ந்த இவ் வொழுக்கத்தையே பூண்ட காதலர் இருவர் இவ்வருஞ் சுரத்தில் முன்னே நடந்து சென்றனரோ? உரைமின்' எனச் செவிலி வினவுவதாக அமைந்தது, 'நும்மைக் கண்டு*

21. திருக்கோவையார் - 244

மீண்டார் என உவந்தேன்; இம் மேதகவே பூண்டார் இருவர் முன் போயினரோ?' என்ற தொடராகும்.

செவிலி கூறிய அம்மொழியைக் கேட்ட அத்தலைவன் 'புலியூர்க்கண் என்னை ஒரு பொருளாக மதித்து நின்று ஆண்ட இறைவனது கிட்டுதற்கரிய மலையில் சிங்கத்தினை யொப்பானாகிய தலைவனை யான் கண்டேன்' என்று செவிலிக்கு மறுமொழி கூறியவன், தன் அருகே நின்ற காதலியை நோக்கி, 'தூண்ட வேண்டாத மணிவிளக்கினை யொப்பாய், அத்தலைமகனது அயலே அன்னை சொல்லி யது யாது? அதனை அன்னை விளங்கச்சொல்வாயாக' எனப் பணிக்கும் முறையில் அமைந்தது, 'புலியூர் எனை நின்று ஆண்டான் அருவரை ஆளி அன்னானைக் கண்டேன்; தூண்டாவிளக்கு அனையாய், அயல் அன்னை சொல்லியது என்னையோ!' என்ற தொடராகும்.

புணர்ந்துடன் வரும் தலைமகன் செவிலியை நோக்கிக் கூறியதாக அமைந்த இம்மறுமொழி, தன்னால் காதலிக்கப் பெற்ற மனைவியன்றிப் பிறர்க்குரிய மகளிரைக் கண்ணாற் காணுதற்கும் எண்ணாத அவனது தூய நன்னெஞ்சத்தின் இயல்பினைப் புலப்படுத்துவதாய்க் கற்பினுக்கு அருங்கல மாய் அவனுடன் போந்த காதலியின் சிறப்பினையும் ஒருங்கு உணர்த்தும் நிலையில் அமைந்திருத்தல் காண லாம். தமிழ் இயல் வழக்கமாகிய அகத்திணையொழுக லாற்றில் தலைவன் தலைவியாகிய காதலர் இருவர்பாலும் அமையவேண்டிய உயர்ந்த பண்புகளுள் நிறைவும் கற்பும் ஆகிய இவை இன்றியமையாச் சிறப்பின என்னும் இவ்வுண்மையினைத் திருவாதவூரடிகள் இத்திருப்பாடலில் தலைவன் கூற்றில் வைத்து விளக்கிய திறம் உணர்ந்து போற்றற்குரியதாகும்.

(9) ஒன்பதாந்திருமுறை: திருமாளிகைத்தேவர் முதல் சேதி ராயர் ஈறாகவுள்ள ஒன்பதின்மர் திருவாய் மலர்ந்துள்ள

இருபத்தெட்டுப் பதிகங்களும் சேந்தனார் பாடிய திருப் பல்லாண்டும் சேர்ந்த இருபத்தொன்பது பதிகங்களையும் **'திருவிசைப்பா மாலை'** என வழங்குவர் திருமுறை கண்டபுராண ஆசிரியர். இவை தேவாரத்திருப்பதிகங்கள் போன்று இசை நலம் வாய்ந்தவை. இத்திருமுறையில் அடங்கிய பாடல்களின் தொகை முந்நூற்றொன்று. திருக் கோயில் வழிபாட்டில் பஞ்ச புராணம் என ஓதப் பெறும் பாடல்கள் ஐந்தனுள் திருவிசைப் பாவில் ஒன்றும் திருப்பல்லாண்டில் ஒன்றுமாக இரண்டு திருப்பாடல்கள் இத்திருமுறையிலிருந்து ஓதி வருகின்றனர்.

(i) ***தலங்கள்:*** திருவிசைப்பா பாடல் பெற்ற தலங்கள் **பதினான்கு** அவை: தில்லைச்சிற்றம்பலம், திருவீழி மிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி, திருக்களந்தை யாதித் தேச்சுரம், திருக்கீழ்க்கோட்டு மணியம்பலம், திருமுகத்தலை, திரைலோக்கியசுந்தரம், கங்கைகொண்ட சோழேச்சரம், திருப்பூவணம், திருச்சாட்டியங்குடி, தஞ்சைஇராசராசேச்சரம், திருவிடைமருதூர், திருவாரூர் என்பவை.

(ii) ***ஆசிரியர்கள்:*** திருவிசைப்பாமாலையை அருளிச் செய்தவர்கள் **ஒன்பதின்மர்**. அவர்கள் திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த் தேவர், பூந்துருத்திநம்பி, காடவ நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலி யமுதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர் என்பவர் களாவர். பாடல்களின் தொகை 365 என்று கூறப்பெறினும் இப்பொழுதுள்ளவை 301 மட்டிலுமே.

(10) பத்தாம் திருமுறை: பத்தாம் திருமுறையாக அமைந்தது திருமூலரின் திருமந்திரமாலை. இஃது இந்நூலுக்கு ஆசிரியர் இட்டபெயர்.[22] இந்நூல் மூவாயிரம் தமிழ்ப்

22. திருமந். 86

பாடல்கள் உடைமைபற்றி 'தமிழ்மூவாயிரம்' என வழங்குதலும் உண்டு.[23]

இந்நூல் தொல்காப்பியனார் கூறிய எழுநிலத்து எழுந்த செய்யுட்களுள் மறைமொழிகிளந்த மந்திரத்தாலான[24] செய்யுளின்பாற்படுதலின் **திருமந்திரம்** எனப் பெயர் பெற்றது. தாம் சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டும் குறைவின்றிப் பயன் தரச்சொல்லும் ஆற்ற லுடைய நிறைமொழி மாந்தராகிய பெரியோர் 'இஃது இவ்வாறாகுக' எனத் தமது ஆணையாற் சொல்லப்பெற்று அவ்வாற்றல் அனைத்தையும் தன்கட் பொதிந்து வைத் துள்ள செறிவுடைய நன்மொழியே **'மந்திரம்'** எனப்படும். இதன் இயல்பினை 'நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த, மறை மொழிதானே மந்திரம் என்ப'[25] என்று தொல் காப்பியர் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளார். இக்கருத்தே பற்றி வள்ளுவப் பெருந்தகையும்,

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.[26]

என்று மந்திர மொழியின் பெருமையை நன்கு விளக்கி யுள்ளார்.

இந்நூல் ஒன்பது தந்திரங்களையுடையது. முதல் நான் கும் சிவஞானத்தைப் பெறுவதற்கு விரும்பியவர் தம்மை உள்ளும் புறம்பும் தகுதியுடையவர்களாக்கிக் கொள்ளுதற் குரிய சாதனங்களையும், நடுவணதாகிய ஐந்தாம் தந்திரம்

23. இத்தொகைக்கு மேலாகக் காணப்பெறும் பாடல்கள் ஆசிரியரின் மாணாக்கர்களாலும் பிறராலும் பாடப்பெற்று நூலில் சேர்ந்தவையாகும்.
24. தொல். செய்யு. 165
25. மேலது 171
26. குறள் - 28 (நீத்தார் பெருமை,

சைவத்தின் முடிந்த முடிபாகிய சைவ சித்தாந்த உண்மை களையும், ஆறு முதல் ஒன்பது வரையுள்ள நான்கு தந்திரங் களும் ஞானம் பெறும் நிலையில் உணர்ந்து பெறத்தக்கன வாயுள்ள நற்பயன்களைப்பற்றி விரித்துக் கூறும் முறை யிலும் அமைந்துள்ளன. ஒவ்வொரு தந்திரமும் பல அதி காரங்களாகப் பிரிக்கப்பெற்று பல நுண்ணிய கருத்துகளைத் தெளிவாக விளக்குவதாக அமைந்துள்ளது.

ஒன்பதாந் தந்திரத்தின் இறுதியிலமைந்த வரையுறை மாட்சி, அணைந்தோர் தன்மை, தோத்திரம், சர்வவியாபி என்னும் தலைப்புகளில் உள்ள திருமந்திரப்பாடல்கள் பசு கரணங்களெல்லாம் சிவகரணங்களாகப் பெற்றுச் சிவயோகத்தில் திளைத்து இன்புறும் அருளாளர்கள் ஆகிய சீவன் முக்தர்களது இயல்பினை இனிது புலப்படுத்துவன வாகும்.

## (3) பதினொன்று, பன்னிரண்டாம் திருமுறைகள்

(11) பதினோராந் திருமுறை: திருவாலவுடையார் திருவாய் மலர்ந்தருளிய 'திருமுகப்பாசுரம்' முதலாக நம்பியாண் டார் நம்பிகள் பாடிய 'திருநாவுக்கரசு தேவர் திருஏகாதச மாலை' ஈறாக உள்ள நாற்பத்தொரு பிரபந்தங்களின் தொகு தியே '**பதினோராம் திருமுறை**'யாகும். இப்பிரபந்தங் களைப் பாடிய அருளாசிரியர்கள் திருவாலவாயுடையார், காரைக்கால் அம்மையார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், சேரமான் பெருமாள் நாயனார், நக்கீர தேவநாயனார், கல்லாட தேவர், கபிலதேவர், பரணதேவர், இளம்பெருமான் அடிகள், அதிராவடிகள், பட்டினத் தடிகள் (திருவெண்காட்டடிகள்), நம்பியாண்டார் நம்பி எனப் **பன்னிருவர்**. திருவாலவாயுடையார் என்பவர் சோமசுந்தரக் கடவுள். ஏனைய ஆசிரியர்கள் அனைவரும் அப்பெருமானின் திருவருள் பெற்ற மெய்யடியார்கள்.

எனவே, சிவபெருமானாலும் அவனது திருவருளைப் பெற்ற மெய்யடியார் பதினொருவராலும் அருளிச் செய்யப் பெற்ற செழும் பாடல்களைத் தன்னகத்தே கொண்டு 41 பிரபந்தங்கள் அடங்கிய திருமுறையே இப்பதினோராந் திருமுறை.

(அ) திருவாலவாயுடையார்

(i) ***திருமுகப்பாசுரம்:*** இது பாணபத்திரர் என்ற அடியார் பொருட்டு சிவபிரானால் அருளிச்செய்யப் பெற்றது. **'மதிமலி புரிசை மாடக் கூடல்'** என்று தொடங்கி 12 அடிகளைக் கொண்டது.

(ஆ) காரைக்காலம்மையார்

(ii, iii) ***திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டு:*** திருஞானசம்பந்தர் முதல் தேவார ஆசிரியர்கள் பதிகப்பெருவழியால் இறைவன் திருவருளைத் தமிழகமெங்கும் பரப்புவதற்கு முன் பண்ணார்ந்த பாடல்களால் இறைவனைப் பாடிப்போற்றும் திருநெறிய தமிழ் நெறியை முதன்முதல் தோற்றுவித்த அருளாசிரியர் காரைக்கால் அம்மையாரேயாவர். ஆகவே அம்மையார் திருவாய் மலர்ந்தருளிய இயலிசைத் தமிழ்ப் பதிகங்கள் இரண்டும் மூத்த திருப்பதிகங்கள் என வழங்கப் பெறுவனவாயின.

(iv) ***திருவிரட்டைமணிமாலை:*** இது கட்டளைக் கலித்துறை முன்னும் வெண்பா பின்னுமாக முறையே தொடர்ந்த அந்தாதித் தொடையால் மாலை போன்றமைய இருபது செய்யுட்களால் இயற்றப்பெறுவதாகும். இரட்டை மணி மாலையை முதன்முதலாகப் பாடியவர் அம்மையாரேயாவார். இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள தமிழ் நூல்களில் கட்டளைக் கலித்துறை என்னும் யாப்புக்கு மூல இலக்கியமாக விளங்குவன அம்மையார் பாடிய இத்திருவிரட்டைமணிமாலையிலுள்ள கட்டளைக் கலித்துறைச் செய்யுட்கள் பத்துமேயாகும்.

(v) ***அற்புதத் திருவந்தாதி:*** அம்மையார் முதன்முதல் பாடிய சிறப்புடைய பிரபந்தம் இது. 'அற்புதம்' என்பது ஈண்டு யாவராலும் போற்றுதற்குரிய **'சிவஞானம்'** என்ற பொருளைத் தருவது. இது தொல்காப்பியர் கூறும் **'விருந்து'** என்னும் வனப்புக்குரிய இலக்கியமாகும். இந்த நூல் அந்தாதி இலக்கியத்துள் தொன்மையும் சிறப்பும் வாய்ந்தது.

(இ) ஐயடிகள் காடவர்கோன் நாயனார்

(vi) ***க்ஷேத்திரத்திருவெண்பா:*** சிவபெருமான் திருக்கோயில் கொண்டு வீற்றிருந்து அருள் விளங்கும் சிறப்புடைய திருத்தலங்களை நெஞ்சினால் நினைந்தும் வாயினால் வாழ்த்தியும் அடைந்து மெய்யினால் தொண்டு புரிந்தும் போற்றும் முகமாகப் பிறவித் துயர் நீங்கி இறைவன் திருவடியைச் சார்ந்து இன்புறலாம் என்பது க்ஷேத்திரத் திருவெண்பாக்களிலமைந்த திரண்ட கருத்தாகும்.

மறவாத பேரன்பினால் இறைவனது திருவருள் ஞானத்தால் சிவானந்த அநுபூதியைத் தலைப்பட்ட மெய்யடியார்கள் சிவ வேடத்தையும் திருக்கோயில்களையும் சிவனெனவே தெளிந்து வழிபடுவர் என்பற்குச் சிவாலாயங்கள் அமைந்த திருத்தலங்களைப் பாடிப் பரவிய ஐயடிகள் காடவர் கோன் நாயனார் சிறந்த இலக்கிய ஆசிரியராகத் திகழ்கின்றார். இங்குப் பாடப் பெற்ற வெண்பாக்கள் யாவும் யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை ஆகியவற்றை வற்புறுத்துவனவாகவும், நோயினாலும் முதுமையினாலும், உடல் தளர்ந்த நிலையில் மனைவி மக்கள் சுற்றத்தார் அழுதிரங்க உயிர் உடலை விட்டுப் பிரிவதற்கு முன்னரே இறைவன் கோயில் கொண்டருளிய திருத்தலங்களை வழிபடுதல் வேண்டுமென்று அறிவுறுத்துவனவாகவும் மோனை எதுகை யமகம் திரிபு முதலிய அணி நலன்களையும் பெற்று விளங்குகின்றன.

(ஈ) சேரமான் பெருமாள் நாயனார்

(vii) **பொன்வண்ணத்தந்தாதி:** சேரமான் பெருமாள் தில்லைச் சிற்றம்பலத்தை இறைஞ்சித் தில்லையம்பலவனது அருட்கூத்தினைக் கண்டு மகிழ்ந்த நிலையில் பாடிய செந்தமிழ்ப்பனுவல் என்பர் சேக்கிழார். கட்டளைக் கலித் துறை யாப்பினால் அமைந்த இந்நூலில் நூறு செய்யுட்கள் உள்ளன. பொன்னார் மேனியனாகிய சிவபெருமானைக் கண்டு காமுற்று அவனை அடையப்பெறாமையால் பசலை நிறங்கொண்டு உடல் வேறுபட்ட தலைவி யொருத்தி தானும் தன்னாற் காதலிக்கப்பெற்ற தலைவ னாகிய சிவபெருமானும் பொன்வண்ணமாகிய ஒரே நிறத்தினைப் பெற்று விளங்கும் உரு ஒப்புமையை எண்ணி உளங்குளிர்ந்துரைப்பதாக அமைந்தது இப்பிரபந்தத்தின் முதற்பாடல். 'பொன் வண்ணம்' என்ற தொடரை இம் முதற்பாட்டின் முதற்சீராகக் கொண்டு தொடங்கி இதன் இறுதிச் செய்யுளாகிய நூறாவது செய்யுளைக் 'கனக மாலையருகே போயின காக்கையுமன்றே படைத்தது பொன் வண்ணமே' என முடித்து அந்தாதித் தொடை யமைய இப்பனுவலைச் சேரமான் பெருமாள் நாயனார் முடித்தமையால் இந்நூல் பொன்வண்ணத்தந்தாதி என்ற பெயர்பெற்றது.

(viii) **திருவாரூர் மும்மணிக்கோவை:** மும்மணிக் கோவை என்பது மூவகை மணிகளால் கோக்கப் பெற்ற மாலை போன்று ஆசிரியம், வெண்பா, கட்டளைக்கலித் துறை என்ற மூவகைச் செய்யுட்களால் அந்தாதித் தொடை அமைய இயற்றப் பெறும் செந்தமிழ்ப் பிரபந்தமாகும். இப்பிரபந்தம் முப்பது பாடல்களால் நிறைவு பெற வேண்டும் என்பது விதி. இப்பொழுது கிடைத்துள்ள தமிழ் நூல்களில் மும்மணிக் கோவை என்னும் இப் பிரபந்தத்திற்குரிய மூல இலக்கியமாக விளங்குவது இந்தப்

பிரபந்தமேயாகும். திருவாரூரில் கோயில் கொண்டு எழுந்தருளிய சிவபெருமானைப் போற்றுவதாதலின் **'திருவாரூர் மும்மணிக்கோவை'** என்னும் பெயர் பெற்றது.

(ix) ***திருக்கைலாயஞானஉலா:*** உலாவென்பது தமிழிலுள்ள தொண்ணூற்றாறு பிரபந்தங்களுள் ஒன்று. பேதை முதல் பேரிளம்பெண் ஈறாகவுள்ள ஏழு பருவத்து மகளிரும் கண்டு காதல் கூரும் நிலையில் தன்னிகரற்ற தலைவன் ஒருவன் நகரில் உலாப் போந்த அழகிய தோற்றத்தைக் கலி வெண்பாவில் அமைத்துப் பாடப்பெறுவதே உலா வென்னும் பிரபந்தமாகும். இது சேரமான்பெருமாள் நாயனாரால் கைலாயத்தில் இறைவனது திருவுலாக்காட்சியைப் பொருளாகக்கொண்டு தம் வழியிடையே பாடி வந்த இப்பனுவலைக் கைலாயத்தில் இறைவன் திருமுன் அரங்கேற்றினார். அங்கு உடனிருந்து கேட்டு மகிழ்ந்த ***மாசாத்தனார்*** அப்பிரபந்தத்தை மனத்திற் கொண்டு வந்து சோழநாட்டில் ***திருப்பாடலூரில்*** உலக மக்கள் அறிய வெளிப்படுத்தி உதவினர் என்பது வரலாறு.

இந்த உலா தமிழிலுள்ள உலாப் பிரபந்தங்கள் எல்லாவற்றிற்கும் காலத்தால் முற்பட்டுத் தோன்றிய மூல இலக்கியமாதலின் ***ஆதியுலா*** என்று வழங்கப்பெறுவதாயிற்று. இவ்வுலாவினையொத்த சுவை நயமுடைய மற்றோருலா இதுகாறும் தோன்றவில்லை. ஆதலால் இப்பிரபந்த வளர்ச்சியில் இவ்வுலாவே முடிந்த நிலையில் விளங்குகின்றது.

**(உ) நக்கீர தேவநாயனார்**

இவர் பாடியவை பத்துப் பிரபந்தங்கள்.

(x) ***கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி:*** எல்லாம் வல்ல சிவபெருமான் வடதிசையிலுள்ள திருக்கயிலாய மலையில் அம்மையப்பனாக வீற்றிருந்து எவ்வுயிர்க்கும்

அருள் சுரத்தல் போன்று, தென்திசையிலுள்ள திருக் காளத்தி மலையிலும் அருள் சுரக்கின்றான் என அப்பெரு மானது அருமையில் எளிய அருளின் நீர்மையைப் புலப் படுத்தும் கருத்துடன் நக்கீரதேவர் அருளிய செந்தமிழ்ப் பனுவல் கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி இந்நூல். அந்தாதித் தொடையமைய நூறு வெண்பாக்களால் இயன்றுள்ளது. இதன் கண் ஒற்றைப்படை எண்களி லமைந்த வெண்பாக்கள் ஐம்பதும் திருக்கயிலையைப் போற்றுவனவாகவும் இரட்டைப் படை எண்களிலமைந்த வெண்பாக்கள் ஐம்பதும் திருக்காளத்தியைப் போற்றுவன வாகவும் அடுத்தடுத்து அமைந்திருத்தலால் இது கயிலை பாதி காளத்திபாதி- அந்தாதி எனப் பெயர் பெற்றது.

(xi) **திருஈங்கோய்[27] மலை எழுபது:** இது திருஈங் கோய் மலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைப் போற்றிப் பரவிய எழுபது வெண்பாக்களையுடையதோர் பிரபந்தம். சங்கத்துச் சான்றோர் ஒரு குறிப்பிட்ட முறையில் அடைவு படுத்தியது போன்று **'திருஈங்கோய்மலை எழுபது'** என்னும் பிரபந்தத்தினைப் பாடியிருத்தல் வேண்டும் எனக் கருதலாம். இந்நூல் 48-ஆம் பாடலின் இரண்டாவது அடி முதல் 62-ஆம் பாடலின் முதலடி முடியவுள்ள பகுதி சிதைந்து மறைந்தமையால், இப்போது சிதைவான நிலையில் கிடைத்துள்ளவை **ஐம்பத்தைந்து** வெண்பாக்களேயாம். இவை யாவும் ஈங்கோய் மலையின் இயற்கை வளத்தையும் அங்குக் கோயில் கொண்டருளிய சிவபெருமானது திருவருட்டிறத்தையும் சுவை நலம் பெருக இனிது சிறப்பித்துரைப்பனவாக உள்ளன.

(xii) **திருவலஞ்சுழிமும்மணிக்கோவை:** திருவலஞ்சுழி யில் கோவில் கொண்டருளிய சிவபெருமானைப் போற்றிப்

27. இது திருச்சி மாவட்டம் - முசிறிக்கு மேல் திசையில் 2 கல் தொலைவிலுள்ளது.

பரவும் கருத்துடன் நக்கீர தேவர் பாடிய பிரபந்தம் திரு வலஞ்சுழி மும்மணிக்கோவையாகும். திருவலஞ்சுழி என்பது சோழ நாட்டில் காவிரியாற்றின் தென்கரையில் அமைந்ததோர் ஊர். இவ்வூர் காவிரியாறு வலமாகச் சுழிந்து செல்லும் இடத்தில் அமைந்திருப்பது பற்றி வலஞ்சுழி என்ற பெயரால் வழங்கப்பெறுவதாயிற்று.

ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகிய மும்மணிகளால் அந்தாதித்தொடையமையத் தொடுக்கப் பெற்றமையால் இது மும்மணிக்கோவை என்னும் பெயர் பெற்றது. மும்மணிக்கோவையாகிய இப்பிரபந்தம் முப்பது பாடல்களால் இயற்றப்பெற்றிருத்தல் வேண்டும் என்பது பிற்காலப்பாட்டியல் நூல்களால் வரையறைப்படுத்தப் பெற்றது. ஆனால் இப்பிரபந்தம் அந்தமும் ஆதியாகப் பதினைந்து பாடல்களால் நிறைவு பெற்றுள்ளது. ஆனால் இந்த வரையறை இந்நூலாசிரியர் காலத்தில் நன்கு நிலை பெறவில்லை என்பது அறியப்பெறும்.

(xiii) **திருவெழுகூற்றிருக்கை:** எழுகூற்றிருக்கை என்பது மிறைக்கவி (சித்திர கவி)களுள் ஒன்று. எழு கூற்றிருக்கை என்னும் இம்மிறைக்கவியின் மூல இலக்கியம் சம்பந்தப் பெருமான் அருளிய திரு எழு கூற்றிருக்கை யாகும். அவர் காலத்தில் வாழ்ந்த திருமங்கையாழ்வார் குடந்தை சாரங்கப்பெருமான்மீது பாடிய திருவெழு கூற்றிருக்கை என்ற ஒன்றும் உள்ளது. இவற்றைப் பின்பற்றி நக்கீரதேவ நாயனார் பாடிய இச்செய்யுளை யாப்பருங்கல விருத்தி உரையாசிரியர் மேற்கோளாக எடுத்துக் காட்டி யுள்ளார். பதினோராந் திருமுறையிலுள்ள இப்பாடல் அந்நூலில் காணப்பெறும் பாடத்திற்குச் சிறிது வேறுபட அமைந்துள்ளது என்பதைப் பேராசிரியர் க.வெள்ளை வாரணனார் எடுத்துக் காட்டியுள்ளார்.[28]

28. பன்னிருதிருமுறை வரலாறு - பகுதி. 2 பக். 657 - 659

(xiv) **பெருந்தேவபாணி:** இது திருவாலவாயிறைவனை முன்னிலைப் படுத்திப் பரவிப் போற்றிய இசைப் பாட்டு. இஃது அறுபத்தேழு அடிகளால் இயன்ற ஆசிரியப்பாவால் அமைந்துள்ளது. தெய்வத்தை முன்னிலையில் வைத்துப் பரவிய பாடல் **தேவபாணி** எனப்படும். பாணி-பண் ணோடு கூடிய பாட்டு. இதனைத் தொல்காப்பியம் ஒத் தாழிசைக் கலியின் வகையாகக் குறிப்பிடும் (செய்யுளிய லில்). எனவே, 'தெய்வத்தை முன்னிலையாகச் சொல்லப் பட்டன அன்றி அல்லன தேவபாணி எனத்தகா' என்பது அவர் கருத்தாதல் இனிது புலனாகும்.

(xv) **கோபப்பிரசாதம்:** வேண்டுதல் வேண்டாமை இல்லாதவனாகிய சிவபெருமான் தன் திருவாணை வழி நில்லாத தீயோரைக் கோபித்தும் தனது அருள் வழியொழு கும் நல்லோரைக் காத்தும் ஆருயிர்களின் நலங் கருதிச் செய்தருளிய தெறலும் அளியுமாகிய இருவகைச் செய்தி களையும் அடுத்தடுத்து எடுத்துரைப்பது நக்கீரர் தேவர் பாடியருளிய **கோபப்பிரசாதம்** ஆகும். இது தொண்ணூற் றொன்பது அடிகளால் இயன்ற ஆசிரியப் பாவாலான பிரபந்தம். இதன்கண் இறைவன் அவ்வக் காலந்தோறும் செய்தருளிய அளியும் தெறலுமாகிய செய்திகள் பல வற்றைக் குறிப்பிட்டு 'இன்னவை பிறவும் எங்களீசன் **கோபப்பிரசாதம்**' என ஆசிரியர் கூறுதலால், இப்பாட் டிற்கு அவ்வாசிரியர் இட்ட பெயர் **கோபப்பிரசாதம்** என்பது நன்கு புலனாகும். ஈண்டுக் **'கோபம்'** என்றது வெகுளியின் விளைவாகிய ஒறுத்தல் தொழிலையும், **'பிரசாதம்'** என்றது அருளின் விளைவு ஆகிய அளித்தல் தொழிலையும் உணர்த்துதல் தெளியப்படும். இவ்விரு வகைத் தொழிலையும் ஆண்டவன் உயிர்களின் நலம் பொருட்டு மேற்கொள்ளுகின்றான் என்பதை வலியுறுத்து வது இப்பிரபந்தத்தின் நோக்கமாகும்.

(xvi) **காரெட்டு:** தலைவனது பிரிவினால் வருத்தமுற்ற தலைமகளை நோக்கிக் 'கார்ப்பருவம் வந்தது: இனித் தலைவரும் வந்து விடுவார்' என்று கூறித்தோழி வற்புறுத்துவதாக அமைந்தது **'காரெட்டு'** என்னும் இப்பிரபந்தம். இந்நூல் கார்ப்பருவ வரவினைக் கூறும் எட்டுப் பாடல்களால் (வெண்பாக்கள்) இயன்றமையால் 'காரெட்டு' எனப் பெயர் பெற்றது.[29] உலகமும் அதற்குறுதியாகின்ற அறம் பொருள் இன்பங்களும், நடத்தற்கேதுவாகிய மழையினது வரவினை எடுத்து உரைக்கும் முகத்தால் அம்மழைக்குக் காரண மாகிய இறைவனது திருவருள் வண்ணத்தை நினைப்பிப் பது இப்பிரபந்தம்.

(xvii) **போற்றித்திருக்கலிவெண்பா:** சிவபெருமான் உலக உயிர்களுக்கு அருள் புரிதல் வேண்டி அவ்வக்காலந் தோறும் செய்தருளிய அருட்செயல்களை எடுத்துரைத்துப் போற்றும் கருத்துடன் நக்கீர தேவர் பாடிய பிரபந்தம் **'போற்றித் திருக்கலிவெண்பா'** என்பது. திருநாவுக்கரசர் இறைவனது பொருள்சேர் புகழைப் போற்றிப் பரவும் கருத் துடன் பாடிய போற்றித் திருத்தாண்டகமும், மணிவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய போற்றித் திருஅகவ லும் ஈண்டு நினைத்தல் தகும். இந்தப் போற்றிக் கலி வெண்பா நாற்பத்தைந்து கண்ணிகளையுடையது. இந்நூல் முடிவு பெறுதலை நோக்கினால் நக்கீரதேவர் திருக்காளத் தியை அடைந்து கண்ணப்ப நாயனார் வழிபட்ட காளத்தி நாதரைப்பணிந்து போற்றும் நிலையில் போற்றிக் கலிவெண்பா என்னும் இந்நூலைப் பாடினார் என்பது புலனாகும்.

(xviii) **திருமுருகாற்றுப்படை:** வள்ளல் ஒருவர் பால் பரிசில் பெற்றுவரும் கூத்தர், பாணர், விறலி, பொருநர்

---

29. கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகிய 'கார்நாற்பது' என்பதை ஈண்டு நினைத்தல் தகும்.

முதலிய பரிசில் பெற்றவர்கள் வழியிடையே தம்மை எதிர்ப்பட்ட இரவலரது துயர் கண்டு இரங்கித் தாம் பெற்ற செல்வத்தை அவர்களும், பெற்று மகிழும்படி வழி கூறி அனுப்புதல்- ஆற்றுப்படுத்தல்-ஆற்றுப்படை எனப்படும். இந்த இலக்கணப்படி அமைந்தவை கூத்தராற்றுப்படை, பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, விறலியாற்றுப் படை என வழங்கும்.

முருகாற்றுப்படை என்பதற்கு முருகன்பால் வீடு பெறுதற்குச் சென்றான் ஓர் இரவலனை வீடு பெற்றான் ஒருவன் முருகனிடத்து ஆற்றுப்படுத்தல் என்பது பொரு ளாகக் கொள்ளல் வேண்டும். மேற்கூறிய ஆற்றுப்படைகள் அனைத்தும் ஆற்றுப்படுத்துவோராகிய கூத்தர் முதலியோர் பெயரால் பெயர் பெற்று வழங்குவன.

எல்லாம்வல்ல இறைவனாகிய முருகனை அடையும் நெறியறிந்து சென்று சேர்தல் சில் வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய மக்களால் இயலாதென்பதும், அரும் பெறல் மரபின் பெரும் பெயர் முருகனாகிய அவ்விறை வனே தன் அருள் காரணமாக நம்மை நோக்கி வந்து தோன்றி அருள் புரியும் இயல்பினன் என்பதும், அப்பெரு மான் நம்பால் எளி வந்து தோன்றி அருள் புரியும்படி அவனை நம் வழிப்படுத்தும் வழிபாட்டு முறைகளை உணர்த்தும் நிலையில் இப்பாடல் அமைந்திருத்தல்பற்றி இது **முருகாற்றுப்படை** என்னும் பெயர்பெற்றது. இது (பத்துப் பாட்டில்) முதலாவதாகவும், **'பதினோராந் திருமுறையில்'** ஒன்பதாகவும் இடம்பெற்றுள்ளது. இது 317 அடிகளையுடைய நெடும் பாட்டு. இதன் இறுதியில் பத்து வெண்பாக்களும் உள்ளன.

(xix) **திருக்கண்ணப்ப தேவனார் திருமறம்:** இது 157 அடிகளைக்கொண்ட ஆசிரியப்பாவால் அமைந்தது; இறுதியாக ஒரு வெண்பாவையும் கொண்டது.

தறுகண் மறவாது வீரச் செயலை விளக்கும் புறத்துறை களுள் மறம் என்பதும் ஒன்று. இப்புறத்துறையைப் பொரு ளாகக் கொண்டு பாடப்பெற்ற தமிழ்ப்பனுவல் மறம் என்று வழங்கப்பெறும்.

திண்ணனாராகிய கண்ணப்பர் பெருமான் தம்மால் வழிபடப் பெறும் காளத்தி நாதருடைய கண்களில் குருதி நீர் வழிதலைக்கண்டு சிறிதும் பொறாராய் அத்துன்ப நிலை யைக் கண்கொண்டு காண்பதை விடக் கண்ணை இழந்து இறத்தலே நலமென்று எண்ணித் தமது கண்ணைத் தோண்டிக் காளத்தி இறைவனது கண்ணில் அப்பிய பேரன்பின்பாற்பட்ட வீரச்செயல், போர்க்களத்தில் பகைவரது சேனையைத் தடுத்து நின்று போர் புரியும் வீரன் ஒருவன் பகைவர் சேனையைத் தடுத்து நிறுத்தும் நிலையில் தன் மார்பிற் புண்ணைக் கிழித்துக் கொண்டு உயிர் துறத்தலாகிய வீரச் செயலோடு ஒத்ததாதலின் இதனை மறம் என்னும் புறத்துறையின்பாற் படுத்துதல் ஏற்புடைத் தாகும். கண்ணப்பரது வீரச் செயலைப் போற்றிப் பரவும் நோக்கத்துடன் மறம் என்னும் துறையமைய நக்கீர தேவர் பாடிய பிரபந்தம் **திருக்கண்ணப்ப தேவர் திருமறம்** என்று வழங்கப்பெற்றமை ஈண்டு அறியப்படும்.

ஏனைய வீரரது வீரச் செயல் பொன்னும் பொருளும் போகமும் வேண்டி நிகழ்த்தப்பெற்ற சிறப்புடையது. கண்ணப்பரது வீரச் செயல் அருளும் அன்பும் அறமும் ஆகிய இவற்றைப்பொருளாகக் கொண்டு நிகழ்த்தப் பெற்ற சிறப்புடையது.

சேக்கிழார் பெருமானுக்கு ‘கலை மலிந்த சீர்நம்பி கண்ணப்பர்’ பற்றிய இப்பனுவல் கண்ணப்பர் புராணம் பாடுவதற்கு கைகொடுத்து உதவியது.

(xx) **திருக்கண்ணப்பதேவர் திருமறம்:** இந்தத் தலைப்பில் கல்லாட தேவநாயனார் பாடிய பிரபந்தம் இது. இது 38 அடிகளமைந்த ஆசிரியப்பாவால் ஆனது. கண்ணப்ப நாயனாரது அன்பின் வழிபட்ட வீரச்செயலை உணர்த்துவதாதலின் இது **'திருக்கண்ணப்பதேவர் திருமறம்'** என்ற பெயர் பெற்றது.

திண்ணனார் காளத்திமலை மீதமர்ந்த சிவலிங்கப் பெருமானைக் கண்டு வழிபட்டுத் தமது கண்ணைத் தோண்டிக் கண்ணப்பராயினார் என்பதே வரலாறு. கல்லாட தேவராகிய இவ்வாசிரியர், திண்ணனார் கானப் பேருறை கண்ணுதலை வழிபட்டாரென இப்பிரபந்தத்தில் குறிப்பிட்டுள்ளார். கானப்பேர் என்பது இக்காலத்தில் **'காளையார் கோயில்'** என வழங்கும் பாண்டிநாட்டுத் திருத்தலமாகும். இத்தலத்திற்கும் கண்ணப்பர் வரலாற்றிற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. அங்ஙனமாகவும், கண்ணப்பரது வழிபாட்டினை ஏற்றுக் கொண்ட சிவபெருமானைக் குறிக்குமிடத்துக் **'கானப்பேருறை கண்ணுதல்'** என இவ்வாசிரியர் குறிப்பிட்டுள்ளார். கண்ணப்பருக்கு அருள் செய்த காளத்திப் பெருமான் பாண்டி நாட்டிலுள்ள **'கானப்பேர்'** என்ற திருத்தலத்திலும் தன் அடியார்களுக்கு அருள் சுரக்கும் திருக்குறிப்புடன் எழுந்தருளியுள்ளான் எனக் கூறும் வாயிலாகத் தாம் கானப்பேர் என்ற தலத்திற் கொண்டுள்ள பேரீடுபாட்டினைப் புலப்படுத்தி மகிழ்தல் இவ்வாசிரியரது நோக்கமெனத் தெரிகின்றது. எனவே, கண்ணப்ப தேவநாயனாராகிய இவ்வாசிரியர் பாண்டி நாட்டின் வாழ்ந்தவர் என்றும், அந்நாட்டுத் திருத்தலத்தில் ஒன்றாகிய கானப்பேர் என்னும் திருப்பதியிலே அளவிலாப் பற்றுடையவர் என்றும் கருதுதல் பொருத்தமுடையதாகும்.

(xxi) **மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை:** இது கபிலதேவ நாயனார் என்பவரால் இயற்றப்பெற்றது.

இங்கு மூத்த நாயனார் என்பவர் விநாயகப் பெருமான். வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் அடுத்தடுத்துத் தொடுத்துவர இருபது செய்யுட்களால் அந்தாதித் தொடையாக அமைந்தது. இருவகை மணிகளால் கோக்கப்பெற்ற மாலை போன்று விளங்குவதால், இரட்டைமணி மாலை என்று பெயர் பெற்றது. இதில் அடங்கியுள்ள செய்யுட்கள் யாவும் விநாயகப் பெருமானை வழிபடுதலால் பெறும் பெரும் பயன்களை விரித்துரைப்பனவாகும்.

(xxii) **சிவபெருமான் திருவிரட்டைமணி மாலை:** இதுவும் கபிலதேவ நாயனார் இயற்றியதே. இதில் முப்பத்தேழு செய்யுட்கள் அடங்கியுள்ளன. வெண்பாவும் கட்டளைக் கலித்துறையுமாகிய இருவகை மணிகளால் தொடுக்கப்பெறும் இரட்டைமணி மாலையில் இருதிறப் பாக்களும் ஒத்த எண்ணிக்கையுடையனவாய் அமைந்திருத்தல் வேண்டும் என்பது விதி. ஆனால் இதன்கண் 19 வெண்பாக்களும், 18 கட்டளைக் கலித்துறைகளுமே உள்ளன. முதற்செய்யுளின் முதற் சொல்லுடன் 37ஆம் செய்யுளிலுள்ள அந்தச் சொல்லுடன் மண்டலித்து முடியும் நிலை அமையவில்லை. எனவே திருவிரட்டை மணிமாலையின் இறுதியிலுள்ள செய்யுட்கள் சில காலம் பழமையால் ஏடுகள் சிதைந்த நிலையில் மறைந்திருத்தல் வேண்டும் எனக் கருத வேண்டியுள்ளது. இரட்டை மணிமாலை என்னும் பிரபந்தம் இருபது செய்யுட்களால் அமைதல் மரபு. இரட்டை மணிமாலையைச் சிவபெருமானுக்கு அணிந்து மகிழக் கருதிய கபிலதேவ நாயனார் அம்மணி மாலையை இரட்டை வடமாக அமையும் வண்ணம் நாற்பது செய்யுட்களால் பாடி அணிந்தார் எனக் கருத இடமுண்டு. இக்கருத்துப் பொருந்துவதாயின் இதன்கண் மறைந்து போன செய்யுட்கள் 38, 39, 40 எண் பெற்றன எனக் கூறுதல் பொருந்தும்.

காரைக்கால் அம்மையார் அருளிய திரு இரட்டைமணி மாலை கட்டளைக்கலித்துறை முன்னும் வெண்பா பின்னுமாகத் தொடுக்கப்பெற்றிருத்தலையும் கபிலதேவ நாயனார் பாடிய திருவிரட்டைமணிமாலையில் வெண்பா முன்னும் கட்டளைக் கலித்துறை பின்னுமாகத் தொடுக்கப் பெற்றிருத்தலையும் நோக்குமிடத்துக் கட்டளைக் கலித்துறை, வெண்பா என்னும் இருவகை மணிகளுள் எந்த மணியை முதலாகக் கொண்டு தொடுப்பினும் அவ்விரு மணிகளால் தொடுக்கப்பெற்ற மாலை இரட்டைமணி மாலை என்னும் பெயர்க்குரியது என்பது நன்கு தெளியப் படும்.

(xxiii) **சிவபெருமான் திருவந்தாதி:** இதுவும் கபில தேவ நாயனாரால் படைக்கப்பெற்றதே. இது நூறு வெண்பாக்களால் அந்தாதித்தொடை அமைய தொகுக்கப் பெற்ற நூலாகும். 'ஒன்று முதலாக' எனத் தொடங்கி 'ஒன்று' என முடியும் நயத்தைக் காணலாம். இந்நூலின் 62-ஆம் செய்யுளின் இரண்டாம் அடி சிதைந்துள்ளது.

ஆரூர், ஒற்றியூர், ஆவூர், அண்ணாமலை, ஆமாத்தூர், வேங்கடம், கூடல், வெண்காடு, மறைக்காடு, சிராமலை, பூம்புகார், கானப்பேர், இடுமணல், ஆக்கூர், புறந்தை, காரோணம், ஆடானை, பழனம், புன்கூர், மண்டலி, கோகரணம், கோப்பாடி, குற்றாலம், கோவணம், புகலூர், களந்தை, தாங்கால், தலையாலங்காடு, திருமாலுமங்கை, செங்குன்றூர், புலிப்பொது, மேற்றளி என்ற திருத்தலங்கள் எதுகை நயம் பொருந்த எடுத்து வைத்துப் போற்றப் பெற்றுள்ளன. இவ்வந்தாதியிலுள்ள செய்யுட்கள் சில ஏடெழுது வோர் கைத்திறத்தால் உருமாறி இருத்தலால் அவற்றின் உண்மைப் பொருளை அறிந்து கொள்ள இயலவில்லை.

(xxiv) **சிவபெருமான் திருவந்தாதி:** இது பரண தேவ நாயனாரால் இயற்றப்பெற்றது. இது இறுதியிலுள்ள

வெண்பாவால் இனிது புலனாகும். நூறு வெண்பாக் களால் ஆன இந்நூல் அந்தாதித் தொடையில் அமைந் துள்ளது. இதன் ஐந்தாம் பாடலில் மூன்றாம் அடியும், 14-ஆம் பாடலின் முதலடியும், 42-ஆம் பாடலில் மூன்றாம் அடியில் இறுதிச் சீரும் சிதைந்துள்ளன.

முழுமுதற் கடவுளாகிய முக்கண்ணனது இறைமைத் தன்மையும், அவ்விறைவன் கோயில் கொண்டு வீற்றிருந் தருளும் திருப்பதிகளும், ஆட்பாலவராகிய அடியார் களுக்கு அருள்புரிதல் வேண்டி இறைவன் செய்தருளிய அருட்செயல்களும்,, அம்மையப்பனாகிய இறைவனை வழிபடும் நெறிமுறைகளும், அங்ஙனம் வழிபடுதலால் உலக மக்கள் அடைதற்குரிய இம்மை மறுமை இன்பங்களும் இப்பனுவலில் விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

(xxv) **சிவபெருமான் திருமும்மணிக்கோவை:** இதனை இயற்றியவர் இளம்பெருமான் அடிகள். அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறையாகிய மும்மணிகளால் இயன்றதாய்ச் சிவபெருமானுக்கு அணியும் அழகிய மணி வடமாகத் திகழ்தலின் இப்பனுவல் திருமும்மணிக்கோவை என்னும் பெயர் பெற்றது. இது முப்பது பாடல்களையுடை யது. இதன்கண் உள்ள பாடல்கள் யாவும் சொற்செறிவும் பொருட்செறிவும் உடையன. நிரம்பிய இலக்கியப் பயிற்சி யுடையார்க்கே இப்பாடல்களின் பொருள் இனிது விளங்கும். அகத்துறைப் பாடல்களும் இப்பனுவலில் இடம் பெற்றுள்ளன.

(xxvi) **மூத்தபிள்ளையார் மும்மணிக்கோவை:** இதனை இயற்றியவர் **அதிராவடிகள்.** இடையூறு நீக்கு வோராகிய மூத்த பிள்ளையாரை (விநாயகப்பெருமானை)ப் பணிந்து பின் வரக்கடவனவாகிய துன்பங்களை முன் னறிந்து காக்கும் நிலையில் அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறையென்னும் மும்மணிகளால் இயன்ற மும்மணிக்

கோவையென்னும் பாமாலையை மூத்தபிள்ளையார்க்குச் சூட்டியுள்ளார் இப்புலவர் பெருமான். இது முப்பது பாடல்களால் இயன்றது. இந்நூலின் ஏடுகள் சிதைவுற்றமை யால் இதன்கண் 24 முதல் 30 வரையுள்ள பாடல்கள் ஏழும் கிடைக்கவில்லை. கிடைத்த பாடல்களிலும் சில தொடர்கள் பொருள் விளங்கா நிலையில் சிதைந்துள்ளன.

(xxvii) **கோயில்நான்மணிமாலை:** இதனை இயற்றிய வர் **திருவெண்காட்டடிகள்** என்னும் பட்டினத்துப் பிள்ளையார். இது வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், இணைக்குறள் ஆசிரியப்பா என்ற நால்வகைப் பாக்களும் ஒன்றன்பின் ஒன்றாக அந்தாதித் தொடையில் அமையுமாறு தொடுக்கப்பெற்றுள்ளது. ஆதலால் நான்மணி மாலை என்று பெயர் பெற்றது. கோயில் என்பது தில்லையம்பலம். இத்தலத்தைப்போற்றும் கருத்துடன் அடிகளால் பாடப் பெற்றது இச்செந்தமிழ்ப் பனுவல்.

(xxviii) **திருக்கழுமலமும்மணிக்கோவை:** இதனை இயற்றியவரும் **திருவெண்காட்டடிகளே.** கழுமலம் என்பது சீகாழி. இது பன்னிரண்டு பெயர்களுள் ஒன்று. சீகாழிப்பதியை அகவல், வெண்பா, கட்டளைக்கலித்துறை யாகிய மூவகைப் பாக்களால் போற்றிப் பரவிய பாமாலை யாதலின் **'திருக்கழுமல மும்மணிக்கோவை'** என்ற திருநாமம் பெற்றது. **'திருவளர் பவளப் பெருவரை'** எனத் தொடங்கும் பாடலை முதற்கொண்டு திகழும் இப்பனுவ லில் இப்போது பன்னிரண்டு பாடல்களே கிடைத்துள்ளன. முப்பது பாடல்களால் இப்பனுவல் அமைய வேண்டியது பாட்டியல் மரபு. எனவே 13 முதல் 30 முடியவுள்ள 18 பாடல்கள் ஏடுகளின் சிதைவால் மறைந்து போயின எனக் கருத வேண்டியுள்ளது.

ஆயினும், ஆ.சிங்காரவேலு முதலியார் அவர்கள் உரையுடன் வெளிவந்த பட்டினத்துப் பிள்ளையார் பிரபந்த நூலில் 13 முதல் 30 வரையுள்ள முப்பது பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றின் சொல்நடையும் பொருளமைதியும் மேம்போக்காக நோக்குங்கால் இவை திருவெண்காட்டடிகள் வாக்காகவே கருதத் தோன்றும். எனினும் இதில் விரவி வரப்பெற்றுள்ள வடசொல் வழக்குகளால் இப்பதினெட்டுப்பாடல்கள் பின் வந்த புலவர் ஒருவரால் பாடப்பெற்றுச் சேர்க்கப் பெற்றிருத்தல் வேண்டும் எனக் கொள்வர் பேராசிரியர் வெள்ளைவாரணனார்.[30]

(xxix) **திருவிடைமருதூர் மும்மணிக் கோவை: பட்டினத்தடிகளால்** இயற்றப்பெற்றது. சிவபெருமான் கோயில் கொண்டுள்ள திருவிடைமருதூர் என்னும் திருப்பதியை அகவல், வெண்பா, கட்டளைக்கலித்துறை என முறைப்படி தொடுத்த முப்பது செய்யுட்களால் போற்றிய பனுவலாதலின் மும்மணிக்கோவை எனப் பெயர் பெற்றது. முதற்பாடல் உமையொருபாகனாகக் கோலம் கொண்டுள்ள சிவபெருமானின் இயல்பினை அழகுற விரித்துரைக்கும் திறன் படிக்குந்தோறும் இன்பம் தருவதாகும். ஏனைய பாடல்களும் தத்துவக் கருத்தினை அற்புதமாகக் காட்டுவனவாக அமைந்துள்ளன.

(xxx) **திருவேகம்பமுடையார் திருவந்தாதி:** இதுவும் **பட்டினத்தடிகள்** அருளிய பனுவலே. ஏகம்பம் என்பது காஞ்சியிலுள்ள திருக்கோயில்; ஏகாம்பரேசுவரர் சந்நிதி. இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை நூறு பாடல்களால் (கட்டளைக் கலித்துறை) அந்தாதித் தொடை அமைய போற்றிப் பரவுவதாகலின் **'திருவேகம்பமுடையார் திருவந்தாதி'** எனத் திருநாமம் பெற்றது. இறைவனது திருவருள் துணைகொண்டு பாடப் பெற்றது

30. பன்னிரு திருமுறை வரலாறு (இரண்டாம் பகுதி) பக். 764

என்பதும், இவ்வந்தாதி நூறு பாடல்களால் இயன்றமை பற்றி இதற்குப் 'பதிற்றுப்பத்து' என அடிகள் பெயரிட்டனர் என்பதும் இப்பனுவலின் 99-ஆம் பாடலால் இனிது விளங்கும். அகத்துறைப் பாடல்கள் பல இப்பனுவலை அணி செய்கின்றன.

(xxxi) **திருவொற்றியூர்**[31] **ஒருபா ஒருபஃது:** இதுவும் **திருவெண்காட்டடிகளால்** அருளிச்செய்யப் பெற்றதுவே. திருவொற்றியூரில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள சிவபெருமானது பொருள்சேர் புகழை விரித்துரைக்கும் பனுவல் இது. ஆசிரியப் பாவாலாகிய பத்துத் திருப்பாடல் களால் அந்தாதித்தொடை பெறவைத்த அருமையான நூல் இது. எனவே 'ஒருபா ஒருபஃது' எனப் பெயர் பெற்றது. பாடல்கள் பத்தும் ஒற்றியூர் இறைவனை முன்னிலைப் படுத்திப் போற்றும் இயல்பினவாய், உணர்தற்கரிய சைவ சித்தாந்த உண்மைகளைத் தெளிவாக விளக்குவனவாய் உள்ளன.

(xxxii) **திருநாரையூர்விநாயகர் திருஇரட்டை மணி மாலை:** திருநாரையூரில் கோயில் கொண்டருளிய பொல்லாப் பிள்ளையாராகிய விநாயகப் பெருமானைப் போற்றிப் பரவுவதாய் வெண்பா, கட்டளைக் கலித்துறை என்னும் இருவகைப் பாடல்களால் அந்தாதி தொடை அமையத் தொடுக்கப்பெற்ற பனுவல் இது. **நம்பியாண் டார் நம்பியால்** இயற்றப்பெற்றது. இளம்பருவத்திலேயே பொல்லாப் பிள்ளையாரால் செந்தமிழ்ப் புலமை வாய்க்கப் பெற்ற நம்பி தாம் பெற்ற திருவருட் புலமையினை முதற் பாடலிலேயே குறிப்பிடுகின்றார். இப்பனுவல் கபிலதேவ நாயனார் பாடிய மூத்தபிள்ளையார் திருவிரட்டைமணி மாலையை அடியொற்றி அமைந்ததாகும்.

31. திருவொற்றியூர் - அடிகள் சிவப்பேறு அடைந்த தலம்.

(xxxiii) **கோயில் திருப்பண்ணியர் விருத்தம்:** சைவப் பெருமக்களால் **'கோயில்'** எனச் சிறப்பித்துப் போற்றப் பெறும் தில்லைச்சிற்றம்பலத்தில் (பெரும்பற்றப்புலியூரில்) எழுந்தருளியுள்ள கூத்தப்பெருமானைப் போற்றும் கட்டளைக் கலித்துறையாலாகிய திருவிருத்தங்களால் இயன்ற பனுவலாதலின் இது **'கோயில் திருப்பண்ணியர் விருத்தம்'** என **யாப்பினால்** பெயர் பெறுவதாயிற்று. பண்ணியல் பாடல் என்ற பொருளில் **பண்ணியல்** விருத்தம் என்பது, லகரத்திற்கு ரகரம் போலியாய்ப் **பண்ணியர்** விருத்தம் என்றாகித் திருப்பண்ணியர் விருத்தம் என வழங்கப்பெற்றது எனக் கொள்ளுதல் வேண்டும். கட்டளைக் கலித்துறை விருத்தம் என வழங்கும் வழக்கம் திருநாவுக்கரசர் அருளிய திருவிருத்தமாகிய பதிகங்களின் பெயராலும் நம்மாழ்வார் அருளிய **'திருவிருத்தம்'** என்னும் பிரபந்தத்தின் பெயராலும் இனிது புலனாகும் இனி, 'கோயில் திருப்பண்ணியர்' என்ற தொடர்க்குத் 'தில்லைப் பெருங்கோயிலில் எழுந்தருளியிருந்து உயிர்களுக்குத் திருத்தக விற்றாகிய இன்னருளைப் புரிவார்' எனப் பொருள் கொண்டு பாட்டுடைத்தலைவனாகிய இறைவன் பெயரால் **'கோயில் திருப்பண்ணியர் விருத்தம்'** என இந்நூல் பெயர் எய்தியது எனக் கொள்ளினும் பொருந்தும். இப்பிரபந்தம் அந்தாதியாலாகிய எழுபது கட்டளைக் கலித்துறையாலானது. திருநாரையூரில் உள்ள பொல்லாப் பிள்ளையார் அறிவுறுத்தியபடி தில்லைப்பெருங்கோயிலை அடைந்து தேவாரத்திருமுறைகளைக் காண விரும்பிய **நம்பியாண்டார் நம்பிகள்** இப்பனுவலைப் பாடித் தில்லைச்சிற்றம்பலவனை இறைஞ்சிப் போற்றினார் என்பது வரலாறு.

(xxxiv) **திருத்தொண்டர்திருஅந்தாதி: நம்பியாண்டார் நம்பி** பாடியது. 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கு அடியேன்' என்று அடியெடுத்துக் கொடுக்க

**நம்பியாரூரர்** அருளிய திருத்தொண்டத்தொகையில் தொகுத்துக் கூறிய வரலாற்றை நம்பி சற்று விரிவாக வகுத்துக் கூறிய பனுவல் இது. 89 கட்டளைக்கலித்துறைப் பாடல்களால் அமைந்தது. இதில் தனியடியார் அறுபதின் மரும் ஒன்பது திருக்கூட்டத்தாரும் ஆகிய திருத்தொண் டர்க்குரிய ஊர், நாடு, மரபு முதலியவற்றையும் அவர்கள் மேற்கொண்ட தொண்டின் நெறியினையும், அதனால் அவர்கள் பெற்ற பேற்றினையும் வகுத்து விளக்கும் நிலையில் பாடியருளினார் **நம்பி**. இதனை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது **சேக்கிழார்** அருளிய **திருத் தொண்டர் புராணம்** என்னும் பெரிய புராணம்.

(xxxv) **ஆளுடையபிள்ளையார்திருவந்தாதி: நம்பி யாண்டார் நம்பி** அருளியது. நூறுகட்டளைக் கலித்துறை களால் இயன்றது. திருத்தொண்டர் திருவந்தாதி பாடிய தற்கு முன்னர் இது பாடப்பெற்றதாக வரலாறு. (திருத் தொண்டர் திருவந்தாதி-34).

(xxxvi) **ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம்: நம்பியாண்டார் நம்பி** அருளியது. **சண்பை** என்பது **சீகாழி**. சண்பை என்னும் தலத்தினைக் கட்ட ளைக் கலித்துறையாகிய திருவிருத்தத்தால் போற்றுவது இப்பிரபந்தம். இதன்கண் பத்துப்பாடல்கள் உள்ளன. பதினோராம் பாடலாக அமைந்த இதன் இறுதிச்செய்யுள் மேற்கூறிய பத்துப் பாடல்களின் முதல் நினைப்புச்செய்யு ளாகும். இதில் பிள்ளையார் பாலடிசில் உண்டு சிவ ஞானம் பெற்றது முதல் நல்லூர்ப் பெருமணத்தில் வாழ்க் கைத் துணைவியொடும் இறைவனது ஈறில் பெருஞ்சோதி யிற் புக்கு ஒன்றியின்புற்றது வரை பல செய்திகள் குறித்துப் போற்றப் பெற்றுள்ளன.

(xxxvii) **ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக் கோவை:** ஆளுடைப் பிள்ளையாரின் திருப்புகழை விரித்

துரைப்பது இப்பனுவல். அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறையாகிய மூவகைப் பாக்களால் இயன்று மூவகை மணிகளாலாகிய அழகிய மணிவடம் போன்று அமைந்தது. இதன்கண் முப்பது பாடல்கள் உள்ளன. பிள்ளையாரது வரலாற்று நிகழ்ச்சிகளைக்குறித்துப் போற்றும் பாடல்களும், அவர்திருவாய்மலர்ந்தருளிய செந்தமிழ்ப் பதிகங்களின் சிறப்பினை விரித்துரைக்கும் பாடல்களும், பிள்ளையாரைக் காதலித்த தலைமகளது துயர் கிளந்துரைக்கும் அகத்துறைப் பாடல்களும், அவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டமைந்த அக்த்துறைப் பாடல்களும் இம்மும்மணிக் கோவையில் இடம் பெற்றுள்ளன. நம்பி அருளியது இப்பனுவல்.

(xxxviii) **ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை:** நம்பி அருளியது. கலிவெண்பாவாலாகிய இவ்வுலாமாலை 143 கண்ணிகளையுடையது. சீகாழிப்பதியின் எழில் நலன்கள், மறையவர் மாண்பு, பிள்ளையார் உமையம்மையார் அளித்த பாலடிசில் உண்டு **ஞானசம்பந்தர்** என்ற திருநாமம் பெறல், பல திருப்பதிகங்களால் பரமனைப் போற்றுதல், பல அற்புதங்களை நிகழ்த்தி, சமணரை வாதில் வென்று சிவநெறி பரப்பிய கீர்த்தி முதலியவை திருவுலா மாலையின் முதற்பகுதியிலும், பிள்ளையாரின் திரு வோலக்கக்காட்சி, அதனைச் சீகாழிப் பெருமக்களும் காண வேண்டும் என்ற விண்ணப்பம், பிள்ளையார் யானை மீதமர்ந்து பலஇன்னியங்கள் முழங்க திருவுலாப் போந்தருளுதல், பேதைமுதல் பேரிளம் பெண் ஈறாக ஏழு பருவ மகளிரும் பிள்ளையாரைக் கைதொழுது தம் கை வளையல்கள் கழல நாணிழந்து மெய்சோர்ந்து தமக்குட் பலவாறாகப் பேசி மையலுற்று வருந்துதல் ஆகிய செய்திகள் இத்திருவுலாமாலையின் பிற்பகுதியிலும் கூறப் பெற்றுள்ளன.

(xxxix) **ஆளுடையபிள்ளையார் திருக் கலம்பகம்:** கலம்பகம் தமிழ்ப்பிரபந்த வகைகளுள் ஒன்று. திருஞான சம்பந்தரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப் பெற்றது இது. இதன்கண் ஒன்று முதல் 49ஆம் பாடல் வரையில் தான் இப்போது கிடைத்துள்ளன. முதற் பாடலில் ஒரு போகின்கண் தரவு அமையவில்லை. தமிழின் சிறப்பினை பலமலி தருந்தமிழ், முத்தமிழ், செழுமலயத் தமிழ், அறிவாகி இன்பம் செய்தமிழ், பயனிலவு ஞானத் தமிழ், வீதார் தமிழ் என நம்பி இக்கலம்பகத்தில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இக்கலம்பகத்திலுள்ள செய்யுட்கள் ஆளுடைய பிள்ளையார் செய்தருளிய அருட் செயல்களையும் அவர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதி கங்களின் சிறப்பினையும் புலப்படுத்துவனவாக அமைந் துள்ளன. அன்றியும் திருப்பதிகங்களில் நிகழ்த்த அற்புத நிகழ்ச்சிகளையும் இவை விரித்துரைப்பனவாகவும் உள்ளன. இக்கலம்பகத்திலுள்ள ஆசிரிய விருத்தங்கள் திருவெண் காட்டடிகள் கோயில் நான்மணி மாலையிலுள்ள சந்தப் பாடல்களை அடியொட்டியனவாய் இயலிசைத் திறங் களில் சிறந்து விளங்குகின்றன.

(XL) **ஆளுடையபிள்ளையார் திருத்தொகை:** நம்பி யருளியது. திருஞான சம்பந்தப் பிள்ளையார் வரலாற்று நிகழ்ச்சிகளைத் தொகுத்துரைப்பது இப்பனுவல். நம்பியாரூரர் திருத்தொண்டத்தொகை திருத்தொண்டர் களைத் தொகுத்துரைத்தல் போல, ஆளுடைய பிள்ளையார் வரலாற்று நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் கூறுவதாகிய இப்பனுவல் **திருத்தொகை** என்ற பெயரால் அறுபத்து ஐந்தடிகளையுடைய கலிவெண்பாவால் இயன்றதாகும். பிள்ளையார் சிவனருளால் உமையம்மையார் அளித்த திருமுலைப்பால் பருகின நிகழ்ச்சி முதல் திருநல்லூர்ப் பெருமணத்தில் நிகழ்ந்த தமது திருமணத்தில் தம் வாழ்க்கைத் துணைவியாருடனும் திருமணங்காண வந்த

எல்லா மக்களோடும் ஈறில் பெருஞ்சோதியுட் புகுந்து அந்தமில் இன்பத்தில் அமர்ந்தது வரையுள்ள எல்லாச் செய்திகளையும் படிப்போர் உள்ளம் உருக இத்திருத் தொகையில் நம்பி எடுத்துரைத்துப் போற்றியுள்ளார்.

(xLi) **திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை:** நம்பியருளியது. தேவார ஆசிரியர்கள் மூவருள் காழிப் பிள்ளையாரைத் திருவந்தாதி, திருசண்பை விருத்தம், திருமும்மணிக்கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்று ஆறு பிரபந்தங்களால் போற்றிப் பரவிய நம்பிகள் நாவுக்கரசர், நம்பியாரூரர் ஆகிய இரு பெரியார்களைக் குறித்தும் தனிப் பிரபந்தங்கள் பலவற்றைப் பாடியிருத்தல் கூடும். நம்பியாரூரைப்பற்றிப் பாடிய தனிப் பிரபந்தம் ஒன்றும் கிடைக்கவில்லை. திருநாவுக்கரசின் சிறப்பினை விரித்துரைப்பதாகத் **'திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை'** என்ற பிரபந்தம் ஒன்றே இப்பொழுது கிடைத்துள்ளது.

ஏகாதசம்-பதினொன்று திருநாவுக்கரசரைப் போற்றிப் பரவும் பதினோரு பாடல்களையுடைய செந்தமிழ் மாலையாகத் திகழ்வது இப்பிரபந்தம். இதன்கண் அமைந்த பாடல்கள் பதினொன்றாயினும், நாவுக்கரசரின் வரலாற்றி லமைந்த சிறந்த உண்மைகளும் அப்பெருந்தகையாரை வழிபடுதலால் உளவாகும் பெருநலங்களும், அப்பெருமான் திருவாய் மலர்ந்தருளிய பதிகங்களின் சிறப்பும் தெளிவாக அறிவுறுத்தப் பெற்றுள்ளன.

(12) பன்னிரண்டாம்திருமுறை: இது **சேக்கிழார் பெருமான்** அருளிய **திருத்தொண்டர் புராணம்** எனப்படும் **பெரிய புராணமாகும்.** இதனை ஆசிரியர் இரண்டு காண்டங் களாகவும், பதின்மூன்று சருக்கங்களாகவும், 4253 விருத்தப் பாடல்களாலும் பாடி முடித்துள்ளார். இப்போதுள்ள பதிப்புகளில் இத்தொகைக்கு மேல் 33 பாடல்கள் இடைச்

செருகல்களாகப் பிற்காலத்தவர்களால் பல இடத்தும் செருகப் பெற்றுள்ளன.

நம்பியாரூரர் திருத்தொண்டத் தொகையிலும் நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டத் திருவந்தாதியிலும் தொகுத்தும் வகுத்தும் கூறப்பெற்று, தமிழகத்தில் பல காலங்களிலும், பல ஊர்களிலும், பல்வேறு குடும்பங்களிலும் பிறந்தருளி, எல்லாம் வல்ல இறைவன் திருவடிகளிலும் அவனைப் போற்றும் இயல்பினராகிய மெய்யடியார்கள் திறத்தும் பேரன்புடையராய் ஐம்புல உணர்வுகளை அடக்கி நன்னெறிக்கண் ஒழுகும் ஐம்புலச்செல்வர்களாகிய சிவனடியார்களின் வரலாறுகளைத் தொகுத்து ஆராய்ந்து உயர்வு நவிற்சியின்றி மெய்ம்மை வரலாறுகளை விரித்துரைக்கும் முறையில் இனிய எளிய தூய செந்தமிழ் நடையில் பெருங்காப்பியமாக அருள்மொழித் தேவராகிய சேக்கிழார் அடிகளால் இயற்றப் பெற்றது இப்பெரியபுராணம்.

இந்நூலிற் போற்றப்பெறும் திருத்தொண்டர் யாவரும் இந்நாட்டில் பிறந்து வளர்ந்தவர்களே. அவர்களைக் குறித்து இந்நூலில் நவிலப்பெறும் உலகியற் செய்திகள் யாவும் உண்மையாக நிகழ்ந்த செய்திகளே. இவற்றைத் தன்னகத்துக் கொண்ட இப்புராணம் நவில்தொறும் சுவைமிகப் பயப்பது; பக்திச்சுவை ஊற்றெடுத்துப்பாயும் திருவருட்கடலாய் இலங்குவது; தித்திக்கும் தெள்ளமுதாய்த் திகழ்வது; மக்கட்குலம் உய்யும் நெறியை யாவரும் உகக்கும் முறையில் எடுத்துரைப்பது.

**திருமுறைகளின்சிறப்பு:** தேவாரத்திருமுறைகள் திருக்கோயில்களில் வைத்து வழிபடப்பெற்று வந்தன. அத்திருப்பதிக ஏடுகள் சிதையாத வண்ணம் அவற்றைப் போற்றிக் காப்பதற்குத் தமிழ்ப்புலமை மிக்க தமிழ்விரகரும், அத்திருமுறைகளைப் பொருளுணர்ந்து இசையோடு இறைவன் சந்நிதியில் பாடிப் போற்றுதற்கு ஓரிரு வாரிசுகளும் அந்

நாளில் திருக்கோயில்களில் நியமிக்கப்பெற்றுப் பணிபுரிந்து வந்தனர் என்பன போன்ற செய்திகள் கல்வெட்டுகளால் அறியக் கிடக்கின்றன.

பண்டை நாளில் இத்திரு முறைகளை நம் முன்னோர் சிவத்துவம் வெளிப்பட்டுத் திகழும் சிறந்த அருள் நூல் களாகக் கொண்டு வழிபட்ட உண்மைக்குப் பல சான்றுகள் உள்ளன.[32] சிவபூசையின் ஓர் அங்கமாகவே இத்திருமுறை வழிபாடு முன்னுள்ள பெருமக்களால் மேற்கொள்ளப் பெற்று வந்ததென்று அறியக் கிடக்கின்றது.

இந்தத் திருமுறைகள் கி.பி. **ஐந்தாம்** நூற்றாண்டு முதல் **பன்னிரண்டாம்** நூற்றாண்டு முடிய அமைந்த காலத்தில் தான் தோன்றின. இப் பன்னிரண்டு திருமுறைகளையும் அருளிச் செய்த ஆசிரியப்பெருமக்கள் திருமூலர், காரைக் கால் அம்மையார் (காலத்தினால் முற்பட்டவர்கள்) முதல் சேக்கிழார் (காலத்தால் பிற்பட்டவர்) ஈறாகவுள்ள இருபத் தெழுவர். இப்பெருமக்களால் பாடப்பெற்றனவாக இப் போது நமக்குக் கிடைத்துள்ள பன்னிருதிருமுறைகளிலும் ஏறக்குறைய பதினெண்ணாயிரம் திருப்பாடல்கள் காணப் படுகின்றன.

சிவபூசை, அடியார்பூசை, குருபூசை ஆகிய வழிபாடு களுக்கு எத்துணைப் பயன் உண்டோ அத்துணைப் பயன் இத்திருமுறை வழிபாட்டிற்கும் பாராயணத்திற்கும் உண் டென்பர் பெரியோர். சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப் பல படிகளாக வகுத்துச்செய்யப் பெறும் சிவ வழிபாட்டினைத் தவிர உயிர்கள் உய்தி பெறுவதற்கு வேறு சாதனம் இல்லை என்பது சைவநூல் துணிபு. இறைவனது திருவருளாகிய சிவஞானம் ஒன்றினால்தான் அப்பெரு மானை உள்ளவாறு உணர்ந்து வழிபடுதல் கூடும்.

32. பன்னிரு திருமுறை வரலாறு - முதற் பகுதி. பக். 45 - 46

இறைவன் அருளிய திருவருள் ஞானத்தால் அம்முதல் வனை வழிபடும் பதிகப் பெருவழியினை அமைத்துத் தந்த திருவருட்செல்வர்கள் காரைக்கால் அம்மையார், திரு ஞானசம்பந்தர், அப்பர்பெருமான், சுந்தரமூர்த்தி அடிகள், மணி வாசகப்பெருமான் முதலிய திருமுறையாசிரியர் களாவர். சிவஞானிகளாகிய அப்பெருமக்கள் அனைவரும் பொறிவாயில் ஐந்தவித்தானாகிய இறைவன் அறிவுறுத்த பொய்தீர் ஒழுக்கநெறி நின்ற செம்புலச் செல்வர்கள். ஆகவே, அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருமுறைகள் யாவும் உயர்ந்த ஞான நூல்களாகத் திகழ்கின்றன. இத்தகைய சைவத் திருமுறைகள் பன்னிரண்டையும் **"காத லாகிக் கசிந்துருகிக் கண்ணீர் மல்கி"** ஓதலும், பிறரை ஓதும்படி செய்தலும், பிறர் சொல்லத் தாம் கேட்டலும், பிறரைக் கேட்கும்படி தூண்டுதலும், ஞான நூல்களாகிய இவற்றின் பொருள் நலன்களை இடைவிடாது சிந்தித்தலும் என **ஐந்து** வகையாலும் பயின்று வழிபடுதல் வேண்டும் என்று உணர்த்தியுள்ளனர் பெரியோர். "ஞானத்தால் உன்னை நானும் தொழுவேனே."[33] என்றவாறு சிவஞானம் பெற்ற பெரியோர்கள் அருளிய இத்திருமுறைகளைச் சாதனமாகக் கொண்டு எல்லாம் வல்ல இறைவனை வழிபட்டுப் போற்றும் முறை **ஞானபூசை** என நூல்களால் பாராட்டப் பெறுகின்றது. இந்த உண்மை,

ஞான நூல்தனை ஓதல்; ஓதுவித்தல்
நாற்பொருளைக் கேட்பித்தல், தான்கேட்டல் நன்கு
ஈனமில்லாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞான பூசை[34]

என்ற அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகளின் பொருள் பொதிந்த பொன்னுரையால் தெரியலாம்.

33. அப். தே. 5. 91:3
34. சித்தியார் - 8.23

இம்முறைகளை அருளியவர்கள் யாவரும நிறைமொழி மாந்தர்கள். இவர்கள் வரலாற்றினால் திருமுறைகள் யாவும் மறைமொழிகளாகிய **மந்திரங்கள்** என்பது தெளிவாகும். மந்திரம் என்பது, தம்மைப் பயில்வாரைப் போற்றிக் காப்பது என்னும் பொருளுடையது என்று கூறுவர் பெரியோர். இத்திருமுறைகளை அன்பினால் ஓதியுணரும் இயல்புடை யோர், இவ்வுலக வாழ்வில் நேரும் எல்லாத் தீங்குகளும் நீங்கி எல்லாவித நலங்களையும் பெற்று இன்புறுவர் என்பது ஆன்றோர்களின் அநுபவம்.

இம்மை யேதரும் சோறும் கூறையும்
ஏத்த லால்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே.[35]

என்ற திருவாக்கால் அறியலாம். இத்திருமுறைகளை ஓதி வழிபடும் இயல்புடையோர் இம்மை மறுமைப் பயன்களை யும் பெற்று மகிழ்வர் என்பது திண்ணம்.

35. சுந். தே. 7.34:1

# 4. திருமுறை ஆசிரியர்கள்

**பன்னிரு** திருமுறைகளை இயற்றிய ஆசிரியர்களின் வரலாற்றை ஈண்டுக் காண்போம். முதல் எட்டுத் திருமுறை களை இயற்றியவர்கள் 'சமய குரவர்கள்' என்று வழங்கப் பெறுவர். இவர்களின் வரலாற்றினை முதலில் காண்போம்.

## சமயகுரவர்கள்

இவர்கள் நால்வர். திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திசுவாமிகள், மாணிக்கவாசகர் என்பவர்கள்.

(அ) முதல் மூன்று திருமுறைகள்:

(1) ஞானசம்பந்தர்: சோழவள நாட்டில் **சீகாழிப் பந்தியிலே**[1] கௌணியகோத்திரத்தில் அவதரித்தவர் ஞான சம்பந்தர். தந்தையார் **சிவபாத இருதயர்**; தாயார் **பகவதி**. இவ்விருவரும் தம்முன்னோர் கொண்டொழுகிய சிவநெறி யில் அளவிலாப்பற்றுடையவர்கள். பிறந்த நட்சத்திரம் திருவாதிரை. சமணம் பௌத்தம் ஓங்கி இருந்த காலத்தில் சம்பந்தர் அவதரித்தார். குழந்தை மூன்றாண்டு பருவ நிலையில் தந்தையார் நீராடி வருவதற்கு வெளியே

---

1. பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் என்னும் பன்னிரண்டு பெயர்களையுடையது. சம்பந்தர் பிறந்த ஊர்.

செல்லும் போது பிள்ளையாரும் அடம்பிடித்து அவருடன் பின் சென்றார். இருவரும் கோயிலிலுள்ள பிரம தீர்த்தத்தை அடைந்தனர்.

பிள்ளையாரைக் குளக்கரையில் அமர்த்தி விட்டுத் தந்தையார் நீராடினார். நீரில் மூழ்கிச் செபித்தற்குரிய அகமருட மந்திரத்தை ஓதுதற்பொருட்டு நீருள் சிறிது நேரம் மூழ்கியிருந்தார். குளக்கரையிலிருந்த பிள்ளையார் பல திசைகளிலும் நோக்கி அழுது இறுதியில் தோணியப்பர் கோயில் சிகரத்தை நோக்கி **'அம்மே அப்பா'** என்று அழத்தொடங்கினார். இந்நிலையில் தோணிபுரத்து இறைவர் உமையம்மையாருடன் பிள்ளையார் முன் தோன்றினார். பொற்கிண்ணத்தில் திருமுலைப்பாலைக் கறந்து சிவஞானத்தைக் கலந்து ஊட்டும்படி தேவியாருக் குக் கட்டளையிட அவரும் அவ்வாறே செய்தனர். பிள்ளை யாரின் அழுகையும் நின்றது. அம்மையப்பரால் ஆட்கொள் ளப் பெற்றமையால் 'ஆளுடையபிள்ளையார்' என்றும் தேவர்க்கும் முனிவர்க்கும் கிடைத்தற்கரிய சிவஞானம் பெற்றமையால் **'திருஞானசம்பந்தர்'** எனவும் போற்றப் பெறுவாராயினர்.

நியமங்களை முடித்துக்கொண்டு கரையேறிய தந்தை யார் பிள்ளையாரின் செவ்வாயிதழின் இருமருங்கும் பால் வழியும் நிலையைக் கண்டு, 'உனக்குப் பால் கொடுத்தது யார்? உனக்கு இதனை இட்டாரைக் காட்டுக' என வெகுண்டு அண்மையிற் கிடந்த கோலொன்றினை எடுத்து அடிப்பதற்கு ஓங்கினார். உடனே பிள்ளையார் பாலடிசில் நல்கிய உமையம்மையாரின் திருச்செவியைச்சிறப்பிக்கும் பாங்கில் **'தோடுடைய செவியன்'**(1.1) என்ற திருப்பதிகத் தைத் திருவாய் மலர்ந்தருளினார். சிவபாத இருதயர் தம் குழந்தை சிவஞானம் பெற்ற தெய்வக்குழந்தை என்பதை உணர்ந்தார்.

சிலநாள் கழிந்து சீகாழிக்கண்மையிலுள்ள **திருக்கோலக்காவைச்** சேவிப்பதற்குத் தந்தையார் தோளில் ஏறிக் கொண்டு செல்லுகின்றார். சென்றவர் திருக் கோயிலை வலம் வந்து இறைவன் திரு முன்னர் நின்று **'மடையில் வாளை'** *(1.23)* என்ற முதற்குறிப்புடைய இன்னிசைத் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றுகின்றார். இப்பதிகத்தைப் பிள்ளையார் கைகொட்டிப் பாடியதைக் கண்ட கோலக்காப்பெருமான் இந்தப்பிஞ்சுக்கை வருந்தும் என்றெண்ணித் திருவைந்தெழுத்து வரையப்பெற்ற **பொற்றாளம்** இரண்டைப் பிள்ளையார் கையில் வந்து பொருந்துமாறு அருளுகின்றார். அம்பாள் தாளத்திற்கு ஓசை நல்குகின்றார். இதனால் இங்குள ஈசன் **'திருத்தாள முடையார்'** என்றும், அம்பாள் **'ஓசை கொடுத்த நாயகி'** என்றும் திரு நாமங்களால் வழங்கப்பெறுகின்றனர்.

இந்த இரண்டு அற்புத நிகழ்ச்சிகளால் பிள்ளையாரின் புகழ் நாற்றிசையிலும் பரவியது. சோழ நாட்டு மக்கள் திரள் திரளாக வந்து பிள்ளையாரை வணங்கி மகிழ்ந்து தங்கள் தங்கள் ஊர்க்கெல்லாம் வந்தருளும்படி வேண்டு கின்றனர். பிள்ளையாரும் அவர்தம் வேண்டுகோட் கிணங்கி திருத்தலப்பயணம் செய்து **தேவாரப்பதிகங் களை** ஓதியருளினார். அவ்வாறு முதன் முதலாகச் சென்ற இடம் தம் அன்னையார் பிறந்த ஊராகிய **'நனிபள்ளி'** என்பதாகும். தில்லைக்கருகிலுள்ள எருக்கத்தம்பூரில் வசித்த திருநீலகண்டப் பெரும்பாணரும் அவர்தம் துணைவியார் மதங்க சூளாமணியும் வந்து அடிகளைச் சேவித்தனர். சுவாமிகளின் தேவாரப்பதிகங்களை யாழில் வாசித்தனர். பின்னர் அவர்கள் தலங்கள்தோறும் பிள்ளையாருடன் செல்லும் வழக்கத்தை மேற்கொண்டனர். பின்னர் அப்பர் அடிகளின் தொடர்பு ஏற்பட்டது. அவருடன் சேர்ந்தும் தனித்தும் திருத்தலப் பயணங்களை மேற்கொண்டு சோழ நாடு, பாண்டிநாடு, நடு நாடு, தொண்டைநாடு, கொங்கு

நாடு, தொண்டைநாடு இவற்றிலுள்ள தலங்களையெல்லாம் வழிபட்டு பதிகங்கள் பாடிப் பரமனைப் போற்றினர்.

**சிறப்பு நிகழ்ச்சிகள்: கழுமலம்** திருவீழிமிழலை, மதுரை ஆகிய இடங்களில் நடைபெற்ற அற்புத நிகழ்ச்சிகளும், பிற இடங்களில் நிகழ்ந்த் அற்புத நிகழ்ச்சிகளும் குறிப்பிடத்தக்கவை. **முத்துச்சிவிகை, குடை சின்னம் பெறுதல்,** தந்தையார் வேள்விக்காக **உலவாக்கிழி பெறுதல்,** கொல்லிமழவன் மகளின் முயலக நோய் தீர்த்தல், பனி நோய் தீர்த்தல், யாழ்முறிபாடுதல், விடந்தீர்த்தல், திருமறைக்காட்டில் மறைக்கதவம் அடைத்தல், பாண்டியன் நோய் தீர்த்தல், அனல் வாதம்- புனல் வாதம் மேற்கொண்டு வாகை சூடுதல், ஓடம் உய்த்தல், புத்தரை வாதில் வெல்லல், வாசிதீரக் காசுபெறல், ஆண்பனை பெண்பனையாதல், எலும்பைப் பெண்ணாக்குதல், முதலையுண்ட பாலகனை மீட்டல் முதலியவை சம்பந்தர் வாழ்வில் நடைபெற்ற அற்புத நிகழ்ச்சிகளாகும்.

**சம்பந்தர் திருமணம்:** அந்தணர்க்குரிய ஆறு தொழில் நடைபெறத்திருமணம் இன்றியமையாதது என்று வற்புறுத்தியதால் திருமணத்திற்கு ஒப்புக்கொள்கின்றார். நல்லூரில் வாழும் நம்பியாண்டாரின் திருமகள் துணைவியாகின்றாள். நல்லூரில் திருமணம் நடைபெறுகின்றது. **திருநீலநக்க நாயனார்** திருமணச்சடங்குகளை நிகழ்த்தி வைக்கின்றார்.

உறவினர்கள், தொண்டர் பெருமக்கள் சூழ பெருமணத் திருக்கோயிலை (நல்லூர் கோயிலின் பெயர்) நோக்கி தம் துணைவியாருடன் நடக்கின்றார். திருக்கோயிலை அடைந்தவுடன் தவநெறி வளர்க்க வந்த பிள்ளையார் பெருமணம் மேவிய பெருமானை நோக்கி, "பவமற என்னை முன்னாள் ஆண்ட அப்பண்பு கூட, நவமலர்ப் பாதம் கூட்டும்" என்ற நல்லுணர்வுடன் தமது திருமணத்தைக் காண்போரிடத்து பிறவிப்பாசத்தை நீக்குதலையே பொருளாகக் கொண்டு

**'நல்லூர்ப் பெருமணம்'** (3.125) என்ற முதற்குறிப்பினை யுடைய பதிகத்தால் "நாதனே! நல்லூர் மேவும் பெருமண நம்பனே! நின் திருவடி நீழல் சேரும் பருவம் இதுவாகும்" என்று உளமுருகப் போற்றுகின்றார்.

அப்பொழுது பேரருட்கடலாகிய சிவபெருமான் நல்லூர் பெருமணக் கோயில் தன்னுள் ஒடுக்கும்படியாக அதற்கு மேலோங்கிய தூய பெருஞ்சோதிப் பிழம்பாகத் தோன்றி நிற்கின்றார். பிள்ளையாரை நோக்கி, "ஞான சம்பந்தனே, நீயும் பூவையன்னளாகிய நின் துணைவியும் நின் புண்ணிய மணத்தைக் காண வந்தார் யாவரும் இந்தச் சோதியுள் வந்து சேர்மின்" என்று திருவாய்மலர்ந்து அச்சோதியினுள் புகுதற்கென்று வாயிலொன்றையும் வகுத்துக் காட்டுகின்றனர். புகலி மன்னரும் அச்சோதியைத் தொழுது நின்று மாயிறு ஞாலம் உய்ய வழியினைக் காட்டும் பாங்கில், "ஞான மெய்ந்நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொல்லாம்" என்று **'காதலாகிக்'** (3.49) என்ற முதற் குறிப்புடைய நமச்சிவாயப் பதிகத்தை வானமும் நிலமும் கேட்க அருளிச்செய்து, "இம் மணத்தில் வந்தோர், ஈனமாம் பிறவிதீர யாவரும் புகுக" என்று அனைவரையும் அன்பால் அழைத்தருள்கின்றார்.

பிறவிப் பெருங்கடலில் அல்லல்பட்டுத் தத்தளிக்கும் மக்கள் திருஞானசம்பந்தரின் திருமணத்தைக் கண்டு உடன் சேவித்துச் செல்லும் நற்பேற்றினாலே அங்குத்தோன்றிய பெருஞ்சோதியில் புகுந்து பிறவா நெறியாகிய பேரின்ப வாழ்வைப் பெறுகின்றனர். திருநீலநக்கநாயனார், முருக நாயனார், சிவபாத இருதயர், நம்பாண்டார் நம்பி, திருநீல கண்டப் பெரும்பாணர் முதலிய திருத்தொண்டர்கள் தங்கள் இல்லக் கிழத்தியுடனும், உறவினர்களுடனும் சோதியில் புகுகின்றனர். பிள்ளையாரின் பரிசனங்களும், அடிகளார்களும், முனிவர்களும் முத்துச்சிவிகை

அமைந்தவர்கள் உட்பட பிறரும் இறைவன் காட்டிய பெருஞ்சோதியிற் கலந்து இன்புறுகின்றனர். இங்ஙனம் திருப்பெருமணம் காண வந்த அனைவரும் பெருஞ் சோதியிற் புகுந்த பின்னர் பிள்ளையார் தம் காதலியாரைக் கைப்பிடித்து இறைவனது எழிற் பெருஞ் சோதியை வலம் வந்து சிவபெருமானுடன் ஒன்றி உடனாகின்றனர். உடனே வளர்சோதி மறைகின்றது. இக்கோயில் முன் போலவே காட்சியளிக்கின்றது. பதினாறாண்டில் பிள்ளையாருக்குத் திருமணம் நிகழ்கின்றது. அப்போதே சோதியிற் கலப்பும் நிகழ்ந்து விடுகின்றது. இதனால் பிள்ளையார் இவ்வுலகில் நடமாடிய காலம் பதினாறாண்டு என்பது நன்கு உறுதிப் படுகின்றது.

சம்பந்தர் வாழ்க்கையை நோக்கும்போது மற்றைய நாயன்மார்களைக் காட்டிலும் இவர் ஒரு வீரசமண் சமய எதிர்ப்பில் ஈடுபட்டுச் சோழ, பாண்டி, தொண்டை நாடுகளில் அவர்கள் சமயத்தின் குறைபாடுகளை எடுத்துச் சொல்லியும், அவர்களைப் போல் அற்புதங்கள் நிகழ்த்திக் காட்டியும் மக்களை முன்போல் சைவத்திற்குத் திருப்பிய வர் என்ற உண்மையைக் கண்டு தெளியலாம். இவருக்குத் துணையாகப் பல போதகர்கள் இவருடன் சென்றிருக்க வேண்டும். இவர்கள் **'சம்பந்தர் சரணாலயம்'** என்று வழங்கப் பெறுகின்றனர்.

**பாடல்களின் தொகை:** முதல் திருமுறையில் 136 பதிகங்களும், இரண்டாவது திருமுறையில் 122 பதிகங் களும், மூன்றாம் திருமுறையில் 125 பதிகங்களும், ஆக **383** பதிகங்கள் அடங்கியவை சம்பந்தரது தேவாரம். பதிகம் என்பது பத்துப்பாடல்கள் அடங்கிய பகுதி. பிற்காலத்தில் **'திருவிடைவாய்'** திருப்பதிகம் கல்வெட்டுக்களின்றும் எடுக்கப்பெற்று தனியாக மூன்றாம் திருமுறையின் இறுதி யில் சேர்க்கப் பெற்றுள்ளது. தேவாரம் தொகுக்கப்பெற்ற காலத்தில் இது கிடைத்திருப்பின் இஃது இரண்டாம்

திருமுறையின் பண் இந்தளத்தில் சேர்க்கப் பெற்றிருக்கும். இவற்றுடன் இவர் பாடிய திருப்பாடல்கள் 4158 ஆகத் தொகைபெறுகின்றன.

**பதிக அமைப்பு:** சம்பந்தப்பெருமான் ஒவ்வொரு பதிகத்திலும் ஒன்று முதல் ஏழு வரையிலுமுள்ள திருப் பாடல்கள் அப்பதிகத்திற்குரிய திருத்தலங்களின் இயற்கை வனப்பு, அங்கு கோயில் கொண்டிருக்கும் இறைவனின் அருமை, அவன்தன் அடியார்க்கு எளிவந்தருளும் எளிமை, உலகெலாம் படைத்தளித்தழிக்கும் வரம்பிலாற்றலுடைமை முதலிய திருவருட் பண்புகள் அவ்வத்தலங்களிலிருந்து இறைவனை வழிபட்டு மகிழும் அடியார்களின் திருத் தொண்டின் திறம் ஆகியவை விரித்துரைக்கும் முறையில் அமைந்திருக்கும். **எட்டாம்** பாடலில் இராவணன் செய்தியும்- **ஒன்பதாம்** பாடலில் திருமால், பிரமன் பற்றிய செய்தியும், **பத்தாம்** பாடலில் சமணர்-சாக்கியர் செய்தியும், திருக்கடைக் காப்பில் தம் பெயரும் விடாமல் மரபாக வருவதைக் காணலாம்.

**பாடல்களின் சிறப்பமைப்பு:** சம்பந்தப்பெருமான் அருளிய திருப்பாடல்களில் பெரும்பான்மையானவை பதினொரு திருப்பாடல்களைக் கொண்டவை. திருப் பிரம்மபுரத் திருப்பதிகங்களில் சில அத்தலத்திற்கு அமைந்த பன்னிரு திருப்பெயர்களையும் பரவிப் போற்றும் கருத்துடன் பன்னிரண்டு திருப்பாடல்களாக வளர்ந்துள் ளன. சைவ சமயத்தின் நுண்பொருள்களை விளக்கும் முறையில் அமைந்த **'வாழ்க அந்தணர்'** (354) என்னும் முதற்குறிப்புடைய திருப்பதிகம் பன்னிரண்டு திருப்பாடல் களையுடையவை. 'திருவெழு கூற்றிருக்கை' என்னும் மிறைக் கவி ஆசிரியப்பாவாக அமைந்த ஒரே திருப்பாட்டு.

காழிப்பிள்ளையார் 'விருந்தாய சொல் மாலைகள்' சிலவற்றையும் அருளியுள்ளார். இவ்வாறு முதன் முதலாக

அருளிச்செய்யப் பெற்ற அத்திருப்பதிகங்கள் இத்தகைய பனுவல்கட்கு முன் இலக்கியங்களாகத் திகழ்கின்றன. இவற்றை **'மிறைக் கவிகள்'** எனவும், **'சித்திரக் கவிகள்'** எனவும் வழங்குவர். இவை மொழி மாற்று, மாலை மாற்று, வழிமொழி, மடக்கு, யமகம், ஏகபாதம், இருக்குக்குறள், எழு கூற்றிருக்கை, ஈரடி-ஈரடி வைப்பு, முடுக்கியலாகிய திருவிராகம், சக்கரமாற்று, கோமுத்திரிகம், கூடற்சதுக்கம் முதலியனவாகும். செய்யுளகத்து மொழிகள் தம்முட் புணரும் முறை நிரல்-நிரை; சுண்ணம், அடிமறி, மொழி மாற்று என நான்கு வகைப்படும். இத்தகைய அமைப் பினை இவர்தம் பாடல்களில் காணலாம்.

(ஆ) நான்கு முதல் ஆறு திருமுறைகள்:

(2) திருநாவுக்கரசர்: திருமுனைப்பாடி நாட்டில்[13] **திருவாமூர்** என்றொரு சிற்றூர். இவ்வூரில் வேளாண் மர பில் குறுக்கையில் குடியில் தோன்றியவர் இப்பெருமகனார். தந்தையார் **புகழனார்**; தாயார் **மாதினியார்**. இவர்கள் தம் மகனுக்கிட்ட பிள்ளைத் திருநாமம் **மருள் நீக்கியார்** என்பது. இவருக்குத் **திலகவதியார்** என்றொரு தமக்கை யார் ஒருவர் உண்டு. திலகவதியார் பிறந்த சில ஆண்டு களுக்குப் பின்னர் தோன்றியவர் அவர்தம் திருத்தம்பியார். தமக்கையாருக்குப் பன்னிரண்டாண்டு கடந்தபின் **கலிப் பகையார்** என்னும் வேளாண்குடித் தலைவர் ஒருவருக்கு மணம் செய்து கொடுக்க உறுதியாயிற்று. அச்சமயத்தில் கலிப்பகையார் போர்மேல் செல்ல நேர்ந்தது. அதில் அவர் இறந்து படுகின்றார். அதற்குள் புகழனாரும் சிவபதம்

13. இது நடுநாடு. இந்நாட்டை முனையரையர் என்ற வீரஞ் செறிந்த சிற்றரசர்கள் ஆட்சி புரிந்தமையால் 'முனைப்பாடி' என்று வழங்கப் பெறுகின்றது. நடுநாட்டின் ஒரு பகுதிதான் முனைப்பாடி நாடு என்றொரு கருத்தும் உண்டு.

அடைகின்றார். இந்நிலையில் மாதினியாரும் உடன் கட்டை ஏறி தம் கற்பு நிலையை நிலை நாட்டுகின்றார்.

கலிப்பகையார் மாய்ந்த செய்தி திலகவதியாருக்கு எட்டுகின்றது. திருமணம் உறுதி செய்த அன்றே தான் கலிப் பகையின் பொருளாகின்றதாகவும், ஆதலால் தன் உடம்பைத் துறந்து தம்முயிரை அவர் உயிரோடு இசைவிப்பதாகக் கூறி உயிரைவிடத் துணிகின்றார். தமக்கையாரின் துணிவைக் கண்ட மருள்நீக்கியார் தம்மை ஆதரவற்ற நிலையில் தமக்கையார் விட்டுச் சென்றால் தாமும் அவருக்கு முன்னே உயிர் துறப்பதாகக் கூறி வருந்துகின்றார். தம் திருத்தம்பியார்- பின்னால் சைவ சமயம் தழைக்க வாழப் போகின்றவர்- இவ்வுலகில் புகழ்பெற்று வரவேண்டுமென்ற கருத்தால் தம்பியின் பொருட்டுத் தமது முடிவை மாற்றிக் கொண்டு உயிர் தாங்கி இருப்பதாக உறுதி கொள்கின்றார். இல்லறத்தி லேயே தவ ஒழுக்கம் பூண்டு தம்மையே தாயும், தந்தையு மாகக் கருதி நின்ற தம்பியரைக் கல்வி, ஒழுக்கங்களில் சிறந்தவராக்கு கின்றார்.

மருள்நீக்கியார் தாம் கற்ற கல்வியறிவின் பயனாக உலக நிலையாமையை நன்கு உணர்ந்து பல்வேறு அறச் செயல் களைச் செய்துவிட்டுத் துறவு பூண்டார். அவர் காலத்தில் தமிழகத்தில் நன்றாகப் பரவியிருந்த சமண சமய உண்மை களை அறிய விரும்பி பாடலிபுரம் சென்று அங்குள்ள சமண குருமார்களிடம் நெருங்கிப் பழகி, அவர்கள் போதனைக்குள்ளாகி அச்சமயத்தைத் தழுவலானார். நாளடைவில் சமணசாத்திர அறிவிலும், ஒழுக்கத்திலும் மேம்பட்டார். புத்தரில் ஒரு சாரரான தேரர்களை வாதால் வென்று, சம ணத்தை விளக்கிய காரணத்தால் அவருக்குத் **தருமசேனர்** என்ற பட்டமும் வழங்கப்பெற்றது.

தம்பியார் புறச் சமயம் புகுந்ததை அறிந்த திலகவதியார் **திருவதிகை** அடைந்து, சிவபெருமான் திருவருளை இறைஞ்சிச் சிவசின்னங்கள் அணிந்து சிவபெருமானுக்குத் திருத் தொண்டு புரிந்து வருவாராயினார். நாடோறும் பொழுது புலர்வதற்கு முன்னர் கோயிலில் திருவலகிடுதல், ஆன் சாணத்தால் நன்றாக மெழுகுதல், மலர் கொய்து மாலைகள் தொடுத்தமைத்தல் முதலிய திருப்பணிகள் விருப்பமுடன் அம்மையாரால் செய்யப்பட்டு வந்தன. தம் தம்பியாரைப் புறச் சமயப் படுகுழியினின்றும் எடுத் தாண்டு உய்விக்க வேண்டும் என்று இறைவனிடம் விண் ணப்பிக்கின்றார். சிவபெருமான் அம்மையாரின் கனவில் தோன்றி தம்பிக்குச் சூலை நோய் தந்து ஆட்கொள்வதாகத் தெரிவிக்கின்றார். அவ்வண்ணமே தருமசேனர் வயிற்றில் சூலை நோய் வந்து பற்றுகின்றது.

சமணர்கள் எவ்வளவோ முயன்றும் சூலை நோய் நீங்கவில்லை. மாறாக அதிகரிக்கத் தொடங்கியது. அவர் களும் தருமசேனரைக் கைவிட்டு நீங்கினர். தருமசேனர் இரவோடு இரவாக ஆள் துணையுடன் திருவதிகை அடைந்து தமக்கையாரின் திருவடி பணிந்து தாம் உய்யுமாறு அருளிச் செய்யும்படி வேண்டினார். அம்மை யாரும் பரமனைப் பணிந்து அவன் பணி செய்தலே உய்யும் நெறி என உபதேசித்தார். தம்பியாரும் சிவ வேடம் பூண்டு தமக்கையாரைப் பின் தொடர்ந்து சென்று **வீரட்டானேசு வரரை** வணங்கி நின்ற அளவில் அப்பெருமான் திருவரு ளால் தமிழ் மாலை சாத்தும் உணர்வு தோன்றியது. தோன்றவே தம் சூலை நோய் நீங்குமாறு **'கூற்றாயின வாறு'** (4.1) என்ற முதற்குறிப்புடைய திருப்பதிகத்தைப் பாடிப் போற்றுகின்றார். சூலைநோய் நீங்குகின்றது. "செந்தமிழ்ப் பதிகம் பாடிய பான்மையினால் நின் பெயர் **'நாவுக்கரசு'** என்னும் நற்பெயர் உலகேழினும் நிலை

பெற்று வழங்குவ தாகுக" என்ற இறைவனின் திருவாக்கு யாவரும் கேட்கும் வண்ணம் வானின்கண் எழுந்தது.

சமணர்கள் சூழ்ச்சியால் நாவுக்கரசரை தம் அரசன் பால் இட்டுச்சென்று பல்வேறு தண்டனைகட்கு உட்படுத் துகின்றனர். நீற்றறையில் இடல், நஞ்சூட்டல், பட்டத்து யானையால் இடறச் செய்தல், கல்லொடு பிணைத்துக் கடலில் இடல் போன்ற தண்டனைகளினின்றும் அரன் அருளால் தப்பி உய்கின்றனர். இவை யாவும் இறைவன் அடியார் பொருட்டு நிகழ்த்திய அற்புதச் செயல்களாகும்.

இவர் வாழ்வில் ஞானசம்பந்தர் தொடர்பு ஏற்படு கின்றது. இருவரும் சேர்ந்து பல திருத்தலப் பயணங்களை மேற்கொள்ளுகின்றனர். இவற்றால் அப்பர் பெருமான் பல உயர்ந்த திருப்பதிகங்களை அருளுகின்றார். இந்தப் பயணங் களில் பல அற்புத நிகழ்ச்சிகளும் நடைபெறுகின்றன. சிலவற்றை முன்னர்க் குறிப்பிட்டோம். மேலும் **நல்லூரில்** இறைவன் திருவடி சூட்டப் பெறுதல், அப்பூதி அடிகளின் **மூத்த திருநாவுக்கரசனுக்கு** விடந்தீர்த்தல், திருவீழிமிழ லையில் படிக்காசு பெறுதல், திருமறைக்காட்டில் மறைக் கதவம் திறத்தல், வாய்மூரடிகளின் காட்சி பெறுதல், பொதி சோறு பெறுதல், திருக்கயிலாயத்திருப்பயணத்தில் பொய் கையில் மூழ்கி **திருவையாற்றில்** எழுந்து கயிலைக்கோலம் காணல் ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

அப்பர் பெருமான் தம் இறுதிக்காலத்தில் 'பொய்ப் பாசம் போக்கும்' சிந்தனையினராய் **உழவாரத் தொண்டு** புரிந்து திருப்புகலூர் பெருமான் திருவடிகளை வணங்கிக் காலங்கழிக் கின்றார். இக்காலத்தில் "எண் ணிறந்த வண்டமிழ் மாலைகள்" அவர்தம் திருவாக்காகப் பிறக்கின்றன.

**நாவுக்கரசரின் நெஞ்சுறுதி:** அப்பர் பெருமானின் நெஞ்சுறுதியை உலகத்தார்க்குத் தெளிவாகப் புலப்படுத்து

வதற்குத் திருவுள்ளம் கொள்ளுகின்றார் கயிலைநாதன். ஒருநாள் அவர் உழவாரத் தொண்டு புரியுங்கால் அந்த உழவாரம் நுழையும் இடங்களிலெல்லாம் பொன்னும், நவமணிகளும் வெளிப்பட்டு மின்னித் தோன்றும்படி செய்கின்றான். 'ஓடும் பொன்னும் ஒக்கவே நோக்கும்' உர வோராகிய நாவேந்தர் அவற்றைப் பருக்கைக் கற்களோடு கற்களாக நினைத்து உழவாரப் படையால் ஏந்திப் புதுமலர்கள் பூக்கும் பூங்கமலவாவியில் புகுமாறு வீசி எறிகின்றனர்.

பின்னர் தேவலோகப் பொதுமாதர் அப்பர் முன் தோன்றி அவர் மனசை மருட்ட முயன்றனர். சிறிதும் நிலைகலங்காப் பேருணர்வு நிலை நின்ற பெரியார், அவர்கள் தமக்கு இன்னல் எதுவும் செய்ய முடியா தென்றும் உண்மையைக்கூறி அவர்களை அகலுமாறு பணிக்க அவர்களும் அவ்வாறே செய்தனர்.

பக்தி வடிவமான நாவுக்கரசர் இனியும் இம்மண்ணுல கில் நில்லாமல் மாதொருபாகன் மலரடிக் கீழ்த்தங்கி விடவேண்டு மென்ற கருத்துக்கொண்டார். **"எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ"** (6.99) என்னும் கடைசித் திருத்தாண்ட கத்தைப்பாடி "உன்னடிக்கே போதுகின்றேன். பூம்புகலூர் மேவிய புண்ணியனே" என்று நெஞ்சம் கசிந் துருகி வேண்டும் நிலையில் இவ்வுலக வாழ்வைத் துறந்து அறவாழி அந்தணனாகிய இறைவன் அருளொளியில் கலந்து திருவடியை அடைந்த நன்னாள் **'சித்திரைத் திங்கள் சதயத் திருநாள்'** என்று கூறுவர் சேக்கிழார் பெருமான்.

நாவுக்கரசரின் வாழ்வு நலவாழ்வு; அற்புதத் திருவாழ்வு. தமிழோடு, இசைபாடிச் சிவானந்தத்தை அநுபவித்த பெரு வாழ்வு. **'திருநின்ற செம்மை'** இவர்தம் வாழ்வில் எங்கெங் கும் ஒளிவிட்டுக்காட்டுகின்றது. இவர் சிறந்த கவியோகி;

ஞானச்செம்மல். பக்தியின்கொடுமுடியைக் கண்ட பெம்மான். வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வத்துள் வைக்கப்பெற்றதால் அவர் வாழ்வு **பூரணத் துவம்** பெற்று இலங்குகின்றது.

***பாடல்களின் தொகை:*** *நான்காம் திருமுறையில் 113 பதிகங்கள், ஐந்தாம் திருமுறையில் திருக்குறுந்தொகை யாப்பில் அமைந்த திருப்பதிகங்கள் 100; ஆறாம் திருமுறை யில் தாண்டக யாப்பில் அமைந்த திருப்பதிகங்கள் 99. இப்பதிகங்களில் அமைந்த பாடல்களின் தொகை* ***3066*** *ஆக அமைகின்றன.*

***பதிக அமைப்பு:*** *நான்காம் திருமுறையில் 22 முதல் 79 வரையுள்ள பதிகங்கள் திருநேரிசைப் பதிகங்கள். இவை கட்டளையடியினையுடைய செய்யுட்கள். வண்டுகள் நறுமலர்களில் மகரந்தப் பொடியையும் தேனையும் மாந்தி அம்மலர்களில் படிந்து இடையீடின்றி முரல்வது போலும், நேரிய இசையமைந்த திருப்பாடல்கள் நேரிசை என்று பெயர் பெற்றன. தேவாரத்தில் வரும் இந்த நேரிசை யாப்பும் திவ்விய பிரபந்தங்களில் வரும் திருக்குறுந் தாண்டக (திருமங்கை மன்னன்) யாப்பும் ஒன்றே என்பது இந்த இருபனுவல்களிலும் வரும் திருப்பாடல்களை ஒப்பு நோக்குவதால் அறியப்படும்.*

***திருவிருத்தம்:*** *நான்காம் திருமுறையில் 80 முதல் 113 வரையுள்ள பதிகங்கள் கட்டளைக்கலித்துறை யாப்பாகிய திருவிருத்தப் பதிகங்கள்.* ***'விருத்தம்'*** *என்பது வட சொல். இச்சொல்லுக்குரிய பல பொருள்களுள் ஒன்றன் நிகழ்ச்சி அல்லது விருத்தாந்தம் என்பதும் ஒரு பொருளாகும். அப்பர் பெருமான் இறைவனிடம் முறையிட்டுத் தெரிவித்துக் கொள்ளுதற்குரிய செய்திகளாகவும், இறைவன் செய்தருளிய செயல்களாக உலகத்தார்கட்கு அறிவுறுத்த வேண்டிய செய்திகளாகவும் அமைந்த திருத்தகவினவாகிய*

நிகழ்ச்சிகளைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தவை இத்திருவிருத்தங்கள். இவ்வாறே மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்களுள் ஒருவராகிய நம்மாழ்வார் இறைவனை நோக்கி விண்ணப்பம் செய்யும் முறையில் கட்டளைக்கலித்துறை யாப்பில் அருளிய பனுவல் **திரு விருத்தம்** என்ற பெயரால் வழங்குதல் ஈண்டு நினைவு கூரத்தகும்.

ஐந்தாம் திருமுறையில் திருக்குறுந்தொகை யாப்பி லமைந்தவை இத்திருப்பதிகங்கள். சிவபெருமான் திருக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள தலங்களில் கைத் தொண்டு புரியும் கடமையினை மேற்கொண்ட அப்பர் பெருமான் இறைவனது பேரருளை நினைந்து நடந்து செல்லும் பொழுதும், திருக்கோயில்களில் உழவாரத் தொண்டு முதலிய திருப்பணிகளைச் செய்யும்போதும், தம் பெருமானாகிய இறைவனை முன்னிலையாக்கிப் போற்றும் நிலையிலும், அவ்விறைவனது புகழை நம்போலி யருக்கு எடுத்துரைக்கும் நிலையிலும் பாடிப் போற்றுதற் கேற்ற சந்தமாக இக்குறுந்தொகை யாப்பு அமைந்திருத் தலைக் கண்டு மகிழலாம்.

ஆறாம் திருமுறையில் அடங்கிய பதிகங்கள் யாவும் திருத்தாண்டக யாப்பில் அமைந்தவை. தாண்டகம் என்பது, தொல்காப்பியச் செய்யுளிலக்கணப்படி எண்சீரான் வந்த கொச்சக ஒரு போகு எனப்படும். தமிழ்ச்செய்யுள் வகை யாகிய **தாண்டகம்** என்னும் யாப்புக்கு மூல இலக்கிய மாக விளங்குவன அப்பர் பெருமான் அருளிய இத்தாண் டகத் திருப்பாடல்களேயாகும். இதனால் இப்பெருமான் **'தாண்டகச்சதுரர்', 'தாண்டக வேந்தர்'** எனவும் போற்றப்பெறுவர். **திருமங்கை யாழ்வார்** அருளிச் செய்துள்ள 'திருநெடுந்தாண்டகம்' இவண் கூறப்பெற்ற தாண்டக யாப்பில் அமைந்த பனுவலாகும் என்பதை ஈண்டு நினைத்தல் தகும்.

***தனிச்சிறப்பு:*** *சம்பந்தரும், சுந்தரரும் தாம் பாடிய பதிகங்களின் இறுதிப்பாடல்களில் பாடினோராகிய தம் பெயரையும், அத்திருப்பதிகங்களையும் காதலால் ஓதுவோர் பெறும் பயனையும் விரித்துரைத்தலைப் போல, அப்பர் பெருமான் தாம் அருளிய திருப்பதிகங்களின் இறுதிப் பாடல்களில் அவற்றைக் குறிப்பிடும் வழக்கத்தை மேற்கொள்ளவில்லை. ஆனால், தம்காலத்தைப் புறச்சமயச் சூழலில் கழித்து, இறைவனைத் தாம் மறந்திருந்த பெருங்குற்றத்தை எண்ணி உருகிய அப்பரடிகள், இங்ஙனம் காலத்தைக்கொன்னே கழித்த தம்மையும், ஒரு பொருளாகக் கொண்டு, ஆட்கொண்டு உய்வித்த பெருமானது பெருங்கருணைத்திறத்தை உணர்த்தும் பாங்கில், "பிழை செய்த இராவணனை உய்வித்த அருளால் குற்றமுடைய என்னையும் கோது நீக்கி ஆட்கொண்டான்" என உலக மக்களுக்கு எடுத்துறைக்கும் முறையில் இராவணனைப் பற்றிய குறிப்பினைப் பதிகந்தோறும் விடாது குறித்தருள் வதைக் காணலாம்.*

(இ) ஏழாம்திருமுறை

(3) நம்பியாரூரர்: *திருக்கயிலாயத்தில் ஒருநாள் சிவபெருமானுக்கு அடிமைத்தொழில் புரியும் அடியார்களில் ஒருவரான* ***ஆலால சுந்தரரும்,*** *அன்னை உமையம்மைக்குத் தொண்டு புரியும்* ***அனிந்திதை, கமலினி*** *என்ற சேடியர்களும் ஒரு நந்தவனத்தில் சந்திக்க நேரிடுகின்றது. காதல் கொள்ளுகின்றனர். கண்ணுதலப்பன் திருவருளால் அவர்கள் பூவுலகில் பிறந்து இன்பம் அநுபவிக்க வாய்ப்பு ஏற்படுகின்றது. அவரும் ஆலால சுந்தரரைத் தடுத்தாட்கொள்ள இசைகின்றார்.*

*திருமுனைப்பாடி நாட்டில்* ***திருநாவலூரில்*** *ஆதி சைவர் மரபில் அவதரித்தவர்* ***நம்பியாரூரர்.*** *தந்தையார்* ***சடையனார்;*** *தாயார்* ***இசைஞானியார்.*** ***ஆரூரன்***

என்பது பெற்றோர் இட்ட பிள்ளைத்திருநாமம். ஆரூரன் என்பது திருவாரூர் சிவன் பெயர். **'நம்பி'** என்பது ஆண்களுள் சிறந்தவனைக் குறிப்பது.[14] திருமுனைப்பாடி நாட்டை ஆண்டவர் நரசிங்க முனையர் என்பவர் நம்பி ஆரூரனை வேண்டிப் பெற்று தம் அரச பதவிக்குரிய **'இளவரசன்'** என்ற முறையில் அன்பினால், அபிமான புத்திரராக வளர்த்து வருகின்றார். எனினும், பார்ப்பனர் குலத்திற்கு உரிய ஒழுக்கத்தை உடையவராகி வளர்ந்து உரிய காலத்தில் உபநயனம் செய்யப்பெற்று சகல கலைகளில் வல்லவராகின்றார்.

நம்பியாரூரருக்குத் திருமணம் உறுதி செய்யப் பெறுகின்றது. புத்தூரில் கயிலாயத்தில் திருவருள் செய்த வண்ணம் சிவபெருமான் ஒரு முதியவர் வடிவம் கொண்டு அவரைத் தடுத்து ஆட்கொள்ளும் நிமித்தம் மணப்பந்தலில் எழுந்தருள்கின்றார். நம்பியாரூரருக்கும் அவருக்கும் வாக்குவாதம் நடைபெறுகின்றது. நம்பியாரூரர் தம் அடிமை என்கின்றார் கிழவேதியர். பார்ப்பனர் பார்ப்பனருக்கு அடிமை என்பது இயலாததொன்று என மறுத்து கிழவனைப் **'பித்தன்'** என்று கூறி அவர் கையிலிருந்த ஓலையைக் கிழித்தெறிந்து விடுகின்றார்.

எல்லோரும் வழக்கைத் தீர்க்க **திருவெண்ணெய் நல்லூர்** ஏகுகின்றனர். கிழவர் மூல ஓலையைக் காட்டுகின்றார் அவையோரிடம். அவையோர் அதனை முற்றும் நோக்கி நம்பியாரூரர் வேதியருக்கு அடிமை என்பதை ஒப்புக் கொண்டு தீர்ப்பு கூறுகின்றனர். எல்லோரும் கிழவரின் வீடு பாக்க விழைகின்றனர். அனைவரும் பின்

14. வைணவப் பெரியார்களிடையே **'நம்பி'** என்ற பெயர் பெரு வழக்காகத் திகழ்வதைக் காணலாம். எ.டு. திருமலைநம்பி, பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, திருக்கச்சிநம்பி, வடுகநம்பி - என்பவை காண்க.

வர முதியவர் **'அருட்டுறை'**[15] என்னும் திருக்கோயில் புகுந்து மறைகின்றார். அனைவரும் செயலொன்றறியாது திகைத்து நிற்கின்றனர். உடன் சென்ற நம்பியாரூரர் கிழவரின் செயல் கண்டு வியப்புறுகின்றார். தனியே தொடர்ந்து சென்று கிழவரைக் கூவி அழைக்கின்றார். அப்போது மறையவராய் வந்து மறைந்த அருட்டுறை ஈசன் உமையம்மையாருடன் விடைமீதமர்ந்து விசும்பில் தோன்றி நாவலூரருக்குக் காட்சி தந்தருள்கின்றார்.[16]

பின்னர் இறைவன் ஏவிய வண்ணம் **'பித்தா பிறை சூடி'** (7.1:1) எனத் தொடங்கும் செந்தமிழ்ப் பதிகத்தினை இன்னிசையுடன் பாடிப் போற்றுகின்றா இதனைச் செவி மடுத்து உள்ளங்குளிர்ந்த அருட்டுறை ஈசன் "இங்ஙனமே இவ்வுலகில் பல்லாற்றானும் எம் பொருள்சேர்புகழைப் பாடிப் போற்றுவாயாக" என்று ஆணையிட்டு மறைந்தருள் கின்றார்.

**திருத்தல வழிபாடு:** சுந்தரர் தம் வாழ்நாளில் பல்வேறு நிலைகளில் பல தலங்களை வழிபட்டுத் திருப்பதிகங்கள் அருளுகின்றார். நடுநாட்டுத் திருப்பதிகள் 11(22), சோழ நாட்டுத் திருப்பதிகள் 47(90), தொண்டைநாட்டுத் திருத்தலங் கள் 14(22) ஆகியவற்றை வழிபட்டுப் பதிகங்கள் பாடு கின்றார்.[17] பாண்டிநாட்டுத் திருத்தலங்கள் 14. இவற்றுள் திருவாடானை, பிரான்மலை (கொடுங்குன்றம்) ஆகிய இரண்டையும் வழிபட்டதாகத் தெரியவில்லை. திருப்புத் தூர், திருவாப்பனூர், திருவாலவாய், இராமேச்சுரம்,

15. உமாதேவியாரின் அருள்பெற்றமையால் 'அருட்டுறை' ஆயிற்று.
16. அம்மையப்பருடன் வன்மொழிகளைப் பேசினமையால் அவரே இவருக்கு 'வன்றொண்டன்' என்ற திருநாமம் சூட்டுகின்றார்.
17. அடைப்புக் குறிகளுள் உள்ளவை தலங்களின் எண்ணிக்கை.

திருவேடகம், திருநெல்வேலி, குறும்பலா, வழிபடப் பெற்றாலும் பதிகங்கள் இல்லை. எஞ்சிய திருச்சுழியல், திருப்பரங்குன்றம், திருப்புனல்வாயில், திருப்பூவணம், கானப்பேர் என்ற ஐந்து மட்டிலும் பாடல்கள் பெற்றுள் ளன. கொங்கு நாட்டுத் தலங்களில் ஆறு பாடல் பெற்றுள் ளன. மலை நாட்டு ஒரே தலமாகிய திருவஞ்சைக்களம் (கொடுங்கோளூர்) மட்டிலும் பாடல் பெற்றது.

***திருமணம்:*** ஒரு மணத்தைத் தடுத்த சிவபெருமான் இரண்டு திருமணங்களைச் செய்து வைக்கின்றார். **கமலினி யார்** திருவாரூரில் உருத்திர கணிகையர் குலத்தில் பிறந்து **பரவையார்** என்ற பெயருடன் வளர்ந்து வருகின்றார். இவரைச் சுந்தரருக்கு இறைவன் அடியார்கள்மூலம் திருமணம் நிகழ்த்துகின்றார். அநிந்திதையார் தொண்டை நாட்டில் **ஞாயிறு** என்னும் ஊரில் வதியும் ஞாயிறு கிழவர் என்ற வேளாளருக்கு திருமகளாகத் தோன்றி **சங்கிலியார்** என்ற திருநாமத்துடன் வளர்ந்து வருகின்றார். இவரைத் தந்தையார் திருவொற்றியூரில் கன்னிமாடம் ஒன்று அமைத்து அதில் தங்கச் செய்து **ஒற்றியூர்** இறைவனுக்கு மலர்த்தொண்டு புரியும் தொழிலில் ஈடுபடுத்துகின்றார். இவரையும் இறைவன் நம்பியாரூரருக்கு வாழ்க்கைத் துணைவியாக்குகின்றார். இச்செயல் சற்று விநோதமாக நடைபெறுகின்றது. இங்கும் சிவனடியார்களே திருமணம் நடத்தி வைக்கின்றனர்.

***அற்புத நிகழ்ச்சிகள்:*** இவருடைய வாழ்க்கையிலும் இறைவனால் பல அற்புத நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. அவை: **திருவருட்டுறையில்** இறைவன் காட்சி தருதல், **திருவதிகையில்** ஒரு மடத்தில் தங்கி உறங்கும் பொழுது திருவதிகை வீரட்டானத்து எம்பெருமான் முதுவேதியராக வந்து இருமுறை நம்பியாரூரர் தலையில் திருவடி தீட்சை செய்து மறைதல், திருவாரூர்ப் பெருமான் யாவரும்

கேட்கும்படி **'தம்பிரான் தோழர்'** என்று பெயர் சூட்டல், திருவாரூர் இறைவன் அடியெடுத்துக் கொடுக்க திருத் தொண்டத் தொகைத் திருப்பதிகம் பாடுதல், திருவொற்றி யூரை விட்டு நீங்கும்போது சபதம் தவறினமையால் கண்களை இழத்தல், வெண்பாக்கத்து இறைவன் ஊன்று கோல் அருளுதல், **காஞ்சிபுரத்து** இறைவன் இடக்கண் அருளல், **திருவாரூர்** இறைவன் வலக்கண் நல்கல், சங்கிலியார் தொடர்பு கேட்டு ஊடிய பரவையாரின் ஊடலை இறைவன் தூது சென்று தடுத்தல், ஏயர்கோன் கலிக்காம நாயனாரையும் நம்பியாரூரரையும் ஒற்றுமைப் படுத்தல், திருப்புக்கொளியூரில் (கொ.நா.) முதலையுண்ட பாலனை வரவழைத்துக் கொடுத்தல் திருப்புகலூரில் உறங்குவதற்குத் தலைக்கு வைத்த செங்கல்கள் பொற்கட்டி களாக மாறுதல், திருப்பைஞ்ஞீலியிலும் குருகாவூரிலும் பொதிசோறு பெறுதல், முதுகுன்றப் பெருமானிடம் பெற்ற பன்னீராயிரம் பொன்களை மணிமுத்தாற்றில் போட்டு திருவாரூர்க் குளத்தில் பெறல் ஆகியவை அற்புதநிகழ்ச்சி களாகும்.

**கயிலைக்கு எழுந்தருளுதல்:** மலைநாட்டில் சேரமான் பெருமானோடு தங்கியிருக்கும் பொழுது சேரமான் பெருமாள் நீராடிக் கொண்டிருக்கின்றார். நம்பியாரூரர் திருவஞ்சைக் களத்திறைவனை வணங்கி, "ஆண்டவனே, அடியேனை உலக வாழ்க்கியினின்றும் நீக்கித் தேவரீர் திருவடியில் சேர்த்தல் வேண்டும்" என்ற குறிப்போடு **'தலைக்குதலை'** (7.4) என்னும் திருப்பதிகம் பாடினார். இறைவனும் வெள்ளை யானையைத் தேவர்களுடன் அனுப்பி நம்பியாரூரரை கைலைக்கு வரச் செய்தார். இது கேட்ட சேரமான் பெருமாள் நாயனார் அருகிலிருந்த ஒரு குதிரை மீது ஏறி அக்குதிரையின் காதில் ஐந்தெழுத்தை ஓதிக் கைலாயத்திற்குச் சென்றனர். பரவையாரும் சங்கிலி

யாரும் முறையே கமலினி, அநிந்திதையாகிக் கைலையை அடைந்தனர்.

**பாடல்களின் தொகை:** நம்பியாரூரர் திருவாய் மலர்ந் தருளிய அனைத்துத் திருப்பதிகங்களும் **ஏழாம் திருமுறையில்** ஒரே தொகுதியாக அமைத்துள்ளார் நம்பியாண்டார் நம்பிகள். இதில் **'பித்தா பிறைசூடி'** (7.1) என்னும் திருப் பதிகம் முதலாக **'தானெனை முன் படைத்தான்'** (7.100) என்ற திருப்பதிகம் ஈறாக 100 திருப்பதிகங்கள் உள்ளன. இப்பதிகங்களின் திருப்பாடல்களின் தொகை 1025.

இத்திருமுறையில் தென்றமிழ்ப் பயனாய் வந்த **'திருத் தொண்டத்தொகை'** 39-ஆம் பதிகமாகவும், திருஐந்தெழுத் தின் சிறப்பியல்பினையுணர்த்தும், **'நமச்சிவாய திருப் பதிகம்'** 45ஆம் பதிகமாகவும் அமைந்துள்ளன. சிந்தையின் தெளிவினைப் புலப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தது **'பஞ்சமம்'** என்ற பண். தம்பிரான் தோழர் அஞ்சைக் களத்தப்பன்பால் விடை பெற்றுக் கயிலை நோக்கிச் செல்லும் பொழுது பாடியருளிய **'தானெனை முன்படைத்தான்'** (7-100) என்ற பதிகம் **'பஞ்சமம்'** என்ற பண்ணில் அமைந்திருத்தல் கண்டு மகிழத்தக்கது.

**பல செய்திகள்:** தம்பிரான் தோழரின் திருப்பதிகங் களை ஆழ்ந்து நோக்குங்கால் நமக்குப் பல செய்திகள் புலனாகுகின்றன.

(1) **ஐந்தெழுத்தின் பெருமை:** இறைவனது திருப் பெயராய்த் திகழும் திருவைந்தெழுத்தின் பெருமையினையும், மந்திர மாகிய அதனைக் காதலாகிக் கசிந்து ஓதுவார் எய்தும் நலன்களையும் உரைக்கும் **நமச்சிவாயப் பதிகத்தைக்** (7.48) கூறும் போக்கில் தாம் இறைவனை ஒருகால் மறக்கி லும் தமது நா என்றும் சொல்லிக் கொண்டேயிருக்கும் என்கின்றனர்.

(2) **தோழமை உறவு:** இறைவன் தமக்குத் தோழனாக அமைந்த நிகழ்ச்சியைப் பல இடங்களில் *(7.68; 7.51; 7.84)* நெஞ்சம் நெக்குருகிப் பாடியுள்ளார். பொன் வேண்டியிருந் தாலும், பெண் வேண்டி யிருந்தாலும் இறைவனை உரிமை யாகக்கேட்டுப் பெறும் பேறு பெற்றவர் இவர் என்பதை அறிகின்றோம். இருபெண்களிடமும் ஐம்புலவின்பங்களை ஆரத் துய்க்கும் சிற்றின்ப நிலையிலும், சிவபெருமானது திருவருளாகிய பேரின்பத்தையே நுகர்ந்து மகிழும் சிவயோகியராகத் திகழ்வதைக் காண்கின்றோம்.

(3) **புலவர்கட்கு அறிவுரை:** இக்காலத்தில் பணக்காரர் களையும், பதவியிலுள்ளவர்களையும் அற்ப சலுகைகளைப் பெறுவதற்குப் புகழும் வழக்கம் நம்பியாரூரர் காலத்திலும் நிலவியிருந்தது. புலவர்கள் தம்புலமைத் திறத்தை சிறு சலுகைக் கெல்லாம் அடகு வைக்கும் பழக்கத்தை வெறுக் கின்றார் நம்பியாரூரர். **புகலூர் பதிகமொன்றில்** *(7.34)* இக்கருத்தை வெளியிடுகின்றார். இங்ஙனம் புலவர்க்குக் கூறும் அறவுரையை நோக்குங்கால் நம்மாழ்வார் **'சொன் னால் விரோதம் இது'** *(திருவாய் 3.9)* என்ற திருவாய் மொழியில் கூறும் அறவுரைகள் நம் நினைவிற்கு வருகின்றன.

(4) **அடியார்களைப்போற்றுதல்:** இறைவன் துணையால் 'அடியார்க்கடியனாகின்றார்.' இறைவனே இவருக்கு அடி யார்களின் திருத்தொண்டின் திறத்தையும், சால்பினையும் உணர்த்துகின்றார். திருத்தொண்டர்களைப் பாடுதற்கும் *(7.39)*

தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்

என்று அடியும் எடுத்துத் தருகின்றார்.

(5) **பழமொழிகள்:** பக்தியுடன் போற்றி வளர்த்த தம்பிரான் தோழரின் இசைப்பாடல்களில் மக்களிடையே வழங்கும்

பழமொழிகள் உணர்ச்சியுடன் கையாளப் பெறுவதால் இவர்தம் கருத்துகள் மக்கள் உள்ளத்தில் வேர்விட்டு வளர்வதற்குக் காரணமாகின்றன. இதனை 7.3:4, 7.8:6 திருப்பாடல்களில் காணலாம்.

(ஈ) எட்டாம் திருமுறை

(4) மாணிக்கவாசகர்: மாணிக்கவாசகர் மதுரைக்கருகில் வையையாற்றங்கரையிலுள்ள **திருவாதவூரில்** அவதரித்த வர். ஆதலால் அவருக்குத் 'திருவாதவூரர்' என்ற பெயரும் அமைந்தது. அவருடைய கல்வி, கேள்வி, ஒழுக்கம், அறிவு, ஆற்றல் முதலியவற்றைக் கேள்வியுற்ற பாண்டியன் அவரைத் தன்னிடம் வரவழைத்து தனது அமைச்சரவை யில் ஒருவராக நியமித்துக் கொண்டான். அவருடைய ஆட்சித்திறமையைக் கண்ட மன்னன் அவருக்குத் **'தென்னவன் பிரம்மராயன்'** என்ற விருதையும் வழங்கிச் சிறப்பித்தான். அரசியல் அமைச்சியலால் அல்லல் இன்றி மிகச்சிறப்பாக நடைபெற்று வந்தது. ஆட்சி முறை பற்றிய அல்லல் இல்லையென்றாலும், உலக வாழ்வும், வாழ்விற் கண்ட பெரும் போகமும் நிலையற்றன என்பதை அறிந் தார். சிவானுபவத்தில் ஆழங்கால் பட்டார். வாழ்க்கையில் உவர்ப்புத் தோன்றிற்று. 'கூத்தினர் தன்மை வேறு, கோலம் வேறு' என்றாகுமாறு போல இவர் மேற்கொண்டுள்ள அமைச்சுரிமைக்கும், அகத்துரிமைக்கும் சிறிதும் தொடர் பின்றி இருந்தது. பக்தி ஓங்குவதற்கேற்ப உலகவியவகாரங் களினின்றும், அவர்தம் மனம் படிப்படியாக விலகுவ தாயிற்று. குருவைத் தேடும் வேட்கை நாளுக்கு நாள் மிகுந்து கொண்டே வந்தது. இறையருளால் அதற்கேற்ற வாய்ப்பும் இயல்பாக வந்தது.

சோழநாட்டுக் கடற்கரையில் நல்ல அராபிக்குதிரைகள் விற்பனைக்காகக் கொணர்ந்து வைப்பதைக் கேள்வியுற்ற அரசன் அவற்றை வாங்கி வரும்படி திருவாதவூரரைப்

பணித்தான். வாதவூரரும் அதற்கிணங்கி பொற்பண்டாரத் தைத் திறந்து பெரும்பொருளை எடுத்துக்கொண்டு பரி வாரங்களுடன் புறப்பட்டுச் சென்றார். போகும் வழியில் **திருப்பெருந்துறையை** அடைந்தார்.

ஒரு திசையிலிருந்து **'அரகர'** முழக்கம் இவர் செவி வழியாகப் புகுந்து சிந்தையை உருக்கிற்று. ஒலி வந்த வழியே விரைந்து சென்றார். ஒரு குருந்த மரத்தடியில் திருவருளே வடிவெடுத்திருந்த குருமூர்த்தியையும், சீடர்களையும் கண்டார். காந்தம் கண்ட இரும்புபோல் மனம் அவர் வசம் ஆயிற்று. விரைந்து அணுகி அடிபணிந்து ஆட் கொண்டருளுமாறு வேண்டினார். பரமசிவனே அத்திருக் கோலத்தில் எழுந்தருளி இருந்தார் என்பது ஐதிகம். இறைவன் கருணைக் கண்ணோக்கம் செய்து கரத்தால் தீண்டித் திருவடி சூட்டிச் **சிவஞானோபதேசம்** செய்தார். அதனால் அன்றே அவ் ஆவியும் உடைமையும் குருநாதர் வசம் ஆயின. கொண்டு வந்த செல்வம் அனைத்தையும் குருநாதன் திருவுள்ளக் குறிப்பின்படி சிவாலயப் பணிக்கு ஆக்கினார். அரசன் இட்டிருந்த பணியைப் புறக்கணித்தது மல்லாது அதனை அறவே மறந்து சிவனடியார் இணக்கத்தி லும், சிவஞான குருசேவையிலும் ஆனந்த பரவசம் அடைந் திருந்தனர்.

நாட்கள் பல உருண்டோடின. இங்ஙனம் நிகழ்ந்தவை யாவும் அரசன் செவிக்கு எட்டின. அவன் சீற்றங் கொண்டு தென்னவன் பிரம்மராயனைக் கைப்பிடியாகக் கொண்டு வந்து சேர்க்குமாறு ஆணைபிறப்பித்தான். அந்த நடவடிக்கை தம்மை வந்து எட்டும் வரையில் வாதவூரர் உலக நடை முறையை மறந்த நிலையிலிருந்தார். நெருக்கடி நிலை தம்மைத் தாக்கிய பொழுது தாம் செய்த பிழையை எண்ணி பரமாசாரியாரிடம் பரிந்து பணிந்து இனித்தாம் செய்வது யாது என்று விண்ணப்பித்தார். குருநாதன் விலை

மதிக்க முடியாத ஒரு **மாணிக்கத்தைக்** கையுறையாகத் தந்து அரசனிடம் சேர்க்குமாறும், **ஆவணி மூலத்தன்று** அசுவங்கள் வந்து சேரும் என்று சொல்லுமாறும் கூறி அமைதியுடன் இருக்குமாறு பணித்து தம் பக்தனை அனுப்பி வைத்தார். வாதவூரரும் அங்ஙனமே அரசனுக்கு அறிவித்து வாளா இருந்தார்.

அரசன் அசுவங்கள் வரும் என்று எதிர்நோக்கி இருந்தான். ஒற்றர்கள்மூலம் வாதவூரரின் அறிவிப்பு பொய்யென்பதை அறிந்தான். வாதவூரரைச் சிறையிலிட்டு ஒறுத்தான். கருணைக் கடவுள் குறித்த நாளன்று காட்டிலுள்ள நரிகளையெல்லாம் பரிகளாக்கி சேவகன் ஒருவன் மூலம் அனுப்பி வைத்தார். பாண்டிய மன்னனும் அவற்றை ஒப்புக் கொண்டு மகிழ்ந்தான். அன்றிரவே பரிகள் யாவும் நரிகளாகி தொழுவத்திலிருந்த சில குதிரைகளையும் கடித்து விட்டு காட்டை நோக்கி ஓடிவிட்டன.

அரசுச்செயலுக்காகக் கொடுத்த பொருளை வேறு செயலுக்குத் திருப்பியது முதல் குற்றம். குதிரை கொண்டு வருவது போன்று மாயவித்தை காட்டி நரிகளை நகருக்குள் ஏவியது இரண்டாவது குற்றம். இவற்றை முன்னிட்டுப் பாண்டியன் வாதவூரர்மீது கடுமையான நடவடிக்கை எடுத்தான். அவரைச் சிறையிலிட்டுப் பல்வேறு துன்பங்களுக்கு ஆளாக்கினான். அவை யாவும் வாதவூரரின் மனநிலையை முற்றிலும் மாற்றி அமைப்பதாயிற்று. தாம் செய்ததெல்லாம் சிவசேவை. சிவசேவைக்கென்றே மானுடப் பிறப்பு வாய்த்துள்ளது. தமக்குள்ள துன்பங்களெல்லாம் சிவன் செயல் என்றும், ஆதலால் அவற்றைத் துன்பமெனக் கருதலாகாது என்றும், அவற்றை இறைவன் திருவிளையாடல்களாகக் கொள்ள வேண்டும் என்றும் கருதினார். இதனால் அவருடைய பக்தி தீவிரமடைகின்றது. அந்த பக்தியும் இறைவனிடமிருந்தே வருகின்றது என்றும் எண்ணினார்.

திருவாதவூரரின் சாதாரணப் பக்தி **பரபக்தியாகப்** பரிணமிக்கின்றது. இதற்கிடையில் இறைவனது திருவருளால் வேறொரு நிகழ்ச்சி நடைபெறுகின்றது. வையையாற்றில் திடீரென்று வெள்ளம் பெருக்கெடுத்து கரையோரமிருந்த வீடுகளெல்லாம் அரித்துக் கொண்டு போகும் அபாய அறிகுறிகள் தென்பட்டன. அரசன் அவரவர் கரையை அவரவர் அடைத்துக் கொள்ளும்படி ஆணையிட்டான். **வந்தி** என்னும் பிட்டு வணிச்சியின் பங்கு அடைபடாமல் கிடந்தது. இறைவன் அவள் பொருட்டுக் கூலியாளாய் வந்து அவள் இட்ட பிட்டமுதை உண்டு **வைகையை** அடைப்பார்போல உண்ட களைப்பால் உறங்கினார். 'நூற்றைக்கெடுத்தது குறுணி' என்றது போல ஒருத்தி பங்கு ஊரார் பங்கையும் கரைத்தது. சினங் கொண்ட அரசன் கைப்பிரம்பு கொண்டு அந்த ஆளை அடித்தான். அந்த அடி சராசரப் பொருள் அனைத்தின் மேலும் பட்டது. அடி கொடுத்த மதுரை வேந்தனும் **தன் பிரம்பு அடியைத்** தானும் பட்டுண்டு வருந்தினான். கூலியாளோ மாயமாய் மறைந்து போய்விட்டான்! மன்னன் வாதவூரரின் பெருமையை உணர்ந்தான். அவரிடம் மன்னிப்பு கோரினான். திருவாதவூரர் தாம் துறவறம் பூண்டு வெளியேக விரும்புவதாகத் தெரிவித்தார். அரசனும் அன்போடு ஆதரவு நல்கி அவரைச் சிவனடியாராகும்படி அனுப்பி வைத்தான்.

அமைச்சியலைத் துறந்த வாதவூரடிகள் திருப்பெருந்துறை, திருவுத்திரகோசமங்கை, திருவாரூர், திருவிடைமருதூர் முதலிய தலங்களை வணங்கிப் பதிகங்கள் பாடிக் கொண்டு தில்லையை அடைந்தார். அங்கு நிச்சலும் ஆடலரசனை வழிபாடு செய்து கொண்டு எழுந்தருளியிருந்தார். தில்லைவாழ் அந்தணர்களோடு வாதுக்கு வந்த புத்தர்களை இறைவன் ஆணையின் வண்ணம் வென்றார்.

ஒருநாள் இறைவன் அந்தண வடிவங்கொண்டு திரு **வாசகம், திருக்கோவையார்** இரண்டையும் தாம் எழுதிக் கைச்சாத்திட்டுக் கனக சபையில் வைத்து மறைந் தார். திருவனந்தலில் திருவேட்டைக் கண்ட தில்லை வாழ் அந்தணர்கள் மிகமிக வியந்து அதனை எடுத்து அவிழ்த்துப் பார்த்தனர். அதில் அம்பலவாணர் கையெழுத்திட்டிருப் பதை அறிந்து அடிகளாரை அணுகி நிகழ்ச்சியின் உண்மையை அறிந்தனர். அடிகளாரைப் பொருள் விரிக்க வேண்டினர். அடிகளார் அனைத்திற்கும் பொருள் அம்பலவாணர் அடியிணையே என்று சொல்லி அவற்றுடன் இரண்டறக் கலந்தார்.

(உ) ஒன்பதாந் திருமுறை:

இதிலுள்ள நூல்களை அருளியவர்கள்:

(5) **திருமாளிகைத்தேவர்:** ஒன்பதாம் திருமுறை (திருவிசைப் பா) ஆசிரியர்களில் முதலாவதாகக் குறிப்பிடப் பெறுபவர் திருமாளிகைத் தேவர். இவர் பாடிய நான்கு திருப் பதிகங்களின் இறுதிச்செய்யுட்களில் 'மூர்க்கனேன் மொழிந்த புன்மொழிகள்' என்றும், 'சிவப் பெருந்தொண் டர் தொண்டனேன்' என்றும், தாழ்வெனும் தன்மை யோடும் சிவனடியார்க்குத் தொண்டுபட்ட தம்முடைய அடிமைத் திறத்தினைப் புலப்படுத்தியதன்றித் தம்முடைய ஊர்பேர், குடி முதலியவை பற்றி எதுவும் குறிப்பிடவில்லை. இந்நிலையில் இவர் பிறந்த ஊர் முதலிய வரலாற்றுக் குறிப்புகளைத் தெரிந்து கொள்ளுவதற்கு இயலவில்லை. ஒன்பதாந் திருமுறையில் முதற்கண் வைக்கப் பெற்றுள்ள பதிகங்கள் நான்கும் தில்லைச் சிற்றம்பலத்தைப் பற்றியன வாக அமைந்திருத்தலால் இவர் தில்லைப்பதியைத் தமக்குரிய உறைவிடமாகக் கொண்டிருந்தார் எனக் கருத இடம் உண்டு. திருமாளிகைத் தேவர் என்னும் பெயர் இயற்பெயராகத் தோன்றவில்லை. ஏதேனும் ஒரு காரணம்

பற்றி வழங்கிய சிறப்புப் பெயராகவே இதனைக் கொள்ளுதல் பொருத்தமாகும். திருமாளிகை என்பது '**மாட மாளிகை சூழ்தில்லையம்பலம்**'[15] என்று அப்பர் பெருமானால் சிறப்பித்துப் போற்றப் பெற்ற **தில்லைச்** சிற்றம்பலப் பெருங்கோயிலைக் குறித்து வழங்கிய பெயரென்றும், அத்திருக்கோயிலிற் பிரியாதுறைந்து திருச்சிற்றம்பலவனைப் போற்றிய தெய்வ வாழ்க்கையுடைவராக இவர் திகழ்ந்தமை பற்றித் திருமாளிகைத்தேவரென வழங்கப் பெற்றார் என்றும் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

(6) சேந்தனார்: ஒன்பதாம் திருமுறையவர்களுள் இவர் இரண்டாமாவர். இவர் வைணவராக இருந்து சைவத்திற்கு மாறியதாகக் கூறுவர். இவர் பட்டினத்தடிகளுக்குக் கணக்கராக இருந்து அடிகள் கட்டளையிட்டவாறு நிதி நிறையைத் திறந்து விட்டு அங்குள்ள செல்வ முழுவதையும் ஊரார் கொள்ளையிடச் செய்தார். இதனால் அரசன் சிறையிலிட்டனன். இதனால் துயருற்ற குடும்பத்தினர் பட்டினத்தடிகளைப் பணிந்து குறையிரந்து நிற்க, அவரும் வெண்காட்டு இறைவன்மீது பாடி இவரைச் சிறை வீடு செய்ய வேண்ட, அந்நிலையில் சிவபெருமான் ஆணையால் விநாயகப்பெருமான் விலங்கினை முறித்துச் சிறை மீட்டருளினார். பட்டினத்தடிகள் பணித்த வண்ணம் குடும்பத்துடன் தில்லைக்குக் குடியேறி விறகு விற்கும் தொழிலால் வரும் வருவாயைக் கொண்டு வாழ்க்கையை நடத்தி வந்தார். ஒரு நாள் களியமுதைத் தயாரித்து, சிவனடியாரை எதிர்பார்த்திருந்தார். சிவபிரானே முதியவர் வடிவில் எழுந்தருளி அவர் இட்ட களியமுதை உண்டு அடுத்த வேளைக்கும் எஞ்சிய களியமுதையும் பழங்கம்பளத்தில் முடிந்து கொண்டு பொன்னம்பலத்தை அடைந்தார்.

15. அப்பர் தேவாரம் 5.1:10

இஃதிவ்வாறாக, தில்லையில் கூத்தப்பெருமானுக்குத் தான் நடத்தும், நாள் வழிபாட்டில் திருச்சிலம்பொலி கேட்டு மகிழ்தலை நியதியாகக் கொண்ட சோழ மன்னன், அன்றிரவு முழுதும் காத்திருந்தும் அவ்வொலியைக் கேட்கப் பெறாது வருந்தித் துயில் கொண்டான். கூத்தப் பெருமான் மன்னனது கனவில் தோன்றி தான் சேந்தனா ரது களியமுதை உண்ணச் சென்றமையால் தன்னால் வர இயலவில்லை என்று நவின்று மறைந்தருளினார். இந்நிலை யில் சேந்தனாரைக் காண விரும்பித் தில்லைப்பெரு மானை வணங்கச் சென்ற வேந்தன் பொன்னம்பலத்தில் களியமுது சிந்திக் கிடத்தலைக் கண்டு கனவின் உண்மை யைத் தில்லைவாழ் அந்தணர் அனைவர்க்கும் தெரிவித்த னன். அதனையுணர்ந்த பலரும் சேந்தனாரைக் கண்டு வழிபட வேண்டுமெனப் பெரிதும் காத்திருந்தனர்.

மார்கழித் திருவாதிரைத் திருவிழாவில் மழை பெய் தமையால் திருத்தேர் சேற்றில் மூழ்கி ஓடாது நின்றபொழுது **'தேர் நடக்கப் பல்லாண்டு பாடுக'** என்றதொரு வானொலி யாவரும் கேட்குமாறு தோன்றியது. தேரிழுக் கும் அடியார் குழுவில் நின்ற சேந்தனார் **'மன்னுக தில்லை வளர்க நம் பக்தர்கள்'** எனத் தொடங்கும் 13 திருப்பாடல்களையுடைய திருப்பதிகம் பல்லாண்டு பாடிப் போற்றவே தேரும் வடம்பிடிக்காமலேயே நிலைக்கு வந்து சேர்ந்தது. இந்த அற்புதத்தைக் கண்டாரனைவரும் சேந்த னாரின் பேரன்பின் திறத்தைக் கண்டு நெஞ்சம் நெக்குருகி மகிழ்ந்தனர். இப்பதிகம் தவிர திருவீழிமிழலை, திருவாவடு துறை, திருவிடைக்கழி என்ற தலங்களுக்குரியனவாக **மூன்று** பதிகங்களையும் பாடியுள்ளார். **பண்டைப் பறைச் சேந்தன்**[16] என நம்பிகளின் கூற்றால் இவர் பறையர் வகுப்பைச் சேர்ந்தவர் என்பது பெறப்படும்.

16.

(7) **கருவூர்த்தேவர்:** இவர் ஒன்பதாந் திருமுறையில் பத்துப் பதிகங்களைப் பாடியவர்: இவை 103 பாடல்களைக் கொண் டவை. இவர் வேதம் ஓதும் வேதியர் குலத்தைச் சேர்ந்தவர். கொங்கு நாட்டுக் **கருவூரில்** அவதரித்து வாழ்ந்தவர். கையில் ஓட்டினை உண்கலனாக ஏந்திக் கொண்டு ஊர் தோறும் திரிந்து பிச்சையேற்று உண்ணும் எளிய வாழ்க்கை யினை மேற்கொண்டொழுகினவர். கங்கை கொண்ட சோழன் இவர் திருவாய்மலர்ந்தருளிய திருவிசைப்பாத் திருப்பதிகங்களை இறைவன் திருமுன்னர் அன்புடன் ஓதி வழிபடும் வாயிலாக இறைவனது திருவருளை நிரம்பப் பெற்று மன்னரெலாம் தன் ஆணை வழி அடங்கி ஒழுகச் செய்யும் வீறுடையவனாக விளங்கினான் என்பது வரலாறு. துறவற நெறியினை மேற்கொண்டொழுகி திரு நெறிய தமிழை வளர்த்த தவப் பெருஞ்செல்வர். இராச ராசசோழன், இராசேந்திர சோழன் இவர்களால் நன்கு மதித்துப் பாராட்டப் பெற்றவர்.

(8) **பூந்துருத்திநம்பிகாடநம்பி:** இவர் திருவையாற் றுக்கு அருகி லுள்ள **திருப்பூந்துருத்தியில்** அவதரித்தவர். **'காடன்'** என்ற இயற்பெயரையுடையவர் **'பூந்துருத்திக் காடன்'** என்று தம்மைக் குறிப்பிடுதலால் இச்செய்தி உறுதிப் படு கின்றது. ஆடவரில் சிறந்தோன் **'நம்பி'** என்ற பெயரால் வழங்கப் பெறுபவன். இச்சொல் இவர் பெயரின் முன்னும் பின்னும் இணைத்து வழங்கப் பெறுதலால் இவர் பாடிய **திருவிசைப்பாப்பதிகங்கள்** இரண்டும் திருவாரூரையும், தில்லைச் சிற்றம்பலவனையும் போற்றுவனவாக அமைந் துள்ளன.

(9) **கண்டராதித்தர்:** இவர் சோழர் குலத்துப் பிறந்து முடிவேந்தராய் ஆட்சி புரிந்தவர். **கண்டர்** என்பது சோழ மன்னர்க்குரிய பொதுப் பெயர். **ஆதித்தன்** என்பது இவரது இயற்பெயர். மதுரையும், ஈழமும் கொண்ட கோப்பர கேசரிவன் மராகிய முதற் பராந்தக சோழரது இரண்டாம்

மகனாகப் பிறந்தவர். திருச்சி மாவட்டத்தில் திருமழ பாடிக்கு மேற்கே ஒரு கல் தொலைவிலுள்ள **'கண்ட ராதித்த சதுர்வேதி மங்கலம்'** என்ற ஊர் இவரால் அமைக்கப் பெற்றதாகும். **கண்டராதித்தப் பேரேரி** என்ற நீர் நிலையும் இவரால் அமைக்கப்பெற்றது என்பதற்குக் கல்வெட்டுச் சான்று உள்ளது. இவருக்கு **வீரநாரணி, செம்பியன்** மாதேவி என்ற இரு மனைவியர். முன்னவர் இவர் முடி சூடுவதற்கு முன் மரித்தார். பின்னவர் பட்டத்தரசியாகத் திகழ்ந்து **மதுராந்தக தேவரான உத்தம சோழனை** மகனாகப் பெற்றவர். தில்லைக்கூத்தன்மீது **"மின்னாருருவ மேல்விளக்க"** என்ற முதற் குறிப்புடைய திருவிசைப்பா திருப்பதிகத்தை அருளிச் செய்தவர். சைவ சமயத்தைச் சார்ந்தவராயினும் நாடாளும் வேந்தர் என்ற முறையால் குடிமக்கள் மேற்கொண்டொழுகிய வைணவம், சமணம் முதலிய பிற சமயங்களையும் இகழாது நன்கு மதித்து ஆதரித்த சமயப் பொறை மிக்க சீலர்.

(10) **வேணாட்டடிகள்: 'வேணாடு'** என்பது திருவிதாங்கூர் பகுதிக்குரிய பழம் பெயர். செந்தமிழ் சேர் பன்னிரண்டு நாடுகளுள் இவ்வேணாடும் ஒன்று. இந்நிலப் பகுதியை ஆண்ட அரசர்கள் **'வேணாட்டடிகள்'** என்ற பெயரால் வழங்கப் பெறுவர் என்பது கல்வெட்டுச் சான்றுகளால் அறியக் கிடக்கின்றது. ஆகவே, திருவிசைப்பா ஆசிரியர் களுள் ஒருவராகிய வேணாட்டடிகள் என்பார் தென் திருவிதாங்கூர் பகுதியிலுள்ள வேணாட்டில் அரசர் குடும்பத்தில் பிறந்து இறைவனை இன்னிசைத் தமிழால் பரவிப் போற்றிய குறுநில மன்னராகக் கொள்ளல் பொருந்தும். ஒன்பதாந்திருமுறையில் இவர் பாடியதாக ஒரு திருப்பதிகமே உள்ளது. தில்லைச் சிற்றம்பலவனைப் போற்றுவதாக அமைந்த இத்திருப்பதிகத்தில் பத்துப் பாசுரங்கள் உள்ளன. இப்பாடல்களில் இவ்வாசிரியர்

கூத்தப் பெருமானைப் போற்றும் முறை படிப்போர் உள்ளத்தை உருக்கும் பான்மையது.

(11) திருவாலியமுதனார்: காவிரிக்கு வடகரையி லுள்ள உள்ள நாடுகளுள் ஒன்று ஆலிநாடு. இந்த நாட்டின் தலைநகர் **திருவாலி** என்பது[17]. இது சீகாழிக்கு மூன்றுகல் தொலைவில் உள்ளது. திருவாலி என்ற ஊரில் அவதரித்து **அமுதனார்** என்று பெயர் பெற்றமையால் **'திருவாலி யமுதனார்'** என்று வழங்கப்பெற்றனர். இவர் பார்ப்பனர் மரபினர். நான்மறைகளையும் நன்கு பயின்றவர். சோழ நாட்டின் வளமார்ந்த ஊராகிய மயிலாடுதுறையில் வாழ்ந்தவர். இது இவர்தம் திருப்பாடல்களில் வரும் சில தொடர்களால் அறியப் பெறும். இவர் வைணவராகத் தோன்றிப் பின்பு சிவபக்தியுடையவராகத் திகழ்ந்தார் என்ற செய்தி செவி வாயிலாகக் கேட்கப் பெறுவது. இவர் பாடிய ஒன்பதாம் திருமுறையில் உள்ள நான்கு பதிகங்களும் தில்லையம்பலத்தைப்பற்றியவை. இவற்றுள் **'மையன் மாதொரு கூறன்'** என்று தொடங்கும் பதிகம் கூத்தப் பெருமானைப் பாதாதி கேசமாகப் பாடப்பெற்றது. **'கோலமலர் நெடுங்கண்'** என்ற பதிகம் அகப்பொருள் துறையில் தலைவி கூற்றாக அமைந்தது. 'எம்பெருமானைக் காண்பது என்று கொலோ? எனவும், அவன் மலர்ப்பாதங் களைச் சேர்ந்தின்புறும் நாள் எந்நாளோ?' எனவும் இறைவனை நினைந்து கூறும் பரிவுரைகள் ஆசிரியரின் பேரன்பின் திறத்தை நன்கு புலப்படுத்துவனவாகும்.

(12) புருடோத்தம நம்பி: இவரைப் பற்றிய குறிப்புகள் ஒன்றும் கிடைக்கவில்லை. ஆயினும் 'மாசிலா மறை பல ஓதும் வண்புருடோத்தமன்' என்ற இவர்தம் பாடலொன்றின் தொடரால் இவருக்குப் பெற்றோர் இட்டபெயர்

---

17. வைணவ ஆழ்வார்களுள் ஒருவரான திருமங்கையாழ்வார் ஆண்ட பகுதியாகும்.

**'புருடோத்தமன்'** என்பதும், இவர் நான்மறைகளைப் பிழையற ஓதிய நாவினராகிய இவர் வேதியர் குலத்தில் அவதரித்தவர் என்பதும் நன்கு தெளியப்படும். இவர் வைணவ சமயத்திற் பிறந்து சிவபக்தராயினார் என்பது செவிவழிச் செய்தி. இவர், பாடியனவாக ஒன்பதாந் திருமுறையில் **இரண்டும்** தில்லைச் சிற்றம்பலத்தைப் பற்றியவை; இரண்டும் அந்தாதித் தொடை யில் அமைந்தவை.

(13) **சேதிராயர்:** இவர் சேதி நாட்டையாண்ட குறுநில மன்னர் குடும்பத்தில் அவதரித்தவராதலின் **'சேதிராயர்'** என்ற திருப்பெயரால் வழங்கப் பெறுகின்றார். சேதி நாடென்பது தென்னார்க்காடு மாவட்டத்தில் வடமேற்கிலமைந்த நிலப்பகுதி. இது **'மலையநாடு'**, **'மலநாடு'** எனவும் வழங்கப்பெறும். இந்நாட்டின் தலைநகர் **திருக்கோவலூர்**[18]. அறுபத்து மூவரில் ஒருவராகிய மெய்ப்பொருள்நாயனார் என்பவரும் இச்சேதி நாட்டையாண்ட குறுநில மன்னரேயாவர். அவர் பாடியதாகத் **திருவிசைப் பாப்பதிகம்** ஒன்றே காணப்பெறுகின்றது. இது கூத்தப் பெருமானைக் காதலித்த தலைமகள் கூற்றாக அமைந்தது. பத்துப் பாடல்கள் அமைந்த திருப்பதிகம் அந்தாதித் தொடையால் இயன்றது.

(ஊ) பத்தாம் திருமுறை:

(14) **திருமூலர்:** பத்தாம்திருமுறை எனப் போற்றப் பெறும் **'திருமந்திர மாலை'** எனப்படும் அருள் நூலை அருளிச் செய்தவர் சிவயோகியாகிய **திருமூல நாயனார்**. இப் பெருமகனாரை,

நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்

18. முதலாழ்வார் மூவரும் சந்தித்து முகுந்தனைத் தொழுத நாடு. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் தோன்றிய திருத்தலம்.

எனப்போற்றுவர் நம்பியாரூரர் தமது திருத்தொண்டத் தொகையில்,

திருக்கைலாயத்தில் நந்திதேவரது திருவருள் பெற்ற மாணாக்கர்களுள் ஒருவர் ஒரு சிவயோகி. அணிமா முதலிய எண்வகை சித்திகளும் கைவரப் பெற்றவர். இவர் அகத்தியருடன் சில நாள் தங்குவதற்கு விழைந்து தென் திசை நோக்கிப் புறப்படுகின்றார். வடக்கேயுள்ள திருக் கேதாரம், பசுபதி, நேபாளம் முதலிய திருத்தலங்களையும் தென்னாட்டிலுள்ள திருக்காளத்தி, திருவாலங்காடு, காஞ்சி, திருவதிகை, பெரும்பற்றப்புலியூர், திருவாவடுதுறை, முதலிய தலங்களைச் சேவித்துக் கொண்டு திருவாவடு துறையில் தங்கியிருந்தார்.

இத்தலத்தை அகன்று செல்லும் பொழுது காவிரிக் கரையிலுள்ள பசுக் கூட்டங்கள் கதறியழுவதைக் கண்டார். பார்ப்பனர்கள் வாழும் **சாத்தனூரில்** தொன்றுதொட்டு ஆனிரை மேய்க்கும் குடியிற் பிறந்த ஆயனாகிய மூலன் என்பான் அங்குத் தனியே வந்து பசுக்களை மேய்ப்பவன், பிறவிக்குக் காரணமாகிய நுகர்வினை முடிந்து இறந்து படுகின்றான்; பசுக்கள் உயிர் நீங்கிய உடலைச் சுற்றிச் சுழன்று வந்து மோப்பனவும், சுற்றுவனவுமாகி வருந்தின.

சிவயோகியார் இதனைக் கண்ணுற்று, பசுக்களின் துயரத்தை நீக்கக் கருதினார். இறையருளால் இந்த எண்ணம் தோன்றியது. தம்முடைய திருமேனியைப் பாதுகாவலான ஓரிடத்தில் மறைத்து வைத்து விட்டுக் கூடு விட்டுக் கூடு பாய்தல் (பரகாயப் பிரவேசம்) என்னும் பவன வழியாலே தமது உயிரை அவ்விடையனது உடலில் புகுமாறு செலுத்தி **திருமூலராக** எழுந்தார். பசுக்கள் யாவும் அவரது உடம்பினை நாத்தழும்ப நக்கி மோந்து கனைத்து மிகுந்த களிப்பினாலே வாலெடுத்துத் துள்ளிக்

கொண்டு தாம் விரும்பிய இடத்திற் சென்று மேயத் தொடங்கின.

மாலைப் பொழுது வந்ததும் பசுக்கள் தத்தம் கன்றுகளை நினைந்து தாமே மெல்ல நடந்து சாத்தனூரை அடைவன வாயின. இதனைக் கவனித்த நிலையில் சிவயோகியார் அவ்வூர் வழியில் தனியே நிற்பாராயினர், பொழுது சென்ற பின்னரும் கணவன் வீடு திரும்பவில்லையே என்று மனங் கவன்ற மூலனது துணைவி கணவனைத் தேடிக் கொண்டு வருபவள். சிவயோகியார் நின்ற இடத்தை அடைந்தாள். தனது கணவனது உடலில் தோன்றிய உணர்வு மாற்றத் தைக் கண்டு அவருக்கு ஏதோ தீங்கு நேர்ந்துள்ளது எனக் கருதி அவரைத் தம் இல்லத்திற்கு இட்டுச் செல்லும் கருத் துடன் அவர் திருமேனியைத் தொடுவதற்கு நெருங்கினாள். திருமூலராகிய சிவயோகியார் அவள் தம்மைத் தீண்ட வொண்ணாதவாறு தடுத்து நிறுத்தினார். அவள் தனது நிலையை எண்ணிப் புலம்பினாள். தமக்கு அவளுடன் எத்தகைய உறவும் இல்லையெனக் கூறி அவ்வூரில் பலரும் தங்கியிருந்த பொதுமடத்திற் புகுந்து சிவயோகத்தில் அமர்ந்து விட்டார்.

மூலன் மனைவி அன்றிரவு உறங்கவேயில்லை. மறுநாள் அவள் சில நல்லோர்களிடம் தனது நிலையை எடுத்துரைத் தாள். அவர்கள் திருமூலரை அணுகி நிலைமையை அறிந் தனர். அவர்கள் இனி ஏதும் பயன்படாது என மூலன் மனைவிக்கு எடுத்துரைத்தனர். அது கேட்ட அவள் துயரத் தால் மயக்கமுற்றாள். அருகிலிருந்தவர்கள் அவளைத்தேற்றி அவளது இல்லத்திற்கு இட்டுச் சென்றனர்.

மடத்தில் தங்கியிருந்த திருமூலர் யோகநிலை கலைந்து எழுந்து முதல் நாள் பசுக்கள் வந்த வழியே சென்று, தம் உடம்பினைச் சேமமாக வைத்த இடத்திற் சென்று பார்க்க அது காணப்பெறவில்லை. அது மறைந்த செயலை

மெய்யுணர்வால் தெளிந்தார். இறைவன் உயிர்கள் பால் வைத்த கருணையினால் அருளிய சிவாகமங்களின் அரும் பொருள்களை இந்நிலவுலகில் திருமூலரது வாக்கினால் தமிழில் வகுத்துரைக்கக் கருதிய திருவருள் திறத்தால் சிவயோகியரது முந்தைய உடம்பினை மறைப்பித் தருளினார். இதனைத் திருமூலர் தமது முற்றுணர்வினால் தெளிய உணர்ந்தார்.

தம்மைத் தொடர்ந்து வந்த ஆயர் குலத்தவர்க்கும் தமக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பதனை அவர் கட்கு விளக்க உரைத்தார். அவர்கள் தம்மை விட்டு நீங்கின பின்னர் சிவபெருமான் திருவடிகளைச் சிந்தித்த வண்ணம் அவ்விடத்தை விட்டு அகன்றார்.

திருவாவடுதுறை திருக்கோயிலை வந்தடைந்தார். அக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனை வணங்கி அத் திருக்கோயிலின் மேற்கில் மதிற்புறத்தேயுள்ள அரச மரத்தின் கீழ்த் தேவாசனத்தில் சிவயோகத்து அமர்ந்து தம் உள்ளக் கமலத்தில் வீற்றிருந்தருளும் அரும் பொருளா கிய **சிவபரம்** பொருளோடு ஐக்கியமாகி ஒன்றியிருந்தார்.

இங்ஙனம் சிவயோக நிலையில் அமர்ந்திருந்த திருமூல நாயனார் இவ்வுலகத்தார் உய்யும் பொருட்டு ஞானம், யோகம், சரியை, கிரியை என்னும் நால்வகை நன்னெறி களும் விரிந்து விளங்கும் நல்ல திருமந்திரமாகிய பனுவலை **'ஒன்றவன் தானே'** என்ற முதற்குறிப்பினையுடைய, முதற்பாடலைத் தொடங்கி ஓராண்டுக்கு ஒரு திருப்பாடல் வீதம் மூவாயிரம் ஆண்டுகள் இவ்வுலகில் சிவயோக நிலையில் அமர்ந்தவராக மூவாயிரம் திருப்பாடல்களை அருளிச்செய்தார். இந்தத் தமிழ் மூவாயிரமாகிய இத் திருமந்திரத்திருமுறையினை நிறைவு செய்து சிவபெருமான் திருவருளால் திருக்கயிலையை அடைந்து அம்முதல்வ னுடைய திருவடி நிழலில் என்றும் பிரியாதுறையும்

பேரின்பப் பெருவாழ்வினைப் பெற்று இனிதிருந்தார். திருமூலர் அருளிய **'திருமந்திரமாலை'** நம்மிடம் நிலைபெற்று ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் நால்வகைப் பொருள்கள் மலர்ந்த மொழிமாலையாகத் திகழ்கின்றது.

(எ) பதினோராந்திருமுறை

இதில் உள்ள நூல்களை அருளியவர்கள் பன்னிருவர்:

(15) திருவாலவாயுடையார்: திருவாலவாய் என்பது மதுரையில் சிவபெருமானுக்கு அமைந்த திருக்கோயில். எல்லாம் வல்ல இறைவன் அத்திருக்கோயிலில் எழுந்தருளியிருந்து அடியார்கள் அருள் சுரத்தல் பற்றி அப்பெருமானுக்குத் **திருவாலவாயுடையார்** என்பது திருப்பெயராயிற்று. இவர் சங்கப்புலவர்களுள் ஒருவராக வீற்றிருந்தார். **'கொங்கு தேர் வாழ்க்கை'** என்ற செழும் பாடலையும், களவியலை விளக்கும் அறுபது சூத்திரங்களடங்கிய அகப்பொருள் இலக்கண நூலையும், பாணபத்திரர் பொருட்டு **'மதிமலி புரிசை'** என்ற திருமுகப் பாசுரத்தையும் எழுதியவர்.

(16) காரைக்காலம்மையார்: சோழநாட்டில் காரைக்கால் ஒரு கடல் துறைப்பட்டினம். அப்பேரூரில் **தனதத்தன்** என்ற வணிகப் பெருஞ்செல்வனுக்குத் திருமகளாகத் தோன்றிய பெண்மகவுக்குப் **புனிதவதியார்** என்ற திருப்பெயரிட்டார் தந்தையார். சிறுவயது முதற்கொண்டே சிவபெருமானுக்குத் தொண்டு பூண்டொழுகும் அன்புரிமையும், சிவனடியார்களைச் சிவன் எனவே தெளிந்து வழிபடுந் திறமும் வாய்க்கப் பெற்றவராய்த் திகழ்ந்தார். மணப் பருவமும் எய்தினார்.

நாகப்பட்டினத்தில் வாழ்ந்த **நிதிபதி** என்ற வணிகப் பெருமகன் திருமகன் **பரமதத்தனுக்குப்** புனிதவதியாரைத்

திருமணம் செய்வித்தனர். திருமணம் காரைக்காலில் நடைபெற்றது. தனதத்தனுக்குப் புனிதவதியாரைத் தவிர வேறு பிள்ளைப்பேறின்மையால் மருமகனையும் தன் ஊரிலேயே வைத்துக் கொண்டான். பரமதத்தனுக்குத் தனி வீடு அமைத்துப் பெரும் பொருளும் நல்கி வணிகத் தொழிலில் ஈடுபடச் செய்தான்.

மாமன் நல்கிய பெரும் பொருளை முதலாகக் கொண்டு பரமதத்தன் அதனைப் பன்மடங்கு பெருக்கி வாணிகத் துறையில் மேம்படுவானாயினன். அவன் இல்லத்தரசி புனிதவதியாரின் சிவபெருமான் மீது கொண்ட அன்பு மேன்மேற் பெருகியது. சிவனடியார்கட்குத் திருவமுது அளித்தும், வேண்டும் பொருள் கொடுத்தும் மனைத்தக்க மாண்புடையாளாகத் திகழ்ந்தும், தமக்கும் தம் துணைவர்க்கும் பெரும் புகழ் பெருக மனையறம் நிகழ்த்தி வந்தார்.

ஒருநாள் பரமதத்தனைக் காண வந்தவர்களில் சிலர் அவனுக்கு இரண்டு மாங்கனிகளை அளித்துச் சென்றனர். அவர்கள் கோரி வந்த செயலை முடித்து மாங்கனிகளை இல்லத்துக்கு அனுப்பி வைத்தனன். இந்நிலையில் சிவனடியார் ஒருவர் பசியால் வருந்தி அவ்வில்லத்திற்கு ஏகினார். அப்பொழுது திருவமுது தயார் நிலையில் இருந்தது; கறியமுது தயாராகவில்லை. அடியாரின் பசியைப் போக்க நினைத்த புனிதவதியார் அவருக்குத் திருவமுது படைத்து கறியமுதிற்குப் பதிலாக தம் கணவன் அனுப்பிய மாங்கனிகளில் ஒன்றை வழங்கினார். பசி தீர்ந்த சிவனடியார் உளம் மகிழ்ந்து புனிதவதியாரை வாழ்த்திச் சென்றார்.

நண்பகலில் வீடு திரும்பிய கணவனுக்குத் திருவமுது, கறியமுது படைத்து எஞ்சியிருந்த மாங்கனியையும் வழங்கினார். அக்கனியை நுகர்ந்த பரமதத்தன் மற்றொரு பழத்தையும் வைக்குமாறு பணிக்க, அம்மையாருக்குச் சிவபெருமான் அருளால் ஒரு கனி அவர்தம் கையகத்ததாக.

அதனைக் கொணர்ந்து உண்கலத்தில் படைத்தார். அதனை உண்டநிலையில், அதன் வேறுபாடு புலனாக, அது வந்த வரலாற்றை வினவினார். முதலில் தயங்கிய அம்மையார் பின்னர் உண்மையை விளங்க உரைத்தார். பரமதத்தன் தன் துணைவியார் குறித்த நிகழ்ச்சியைத் தெரிந்து தெளிதற்குரிய ஆற்றல் இல்லாதவனாய் அதுபோன்று இன்னொரு கனியைத் தருமாறு பணித்தான். அம்மையாருக்குச் சிவனருளால் கனி கிடைக்க, அதனை வழங்கினார். கணவன் அதனை வியப்புற்று வாங்கிய சிறிது நேரத்தில் மறைந்தது. அது கண்டு அஞ்சிய பரமதத்தன் மனத் தடுமாற்றம் எய்தி தன் துணைவியாரை வேறொரு தெய்வம் என்று கருதினான். அவரைப் பிரிந்து வாழ வேண்டும் என்று விரும்பினான். தன் கருத்தைப் பிறருக்கு வெளிப் படுத்தாமல் மனைவி என்னும் உறவுத் தொடர்பின்றி ஒழுகினான்.

இக்கருத்துடைய பரமதத்தன் கடல் கடந்து வாணிகம் செய்வதாகக் கூறி வெளிநாடு சென்றான். திரும்பும் போது பாண்டி நாட்டுத் துறைமுகப்பட்டினம் ஒன்றை அடைந் தான். இரண்டாம் முறையாக மணந்து கொண்ட மனைவி வயிற்றில் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்குத் தான் தெய்வமெனக் கருதிய முதல் மனைவியின் பெயராகிய **'புனிதவதி'** என்ற பெயரிட்டு வளர்த்து வந்தான்.

பாண்டிநாட்டில் வாழ்ந்து வருவதைக் கேள்வியுற்ற சுற்றத்தார்கள் அவனது நிலையறிந்து வருத்தமுற்றனர். புனிதவதியாரை அவனிடம் கொண்டு சென்றனர். இதனைக் கேள்வியுற்ற பரமதத்தன் தன் இரண்டாம் மனைவி மகளுடன் புனிதவதியாருக்குத் தண்டம் சமர்ப் பித்து வணங்கினர். புனிதவதியார் அச்சமோடு ஒதுங்கி நின்றார். இதனைக் கண்ட சுற்றத்தினர் திகைத்து நின்றனர். கணவன் உள்ளக் கிடக்கையை அறிந்த புனிதவதியார்

சிவபெருமானை வேண்டி **பேய் வடிவம்** பெற்றார். அதனைக் கண்டு சுற்றத்தார் அகன்று போயினர்.

பேய் வடிவங் கொண்ட அம்மையார் கயிலை சென்று அம்மையப்பரை வணங்கினார். அவர் கேட்டவற்றை யெல்லாம் கயிலைநாதன் அவருக்கு அருளி **திருவாலங் காட்டில்** வருமாறு, பணிக்க அங்ஙனமே அம்மையாரும் ஆலங்காட்டு அடிகளது தூக்கிய திருவடிகளின் கீழ் என்றும் நீங்காது உறைந்து பெருமானைப் பாடிப் போற்றும் பெருமை யைப் பெற்றார் என்பது சேக்கிழார் பெருமான் கூறும் வரலாறு (பெரியபுராணத்தில்).

(17) **ஐயடிகள்காடவர்கோன்:** இவர் பல்லவர் குலத்தில் தோன்றியவர். நீதிநெறியினை மேற்கொண்டு செவ்விய நெறியில் ஆட்சிபுரிந்தவர். அருள் நெறியாக சைவத் திருநெறியை மேற்கொண்டொழுகியவர். ஆட்சிக் கடமை தாம் மேற்கொண்டுள்ள சிவநெறிக்குத் தடையாய் இருக்கு மெனக் கருதி, அரசுரிமையைத் தன் மகன்பால் ஒப்படைத்து விட்டுச் சிவநெறித் திருத்தொண்டினையே விரும்பி மேற்கொண்டவர். அண்டர்பிரான் சிவபெருமான் திருக்கோயில் கொண்டுள்ள திருத்தலங்களையும் ஒவ்வொரு வெண்பாவினால் பாடிப் போற்றும் பேரார்வம் கொண்டவர். முதன்முதலாகப் பெரும்பற்றப்புலியூராகிய **தில்லை**யடைந்து திருச்சிற்றம்பலமாகிய ஞான வெளியிலே கூத்தியற்றும் அம்பலவாணனின் திருக்கூத்தினைக் கண்டு மகிழ்ந்தார். தாம் பாடிய செந்தமிழ் வெண்பாவால் அப் பெருமானை அர்ச்சித்துப் போற்றினார். பின்னர் ஏனைய தலங்களையும் பணிந்து திருத்தொண்டு செய்து அத்திருத் தலங்களையும் ஒவ்வொரு வெண்பாவால் பாடிப் போற்றி னார். இத்தகைய பணிகளை நெடுங்காலம் செய்திருந்து பின்னர் சிவலோகத்து இறைபணி புரியும் அடியார் களுடன் கூடிப் பரமர் திருவடி நிழலின்கீழ் அமர்ந்து

ஈறிலாப் பேரின்ப வாழ்வினைப் பெற்றார் என்பது வரலாறு. இவ்வரலாற்றினை சேக்கிழார் பெருமான் தம் திருத்தொண்டர் புராணத்தில் விரித்தோதியுள்ளார்.

(18) **சேரமான் பெருமாள் நாயனார்:** மலைநாட்டில் **கொடுங் கோளூரில்** சேரர் குடியில் பிறந்தவர் பெருமாக் கோதையார். இவருக்குக் **கழறிற்றறிவார்** என்ற மற்றொரு திருநாமமும் உண்டு. அஃறிணை உயிர்களும் உயர்திணை மக்களும் கூறும் சொற்பொருளையும் உய்த்துணரும் நுண்ணறிவினைப் பெற்றவராதலின் **'கழறிற்றறிவார்'** என்பது காரணப் பெயராயிற்று. 'கார்கொண்ட கொடைக் கழறிற்றறிவார்க்கும் அடியேன்' என்று தம் திருத்தொண்டத் தொகையில் போற்றப் பெற்றவர் இப்பெரியார். இவருடைய வரலாறு சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாற்றுடன் பிரிவின்றி இணைந்துள்ளது![19]

இவர் மலை நாட்டில் கொடுங்கோளூரில் சேரர் குடியில் அவதரித்தார். அரசர் குடியில் பிறந்த இவர் சிவபெருமானின் திருவடிகளையே போற்றிப் பரவும் கருத்துடையவராயினார். **திருவஞ்சைக்களம்** என்னும் திருக்கோயிலையடைந்து அங்கு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு வழிபாடு புரிந்து வந்தார். இந்நிலையில் மலைநாட்டை ஆட்சி புரிந்த செங்கோற் பொறையன் என்ற சேரவேந்தன் அரச பதவியினைத் துறந்து தவஞ் செய்தற் பொருட்டுத் தவவனத்தினைச் சார்ந்தான்.

அமைச்சர் பெருமக்கள் ஒன்று சேர்ந்து திருவஞ்சைக் களம் போந்து அரசுரிமையை ஏற்குமாறு திருமாக்கோதையாரை வேண்டினர். கோதையாரும் சேரநாட்டினை

19. இதனைச் சேக்கிழார் அடிகள் தமது திருத்தொண்டர் புராணத்தில் கழறிற்றறிவார் நாயனார் புராணம் (37) வெள்ளானைச் சருக்கம் என்ற இரு பகுதிகளிலும் விரித்துக் கூறியுள்ளதனால் அறியலாம்.

ஆட்சி புரியும் பொறுப்பு சிவபெருமானின் திருவுளக் குறிப்பு என்பதை உணர்ந்து அமைச்சர் பெருமக்களின் வேண்டுகோளுக்கு இசைந்தார். உரிய நன்னாளில் இவ்வுலகத்தையும் மறுமை யுலகத்தையும் ஒருசேர ஆட்சி புரியும் பெருவேந்தராயினர்.

ஒருநாள் பட்டத்து யானைமீது அரச மரியாதை களுடன் பவனி வரும் போது உவர்மண் பொதியைத் தோளில் சமந்து வரும் வண்ணான் ஒருவன் எதிர்ப் பட்டான். மழையில் நனைந்து வந்த அவன் திருமேனி உவர்மண் படிந்து வெளுத்திருந்தபடியால் அவனைத் திருநீறு பூசிய சிவனடியார் எனக் கருதி யானையினின்றும் இறங்கி அவனை வணங்கி னார். சிந்தை கலங்கி அச்சமுற்ற வண்ணான் சேரமானைப் பணிந்து 'அடியேன் தங்கள் அடித் தொழில் புரியும் வண்ணான்' என்றான். மன்னர் பிரானும் 'அடியேன் அடிச் சேரன்' என்று மறுமொழி பகர்ந்து, 'தாங்கள் திருக்கோலம் சிவனடியாரை நினைக்கச் செய்தது. வருந்தாது ஏகுவீர்' என்று வண்ணானுக்குத் தேறுதலுரை பகர்ந்து அனுப்புவாராயினர்.[20] இதனால் சேரமான் பெருமாளுக்கு **'வண்ணானைக் கும்பிட்டார்'** என்ற திருப்பெயரும் வழங்கலாயிற்று.

சேரசோழ பாண்டியரெனச் சிறப்பித்துப் போற்றும் நிலையில் தமிழகத்தின் ஒற்றுமை வளர ஆட்சிபுரியும் கோதையார் தாம் பெற்ற எல்லா வைபவங்களும் பிறவும் எல்லாமாக விளங்குவது தில்லைச் சிற்றம்பலவனின் திருவடித் தாமரை எனத் தெளிந்தார். கூத்தப்பிரானின் திருவடிகளை நாடோறும் வழிபடுதலைத் தமக்குரிய கடமையாக மேற்கொண்டார். கோதையாரின் அன்பு நிறைந்த வழிபாட்டினை ஏற்றுக் கொண்ட கூத்தப்பிரான் தமது திருவடிச் சிலம்பின் ஒலியினைச் சேரமான்

20. பதினோராந்திருமுறை திருத்தொண்டர் திருவந்தாதி - 44

செவிகுளிரக் கேட்டு இன்புறும் வண்ணம் ஒலிப்பித்தலை வழக்கமாகக் கொண்டருளினார்.

வழக்கமாகக் கேட்கும் சிலம்பொலி ஒருநாள் கேட்க வில்லை. இதனால் உடைவாளையுருவி உயிரைப் போக்கிக் கொள்ள முயலுகையில், அருட்கடலாகிய கூத்தப் பெரு மான் விரைந்து, தமது சிலம்பொலி சேரமான் பெருமாள் திருச்செவியில் கேட்கும் வண்ணம் மிகவும் ஒலிக்கச் செய்தார். சேரமான் உடைவாளைக் கீழே எறிந்து தலை மேல் கை குவித்த வண்ணம் கூத்தப்பெருமானை வணங்கி ஒலி தவிர்த்ததற்குக் காரணம் கேட்க, மறைந்து நின்றருளிய பெருமான் சுந்தரர் பதிகத்தால் மயங்கி நின்றமையால் உரிய காலத்தில் ஒலிக்கத் தவறியதாகக் கூறினார்.

ஒருநாள் அடியார்க்கு அருள்புரியும் அம்பலவனையும், அவனது ஆடல் கண்டு மகிழ்ந்த வன்றொண்டரையும் வழிபடுதல் வேண்டுமென சோழநாட்டிற்குச் செல்ல விரும்பினார். அஞ்சைக்கள அப்பனை வழிபட்டுப் பயணத் தைத் தொடங்கினார். தில்லை மூதூரை அடையும் போது தில்லைவாழ் அந்தணர்களும், அடியார்களும் எதிர் கொண்டு வரவேற்றனர். கூத்தப் பெருமானை வணங்கி **'பொன்வண்ணத்தந்தாதி'** பாடி கூத்தப் பெருமானைப் போற்றினார்.

நம்பியாரூரரைக் கண்டு வணங்குவதற்குத் திருவாரூரை அடைந்தார். சேரமான்பெருமாளது வருகையை அறிந்த நம்பியாரூரர் சிவனடிகளுடன் அவரை எதிர்கொண் டழைத்தார். நம்பியாரூரரைக் கண்ட சேர வேந்தர் நில மிசை வீழ்ந்திறைஞ்சினார். இருவரும் அன்பினால் அள வளாவி மகிழ்ந்தனர். இருவரும் திருவாரூர்க் கோயிலை அடைந்து, அடியார்கள் வீற்றிருக்கும் தேவாசிரிய மண்டபத்தைப் பணிந்து, திருக்கோயிலை வலம் வந்து பூங் கோயிலில் அமர்ந்துள்ள பெருமானை நிலமிசை பலமுறை

விழுந்திறைஞ்சினார்; புற்றிடங் கொண்ட பெருமானைப் போற்றி **'திருமும் மணிக்கோவை'** என்னும் செஞ்சொல் மாலை புனைந்து ஏத்தினார் சேரமான்பெருமாள். இறைவனும் அதனை ஏற்றருளினார்.

இருவரும் பாண்டிநாடு போந்தனர். சேரமான் பெருமாள் தமக்கு 'மதிமலிபுரிசை' திருமுகம் பாடியனுப்பியருளிய திருவாலவாய்ப் பெருமானைப் போற்றி வணங்கினார். பாண்டியனும் பாண்டியன் மகளை மணந்து வேட்டகத்தில் தங்கியிருந்த சோழனும் இரு பெருமக்களையும் எதிர்கொண்டழைத்து மகிழ்ந்தனர். பாண்டியன் இருவரையும் தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்று உபசரித்து மகிழ்ந்தனன்.

பின்னர் இருவரும் திருவாரூர் திரும்பி சில நாட்களுக்குப் பின்னர் இருவரும் மலைநாட்டிலுள்ள கொடுங்கோளூரை அடைந்தனர். இருவரும் அளவளாவி மகிழ்ந்தனர். இருவரும் மீண்டும் திருவாரூர் திரும்பினர். சின்னாட்கள் கழித்து சேரமான்பெருமாள் விடை பெற்றுத் தம்மூர் திரும்பினார். தம் தோழராகிய நம்பியாரூரரை மறவாத சிந்தையுடன் மலை நாட்டை ஆட்சி புரிந்திருந்தார்.

நெடுநாட்களான பின் சுந்தரர் மீண்டும் கொடுங்கோளூருக்கு வந்து தம் தோழராகிய சேரமான் பெருமாளுடன் அளவளாவி மகிழ்ந்திருந்தார். ஒருநாள் சேரமான் பெருமாள் திருமஞ்சன சாலையில் நீராடிக் கொண்டிருந்த பொழுது நம்பியாரூரர் **திருவஞ்சைக்களத்தில்** கோயில் கொண்டிருக்கும் இறைவனை வழிபடச் செல்கின்றார். தாம் பூவுலகில் வாழ வேண்டிய நாட்கள் முடிவெய்தும் நிலை வருகின்றது. **'தலைக்குத் தலை'** (7.4) என்ற முதற்குறிப்புடைய பதிகத்தைப் போற்றி நிற்கின்றார். சிவபெருமான் சுந்தரரை அழைத்து வருமாறு வெள்ளை

யானையுடன் அயன் முதலிய தேவர்களைத் திருவஞ்சைக் களத்திற்கு அனுப்பியருளுகின்றார். வெள்ளை யானை யுடன் வந்த தேவர்கள் நம்பியாரூரரை வணங்கி நின்று “ஐயனே, தாங்கள் இவ்வெள்ளை யானையின்மீது அமர்ந்து திருக்கைலைக்கு எழுந்தருள வேண்டும் என்பது சிவபெருமானின் அருளிப் பாடாகும் என்று விண்ணப்பிக் கின்றனர்.

**கயிலைப்பயணம்:** நம்பியாரூரர் செய்வதொன்று அறியாது தம்மை மறந்த நிலையில் அந்த அருளாணையினை விரைந்து ஏற்றுக் கொள்ளுகின்றார். வானவர் பூமழை பொழிந்திட யானையுடன் வந்த தேவர்கள் தம்பிரான் தோழரை வலம் வந்து வணங்கி வெள்ளை யானையின் மீது அமர்த்துகின்றனர். யானையின்மீது அமர்ந்த வன் றொண்டர் தம்முடைய உயிர்த்தோழரும் மன்னுயிர்கள் சாற்றும் மாற்றங்களையெல்லாம் உள்ளவாறு உய்த்துணர வல்ல திருவருட் செல்வருமான சேரமான்பெருமாளைச் சிந்தித்துக் கொண்டு கயிலையை நோக்கிச் செல்வராயினர்.

இவ்வாறு தம் உயிர்த் தோழராகிய நம்பியாரூரர் தம்மை நினைந்து செல்லும் பேரன்பின் திறத்தைத் திருவருளாற்ற லால் விரைந்துணர்ந்த கழ்றிற்றறிவார் அருகில் நின்ற குதிரையின்மீது இவர்ந்து திருவஞ்சைக்களத்துத் திருக் கோயிலுக்கு விரைந்து சென்றார். வெள்ளை யானையின் மீது அமர்ந்து விசும்பிற்குச் செல்லும் தம் தோழரைக் கண்டார். தமது குதிரையின் செவியில் ஐந்தெழுத்தினை உபதேசித்தார். உடனே குதிரையும் விண்ணிற்கு ஏகி வன்தொண்டர் ஏறிச் செல்லும் வெள்ளை யானையை வலம் வந்து அதற்கு முன்பாகச் சென்றது.

சேரமான்பெருமாளைப் பின் தொடர்ந்த படைவீரர்கள் குதிரை மீது செல்லும் தம் வேந்தர் பெருமானைக் கண் ணுக்குப் புலப்படும் எல்லை வரையிற் கண்டு பின்னர்க்

*காணப்பெறாது வருத்தமுற்றனர். தம் வேந்தர் பெருமானைத் தொடர்ந்து செல்ல வேண்டுமென்ற மனத்திட்பமுடையவராக உடல் வாளினால் தம் உடலை வெட்டி வீழ்த்தி வீர யாக்கையைப் பெற்று விசும்பின் மீதெழுந்து தம் அரசர் பெருமானைச் சேவித்துச் சென்றனர்.*

*சேரமான்பெருமாளும் நம்பியாரூரரும் திருக்கயிலாயத்தின் தெற்கு வாயிலை அணுகித் தத்தம் வாகனங்களினின்றும் இழிந்தனர். பின்னர் வாயில்கள் பலவற்றையும் கடந்து திருவணுக்கத் திருவாயிலை அடைந்தனர். சேரமான் பெருமாள் உள்ளே புக அனுமதியின்றி புறத்தே நின்றார். உள்ளே சென்ற சுந்தரர் சிவபெருமானைப் பணிந்து எழுந்தார். தம் தோழரின் வருகையை அறிவிக்கவே, சிவபெருமான் நந்தி தேவரை அனுப்பி சேரமானை இட்டு வந்தார்.*

*சேரமான்பெருமாள் இறைவன் திருமுன்பு பணிந்து நின்றார். தாம் அவரைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடியுள்ள **'திருவுலாப்புறம்'** என்ற செந்தமிழ்ப் பனுவலை அவர் திருமுன் சமர்ப்பித்தார். பெருமான் கட்டளைப்படி அரங்கேற்றவும் செய்தார். இறைவனும் அதனை அகங்குளிர ஏற்றுக்கொண்டார். பின்னர் இறைவன் கட்டளைப்படி நம்பி யாரூரர் அணுக்கத் தொண்டு புரியும் ஆலால சுந்தரராகவும், சேரமான்பெருமாள் சிவகணத் தலைவராகவும் திருத்தொண்டு புரிவாராயினர்.*

*சேரமான் பெருமாள் பாடிய **'திருக்கயிலாய ஞான உலாவை'** உடனிருந்து கேட்ட **மாசாத்தனார்** அத்தெய்வப்பனுவலை உளத்துட் கொண்டு சோழநாட்டிலுள்ள திருப்பிட வூரிலே வெளிப்படச் சொல்லித் தமிழகத்தில் வழங்கச் செய்கின்றார்.[21]*

---

21. இந்த வரலாறு திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழாரால் எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.

(19) நக்கீரதேவநாயனார்: சங்ககால நக்கீரர் திருமுருகாற்றுப் படையைப் பாடியவர். நக்கீரதேவநாயனார் என்பவர் பதினோராந்திருமுறையிலுள்ள **ஒன்பது** பிரபந்தங்களைப் பாடியவர். இருவர் பாடிய இலக்கியங்களையும் ஒப்பிட்டு நோக்கினால், முன்னவரின் இலக்கியத்தில் வடசொற்கள் ஆட்சி குறைவு; பின்னவரின் இலக்கியங்களில் அவை அதிகமாகப் பயின்று வருகின்றன.

நக்கீரதேவநாயனார் பிறந்த நாடு ஊர், குலம், பெற்ற தாய் தந்தையர் இன்னார் என்பது முதலிய வாழ்க்கை வரலாற்றினைப் பற்றித் தெளிவாகத் தெளிந்து கொள்ளுதற் குரிய சான்றுகள் கிடைக்கவில்லை. நக்கீரதேவர் என இவருக்கு வழங்கும் பெயர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரராகிய பழைய சங்கப் புலவரது பெயரை யொட்டி இவருக்குப் பெற்றோரால் இடப் பெற்று வழங்கிய தெனத் தெரிகின்றது. இதுபோலவே இப்பதினோராந் திருமுறையில் குறிக்கப்பெற்ற கல்லாடதேவர், கபிலதேவர், பரணதேவர் என வரும் பெயர்களும் கடைச்சங்கப் புலவர் களாகிய கல்லாடர், கபிலர், பரணர் என்னும் பெருமக் களை நினைவு கூர்தற் பொருட்டு அவர்தம் பெற்றோர் களால் இடப்பெற்று வழங்குவன என்றே கொள்ளத்தக்கன.

இளமைப் பருவத்தே நக்கீரர், கபிலர், கல்லாடர், பரணர் எனச் சங்கப் புலவர்களின் பெயர்களால் வழங்கப் பெற்று வந்த இவர்கள் திருவருட் புலமையில் சிறந்து இப்பதி னோராந் திருமுறையிலுள்ள பிரபந்தங்களைப் பாடிய காலத்தில் தெய்வத் தன்மையை விளக்குதற்குரிய **'தேவர்'**[22] என்னும் சிறப்பினையும் பெற்று, நக்கீரதேவர், கல்லாட

22. இக்காலக் கட்சி அரசியல் தலைவர் பெயர்களை இளைஞர் களில் பலர் சூட்டிக் கொண்டு 'காமராஜ்', 'கருணாநிதி', 'அண்ணாத்துரை', 'அன்பழகன்', 'நெடுஞ்செழியன்' என்பன போன்ற பெயர்களால் விளங்குவது ஈண்டு நினைத்தல் தகும்.

தேவர், கபிலதேவர், பரண தேவர் என உலக மக்களால் வழங்கப்பெற்றனர் எனக் கொள்ளுதல் ஏற்புடைத்தாகும் என்று கருதலாம்.

தேவார ஆசிரியர் காலத்திற்குப் பின் தோன்றிய இப் பெருமக்கள் பண்டை நாளில் வாழ்ந்த சங்கப் புலவர்களின் பெயர்களைத் தமக்குரியனவாகக் கொண்டு திகழ்தலை நோக்குங்கால் இவர்கள் வாழ்ந்த காலப் பகுதியில் தமிழ் மக்களிடையே சங்கப்புலவர்கள் செய்த தமிழ்த்தொண்டு பற்றிய மனவெழுச்சி தோன்றியதென்பதும், தம் மக்களுக் கும் பண்டைத் தமிழ் மக்களின் பெயரை இட்டு வழங்கு முகமாக அப்புலவர் பெருமக்களது புலமைத் திறத்தில் தம் மக்களை ஈடுபடுத்தல் வேண்டும் என்னும் பெருவேட்கை அக்காலத்தில் தமிழ் மக்களிடையே நிலவத் தொடங்கியது என்பதும் நன்கு புலனாகின்றன.

(20) கல்லாடதேவநாயனார்: பதினோராந் திருமுறை ஆசிரியர்களுள் இவர் ஒருவர். கல்லாடர் என்னும் பெயர் கடைச் சங்கப் புலவர் ஒருவரையும், பிற்காலப் புலவர் சிலரையும் குறித்து வழங்கக் காண்கிறோம்.

கல்லாடனார் என்ற சங்கப் புலவர் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடியவர். பொறையாற்றுக் கிழான், அம்பர் கிழான், அருவந்தை என்னும் சோழநாட்டு வள்ளல்களால் ஆதரிக்கப் பெற்றவன். இவர் பாடியனவாக சங்கத்தொகை நூல்கள் பதினான்கு பாடல்கள் உள்ளன. பதினோராந் திருமுறை ஆசிரியராகிய கல்லாடதேவரும், **கல்லாடம்** என்னும் அகப் பொருட்பாடற் கோவையைப் பாடிய கல்லாடரும், தொல்காப்பியச் சொல்லதிகார உரையாசிரி யர்களுள் ஒருவராகிய கல்லாடர் என்பவரும், கடைச் சங்கப் புலவராகிய கல்லாடர் பெயரைப் புனைந்து வாழ்ந்த பிற்காலப் புலவர்களாவர். தமிழ் இலக்கியத்

துறையில் கல்லாடர் என்னும் பெயருடன் பேசப் பெறுவோர் இவண் காட்டிய இந்த நால்வருமேயாவர்.

கடைச்சங்கப் புலவரான கல்லாடனாரது மொழி நடைக்கும் அவரது பெயர் தாங்கிய ஏனைய மூவரது மொழி நடைக்கும் வேற்றுமை பெரிதாக உள்ளது. ஆகவே சங்கப் புலவராகிய கல்லாடனார் ஏனைக் கல்லாடனார் மூவருக்கும் நெடுங்காலம் முற்பட்டவர் என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்த கொள்கையாகும். கல்லாடதேவ நாயனார் பாடியதாகப் பதினோராந்திருமுறையில் தொகுக்கப் பெற்றுள்ள **'திருக்கண்ணப்ப தேவர் திருமறம்'** என்ற பிரபந்தத்தையும் கல்லாடர் பாடிய **'கல்லாடம்'** என்ற நூலையும் ஒப்புநோக்குங்கால் அவ்விரு நூல்களும் மொழி நடையில் சிறிது வேறுபட்டிருத்தல் புலனாகும். இதனாலும் கல்லாட தேவநாயனாரும் கல்லாட நூலாசிரியரும் ஒருவரல்லர் என்பது உறுதிப் படுகின்றது.

(21) கபிலதேவநாயனார்: பதினோராந் திருமுறை ஆசிரியர்களுள் ஒருவராகிய இவரும், கடைச் சங்கப் புலவராகிய கபிலரும் ஒருவரே எனக் கருதுவாரும் உளர். இது தவறான கருத்து என்பது சில காரணங்களால் உறுதிப் படுகின்றது.

(i) இருவருடைய பாடல்களின் நடைவேற்றுமை தெளிவாகக் காண முடிகின்றது. கபிலதேவநாயனார் பாடல்களில் வடசொற்களும், பிற்காலச் சொல் வழக்குகளும், புராணச் செய்திகளும் இடம் பெற்றுள்ளன.

(ii) பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய சங்க நூல்களில் சிவபெருமானின் மகனாகப் போற்றப் பெறும் குறிஞ்சி நிலக்கடவுளாகிய முருகப் பெருமான் இடம் பெற்றிருக்கின்றார். யானைமுகக்கடவுளுக்கு அங்கு இடம்

காணப்பெறவில்லை. அதாவது விநாயகர் வழிபாடு அவண் கூறப் பெறவில்லை. இவ்வழிபாடு கி.பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ்நாட்டில் இடம் பெற்றிருத்தல் வேண்டும் என்பது வரலாற்றாய் வாளர்களின் துணிபு.

(iii) கடைச் சங்ககாலத்தின் 'கட்டளைக் கலித்துறை' என்னும் செய்யுள் வகை. இல்லாத புதிய யாப்பாகும். கபிலதேவ நாயனாரின் இரட்டை மணிமாலையில் புதிய யாப்பாகிய கட்டளைக் கலித்துறையும் பழைய யாப்பாகிய வெண்பாவும் காணப்பெறுகின்றன.

(iv) கபிலதேவ நாயனார் பாடல்களில் அவருக்குக் காலத்தால் முற்பட்ட காரைக்கால் அம்மையார், திருநாவுக்கரசர் முதலிய ஏனைத் திருமுறையாசிரியர்களின் திருப்பாடல்களின் சொற்பொருள், தலங்கள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

இக்குறிப்புகளை நோக்குமிடத்து கபிலதேவநாயனார் கடைச்சங்கப் புலவராகிய கபிலர் அல்லர் என்பதும் அப்புலவர் பெருமானது பெயரைத் தமக்குரிய பெயராகப் பெற்றுக் கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த திருவருட் செல்வர் என்பதும் இனிது புலனாகும்.

இந்த ஆசிரியர் பிறந்த நாடு, ஊர், குலம் முதலிய செய்திகளை அறியக்கூடவில்லை. இவர்தம் பாடல்களில் பயின்று வரும் தலக் குறிப்புகளைக் கூர்ந்து நோக்குங்கால் இவர் சிவத்தல யாத்திரையினை மேற்கொண்டு வாழ்ந்த சிவநெறிச்செல்வர் என்பது நன்கு விளங்கும். இவரால் பாடப் பெற்ற தலங்களுள் பெரும்பாலானவை சோழநாட்டுத் திருத்தலங்களாக இருத்தலை நுணுகி நோக்குமிடத்து இவர் சோழநாட்டில் நெடுங்காலம் வாழ்ந்தவர் என்பது உய்த்து உணரப்படும்.

(22) பரணதேவநாயனார்: திருவருட்செல்வராகிய இந்நூலாசிரியர் கடைச் சங்கப் புலவராகிய பரணரது பெயரைத் தமக்குரிய பெயராகப் பெற்றமை கருதிப் பரணதேவ நாயனார் என வழங்கப் பெற்றனர் எனக் கொள்ளுதல் பொருந்தும்.

கடைச் சங்கப் புலவராகிய பரணரும் இப்பரண தேவ நாயனாரும் ஒருவரே எனக் கருதுவாரும் உள்ளனர். இது தவறு. காரணங்கள் வருமாறு:

(i) பதினோராந்திருமுறையில் பிரபந்தங்களை வரிசைப் படுத்தப்பெறுங்கால் நக்கீரதேவர், கல்லாடதேவர், கபிலதேவர் என்போர் பாடிய பிரபந்தங்களுக்குப் பின் இவர் பாடிய **சிவபெருமான் திருவந்தாதி** வரிசைப்படுத்தப் பெற்றுள்ளது. இதனால் அவர்கட்குப் பின் வந்தவர் என்பது உறுதிப்படுகின்றது.

(ii) திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர், திருவாதவூரடிகள் ஆகிய பெருமக்களுக்குக் காலத்தாற் பிற்பட்டவர் இப்பரணதேவர் என்பது இனிது புலனாகின்றது.

(iii) இவர் பாடிய சிவபெருமான் திருவந்தாதியில் வடசொற்களும், பிற்காலச் சொல் வழக்குகளும் காணப்பெறு கின்றன.

இவற்றால் இவர் சங்கப் புலவராகிய பரணர் அல்லர் என்றும், அவர் பெயர் தாங்கி கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த சிவநெறிச் செல்வரென்றும் கொள்வதே ஏற்புடைத் தாகும்.

(23) இளம்பெருமானடிகள்: பதினோராந்திருமுறை ஆசிரியர்களுள் இவரும் ஒருவர். பெருமானடிகள் என்பது இறைவனைக் குறித்து வழங்கும் பெயராகும். **'வரிய மறையார்'**

(2.80) என்னும் முதற்குறிப்புடைய ஞானசம்பந்தர் தேவாரத்தில் பாடல் தோறும் 'அவரேயெம்பெருமான் அடிகளே' எனச் சிவ பெருமானைப் போற்றியுள்ளார் காழிப்பிள்ளையார். என்றும் இளமை குன்றா இறை வனைச் சிவபெருமான் பெற்றருளிய முருகப்பெருமானை **'இளம்பூரணன்'** என்ற திருப்பெயரால் சான்றோர் போற்றக் காண்கின்றோம். இளமை குன்றா இறைவன் என்ற இப்பொருளிலேயே **'இளம்பெருமானடிகள்'** என்ற பெயரும் முருகக் கடவுளுக்கு வழங்கப்பெற்றிருத்தல் கூடும். கடவுட் பெயரை மக்களுக்கு இட்டழைக்கும் வழக்கப்படி **இளம்பெருமானடிகள்** என்ற பெயர் பெற்றோர்களால் இவ்வாசிரியருக்கு இடப்பெற்றதெனக் கொள்ளுதல் பொருந்தும். இனி, பெருமானடிகள் என்ற பெயருடையார் இருவராக அவர்களுள் இவர் இளையவர் என்பது தோன்ற 'இளம் பெருமானடிகள்' என இவ்வாசிரியர் வழங்கப் பெற்றார் எனக் கருதுவதற்கும் இடம் உண்டு. இவ்வாசிரியர் பிறந்த நாடு, ஊர், குலம் முதலியவை இன்னவை எனத் தெரிந்து கொள்வதற்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை.

இளம்பெருமானடிகள் சிலப்பதிகார ஆசிரியராகிய இளங்கோ அடிகளாக இருத்தல் கூடும் என ஐயுறுவாரும் உளர். கடைச் சங்க காலத்தில் இல்லாத கட்டளைக் கலித்துறை யாப்பும் **விநாயகர் வழிபாடும்** இவர் பாடிய **மும்மணிக் கோவையில்** இடம் பெற்றிருப்பதால் இது தவறு என்பது உறுதிப்படுகின்றது. ஆகவே இவர் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு இறுதியும், பத்தாம் நூற்றாண்டின் தொடக்கமுமாகிய காலப்பகுதியில் வாழ்ந்த திருவருட் செல்வர் என்பது தெளிவாகப்படும்.

(24) **அதிராவடிகள்:** இவ்வாசிரியர் பிறந்த நாடு, ஊர், குலம், முதலியன இவை எனத் தெரிந்து கொள்ள இயலவில்லை. இவர் தனக்குவமை இல்லாத இறைவன் திருவடிகளை

இடைவிடாது நினைந்து மனக்கவலை மாற்றியவர். ஆதலின் வினைத் துன்பங்களைக் கண்டு துளங்காத சிந்தை யுடையவர். எனவே இவரை ஆன்றோர் **'அதிராவடிகள்'** எனக் குறித்துப் போற்றுவாராயினர். அதிர்ச்சி-நடுக்கம். அதிரா அடிகள்-துளக்கமில்லாத சிந்தையினராகிய பெரி யார். எதிர்காலத்தில் வரக்கடவதாகிய இடையூற்றினை முன்னரே அறிந்து நடுங்கும்படி வருவதொரு துன்பமும் இல்லையென்பார்.

எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்[23]

என்றார் வள்ளுவர். இங்ஙனம் இடையூறு நீக்குவோராகிய மூத்த பிள்ளையாரைப் பணிந்து பின்னர் வரும் துன்பங்களை முன்னறிந்து காக்கும் மூத்த பிள்ளையார்க்கு **மும்மணிக் கோவை** என்னும் பாமாலையை அணிந்த இப்புலவர் பெருமானை அதிராஅடிகள் என வழங்கியமை பெரிதும் பொருத்தமுடையது.

(25) **திருவெண்காட்டடிகள்:** இவர் சோழநாட்டின் கடல் துறைப்பட்டினமாகிய காவிரிப்பூம்பட்டினத்தில் அவதரித் தமையால் **'பட்டினத்துப்பிள்ளையார்'** எனவும் வழங்கப் பெறுவர். இவர் செல்வக் குடும்பத்திற் பிறந்து, மனைத்தக்க மாண்புடைய மங்கையை மணந்து மனை வாழ்க்கை நடத்திய பெரியார். இவர் பிறவி நோய்க்குக் காரணமாகிய அவாவை அறவே நீத்துத் துறவறத்தை மேற்கொண்டவர். இதனால் இவர் **'திருவெண்காட்டடிகள்'** எனவும் **'பட்டினத்தடிகள்'** எனவும் போற்றப்பெறுவாராயினர். இவர் பாடியனவாக **ஐந்து** பிரபந்தங்கள் பதினோராந்திரு முறையில் சேர்க்கப் பெற்றுள்ளன. இப்பனுவல்கள் யாவும் சொற்செறிவும், பொருட்பொலிவும் உடையனவாய்க் கற்பார்க்கு நவிலுந்தோறும் சுவைபயப்பன வாக உள்ளன.

23. குறள் - 429

இப்பிரபந்தங்களேயன்றி அடிகள் பாடியனவாக வேறு பல தனிப் பாடல்கள் **'பட்டினத்துப்பிள்ளையார் பாடல் திரட்டு'** என்ற பெயருடன் வழங்குகின்றனர். பதினோராந் திருமுறையிலுள்ள இவர் பாடிய பிரபந்தங்களும், இத் திரட்டிலுள்ள பாடல்களும் சொல்நடை, பொருளமைதி என்பவற்றால் பெரிதும் மாறுபட்டுள்ளன. இவரைப் பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. இவர் சிவப்பேறு அடைந்த இடம் **திருவொற்றியூர்** என்பதாகும். இன்றும் அவருக்குக் காக ஏற்பட்ட கோயில் புகழ்பெற்றுத் திகழ்கின்றது.

(26) நம்பியாண்டார் நம்பி: இவர் தில்லைக்கடுத்துள்ள **திருநாரையூரில்** ஆதிசைவ மரபில் தோன்றியவர். இளம் பருவத்திலேயே திருநாரையூர் பொல்லாப்பிள்ளையாரால் ஆட்கொள்ளப் பெற்றவர். இதனால் **'நம்பியாண்டார் நம்பி'** என்ற திருப்பெயரால் வழங்கப்பெற்றார். கருவிலே திருவுடையராய்ச் செந்தமிழ்ப் புலமையும், செம்பொருள் துணிவும் நன்கு வாய்க்கப் பெற்றவர். தேவாரத் திருமுறையும் திருத்தொண்டர் வரலாறும் உலகெங்கும் பரவுதல் வேண்டுமென விரும்பிய சோழ மன்னனது பேரார்வத்தை இனிது நிறைவேறத் துணை புரிந்தவர். தில்லைக்குச் சென்று தேவாரத்திருமுறையைக் கண்டு அவற்றை **ஏழு திருமுறைகளாக** வகுத்து உதவியவர். இவர் இயற்றியருளிய **பத்துப் பிரபந்தங்கள்** பதினோராம் திருமுறையில் சேர்க்கப் பெற்றுள்ளன.

(ஏ) பன்னிரண்டாம் திருமுறை

(27) சேக்கிழாரடிகள்: "தொண்டை நன்னாடு சான்றோடுருடைத்து". தொண்டை மண்டலம் இவரது நாடு. இஃது 24 கோட்டங்களையுடையது. அவற்றுள் சிறந்தது புலியூர்க் கோட்டம். அதன் உட்பிரிவுகள் பலவற்றுள்ளும் சிறந்து விளங்குவது குன்றத்தூர் வளநாடு. அதனுட் பலவூர்களிலும் சிறந்து விளங்குவது **குன்றத்தூர்**. அந்நகரில்

வழிவழி வந்த வேளாண்குடிகள் பல உள. அவற்றுட் சிறந்தது **சேக்கிழார்** மரபு. அம்மரபில் அருண்மொழித் தேவர், பாலறாவாயர் என்ற இருவர் உடன் பிறப்புகளாகப் பிறந்து வளர்ந்தனர். மூத்தவர் **அருண்மொழித்தேவர்,** இளையவர் **பாலறாவாயர்.** இருவரும் கல்வித்துறையில் தேர்ச்சி பெற்றுத் திகழ்ந்தனர். **சேக்கிழார்** குடிவிளங்கக் குடி விளக்காகத் தோன்றிய வராதலின் அருண்மொழித் தேவருக்குச் சேக்கிழார் என்ற குடிப் பெயரே பெயராக வழங்குவதாயிற்று. இவரே **பெரியபுராணத்தின்** ஆசிரியர்.

அருண்மொழித்தேவரின் கல்வியொழுக்கங்களை நன் குணர்ந்த சோழமன்னன் தனது அரசியலில் அமைச்சராக நியமித்து அவருக்கு **'உத்தமச் சோழப் பல்லவன்'** என்ற சிறப்புப் பட்டத்தையும் வழங்கிச் சிறப்பித்தான். அவரும் அமைச்சர் தொழிலைச் சிறப்பாக நடத்தி வந்தார். சோழ நாட்டுத் திருத்தலங்களில் ஒன்றாகிய **திருநாகேச்சுரத்திற்** கோயில் கொண்டருளிய இறைவன்பால் பேரன்பு கொண்டவராய் நாடோறும் போற்றி வழிபட்டு வந்தார். அத்தலத்தில் திருப்பணிகள் பலவும் செய்தார். தமது ஊராகிய குன்றத்தூரிலும் தமது மனைக்கட்டு இடத்தில் சிவாலயம் ஒன்று நிறுவி அதற்குத் **திருநாகேச்சுரம்** என்ற திருநாமமும் இட்டுப் பூசைக் குரிய பல நிபந்தங்களும் செய்தமைத்தனர். அவ்வூரில் தமக்குரிய நிலம் முதலிய வற்றை அக்கோயில் பூசைக்குப் பயன்படுமாறு செய்தார்.

அக்காலத்தில் திருத்தக்கதேவரின் 'சீவக சிந்தாமணி' என்னும் சமயக் காப்பியம் பொதுமக்களின் கவனத்தை ஈர்த்தது. அதன் தமிழ் வளமும், இலக்கிய நயமும் நெஞ்சை உருக்கின. அரசனும் அதில் மிகவும் ஈடுபட்டு மகிழ்ந்தனன். அரசனை உண்மை நெறியில் திருத்துதலும் அமைச்சரின் பெருங்கடமைகளுள் ஒன்று என்பதை உணர்ந்த சேக்கிழார் "அந்நூல் இம்மைக்கும் மறுமைக்கும் ஒவ்வாத

பொய்க்கதை; அதனைப் படித்தல் வீண்" என்று அரசனை அறிவுறுத்தினர். இதனைச் செவிமடுத்த வேந்தன் "அப்படியாயின் உண்மையான தேவ கதை எது?" என்று வினவினன்.

சேக்கிழார்பெருமான் "திருவாரூரில் கோயில் கொண்டருளிய **தியாகேசப் பெருமான்** தம்முடைய அடியார்களின் பெருமையை விரித்துரைத்துப் பாடிப்போற்றுக" என்று கூறித் **"தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்"** என்று அடியெடுத்துக்கொடுக்க நம்பியாரூரர் பாடிய திருத்தொண்டத்தொகை என்னும் பதிகம். திருநாரையூரில் எழுந்தருளிய பொல்லாப்பிள்ளையார் பொருள் அருளிச் செய்யக் கேட்டுணர்ந்த நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டத் தொகையில் போற்றப் பெற்ற சிவனடியார்களின் வரலாற்றை வகைப்படுத்தி விளக்கும் போக்கில் **'திருத்தொண்டர் திருவந்தாதி'** என்றதொரு வகை நூலை அருளினார். "அந்த அந்தாதியை திருமுறை கண்ட இராசராச தேவர் சிவாலய தேவர் முதலாகவுள்ள அனைவரும் உளமுருகிக் கேட்டு மகிழ்ந்தனர். அவ் வரலாறுகளே இம்மைக்கும் மறுமைக்கும் உறுதிபயக்கத் தக்க வரலாறுகள் ஆகும்" என்று கூறினர்.

இதனைச் செவிமடுத்த வேந்தன் மிகவும் மகிழ்ந்து அவற்றை விரித்து ஒரு பெருங்காப்பியமாகச் செய்து தரும்படி வேண்டினன். அதற்கிசைந்து சேக்கிழார் பெருமான் தில்லை நகர் ஏகி சிற்றம்பலவனை வணங்கி, அடியெடுத்து அருளுமாறு வேண்டினர். அனைவரும் கேட்க தில்லையம்பலவன் திருவருளால் **'உலகெலாம்'** என்றொரு வானொலி எழுந்தது. இதனைத் துணை கொண்டு சேக்கிழார் **'திருத்தொண்டர் புராணம்'** என்ற **பெரியபுராணத்தைக்** காப்பியமாகப் பாடி முடித்தார். அச்செய்தி கேட்டு அரசன் மிக மகிழ்ந்து தில்லைக்கு

வந்து ஆடலரசரையும், ஆசிரியரையும் வணங்கி தம் மகிழ்ச்சியைப் புலப்படுத்திக் கொண்டான்.

தில்லைச் சிற்றம்பலவன் ஆணைப்படி அனைவரும் இந்நூலைக் கேட்க ஆயிரங்கால் மண்டபத்தில் ஏற்பாடுகள் செய்யப்பெற்றன. பல இடங்கட்கும் ஓலை போக்கிச் சிற்றரசர்கள், அமைச்சர்கள் முதலிய பலரையும் வரச் செய்தனர். தில்லை வாழந்தணர், மடாதிபதிகள் முதலியோர்கள் குழுமினர். **சித்திரைத் திருவாதிரை** நாள் தொடங்கி[24] எதிராண்டு சித்திரைத் திருவாதிரையில் அரங்கேற்றுரை சேக்கிழார் நிகழ்த்தக் கேட்டு மகிழ்ந்தனன் அரசன். வந்திருந்தவர்க்கெல்லாம் உண்டி உறையுள் முதலியவற்றைக் குறைவற அரசன் தானே ஏவிச் செய்தமைத்தனன்.

புராணவுரை நிறைவு பெற்ற பின் சேக்கிழார் பெருமானையும், புராணத் திருமுறையினையும் யானைமீது ஏற்றித் தானும் ஏறி இணைக் கவரி இரண்டு கைகளாலும் வீசி, அது தனது தவப்பயன் என எண்ணி உள்ளம் மகிழ்ந்தனன்.

அதன்பின்னர் ஆசிரியருக்கு ஞானமுடி சூட்டித் **'தொண்டர் சீர் பரவுவார்'** என்ற விருதையும் வழங்கி அரசனும் ஏனை அனைவரும் வணங்கினர். புராணத் திருமுறையினை, முன் நம்பியாண்டார் நம்பிகள் கோவை செய்த பதினொரு திருமுறைகளுடன் சேர்த்து **பன்னிரண்டாவது** திருமுறை என்று நியமித்துச் செப்பேடு செய்து ஆடலரசனின் சந்நிதியில் ஏற்றுவித்தனர்.

24. ஆடலரசனுக்கு உரியதும், காழிப்பிள்ளையார் அவதாரம் செய்ததும், அவருக்கு மூன்றாம் ஆண்டு ஞானப்பால் அளிக்கப் பெற்றதும் ஆகிய பெருமை வாய்ந்தது திருவாதிரை நாள்.

சேக்கிழார் இளவல் பாலறாவாயரை அழைப்பித்து அவருக்குத் **'தொண்டைமான்'** என்ற விருது வழங்கி அவரைத் தனது அமைச்சராக அமைத்துக் கொண்டான். சேக்கிழார் பெருமானும் தில்லை நகரில் இருந்து அறுபத்து மூன்று நாயன்மார் சரிதங்களை உணர்ந்து கொண்டு அடியார்களுடன் கூடி, அருந்தவத்திலிருந்து பின் தில்லைச் சிற்றம்பலவனின் எடுத்த பாத நிழல் எய்தினார்.

அடுத்து, **பகுதி-5: பிற்கால சைவ இலக்கியங்களைக்** காண்போம். முதலில் வருவது 'புராண இலக்கியங்கள்'.

# 5. புராண இலக்கியங்கள்

*தமிழ் இலக்கிய வரலாற்றில் புராண இலக்கியப் பகுதி பெரும் பகுதியாகும். இஃது அளவிலும் மிக விரிந்தது; பொருளாலும் மிக ஆழமானது. இப்புராண இலக்கியம் வடமொழியைத் தழுவியே வளர்ந்தது.[1] பெரும்புராணங்கள் யாவும் வடமொழியிலிந்து தமிழாக்கம் செய்யப்பபெற்றது. கி.பி. முதல் சில நூற்றாண்டுகளில் வடமொழி மகா புராணங்கள் முடிக்கப்பெற்றன என்பது வரலாறு. ஆனால் இவை ஆயிரம் ஆண்டுகட்குப் பிறகே தமிழில் பரவலாயின. எனினும் புராணக் கதைகள் சில சங்கநூல்களிலும் இடம் பெற்றுள்ளன என்பது உண்மை. திருமூலர், சமயாசாரியர், ஆழ்வார் நாயன்மார் காலங்களிலேயே தமிழ் மொழியில் இவை அதிகம் இடம் பெற்றன.*

*'புராணம்' என்ற வடசொல் புரா-நவ என்ற இரு வேர்களிலிருந்து பிறந்தது; இதன் பொருள் பழமைக்கும் பழமையாய் புதுமைக்கும் புதுமையாய் உள்ளது என்பர். இதுவே நாம் கருதும் புராணம். பழமையான எந்த வரலாறுகள் இன்னுங்கூட மக்களிடையே சொல்லப் பெற்று வருகின்றவோ அவை புராணம்.*

1. தமிழில் முதல் தமிழ்ப்புராணம் மூலநூலாகச் செய்யப் பெற்றது பெரிய புராணமாகும்.

திருக்குறள் போன்ற நூல்கள் மக்களை நல்வழிப்படுத்தல் போலவே, புராணங்களும் ஆங்காங்கே மக்களுக்குத் தெய்வபக்தியை ஊட்டித் தமிழ்ச் சுவை மூலமாகவும், தலக்கதைகள் மூலமாகவும் மக்களை நல்வழிபடுத்தி வந்துள்ளன. இவற்றால் தமிழ்மக்களின் வாழ்க்கையும் பண்பாடும் வளம் பெற்றுள்ளன. புராணம் என்ற வடசொல்; பழமை என்று பொருள்படும்.

திருவாசகத்தில் முதல் அகவல் சிவபுராணம் என்றே பெயர் பெற்றுள்ளது.

சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன் யான்

என்பது **மணிவாசகர்** வாக்கு. திருவாசகப் பதிகங்களின் கருத்து எழுதினோர் இத்தொடருக்கு 'சிவனது அநாதி முறையான பழமை' என்று எழுதியுள்ளனர். புராணன்-பழமையானவன்; முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளாயுள்ள இறைவன். புராணம் என்ற பெயரைச் சம்பந்தர் பலமுறை குறிப்பிடுவர். **'பாசுபதம் புரிந்தளித்த புராணர் கோயில்'** (1.131:2) **'உள்ளப் புண்டரிகத்துள்ளிருக்கும் புராணர் கோயில்** (1.132:6) **சடையிற் பொலிவித்த புராணனார்** (2.7:1), **'அர்ச்சிக்க இருந்த புராணனே'** (2.10:1) என்பன காண்க. **'பூரணன் காண் புண்ணியன்காண் புராணன் காண்'** (6.8:3), என்று காளத்தி நாதனை அப்பர் சிறப்பிப்பதைக் காண்க. பெரும்பாலும் புராணங்கள் விருத்தயாப்பில்தான் பாடப் பெறும். ஈண்டு சில சைவப் புராணங்களைக் காண்போம். இவை யாவும் செய்யுளில் செய்யப்பெற்றவை.

## 1. பெரும்பற்றப் புலியூர் நம்பி

இவருடைய இயற்பெயர் **பெரும்பற்றப் புலியூர் நம்பி;** பெரும்பற்றப் புலியூர் என்பது சிதம்பரம். **தில்லை நம்பி, ஆண்டான்** என்பன இவருக்கு வேறு பெயர்கள். நம்பி என்ற பெயர் இயற்பெயரைச் சார்ந்து வழங்குவது. நம்பியாண்டார் நம்பி, நாற்கவிராசர் நம்பி என்பவற்றால் இதனை அறியலாம்.

இவர் ஊர் **செல்விநகர்.** இவர் வேம்பத்தூர்க் கவுணிய கோத்திரம் சோழியப் பிராமண வகுப்பினர்.[1] இவ்வூரில் குலசேகர பாண்டியன் பிராமணரைக் குடியேற்றினான் என்பது வரலாறு. செல்லிநகர் இக்காலத்துப் பனையூர் என்பது உ.வே.சா. ஐயரவர்களின் குறிப்பு. குலசேகரன் நூல் அரங்கேறியபோது பலவிருதுகளை அளித்தான்; தவிர செல்லி நகரையும் அதனை உள்ளடக்கிய செல்லி நாட்டிடையும் இவருக்கு முற்றூட்டாக அளித்தான். பின்னர் இவர் பரம்பரையினர் செல்வராக விளங்கினர் என்பது வரலாறுகள்.

திருவால வாயுடையார் திருவிடையாடல்: இது நம்பி திருவிளையாடல் எனவும் வழங்கும்.[2] திருவிளையாடல் பிற்காலத்தில் (17-ஆம் நூற்றாண்டின் இறுதியில்) தோன்றிய பரஞ்சோதிமுனிவர் செய்த திருவிளையாடலையே குறிக்கும். அதனை வேறுபிரித்தறியவே இது 'நம்பிதிருவிளையாடல்' என்று அடைகொடுத்துப் பழைய திருவிளையாடற்புராணத்தைக் குறிப்பிட வேண்டியுள்ளது. இவரது புராணம் 'வேம்பத்தூரார் திருவிளையாடல்' என வழங்குவதும் உண்டு. இரண்டற்கும் கால இடையீடு நானூறுயாண்டுகள்.

1. 13-ஆம் நூற்றாண்டு
2. இது மதுரைத்தல புராணமாகும். தலபுராணமாக இன்று நமக்குக் கிடைக்கும் நூல் இதுவேயாகும்.

நம்பி திருவிளையாடல் 1753 விருத்தம் கொண்டது. பாயிரம், கடவுள் வாழ்த்து, அவையடக்கம், பதிகம், நூல் வரலாறு, திருநகரச் சிறப்பு, நூற்பயன் என்ற பகுதிகளின் பின் 64 திருவிளையாடல்களும் சொல்லப்பெறுகின்றன. நூலின் இறுதியில் மிகைப்பாடல்களும் உள்ளன.

நம்பிக்குச் சந்தம் அமைப்பதில் விருப்பம் அதிகம். சந்தப் பாடல்கள் யாவும் இனிய ஓசையுடையன. கடவுள் வாழ்த் துப் பகுதியில் பல பாடல்கள் மிகவும் நயமாக துதிக்கப் பெறும் தலம் அல்லது மூர்த்தி பெயர் சந்தத்திலேயே அமைக்கப்பெற்றிருப்பது மிக்க அழகுடை யது. திருச்சிற்றம் பலம், திருவம்பலம், பொன்னம்பலம்பற்றி வரும் மூன்று பாடல்கள் அற்புதமானவை.

பாயிரப்பகுதியில் பாண்டி நாட்டுக்கே வணக்கம் கூறுகின்றார். பின் மதுரைக்கு இருமுறை, மதுரைத் திருச் சிற்றம்பலம், மதுரையின் பெயர்களான கூடல்வாய், பெரும்பற்றப்புலியூர் என்ற இடங்களுக்கே வணக்கத்தைத் தம் ஈடுபாட்டு மிகுதியால் பாடுகின்றார். அப்படியே பின்னரும் ஓரிடத்தில் மதுரை கூடல், ஆலவாய் என்று ஒவ்வொன்றையும் சில படலங்களின் இறுதியில் துதிப் பாடல்களில் அமைத்துள்ளார். (6, 7, 32, 49, 66).

நடுவில் சில இடங்களில் பாத்திரங்களின் கூற்றாக (36,37) சிவசின்னங்கள் மூன்றையும் இவர் முறையே போற்றி யுரைத்திருப்பது மிக்க சிறப்பாயுள்ளது.

பவங்கள் நீக்கும்வெம் பாதகம் ஆற்றும்,நல்
தவங்கள் நல்கும், தலைமை தரும்,தொழும்
சிவந்த தாள்நிழல் சேர்த்திடும்,–காத்திரத்து
உவந்து பூணின் உருத்திரம் சாதனம்

என்று கூறி வெண்ணீற்றையும் ஐந்தெழுத்து மந்திரத்தையும் குறிப்பிடுகின்றார்.

என்றார் வரைமயிலே, ஏழ்பொழில்வாழ் கோகிலமே,
ஒன்றாய் வேதஆகம வாவி ஓதிமமே,
பொன்றாத எண்ணெண் கலைபேசும் பூவையே,
மன்றார் கடம்பவன மானே, அடிபோற்றி

சம்பந்தரைச் சக்திமான் என்று சில இடங்களில் குறிப்பிடுகின்றார். பின்னும் மறைஞானி, மறைஞான சம்பந்தர் என்றும் பல இடங்களில் கூறுவர். இவருடைய வர்க்குச் சிறப்பினால் போலும் அடுத்த நூற்றாண்டில் மறைஞான சம்பந்தர் என்ற பெயரில் சைவ நூலாசிரியர் பலர் தோன்றியிருக்கின்றனர். சைவசித்தாந்தம் என்றும் கூறுகின்றார். பின்னர் சொக்கன் என்ற இறைவன் பெயரில் இவருக்கு ஆர்வம் மிகுதி. 'திருவளர் செந்தமிழ்ச் சொக்கன், திருவடித் தாமரை போற்றி' என்றெல்லாம் அழகாகச் சொல்வார்.

இவருடைய பாடல்களில் சொல்லணிகள் மிக அதிகம். எங்கும் மடக்கணிவகையாகப் பாடுவார். ஒரு கருத்து தோன்றியவுடனே அதே தொடர்புடைய பலகருத்துகளைச் சொல்நயமும் பொருள் நயமும் பொருந்தப் பாடுவது இவர் இயல்பு. யானையை எய்தார் என்றவிடத்தில் யானை பற்றிய தொடர்பான பல வரலாறுகளைச் சேர்த்துக் கூறுவது காணத் தக்கது.

யானையாழ் துயரந் தீர்த்தோன்
யானைதாங் கண்டங் கண்டோன்
யானைவா கனத்தோன் போற்ற
யானையா லயத்தி ருந்தோன்
யானையா னனதைத் தந்தோன்
யானைவந் தனைஉ வந்தோன்
யானையை உரித்த தன்றி
யானையை எய்தான் அன்றே.

கரிக்குருவி கூவுவதை மிருத்தியுஞ்சய மந்திரம் சொல்வது போல இவர் கருதுகின்றார்.

*புராணம் படிப்பதன் பயனைப் பல இடங்களில் கூறு கின்றார். நூல் தொடக்கத்தில் நூற்பயன் என்ற தலைப்பில்* **ஒன்பது** *பாடல்களும் இறுதியில்* **ஐந்து** *பாடல்களும் உள்ளன. அன்றியும் இடையில் வாதவூரடிகள் வரலாற்று இறுதியில் இரண்டு பாடல்கள் உள்ளன.*

மறைபறை இறைவன் பிட்டுண்டு
அடியுண்டு மண்சு மந்த
உறுகதை கற்போர் கேட்போர்
உயருலகு ஆள்வ ரன்றே **(31:55)**

சுந்தரன் அவதானங்கள் சொல்லுவோர்
நினைப்போர் கேட்போர்
சந்ததம் முனிவர் வானோர்
சாரணர் சித்தர் ஏத்த
முந்தொளி விமானத் தெய்தி
மூவுல கத்தி னோடும்
இந்திரன் முடிமேல் தாள்வைத்து
ஏறுவர் சிவலோ கத்தே **(31:56)**

*பின்னும் சில இடங்களில் பாடல் முடிவில் இவ்வாறு பலசுருதிப் பாடல் அமைத்திருக்கின்றார். (38: 72: 66: 19)*

*பிற்கால நூல்களில் பதிகம் காணப்படுதல் இல்லை. இவர் தமக்கு முன்னிருந்த நூல்களையொட்டிப் பதிகம் அமைத்துள்ளார். அதுமட்டுமின்றி பதிகப் பாடல்களின் முதல் நினைப்பை கடைசியில் ஒரு பாடலாகக் கோத்து மிருக்கின்றார் (அடிவரவு). இது, அக்காலத்தில் சைவமக்கள் இந்நூலைப் பாராயணம் செய்யும் நியமம் உடையவரா யிருந்தனர் என்பதை உணர்த்தும்.*

*பழமொழிகளை இவர் போற்றிக் கூறுவார். பசுவினி டத்து இவர் அன்புடையவர் என்பதை, 'அறமறக் கொல்ல வந்ததாயினும், பசுவைக் கோறல் மறைவழக்கல்ல' என்று*

பொருந்திமுன் கற்போர் கேட்போர்
புவிபுகழ் அரச ராகிப்
பெரும்பயன் துய்த்து நீங்காப்
பிறப்பிறப் பொழிந்திங் கெய்தா
அரும்பெருஞ் சிவலோ கத்தில்
அணைவதற் கைய மின்றே.

*காலம் 13-ஆம் நூற்றாண்டின் இறுதி.*

## 2. கச்சியப்ப சிவாச்சாரியர்

*தொண்டைமண்டலம் காஞ்சியம்பதியில் குமர கோட்டத்து அர்ச்சகர், ஆதிசைவமரபினர், காளத்தியப்ப சிவாசாரியரின் திருமகனாகப் பிறந்தவர். பத்தாண்டு நிரம்பும் முன்னரே வடமொழி தென்மொழி ஆகிய இரண்டிலும் வல்லவரானார். நாடோறும் குமர கோட்டத்துப் பெருமானை வணங்கி வழிபாடு செய் வதையே வழக்கமாகக்கொண்டிருந்தவர். முருகப் பெரு மான் கனவில் உரைத்தபடி சங்கரசங்கிதையிலுள்ளபடி குமரக்கடவுளின் வரலாற்றைக் **'கந்தபுராணம்'** என்ற தலைப்பில் பாடி முடித்தார். இது உற்பத்திக் காண்டம், அசுரகாண்டம், மகேந்திர காண்டம், யுத்தகாண்டம், தேவகாண்டம், தட்ச காண்டம் என ஆறு காண்டங்களில் பத்தாயிரத்து மூன்னூற்று நாற்பத்தைந்து பாடல்களாகப் பாடி முடித்தார். பின்னர் தாம் பாடிய கந்தபுராணத்தை அறிஞர்கள் முன்னிலையில் குமரகோட்டத்தில் அரங் கேற்றுகையில் 'திகடசக்கரச் செம்முகம் ஐந்துள்ளான்' என்ற காப்புப் பாடலைப்பாடி 'திகழ் தசக்கரம் செம் முகம் ஐந்து உள்ளான்' எனச் சொற்பிரித்துப் பொருள் கூறுகையில் ஒருவர் எழுந்து 'அவ்வாறு பிரித்தற்கு தொல் காப்பிய முதலிய இலக்கண நூல்களில் விதியில்லையே என்று தடை எழுப்ப பின்னர் முருகப்பெருமான் திருவரு*

ளால் "வீர சோழியம்" என்ற நூலில் அதற்கு விதி இருப்ப தாகத் தெரிவிக்க, பின்னர் நூல் அரங்கேற்றம் முடிந்தது.

**கந்தபுராணம்:** இதனுள் முருகப்பெருமானது தோற்ற மும் வீரமும், சூரபதுமனாதியர் கொடுமையும் அவர்கள்வத மும், முருப்பெருமான் அருளும், பிறவும் விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

முருகப் பெருமானுடைய கதையை விரித்துக் கூறுவதே இதன் நோக்கம். இந்நோக்கம் நன்கு கைகூடி மக்களிடையே இந்நூல் மிக்க செல்வாக்கு பெற்றுவிட்டது. சென்ற தலைமுறைவரையிலும் சோழநாட்டிலும் ஈழ நாட்டிலும் சைவ இல்லங்கள் அனைத்திலும் இந்நூல் பூசிக்கப் பெற்று வந்தது. ஊர்கள் தோறும் கந்தபுராணச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளையும், திரு. கி. வா. ஜகந்நாதனும் தம் வாழ்நாட்களில் ஆற்றிவந்த கந்தபுராணச் சொற்பொழிவுகளைச்செவிமடுத்து இன்பம் நுகர்ந்தவர்கள் இன்றும் உள்ளனர். மக்கள் சமய உணர்வு பெற்றவர்களாக வாழ்ந்தனர்.

இவை யாவும் இந்த நூலுக்கு நாட்டில் இருந்த செல் வாக்கை நன்கு எடுத்துக் காட்டுவனவாகும். 'கந்தபுராணத் தில் நுவலப் பெறாத பொருள் எதுவும் இல்லை' என்ற ஒரு பழமொழி நாட்டில் வழங்குகின்றது. "கந்தபுராணம் நம் சொந்தப்புராணம்", "கந்தபுராணத்தில் இல்லாதது எந்தப்புராணத்திலும் இல்லை."

புதுமயில் ஊர்பரன் புராணத் துற்றிடாக்
கதையிலை அன்னது கணிதம் அன்றரோ.

ஆராய்ந்து நோக்கின், வைணவர்களுக்குக் கண்ணன் வரலாறு உரைக்கும் பாகவதம் எப்படி ஒரு பேரிதி காசமோ, அப்படியே சைவர்களுக்குக் கந்தபுராணம் ஒரு சைவப் பேரிதிகாசமாகும். இந்த இதிகாசப் படைப்பில்

கச்சியப்பரின் வெற்றி மிகப்பெரிது. கண்ணனுடைய பால சேஷ்டிதங்கள் ஒப்பக் குமரப் பெருமானின் பாலலீலைகள், பாகவத்திலுள்ள கதைகள் போலக் கந்தபுராணத்தில் உள்ள எண்ணற்ற சிவபராக்கிரமக் கிளைக்கதைகள். இராமயணக் கதைக்கு எல்லாவிதத்திலும் ஒத்தே முருகப் பெருமானுடைய வரலாறும் சூரபதுமன் வதமும் நடை பெறுகின்றன. இராமாயண- பாகவதங்களில் காணப் பெறும் வைணவத் தத்துவங்களை யொப்பவே சைவ சித்தாந்தசமய தத்துவங்கள் கந்தபுராணத்தில் மிக விளக்க மாகச் சொல்லப் பெற்றுள்ளன. சமயதத்துவம் கூறும் சைவப்புராணங்களுள் இதுவே முதலாவது; சிறந்தது.

காலம்: 14-ஆம் நூற்றாண்டு.

## 3. கடவுள் மாமுனிவர்

இவர் வரலாறு குறித்து யாதும் தெரியவில்லை. இவர் சந்தானாசரியரை அடுத்து அதே பரம்பரையில் வந்த ஒரு துறவி என்று கருதப் பெறுகின்றது. 'முனிவர்' என்ற பெயர் துறவி என்று கருத இடந்தருகின்றது. திருவாதவூரர் புராணத்தை இவர் அகத்துறை வருணனை எதுவும் பொருந்தாமல் பாடியிருத்தல் இவர் துறவி என்பதை வலி யுறுத்தி, வாதவூராரிடத்து இவருக்குள்ள மெய்யன்பையும் காட்டுகின்றது. சாத்திரக் கருத்துகளின் கருவூலமாய் திருவாசகத்தின் பக்திப் பிரவாகத்துக்கு ஏற்ற பக்திச் சுவை நிரம்பித் ததும்புவதாய் இவர் பாடியுள்ளார். இதுவும் இவர் சந்தானாசாரியர் பரம்பரையில் வந்த ஒரு பக்திமான் என்ற கருத்திற்கு அரணாக அமைகின்றது. இவரது இயற் பெயர் கூடப் புலப்படவில்லை. 'கடவுள்' என்பது இயர்பெயராக இருக்க முடியாது:

**திருவாதவூரர் புராணம்:** மாணிக்கவாசகர் வரலாற்றை தனியே விரித்துக் கூறும் புராணம். சுந்தரமூர்த்தி தம் திருத்

தொண்டத் தொகையில் குறிப்பிட்ட சிவனடியார் களின் வரலாறுகளை மட்டிலும் விளக்குவதற்காகச் சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் பாடினர். சுந்தரமூர்த்தி மாணிக்கவாசகரைக் குறிப்பிடாமையால் சேக்கிழார் மணிவாசகர் வரலாற்றைக் கூறினார் இலர். அக்குறை நீங்கப் பின் வந்த பெரியாராகிய கடவுள் மாமுனிவர் மாணிக்கவாசகருடைய வரலாற்றை மட்டும் தனியாகப் பாடினார் என்று கருதலாம். இப்புராணம் மூலமும் உரையும் என்ற தலைப்பில் பல பதிப்புகள் வெளியாகி யுள்ளன.

இது கடவுள் வாழ்த்து தொடங்கி, மந்திரிச்சருக்கம், திருப்பெருந் துறைச் சருக்கம், குதிரைவிட்ட சருக்கம், மண் சுமந்த சருக்கம், புத்தரை வாதில் வென்ற சருக்கம், திருவம்பலச் சருக்கம், திருவடிபெற்ற சருக்கம் என்ற ஏழு சருக்கங்களையும் 545 பாடல்ளையும் கொண்டது.

சிவயோகி ஒருவர் பொதிகை மலை செல்ல வழிக் கொண்டபோது, காவிரிக்கரையை அடைந்தார் என்று கூறுமிடத்து, "பரமேசுவரனுக்குக் கடல் ஆல காலவிடம் அளித்தமையால், காவிரியாறு கடல்வயிற்றை நிறைக்கா மல், தன் நீரினால் நாட்டில் வளம் நிறைத்தது" என்று காவிரியைச் சிறப்பித்துச் சேக்கிழார் திருமூலர் புராணத் தில் பாடுகின்றார்:

தடநிலைமா ளிகைப்புலியூர்
    தன்னிலுறைந் திறைஞ்சிப்போய்,
'அடல்விடையின் மேல்வருவார்
    அமுதுசெய அஞ்சாதே,
விடம்அளித்த' தெனக்கருதி
    மேதினிக்கு வளம்நிறைந்தே

கடல்வயிறு நிறையாத
காவிரியின் கரைஅணைந்தார்.[4]

*இக்கருத்தைக் கடவுள் மாமுனிவர் மந்திரிச் சருக்கம் முதற் பாடலில் அப்படியே வைகைக்கு ஏற்றிப் பாடியிருப்பது ஈண்டு அறியத்தக்கது.*

முக்கணொடு நான்குபுய ஐந்துமுக முன்னோன்
சொக்கனருள் நன்மைபெறு தொன்மைதிகழ் நன்னாடு
அக்கடு விடத்தைஅர னுக்கருள்வ தென்றே
மைக்கடலில் வைகலொழி வைகைவள நாடு.

*வைகைக்கு இவர் ஏற்றிய இக்கருத்து, பிற்காலத்தில் ஒரு தனி வெண்பாப்பாடலிலும் இடம் பெற்றுள்ளது:*

நாரியிடப் பாகருக்கு நஞ்சளித்த பாவிஎன்று
வாரியிடம் போகாத வையைதான்–தேரின்
இடத்தும் வலத்தும் இடப்புறமும் பாய்ந்து
நடத்துமாம் தண்பாண்டி நாடு.

*நம்முனிவர் நூல்வரலாறு கூறும்பொழுது "அகத்தியர் கூறிய சிவபிரானது 64 திருவிளையாடல்களுள் சில கூறுகின்றேன்" என்கிறார்.*

தென்பொதிய மாமுனி சிறக்கஅருள் எண்ணெண்
இன்பவிளை யாடல தெனுங்கடவுள் நாயேன்
மின்பயிலும் மாமதுரை மேவுதமிழ் மாறன்
துன்பமுற நல்குகதை சொல்லலுறு கின்றேன்.

*இதனால் 64 திருவிளையாடல் என்ற வழக்கு ஏற்பட்டபின் இவர் புராணம் பாடினார் என்பது தெளிவு. கல்லாடம் முப்பது திருவிளையாடல்களைக் குறிப்பிடுகின்றது. திருவிளையாடல்களை முதலில் முறையாக விரித்துக் கூறும் நூல் நம்பி பாடிய பழைய திருவிளையாடல்.*

---

4. திருத்தொண்ட பு. திருமூலநா-8.

எனவே, கடவுள் மாமுனிவர் புராணம் பழைய திருவிளையாடலுக்குப் பிற்பட்டது என்பது தெளிவு.

**நூலின் சிறப்பு:** இப்புராணம் தோன்றிய நாள் தொடங்கிச் சைவப் பெருமக்களாலும், தமிழ் மக்களாலும் சிறப்பாக விரும்பிப் பயிலப் பெற்றநூலாகும். யாழ்ப்பாணத்துச் சைவப் பெருமக்கள் தில்லை நடராசப் பெருமானிடத்தும் ஈடுபாடு மிக்கவர்கள். ஆதலின் இந்நூலினிடத்தும் மிகவும் ஈடுபட்டுள்ளனர். இப்புராணத்திற்குச் 'சிவபுராணம்' என்றும் அங்குப் பெயர்வழங்கும். இது சிறந்த செம்பாகமான நடையுடையதாய்ப் பக்திச் சுவையொன்றே நிரம்பியதாய், சிருங்கார வருணணைகள் இல்லாததாய், சிவச்சின்னங்களின் பெருமைகளையும், திருவைந்தெழுத்தின் மகிமையையும் சித்தியார் போன்ற சாத்திரங்களில் காணும் நுண்பொருள்களையும் ஆங்காங்கு விரிப்பதோடு அவற்றின் சொற்களை எடுத்து ஆளுவதாயும் அமைந்துள்ளது. சிவபக்தியூட்டும் சிறந்த நூல்களில் இதுவும் ஒன்று.

***சித்தாந்தக் கருத்துகள்:*** கடவுள் மாமுனிவர் தம் நூலில் சித்தாந்த சாத்திரக் கருத்துகளையும் தொடர்களையும் அப்படி அப்படியே எடுத்துப் பெய்துள்ளார் என்பதை ஈண்டுக் காண்போம். மாணிக்கவாசகர் நிலையை,

—உண்மை
தரும்உணர்வு என்னும் நாலாம்
சத்திநி பாதம் எய்திப்
பரமஅஞ் செழுத்தும் ஒன்றாம்
பராபரம் உணர்த்தும் ஞான
குருபரன் திருத்தாள் சென்று
கூடுதல் வேண்டும். . .

என்று உரைக்கின்றார் (பாடல் 30). "நாலாம் சத்தி நிபாதம் எய்தும் தன்மையர் ஆதலாலே" (பாடல் 85) என்று மற்றோர் இடத்தில் கூறுகின்றார். சத்தி நிபாதம் நாலுவகை

என்பது தமிழில் சித்தாந்தசாத்திரங்கள் தோற்றுவித்த கருத்து, "நாடிய சத்தி நிபாதம் நாலு பாதம்" என்பது சிவப்பிரகாசம் (செய்யுள் 49).

முன்னைவினைப் பெருங்காடு மூடுறஐம் புலவேர்
துன்னியலைத் திடர்செய்யும் துன்பவழிச் செல்லாமல் (70)

என்பது புராணச் செய்யுள். இது சிவஞான சித்தியார் பாடலை (253) எடுத்தமைத்தது என்பது வெளிப்படை.

துன்னிய ஐம்புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறும் தொல்லுயிரை.

சித்தியார் 265-ஆம் பாடல் மிகச் சிறந்த கருத்தொன்றைத் தெரிவிக்கின்றது. "இதுவே சமயம், இதுவே பொருள், இதுவே நூல் என்று கூறும் பிணக்குடையவை சமயங்க ளல்ல; இப்பிணக்கின்றி நின்றதே சமயம்" என்று அது கூறுகின்றது. இக்கருத்தைப் புராணம், "இது நூல் மற்றல்லது நூல் இல்லை எனும் அறுசமயவித நூல்" என்று தழுவி யுரைக்கின்றது.

சாத்திரக் கருத்தாகிய மந்திரங்கள், பதங்கள், வன்னங் கள், புவனங்கள், தத்துவங்கள், கலைகள் எனும் ஆறு அத்துவாக்களும் 103-ஆம் பாடலில் கூறப்பெற்றுள்ளன. மாணிக்கவாசகர் ஊமைப் பெண்ணைப் பேச வைத்துப் புத்தரை வென்றார் என்ற செய்தி கூறுமிடத்து புராணத்தில் காணும் 'ஆவது பொன்றக் கேடாய் அழிவது முத்தி யென்றன்" (464) என்ற அடியானது சித்தியார் பரபக்கத் தில் 94-ஆம் பாடலில் வரும் "ஆங்கவை பொன்றக் கேடாய் அழிவது முத்தியின்பம்'' என்ற அடியை எடுத்து அமைத்தது. இப்படியே புத்தரை வாதில் வென்ற செய்தி வருவது முழுவதும் சித்தியார் கருத்தின் தழுவலேயாகும். "அஞ்செழுத்தே-ஆனந்தத் தாண்டவமும் ஆறாறுக்கப்பா லாம் மோனந்தமாமுத்தியும்" என்ற சித்தாந்த சாத்திர

உண்மை விளக்கக் கருத்து "தத்துவ முடிவிலாடும் தாண்டவம்" (414) என்று புராணத்தில் பயில்கின்றது.

மேலும் மணிவாசகர் திருப்பெருந்துறையில் குருந்தமரத் தின்கீழ்ப் பரம்பொருளின் குருவைக் கண்டபொழுது நிகழ்ந்த நிகழ்ச்சியைப் புராணக்காரர் கூறுவது இங்குக் கருதத்தக்கது. மந்திரியாகச் சென்ற மாணிக்கவாசகர் குருந்தமரத்தின்கீழ்க் கண்ட குருமூர்த்தியின் "செங்கை மீது பொருத்தமுறு புத்தகம் ஏது, ஐயா" என்ன, அவர் "பொய்மையிலாச் சிவஞானபோதம்" என்றார். அதன் மேல் இவர் சிவம், ஞானம், போதம் என்பவற்றை விளக்கி யுரைக்குமாறு கேட்க குருமூர்த்தி விளக்குகின்றார்:

என்றலுமே சிவமேது ஞானமேது இங்கு
இலங்கிடும் போத மேது இயம்புவீரேல்
அன்றுவட நீழலில்வந் திருந்தார் நீரே
அடியேனும் உமக்கடிமை யாவேன் என்ன
நின்றசிவம் ஒன்று,அதனைத் தேர்தல் ஞானம்
நிகழ்போதம் தேர்ந்தனைத் தெளிதலாம் என்று
ஒன்றியநற் பொருள்வினவி நிற்பார் சிந்தை
உருகும்வகை உரைசெய்தார் உவமை யில்லார்

என்பதாக இச்செய்தி சிவஞான போதத்தையே பெயர் சுட்டி உரைக்கின்றது.

மேலும் குமரகுருபரர் பாடலில் உள்ள ஒரு குறிப்பு இங்குக் கருதத்தக்கது. அவர் பாடிய சிதம்பர மும்மணிக் கோவை 23-ஆம் பாடலில், மணிவாசகர் தாம் பாடிய திருக்கோவையாருக்கு (காமஞ்சான்ற ஞானப் பனுவல்) பொருள் **'அம்பலவாணரே'** என்று சுட்டினார் எனக் கூறுகின்றது:

கடங்கலுழ் கலுழிக் கனிநல் யானை
மடங்கலந் துப்பின் மானவேல் வழுதிக்கு

இருநிலம் அகழ்ந்தும் எண்ணில்பல் காலம்
ஒருவன் காணாது ஒளித்திருந் தோயை
வனசப் புத்தேள் மணிநாப் பந்திக்
கவனவாம் புரவியிற் காட்டிக் கொடுத்து
பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவர்
ஐந்திணை யுறுப்பின் நாற்பொருள் பயக்கும்
காமம் சான்ற ஞானப் பனுவற்குப்
பொருளெனச் சுட்டிய ஒருபெருஞ் செல்வ

*இங்கு, தமிழ் மாலையாகிய திருவாசகம் திருக்கோவை என்பவற்றின் பொருள் **'அம்பலவாணர்'** என்ற கருத்து கருதுதற்குரியது. பொதுவாகத் திருவாசகத்தின் பொருள் நடராசப்பெருமானே என்பதுதான் வரலாறு. ஆனால், குமரகுருபரர் தம் பாட்டில் குறிப்பிட்ட 'காமம் சான்ற ஞானப்பனுவல்' என்பது திருவாசகமன்று, திருக்கோவை யார் ஆகும். இதன் பொருள் 'அம்பலவாணர்' என்று மாணிக்கவாசகர் சுட்டியதாகக் குமரகுருபரர் கூறுகின்றார். ஆகவே இவர் திருவாதவூரர் புராண இறுதிப் பகுதியை ஆதாரமாகக் கொண்டார் என்று சொல்லுவது பொருந்தும்.*

*காலம்: 15-ம் நூற்றாண்டின் இடைப்பகுதி.*

## 4. தென்காசிப் பாண்டியர்கள்

*சடையவர்ம பராக்கிரம பாண்டியனுக்கு (கி.பி 1543-88) மூவர் குருமார்கள். (1) வரகுண ராமன், (2) வரதுங்கராமன், (3) அதிவீரராமன் என்பரோர். 16-ஆம் நூற்றாண்டிலிருந்து வாழ்ந்து புராண இலக்கியம் விரிவாகப் பாடிய மூவருமே சிறப்புடையவர்கள்; மூவரும் ஆன்மார்த்த நெறியில் ஈடுபட்டவர்கள்.*

***(1) வரகுணராமன்:** (கி.பி. 1560-1600) மூத்தவரான இவர் பட்டம் வேண்டாமென மறுத்து சிவபூசையிலும் வழிபாட்டிலுமே காலம் கழித்து விட்டார். இவர் பாடிய*

*நூல்கள் (அ) இலிங்கபுராணம்; (ஆ) வாயுசங்கிதை (இ) அம்பிகை மாலை; முதல் இரண்டும் புராணங்கள்; மூன்றாவது தோத்திர நூல்.*

***(அ) இலிங்கபுராணம்:*** *இந்த நூலில் சிறப்புப் பாயிரமும், தம் குருவான ஈசான முனிவர் வணக்கமும் அடங்கியவை. நூல் பூர்வ காண்டம், உத்தரகாண்டம் என்ற இருபிரிவு களையுடையது. பூர்வகாண்டத்தில் பாயிரமும், ஒரு பதிக மும் 108 அத்தியாயங்களும் 1955 பாடல்களும் உள்ளன. உத்தரகாண்டத்தில் கடவுள் வாழ்த்தும் 45 அத்தியாயங் களும் 551 பாடல்களும் உள்ளன. மொத்த அத்தியாங்கள் 153; பாடல்கள் 2506. இப்புராணம் நாரதர் உரைத்தாகச் சொல்லப்பட்டுள்ளது. இலிங்கபுராணம் என்ற பெயருக் கேற்ப சத்தியோசாதம் முதலான பஞ்ச மூர்த்திகளின் தோற்றமும் மகாலிங்கத்தின் தோற்றமும் உரைக்கப்பெற் றுள்ளன. முதலில் விநாயகர் காப்பு. இரு காண்டங்களிலும் சிவம் சக்தி விநாயகர் முருகர் வணக்கப் பாடல்கள்; தொடக்கத்தில் நடேசர் வணக்கப்பாடல்கள் அதிகமாகக் காணப்படுகின்றன.*

*இந்நூலில் விநாயக வணக்கப்பாடல் இது:*

பிறைதவழும் எழில்தோன்றிப்
பிறங்குகதிர் வெண்கோட்டால்
செறிகதிர்செய் கடங்கடுமிச்
செம்பொன்மால் வரைவாய்ப்ப
மறைபுகழும் சவுந்திரிய
லகரியினை வகுத்தெழுதும்
விறல்கெழும் வேழமுகன்
விரைமலர்த்தா ளிணைத்தொழுவாம்.

*இங்கு மேருமலையில் சவுந்தரிய லகரியினை விநாயகர் எழுதினார் என்று சொல்வது இவருக்கு அந்நூலினிடத் துள்ள ஈடுபாட்டினைக் காட்டுகின்றதேயன்றி, "அங்ஙனம்*

கருதுவது மரபன்று". விநாயகர், "மாபாரதம் சொன்ன நாள் ஏடாகமாமேரு வெற்பாக, அக்கூர் எழுத்தாணி தன்கோடாக எழுதும் பிரான்" என்பதுதான் பழைய மரபு. இவர் சொல்வது புதியசெய்தி.

இந்நூலின் முதற்காண்டத்தில் சிவவீரட்டச் செயல் களில் திரிபுரமெரித்தல், அந்தகாசுரன் சலந்தரன் முதலி யோரைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. தக்கன் வேள்வி யழிவு இங்கு விரிவாகக் கூறப்பெற்றுள்ளது. பிற கதைகளில் சிலாதர், நந்தி, சுவேதன், துருவன், உபமன்னியு கதைகள் சொல்லப் பெற்றுள்ளன. விரதங்களில் பாசுபத விரதம் முதலிய பல; ஆசாரவிதிகள் (கொலைப்பாவம்). ஜம்புத்தீவு, பிலக்கத்தீவு முதலியவற்றின் வருணனை; சூரிய சந்திரவம் சம் போன்ற பலவம்சங்கள்; மரணத்துக்கான குறிப்பு முதலி யன சொல்லப் பெற்றுள்ளன. அட்டமூர்த்தம், சிவபூசை, அட்டாங்க யோகம், திருவைந்தெழுத்து, பிரணவம், அட்டமாசித்தி, தியானம், தத்துவங்களின் தோற்றம், பிரிய சித்திவிதிகள் என்பன போன்ற சிறப்பான சைவசமயப் பொருள்கள் இங்கு இடம் பெற்றுள்ளன. தலங்களுள் காசித்தலம் ஒன்றே சொல்லப் பெற்றுள்ளது.

அட்டாங்க யோகம் விரிவாகவே கூறப்பெற்றுள்ளது. இதுபற்றித் தமிழில் பல்வேறு நூல்கள் விளக்கம் தருகின்றன. அவற்றுள் இந்நூல்தரும் விளக்கமும் சிறந்த இடம் பெறுதற்குரியது. சமாதியைக் கூறுங்கால், ஆறாதாரங்களி லும் ஆங்காங்குள்ள தாமரை மலர்மீது அதனதற்கு ஏற்ற "ஒளிபோல் உன்னற்கரிய பரஞ்சுடரை உன்னி உன்னி விழுங்கித் தன்னையறிந்து தலையிருத்தல் சமாதி எனலாம்" என்று இவர் கூறியிருப்பது காணத்தக்கது.

மாணிக்கவாசகர் துதியில் புத்தரைச் செக்கிலிட்டரைத்த செய்தி வருகின்றது. இஃது ஒரு புதிய செய்தி. தீவுகளின் இயற்கை சொல்லுமிடத்து முற்காலக் காப்பியங்களில்

வரும் நாட்டுப்படலம், நகரப்படலம் போன்ற வருணனை சிறப்பாக அமைந்துள்ளது. துதிப்பாடல்களும் சில இடங்களில் அருமையாக உள்ளன. திரிபுரம் எரித்தபோது தேவர்கள் துதித்தது எட்டுப் பாடல்களில்; அவற்றுள் ஒன்று ஈண்டுத் தரப் பெறுகின்றது.

பருதி யதனுள் விரிவெயிலாய்,
மதியில் நிலவாய், பணிவிசும்புள்
ஒருவர் ஒளியாய், வளியதனுள்
ஊறாய் கனலுள உருவமாய்,
திரைசேர் புனலுள் உறுசுவையாய
திண்மா நிலத்தின் உறைமணமாய்,
மருவி யுறையும் மணமிடற்று
வரதா! நின்னைத் தொழுதோமே.

மற்றோர் இடத்தில், வியபோகனத்தோத்திரம் என்ற இடத்தில், பத்துப்பாடல்கள் தோத்திரமாய் உள்ளன. இது பாசுபத விரத்தத்தின் இறுதியில் செய்யத்தக்க தோத்திரம்; பிறவி அகன்றிட வேண்டுவது; ஆதிசங்கரர் தம்முடைய மாபாடியத்தில் மறுத்திருக்கிற சைவசமயமானது பாசுபத சமயமே என்பது குறிப்பிடத்தக்கது.

இரண்டாம் காண்டத்துள் கௌசிகன், நாரதன், அம்பரீடன் முதலியோர்களின் வரலாறு, அட்டமூர்த்தம், திருவைந்தெழுத்து பலன் முதலாய அட்ட மூர்த்தம், தீக்கை, சிவபூசை, அகோரபூசை, மந்திரம் விசயாபிடேகம், தானங்கள், பிரதிட்டை ஆகிய பொருள்கள் சொல்லப் பெற்றுள்ளன.

வரகுணராமபாண்டியர், சிறந்த காவியம் செய்யும் ஆற்றல் படைத்தவர். ஆயினும், காவியத்தில் தம்புலமையைக் காட்டவேண்டா என்று இறைவன் புகழைப்பாடுவதிலேயே புலமையை அர்ப்பணித்துள்ளார் என்று சொல்வதில் இருவேறு கருத்து இருக்கமுடியாது. தொகுப்பாகச்

சொல்ல வேண்டுமானால் இந்தப் புராணம் சரியை கிரியைப் பகுதிகள் பலவற்றை உணர்த்தும் சிறந்த ஒரு சாத்திர நூலாக அமைந்துள்ளது என்று சொல்லலாம்.

**(ஆ) வாயுசங்கிதை:** வடமொழியிலுள்ள வாயுசங்கிதை நாலாயிரம் கிரந்தம் கொண்டது.[5] இதனை அதே பெயருடன் வரகுணராம பாண்டியர் தமிழில் ஒரு புராணமாக மொழி பெயர்த்தார். இந்நூல் பூர்வகாண்டம் உத்தரகாண்டம் என்ற இருபிரிவுகளாய் உள்ளது. இவற்றுள் பூர்வகாண்டம் பாயிரமும் 30 அத்தியாயங்களும் 537 பாடல்களையும் கொண்டது; உத்தரகாண்டம் மீண்டும் தனியான ஒரு பாயிரமும் 30 அத்தியாங்களும் 797 பாடல்களையும் கொண்டது; ஆகமொத்த அத்தியாங்கள் 60; பாடல் தொகை 1334.

முனிவர்கள் பிரமலோகமடைந்து பிரமனை முத்திக்கு வழிகாட்டுமாறு வினவ, அவன் "நீவிர் இச்சக்கரம் வீழ்கின்ற இடமாகிய நைமிசாரண்யம் சென்று தவம் புரியுங்கள். அங்கு வாயுதேவன் போந்து முத்திவழி அருளுவான். பின்னர் நீவிர் தவம் முடித்து பிரமலோகம் அடையலாம்" என்று அறிவித்தான். அவ்வாறே அவர்கள் தவம் புரிந்து, வாயுதேவனால் உபதேசிக்கப்பெற்ற வரலாற்றைக் கூறுவதால் 'வாயுசங்கிதை'[6] எனப் பெயர்பெற்றது.

நூலில் வழக்கம்போல தனியான விநாயகர் காப்புச் செய்யுள் ஒன்று உண்டு. இரு காண்டங்களுக்கும் தனித்தனியே விநாயகர் சிவம் சக்தி முருகன் வணக்கங்கள் சொல்லப்பெற்றுள்ளன. பூர்வகாண்டத்தில் சிவபெருமான்

5. கிரந்தம் என்பது ஒற்றெழுத்து நீக்கி 32 எழுத்துகளையுடைய ஒரு வட மொழிச் செய்யுள் அளவாகும்.
6. **வாயுசங்கிதை–** இது வடமொழியில் 'வாயவியாசம்மிதை' என வழங்கும். வைணவமரபில் அம்மரபுக்குரிய ஆகமங்கள் பெரும்பகுதி 'சங்கிதை' என்றே வழங்கப்பெறும். 'சம்ஹிதை' என்ற வடசொல். 'தொகுப்பு' என்று பொருள்படும்.

தன்மை, மாயை, பிரபஞ்சத்தின் காலம் முதலான பலவும் உற்பத்தி, பிரமன் வமிசம், தக்கயாக சங்காரம் முதலான சில சிவகதைகள், அருளின் செயல், பாசுபதவிரதம், உபமன்யு வரலாறு என்பனவும்; பிரமவமிச வரலாற்றில் பல இருடிகள் அவர்கள் மனைவியர் புதல்வர் முதலான வம்ச பரம்பரை யாவும் வேறெங்கும் காணாத அளவு மிக விரிவாகச் சொல்லப் பெற்றுள்ளன.

**உத்தரகாண்டம்** பெரும்பாலும் சாத்திரப் பகுதியா யுள்ளது. கண்ணனுக்குச் சிவதீக்கை செய்த ஒரு கதைமட்டும் இவண் கூறப்பெற்றுள்ளது. சிவமந்திரமூர்த்தங்கள் நிட்கள வடிவம், சிவலிங்க இயல்புகள், உமாமகேசுவர பூசை, கிரியாபூசை, ஓமம், மாதபூசை, காமியகன்மம், அக்கினி காரியம், சிவவிரதங்கள், ஞானயோகம் என்ற பொருள்கள் இங்கு இடம் பெற்றுள்ளன. இறுதியில் முனிவர் காசி யடைந்து பாசுபதவிரதத்தால் பசுபாசம் தவிர்த்து முத்தி யடைந்தனர் என்று புராணம் முடிகின்றது.

நூலெங்கும் சாத்திரமும் தோத்திரமும் பக்தியும் ததும்பி வழிகின்றன. பூசைமுடிவில் செய்கின்ற தோத்திரத்தை ஒரு தனி அத்தியாயத்தில் முப்பது பாடல்களால் சொல்லிக் காட்டுகின்றார். மேலும் பல இடங்களில் மும்மூன்று பாடல்களில் துதி அமைக்கின்றார். பூர்வகாண்டம் 13:3–6; 20:5–7; 15–17; உத்தரகாண்டம் 24:1–27. நூலெங்கும் அத்தியாய இறுதியில் பல சுருதிப்பாடல் தவறாமல் அமைந்துள்ளது.

சிறப்பான சில செய்திகளைத் தொகுத்துக் கூறலாம். திருத்தொண்டர் வணக்கப்பாடல் தனிச்சிறப்புடையது.

கார்மிடற் றிறைவன் கருணைபெற் றுருகிக்
கனிந்துமெய் யடியவர் விரிந்த
சீர்புகழ்ந் திடுமென் நா;அவர் கமலச்
சேவடி பணியுமென் தலை;மெய்

ஓர்தரும் அவர்தம் தொழில்செயும் என்கை;
ஆங்கவர் உணர்ந்து தன்காக
ஏற்பெற உரைத்த ஏவலில் செல்லும்
என்னிரு கால்கள்; வைகலுமே.

*பரம்பொருள் இயல்பை ஆறு பாடல்களால் பகர்கின்றார். ஒரு பாடல் இது.*

ஒன்றதா யுறையும் காரணந் தன்னை
ஒழிவர விரிப்பவன் யாவன்,
நின்றபேர் உலகில் நிறைந்தமன் உயிரை
நீங்கலா தியக்குவோன் யாவன்,
துன்னுபேர் உயிருள் உறைந்துமவ் வுயிரால்
தோன்றிய அறிகலான் யாவன்,
மன்றநீ யுலகம் யாவையும் கெடினும்
மாய்கலா துறைபவன் யாவன்.

*நூல்முழுதும் இலக்கியத்துறையில் கம்பராமாயணத் தொடர்களும் கருத்துகளும், சமயத்துறையில் சிவஞான சித்தியார்த் தொடர்களும் கருத்துகளும் நிரம்பியிருப்பதைக் காணலாம்.*

***(2) வரதுங்கராமன்.*** *(கி.பி. 1588-1613?) இவர் திருக்கருவையிலிருந்து ஒரு பகுதியை ஆண்டு வந்தார். இவர் பாடியனவாகத் தெரிந்த நூல்கள் நான்கு: பிரமோத்திரகாண்டம்*[7] *என்னும் புராணம்; கருவை அந்தாதிகள்.*

***பிரமோத்தரகாண்டம்:*** *இது சிவபுண்ணியக் கதைகளைக் கூறும் ஒரு நூல். வடமொழியில் கந்தபுராணத்தின் மூன்றாம் பிரிவு பிரமாண்டபுராணம். அதன் மூன்றாம் பகுதியே பிரமோத்தர காண்டம்.'*[8] *இஃது 22 அத்தியாயங்*

---

7. பிரபந்த இலக்கியங்கள் (இயல்-4) அந்தாதிகள் என்ற தலைப்பில் காண்க.
8. காண்டம்-நூலின் பெரும்பகுதி.

*களை உடையது. பிரசித்தமான வடமொழித் தோத்திர மான **'சிவகவசம்'** இதில் உள்ளது; தமிழ் நூல் வடமொழியிலிருந்து மொழியாக்கம் செய்யப்பெற்றது என்று சிறப்புப்பாயிரம் கூறும்.*

கறங்குதிரைப் பெருங்கடல்சூழ் அவனிபுரந்
திகழ்கடிந்து கலியை மாற்றி
மறந்திகழ இயங்கியவேல் வரதுங்க
ராமனியல், மதுரைச் சங்கம்
சிறந்தஅறு காற்பீடந் தனிபிரமோத்
தரகாண்டம் தென்சொல் ஆக்கி
அறந்தழைக்கும் கவிஞர்செவிக் காரமுத
மாகஅரங் கேற்றி னானே.

*மதுரைச் சங்கத்தில் அறுகாற் பீடத்தில் வரதுங்கராம பாண்டியர் தம் நூலை அரங்கேற்றினார் என்று பாடல் பகர்கின்றது. இந்த நூலில் தம் குருநாதர் ஈசான முனிவருக் கும் ஒரு வணக்கப் பாடல் பாடியுள்ளார்.*

*இந்தப் பனுவல் பாயிரமும் 22 அத்தியாயங்களும், 1323 திருப்பாடல்களும் கொண்டது. இதன் அவையடக்கப் பாடல் இறைவனையே விளித்து "உன்புகழையானும் பாடுகின்றேன்" என்று பகர்கின்றது.*

அஞ்சன மிடற்றினாய் நின்நிலை
முற்றும் அளவிட் டன்றி
செஞ்சா லின்வழுத் தொணாதேல்
விதியும் வாய்திறக் கொணாதாம்
விஞ்சையர் எங்குத் தத்தம்
மதியினில் வியுலம் காறும்
வஞ்சமற் றுரைக்க லாமேல்
அடியனும் வழுத்த லாமால்,

பாயிரப் பகுதியில் வழக்கம்போல் நடராசர் துதியும் சிவகாமியம்மை துதியும் நால்வர்துதி முதலியனவும் சொல்கிறார். முந்நீரில் அப்பர் மிதந்ததை **“வடதளிரின் நாரணன்போல் இனிதமர்ந்த நாவலன்”** என்று சுவை படப் பேசுகின்றார். முதல் அத்தியாயம் பஞ்சாக்கர மகிமையை உரைப்பது; அதில் 4-7 பாடல்களில் நூலுக்குப் பதிகம்போல் அத்தியாயங்களின் பொருளை நிரல்படச் சொல்கின்றார். நூலானது திருவைந்தெழுத்து, திருநீறு, உருத்திராக்கம் ஆகிய சிவசின்னங்களின் பெருமையையும் பிரதோஷ விரதம், உமாமகேசுவரவிரதம், சோமவார விரதம், சிவராத்திரிவிரதம் ஆகிய விரதங்களின் பெருமை யையும்; சிவபூசை, உமாமகேசுவரர்பூசை ஆகிய பூசைகளின் சிறப்பையும்; நிருத்தம் சிவநாமம் போன்றவற்றின் மகிமையையும் கூறவந்தது. மகிமைகளைக் கதைகளாகக் கூறுகின்றது.

பெருங்காப்பியங்களையொத்த நெறியில் ஆசிரியர் நூலை அமைந்திருப்பது பாராட்டத்தக்கது. வசுமதியின் சுயம்வரம் கூறுமிடத்து 14 பாடல்களில் சுயம்வரம் கூறுகின்றார். சிந்தாமணியொத்த பழங்காப்பியங்களில் காண்பது போல் வரிப்பாடல்களும் துதிப்பாடல்களும் இசைக்குரியனவாகப் பல அமைக்கப்பெற்றுள்ளன. ஏழாம் அத்தியாயத்தில் கோவை நூல்களிலும் அகப்பொருள் இலக்கணத்திலும் கூறும் மரபையொட்டி, காட்சி ஐயம் தெளிவு என்று தொடங்கி முன்னை ஊழ்வினையினால் மன்றல் எட்டினுள் கந்தர்வ மணம் முடிவது வரையில் முறையே கூறுகின்றார்.

கோகன்ன வரலாற்றைக் கூறும்போது விநாயகர் தம் முன் இராவணனைக் குட்டிக் கொள்ளச் செய்தார் என்பதும், அதன்மேல் அவ்வாறு குட்டிக் கொள்வது வழக்கமாயிற்று என்பதும் கூறப்பெற்றுள்ளன.

*நாட்டு வருணனைப் பகுதிகள் நூலினுள் பல இடங் களில் காணலாம். பாடல்கள் மிகவும் சுவையுடையன:*

கலைமகள் வடிவனை மராங்க வர்ந்தன
மலைமகள் எழிலினைப் பூவை வாங்கின,
கொலைமகள் கவினைநீ டிலவங் கொண்டன
அலைமகள் அழகினை அசோக ணிந்தவே.

தேசுறு கிளையின மொழுங்கிற் சேண்வழி
வீசிய சிறையவாய்ப் பறத்தல், வேனில்வேந்து
ஆசைசூழ் உலகங்கொண் டதற்கு நாட்டிய
பாசிலைத் தோரணப் பான்மை போன்றவே.

*நூலில் நிலையாமையை விரிக்கும் பாடல்கள் பல; இதுபோலவே நல்வினை, தீவினை, சிவபுண்ணியம், சிவ துரோகம் என்பன தொடர்ந்து பிறந்து கொண்டேயிருக்கும் என்பதைப் பல இடங்களில் விரித்துச் சொல்லப் பெறுகின்றது. விபூதி மகிமையுரைத்த விடத்தில், ஓர் அரக்கன், திருநீறு பட்டமாத்திரத்தில் அழகிய மானிட வடிவமடைந்து உழுவை, ஞமலி, காகம், கமடம், அரக்கன் முதலானபல பிறவிகள் எடுத்தமை சொல்லுகிறான். சோமவாரவிரத பலனைக் கூறும் பாடல்கள் மிகவும் சிறப்பானவை.*

நித்தியமாய் ஆனந்த உருவமாகி,
நிறைவுபடும் பொருளாகி, கறைப டாது
சத்தியமாய், அனைத்துயிர்க்கும் உள்ளீ டாகி,
சங்கற்ப விகற்பங்கட் கயல தாகி
வைத்தசிவ தத்துவத்தின் இயல்பு தன்னை
வருகுரவன் அருளின்இனி துணர்ந்து வாழும்
அத்தகையர் பிறப்பாழி இடைநின் றேறி
அழியாத சிவகதியில் அடைவ ரன்றே.

*இப்பகுதியையடுத்து, சிவபரம்பொருள் என்பது மும் மூர்த்திகளையும் கடந்த நிலையிலுள்ளது என்பதைப் பல பாடல்களால் சைவசிந்தாந்தக் கருத்துக்கியைய அழகுபடக் கூறுகின்றார்.*

யாவ னொருவன் எவ்வுயிரும்
எல்லா உலகங் களுமுடையான்,
யாவ னொருவன் கடவுளருக்
கெல்லா முறைமை பூண்டுள்ளான்
யாவ னொருவன் திரிபுரமும்
எரியக் கனகசிலை குனித்தான்
யாவ னொருவன் விடம்நு கர்ந்தான்—
அவனே எங்கட்கு இறையோனே.

என்றும் எவனி ராசதத்தின்
அயனை ஈன்று படைப்பிப்பான்
என்றும் எவன்சாத் துவிதத்தின்
அரியை ஈன்று புரப்பிப்பான்
என்றும் எவனோ தாமதத்தின்
அரனை யீன்று துடைப்பிப்பான்
என்றும் அவனே எம்குலத்தின்
இணைத்தாள் நீழல் அளிக்குமால்

*பாடல்கள் இவருக்கு அழகாய் அமைகின்றன.*

*சைவ சமயத்தில் சரியைக்கான சாத்திரப் பகுதி கூறும் நூல்கள் பெரும்பகுதி புராணங்களே. அவற்றுள் பிரமோத் தர காண்டம் முதலிடம் வகிக்கின்றது. இந்த நூற்றாண்டின் தொடக்க காலம் வரையில் சோழநாட்டில் இந்நூல் ஏடு வைத்துப் பூசிக்காத, சைவர்- வீடு இல்லை. நூல் மிகவும் நல்ல நூலாயமைந்தது. ஆங்காங்கு மிகச் சிறப்பான இலக்கியச் சுவை பொதிந்த பாடல்களும் இதனுட் பல உள்ளன. புராணம் என்றே இதை இந்த நூற்றாண்டில்*

*ஒதுக்கிவிடுகின்றனர். புராணமாயினும், தமிழ் கற்பவர் களால் இஃது இன்னும் அதிகமாய்ப் பயிலத்தக்கது.*

*இதன் இரண்டு சிறப்பான பாடல்கள் காணத்தக்கவை.*

கண்ணுதலா லயநோக்கும் கண்களே கண்கள்;
கறைகண்டன் கோயில்புகும் கால்களே கால்கள்;
பெண்ணொருபா கனைப் பணியும் தலைகளே தலைகள்;
பிஞ்ஞகனைப் பூசிக்கும் கைகளே கைகள்;
பண்ணவன்தன் சீர்பாடும் நன்னாவே நல்நா;
பரன்சரிதை யேகேட்கப் படுஞ்செவியே செவிகள்;
அண்ணல் பொலங் கழல்நினைக்கும் நெஞ்சமே நெஞ்சம்;
அவடினக்கீழ் அடிமைபுகும் அடிமையே அடிமை.

குணமிலா ராயினும் குலீன ராயினும்
மணமலி கருங்குழல் மகளி ராயினும்
பணமணி அரவரைப் பரம னன்பரே
கணமலி உலகெலாம் பாவும் காட்சியார்.

*இவைபோலவே அடியார்கள் செய்கின்ற அற்பமான பூசையும் கூட மிகச் சிறந்த வழிபாடாக இறைவன் ஏற்றுக் கொள்கின்றான் என்று கூறும் பாடலும் மிகவும் சிறப்பானது.*

நினைவரும் பாத கங்கள்
ஐந்தையும் நீக்கி இன்பக்
கனைகடல் துளையப் பண்ணும்
கண்ணுதல் கருத்தி லாது
தினையளவு அடியார் செய்த
சிற்றியல் பூசை யேனும்
பனையள வாகக் கொள்ளும்
பரமன்எம் பரமன் ஆவான்.

***(3) அதிவீர ராமபாண்டியர்** (கி.பி. 1564–1610): தமிழ் இலக்கியவானில் மிக்க பிரகாசத்தோடு விளங்கும்*

சுடர்களுள் இவரும் ஒருவர். இவர் பாடிய வெற்றி வேற்கையையும் நைடதத்தையும் படிக்காத பள்ளிச் சிறாரும் இருந்ததில்லை 'நைடதம் புலவர்க்கு ஔடதம்' என்பது பழமொழி. இவர் பாடியனவாக வேறு இரண்டு நூல்கள் காசிக்கண்டம், கூர்மபுராணம் என்பவை.[9]

*(அ) காசிகாண்டம்:* வடமொழிச் சிவபுராணம் பத்தினுள் ஒன்றான காந்தம் ஆறுசங்கிதை கொண்டது. இவற்றுள் ஒன்றான சங்கரசங்கிதை பன்னிரு பிரிவுடையது. பிரிவு, கண்டம் எனப்படும். பன்னிரண்டில் நான்காவது காசிக்கண்டம்.[9] இதன்தமிழ் மொழியாக்கம் இத்தமிழ்ப் புராணம். இதுவும் பூர்வம், உத்தரம் என்ற இருபெரும் பிரிவுகளையுடையது. சிறுபிரிவுகளைான அத்தியாயம் நூறும் பாடல் 2526- உம் கொண்டது. பூர்வகண்டம் அந்தியாயம் 41, பாடல் 1209; உத்தரகண்டம் அத்தியாயம் 59, பாடல் 1317.

பாயிரப்பகுதி பிற புராணங்களின் பாயிரப்பகுதிகளை விட சற்று நீண்டு விரிந்தது. அறுபத்து மூவருக்குத் தனித் துதியும் சிவனடியார் வணக்கமாக இரண்டு பாடல்களும் வாழ்த்துப்பாடல் ஒன்றும் இதில் அமைந்துள்ளன. இவருடைய குருவாகிய சுவாமி தேவர் வணக்கப்பாடல் ஒன்றும் உள்ளது.

பூர்வ உத்தரகாண்ட நிகழ்ச்சிகள் அகத்திய முனிவன் கேட்க குமரன் கூறுவதாகக் கதை அமைந்துள்ளது. காசியில் உள்ள எல்லா மூர்த்திகளையும் எவ்வாறு பணிந்து வழிபடவேண்டும் என்று இறுதிப்பகுதி 36 பாடல்களால் கூறுகிறது. கூறியபின் நூற்பயன் பலபாடல்களால் சொல்கிறது.

---

9. கண்டம்-துண்டு; காண்டம்-நூலின் பெரும்பகுதி.

சுடர்களுள் இவரும் ஒருவர். இவர் பாடிய வெற்றி வேற்கையையும் நைடதத்தையும் படிக்காத பள்ளிச் சிறாரும் இருந்ததில்லை 'நைடதம் புலவர்க்கு ஔடதம்' என்பது பழமொழி. இவர் பாடியனவாக வேறு இரண்டு நூல்கள் காசிக்கண்டம், கூர்மபுராணம் என்பவை.[9]

*(அ) காசிகாண்டம்:* வடமொழிச் சிவபுராணம் பத்தினுள் ஒன்றான காந்தம் ஆறுசங்கிதை கொண்டது. இவற்றுள் ஒன்றான சங்கரசங்கிதை பன்னிரு பிரிவுடையது. பிரிவு, கண்டம் எனப்படும். பன்னிரண்டில் நான்காவது காசிக்கண்டம்.[9] இதன்தமிழ் மொழியாக்கம் இத்தமிழ்ப் புராணம். இதுவும் பூர்வம், உத்தரம் என்ற இருபெரும் பிரிவுகளையுடையது. சிறுபிரிவுகளைான அத்தியாயம் நூறும் பாடல் 2526- உம் கொண்டது. பூர்வகண்டம் அந்தியாயம் 41, பாடல் 1209; உத்தரகண்டம் அத்தியாயம் 59, பாடல் 1317.

பாயிரப்பகுதி பிற புராணங்களின் பாயிரப்பகுதிகளை விட சற்று நீண்டு விரிந்தது. அறுபத்து மூவருக்குத் தனித் துதியும் சிவனடியார் வணக்கமாக இரண்டு பாடல்களும் வாழ்த்துப்பாடல் ஒன்றும் இதில் அமைந்துள்ளன. இவருடைய குருவாகிய சுவாமி தேவர் வணக்கப்பாடல் ஒன்றும் உள்ளது.

பூர்வ உத்தரகாண்ட நிகழ்ச்சிகள் அகத்திய முனிவன் கேட்க குமரன் கூறுவதாகக் கதை அமைந்துள்ளது. காசியில் உள்ள எல்லா மூர்த்திகளையும் எவ்வாறு பணிந்து வழிபடவேண்டும் என்று இறுதிப்பகுதி 36 பாடல்களால் கூறுகிறது. கூறியபின் நூற்பயன் பலபாடல்களால் சொல்கிறது.

9. கண்டம்-துண்டு; காண்டம்-நூலின் பெரும்பகுதி.

*காசிபன் சிறுவன் துதிக்குமிடத்து எட்டுப் பாடல்கள் துதிப்பாடல்களாக உள்ளன. ஒரு பாடல் குறிப்பிடத்தக்கது.*

துதியும், துதிக்கப் படுவோனும்
துதிக்கு மவனும் உலகீன்ற
விதியும் விதியை அளிப்போனும்;
இவர்கள் அறியா விழுப்பொருளாம்
பதியு மாகி எவ்வுயிர்க்கும்
உயிலி யவற்றிற் பற்றில்லா
முதல்வ, நின்னை உணர்ந்தெவ்வாறு
எளியேன் ஏத்த முயல்வதுவே.

*இது பதியிலக்கணம் பகர்வது சிந்திக்கத் தக்கது.*

*துருவன் திருமாலைத் துதிப்பதாக இவர்கூறும் பாடல்கள் சமயப்பொதுமை உணர்வோடு பாடியவை.*

அரியநான் மறையின் காலநீ எழுத்தின்
அகரம் நீ, அருமறைப் பொருளிற்
பரைதப நின்ற உபநிட தமும்நீ,
வேள்வியிற் புரவிநன் மகம்நீ,
விரைவினில் வளிநீ, வருணமோர் நான்கின்
வேந்தன் நீ, மருவிய கரணத்து
உரைபெறு மனம்நீ, பூதமோ ரைந்தின்
ஒய்விரு விசும்புநீ யாமால்.

*சிவபிரான் திருமாலுக்குக் கங்கையின் பெருமையைக் கூறுமிடத்து, கங்கையின் ஆயிரநாமங்களில் 77 பெயர்கள் குறிப்பிடப் பெறுகின்றன. இதுபோலவே, பாகவதரைப் பழித்தும் சைவ நெறியைப் பழித்தும் கூறுவது இவருடைய பரந்து- விரிந்த சமய உணர்வைக் காட்டும் (98:19).*

பாக வதரோ டியையாது சைவ
நெறியைப் பழித்தும், சைவநெறி

போகு மவர்பால் இயைந்துதினம்
பாக வதரைப் புறமொழிந்தும்,
யாக முனிவர்க் கிடர்விளைத்தும்,
யாவர் பொருள்நல் கினர்அவர்
ஆக நெறியிற் கரிநாளும்
பகர்ந்து பதித னாயினனால்.

*நான்கு பாடல்களில் சிவபெருமான் திருநாமங்களை இவர் அடையின்றிக் கூறிக்கொண்டு செல்வது மிகவும் அருமையாக உள்ளது. (8: 53–55)*

நீல கண்டன் மழுவேந்தி
நெற்றிக் கண்ணன் பூதேசன்
கால காலன் விடையூர்ந்தோன்
கங்கை சூடி காமாரி
சூல பாணி கரியுரித்தோன்
தோகை பாகன் காபாலி
ஆல முண்டோன் மதிசூடி
அந்த காரி ஈசானன்

*இதில் சிவபெருமான் திருநாமங்கள் அடையின்றி வருதலைக் காண்க.*

வாசு தேவன் சனார்த்த னன்போர்
மதுசூ தனனச் சுதநெடுமால்
ஈசன் அரன்சங் கரன்கிரிச
னிறைவன் பினாக பாணிசிவன்
கேசி நாசன் மணிவண் ணன்கரு
டத்துவ சன்நர சிங்கன்
நாச மில்லோன் விடையூர்தி நம்பன்
மிருத்துஞ் செயன் பாகன்.

*இந்தப் பாடலில் சிவநாமங்களையும் திருமால் நாமங்களை யும் அடிக்கு அடிமாற்றிச் சொல்வது இவர் வேண்டு*

மென்றே அரன்-அரி ஒற்றுமையைப் போதிக்க வந்தவர் போலத் தோன்றுகின்றது. அடுத்த இரண்டு பாடல்கள் இம்மாதிரியே உள்ளன.

காயத்திரி செபித்தலின் பெருமையைப் பல பாடல் களில் சொல்லுகின்றார். அவற்றுள் ஒரு பாடல்:

ஆறிவரும் காயத் திரிதனக் கிணையா
அறைவதொன் றில்லை யாங்கதுபோல்
நிறைபுனல் உளங்கூர் காசியம் பதிக்கு
நிகர்தரு பதியும்ஆங் குறையும்
இறைவனை நிகர்க்கும் கடவுளும் இலையால்
இயம்புகா யத்திரி யெழுதா
மறையொடுங் கமல மலரின்நான் முகற்கும்
ஈன்றதா யெனவகுத் துரைப்பார்.

காயத்திரியை யொத்த மந்திரமில்லை; காசிக்கு நிகரான பதியுமில்லை; விசுவநாதருக்கு நிகரான கடவுளும் இல்லை; காயத்திரியே மறைக்கும் பிரமனுக்கும் ஈன்றதாய் என்கின்றார்.

ஆசாரங் கூறியது என்ற 38–ஆம் அத்தியாயம் சிறந்த சைவ ஆசார மட்டுமன்று; உலகுக்கே பொதுவான நல்லாசாரம் கூறுவது இல்லொழுக்கம் கூறுவது என இரு அத்தியாயங்கள்: 35,38 இரண்டும் சிறந்த சரியைப் பகுதி கூறுவன.

ஆடவரின் சாமுத்திரிகா லட்சணத்தை நாரதன் 9 பாடல்களால் கூறுகின்றான். பெண்களின் உருவ இலக் கணத்தையும் பலனையும் தனியே ஓரதிகாரத்தால் ஓது கின்றார். இல்லறங்கூறிய இடத்து அட்டாங்கயோகத்தின் முதல் இரண்டு படிகளும் வானப்பிரத்தம் கூறுமிடத்து ஏனைய படிகளும் விளக்கப்பெறுகின்றன. பிரமசரியம் கூறியவிடத்து குழந்தை பிறக்குமுன் சீமந்தம் தொடங்கிச்

செய்யப்பெறும் சோடச கிரியைகளில் பல நுவலப் பெறுகின்றன.

*(ஆ)* **கூர்மபுராணம்:** பதினெண் புராணங்களில் ஒன்றும் சைவபுராணம் பத்தில் ஒன்றும் ஆகும். திருமால் கூர்மாவதாரம் எடுத்தகாலை அவ்வடிவத்தோடு சிவனுடைய பெருமையை முனிவர்கட்கு உரைத்த காரணத்தால் **'கூர்ம புராணம்'** எனப் பெயர்பெற்றது. இதில் பூர்வகாண்டம் பாயிரம் அனுக்கிரமணி[10] என்ற பதிகங்களும் 48 அத்தியாயங்களும் 2729 பாடல்களும்; உத்தரகாண்டம் 47 அத்தியாயங்களும் 988 பாடல்களும் ஆக 95 அத்தியாயங்களும் 3717 பாடல்களும் உடையன. இரண்டு காண்டங்களுள்ளும் தனியே கடவுள் வாழ்த்துப் பகுதி உண்டு. இங்கு இரண்டிடத்தும் நடேசர், உமாதேவி, விநாயகர், முருகர் ஆகியோர் வணக்கம் உண்டு. சிறப்புப் பாயிரப்பாடல் நூல்வழியும் ஆக்கியோன் பெயரும் கூறுகின்றன.

கடலக முழுதும் பொதிந்த பேழ்வயிற்றுக்
    கடவுள்மோட் டாமையெம் பெருமான்
வடமொழி தொகுத்த தெய்வமாக் கதையை
    வடித்தசெந் தமிழினால் செய்தான்
படுமதம் செருக்கிப் பாருடல் பிளந்து
    படர்கின்ற மழலைவண் டோச்சும்
அடுசினக் களிற்று மானவேல் வழுதி
    அடலதி வீரபூ பதியே.

நூற்பயன் கூறும் இறுதிப் பாடலும் அதிவீர ராமரைக் குறிப்பிடுகின்றது.

எதிர்மலைத் தேற்ற வெஞ்சமத் தரசர்
    இடுதுறை அடையளந் தறியா

---

10. அனுக்கிரமணி என்பது வழக்கம்போல் நூலில் அமைந்த அத்தியாயப் பெயர் கூறும் பதிகமாகும்.

மதுரையும் புகாரும் வஞ்சியும் புரக்கும்
மானவேல் வழுதியர் பெருமான்
அதிர்பொலங் கழற்கால் அடல்அதி வீரன்
அரில்தபத் தெரிந்துநன் கிசைத்த
முதுதமிழ்க் கூர்ம புராணமுற் றுணர்ந்தோர்
முத்திவீட் டினிதுவீற் றிருப்பார்.

ஆசிரியர் தமது ஞானகுருவாகிய சுவாமி தேவரை ஒரு பாடலில் அருமையாகத் துதிக்கின்றார்.

அனுக்கிரமணியில் கூர்மபுராணமும், பிற சைவ புராணங்கள் போல, சிவபராக்கிரமங்களும் சரியை கிரியை யோகம் ஞானநெறிகளும், அந்நெறியில் சென்றோர் சரிதங் களும் கூறும் நூலாகும் என்பது தெரிவிக்கப் பெறுகின்றது.

பூர்வகாண்டமானது வருணாசிரமம், யுகதர்மம், உலகநிலை, சம்புத்தீவு, பிலக்கத்தீவு, மேரு, நவகண்டம், மன்வந்தரம் என்பனவும்; பிரகிருதி, தத்துவங்கள் பிரபஞ் சம், பிருகு, புலத்தியன் சூரியன் சந்திரன் மனு தோற்றங் களும் மரபும்; தக்கன் அந்தகன் வியாதன், இராமன், கண்ணன் ஆகியோர் வரலாறுகளும் கூறுகின்றது. இராமன் வரலாறு, அவன் வைகுந்தம் சென்றது வரை-அதாவது "தன்சோதிக்கு எழுந்தருளியது" வரை-மிகவும் விரிவாகச் சொல்லப் பெற்றுள்ளது. அங்ஙனமே கண்ணன் வரலாறும் ஆறு அத்தியாயங்களில் மிகவும் விரிவாகச் சொல்லப் பெற்றுள்ளது. பொதுவாக இப்பொருள்கள் எல்லாப் புராணங்களிலும் சொல்லப் பெறுகின்றன என்றாலும், இங்கு மிகவும் விரிவாகக் கூறப்பெறுகின்றன.

இராமன் வரலாறு முழுமையிலும்கம்பராமாயணக் கருத்தும் சொல்லும் தொடர்களுமாக அதிகமாகப் பயின்று வருகின்றன. மாவலியின் கதை, தாடகை வதம், வில் இழுத்தது முதலான பலபகுதிகள் கம்பனிலிருந்து அப் படியே எடுக்கப் பெற்றவை. இராமன் சேதுவில் இலிங்கப்

*பிரதிட்டை செய்த வரலாறு ஒரு தனி அத்தியாத்தில் நவிலப் பெற்றுள்ளது. அதிலுள்ள மூன்று துதிப்பாடல்கள் சிறப்பானவை. அவற்றில் ஒன்று இது:*

அருவமாய் உருவமாய் அநாதியாய் ஒன்றாய்
ஐம்பெரும் பூதமாய் வேறாய்த்
தெரிவரும் பொருளாய்த் தெரிபவை யாகிச்
செங்கண்மால் அயனென உரைக்கும்
இருவரும் காணா மறைப்பொரு ளாகிச்
சகத்தினை இயக்கியும் இயக்கற்
கரியது மாகித் துரியமாய்த் துரியா
தீதமாம் கடவுளே போற்றி.

*சேதுவும் காசியும் நருமதையும் போற்றிச் சொல்லப் பெற்றுள்ளன. எங்கும் தமிழ் மிகவும் போற்றப் பெற்றுள்ளது. முதல் படலத்தில் 18 புராணங்களையும் கூறுகின்றார். எங்கும் அழகான சந்தப்பாடல்கள் நிறைந்துள்ளன.*

*இரண்டாம் காண்டத்தில் வயிரவன், சலந்தர வதம், சுவேதன், நந்தி, திரிபுரதகனம், உபமன்யு, தாருகாவனம் ஆகியவை பற்றிய கதைகள் சொல்லப் பெறுகின்றன. சரியை கிரியைப் பகுதிகள் பல இங்கு உள்ளன. சுத்தா சமனக் கிரியைகளின் பொருள் ஓர் அத்தியாயத்துள் நவிலப் பெறுகின்றது. நான்கு ஆசிரமங்களும் விரிவாகப் பேசப் பெறுகின்றன. அவற்றுள் இல்லறமே மிகவும் விரிவாய் விளக்கப்பெறுகின்றது-பொதுவிதிகள், நீக்க வேண்டியவை, நித்திய கன்மங்கள் சிரார்த்தம், சூதகம் தானம் என்பன சில பொருள்கள். சாங்கிய யோகம், அட்டாங்க யோகம், பாசுபத யோகம், பத்திமை-தத்துவ தரிசனம் முதலான பொருள்களையும் காணலாம். பாசுபத யோகம் பற்றி ஒரு பாடல்:*

தத்துவ மனைத்துமருள் சார்பிரண வத்தால்
சுத்திசெய்து தன்னுருவ மென்னுருவு தோய

வைத்துயர்மெய்ஞ் ஞானமெனும் வான்புனலி நாடி
உத்தமவெண் ணீறணிதல் பாசுபத யோகம்

*நித்தியகன்மம் உரைத்தவிடத்து சூரிய தோத்திரமாக மூன்று பாடல்கள் அழகாக அமைக்கப்பெற்றுள்ளன. இவை சிவபூசை செய்வோர் சூரிய பூசையில் சொல்லத்தக்க சிறப்பு வாய்ந்துள்ளன. இவற்றுள் முதற்பாடல் இது:*

உள்ளத் திருளும் புறத்திருளும்
ஒழிக்கும் கதிராய்ச் சனாதனமாய்
தள்ளற் கரிய சோதியாய்
அசல மாகித் தனியமிர்தாய்
பிள்ளை பிறைசேர் முடியோனாய்க்
குடிலை யாகிப் பிரமமாய்த்
தெள்ளு மறைசேர் புருடனாம்
செங்கேழ்ப் பரிதி தாள்தொழுவாம்.

*நூலுள் ஆங்காங்கு துதிப்பாடல்கள் பல உள்ளன. இலக்குமி துதி செய்து திருமாலைக் காக்குமாறு வயிரவமூர்த்தியை வேண்டும் பாடல்கள் சிறப்புடையன.*

## 5. கமலை ஞானப்பிரகாசர்

*கமலை என்பது திருவாரூர். கமலை ஞானப்பிரகாசர் இலக்கண இலக்கியங்களிலும் சமய ஒழுக்கத்திலும் வல்ல பெரும் புலவராகவும் ஆசாரியராயும் வாழ்ந்து வந்தார்.*[11] *இவருக்கு மாணாக்கர் பல்லோராவர். அவர்களுள் பலர் பெரும்புலவராய்ப் புராணங்களும் சாத்திரங்களும் செய்தவர்கள். இவர் செய்த புராணம் இரண்டு. ஒன்று இது.*[12]

11. காலம் கி.பி. 1565 (16-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி)
12. மற்றொன்று. தந்திவனப்புராணம். தந்தி-யானை; வனம்-கா; ஆனைக்கா. சுவடியும் காகித ஏடும் திருவான்மியூர் உ.வே.சா. நூல் நிலையத்தில் உள்ளன. இது திருவானைக்காப் புராணம் (அச்சாகவில்லை)

***திருமழுவாடிப்புராணம்:*** *திருவையாற்றுக்கு வடக்கே கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள சிவத்தலம்; மழபாடி என வழங்குவது. ஞானப்பிரகாசர் இத்தலத்துக்கு மாசி விழாக் காண வந்தபோது, இப்புராணம் பாடினார். தலம் மழுசை, மழுவாடி என்றும் வழங்கப்படும். இத்தலம் மூவர் தேவாரமும் கொண்டது. மார்க்கண்டேயருக்காக இத்தலத்தில் சிவபெருமான் மழுவைத் தாங்கி ஆடினமையால் தலம் மழுவாடி ஆயிற்று.*

*இப்புராணம் 8 சருக்கங்களும் 571 பாடல்களும் கொண்டது. பாயிரப்பகுதியில் நூற்பாடல்கள் 610 என்று சொல்லப்பெற்றுள்ளது. "விருத்தத்தொகை அறுநூற்றொருபதாக-மருளாத செந்தமிழின் செய்யுளாக மாமழுவைப் புராணத்தை வகுத்துரைத்தான்" என்பது பாயிரம். எனினும் இன்று கிடைத்து அச்சிட்டது 571 பாடல்களே.*

*பாயிரப் பகுதியில் கடவுள் வாழ்த்தும், நூல்வரலாறும், நாட்டுவளமும் சொல்லப்பெறுகின்றன. வாழ்த்துப் பகுதி வழக்கம் போல் அமைந்துள்ளது. நால்வரையும் துதித்தபின் சூதபுராணிகரை வணங்குகின்றார். சுந்தரர் துதிபாடும் போது பரவை, சங்கிலிதுதிக்கை ஆகிய சொற்களைச் சிலேடையாக நயமுற அமைத்துப் பாடுகின்றார்.*

பொங்கெழில் பரவை நன்பால்
  புகுந்ததுறப் படிதல் வேண்டிச்
சங்கிலித் துவக்கை நீக்கித்
  தனதருந் துதிக்கை யாலே
அங்குச பாகந் தன்னை
  அடைந்தேவல் கொண்டு வீறும்
துங்கமுத் தமிழ்மதநச்சித்
  துரத்தினைத் துசித்தல் செய்வாம்.

*அடுத்த மாணிக்கவாசகர் துதியும் சூதபுராணர் துதியும் நயமாக அமைந்தவை; படித்து நுகரத்தக்கவை. இத்தகைய*

*நயமான தொடையை நூலெங்கும் காணலாம். மற்றுமொரு பாடல்:*

மனத்திடைச் சிவனை யன்றி
 மற்றொன்றை நினையார்; ஆவின்
தனத்தினை யன்றி மாதர்
 தனத்தொடல் அறியார்; பாசஞ்
சினத்தலே யன்றி யார்க்கும்
 சினஞ்செயக் கருதார்; தக்கோர்
இனத்தினை யன்றிச் சுற்றம்
 இனமென வியந்தி டாதார்.

*அடுத்த தலச்சருக்கம் நகரப்படலம் ஒத்தது. ஒரு பாடலில் திருவம்பலம், காளத்தி, குடந்தை, காசி இவை நான்கும் அறம், பொருள், இன்பம், வீடு அடைவிக்க உதவும்; ஆனால் இம்மழுவை நான்கையும் பெறத் தரும் என்கிறார். இவர் புராணம் பாடிய காலத்தில் மழுவாடிச் சிவாலயத்திருப்பணி நடைபெற்றுக் கொண்டிருந்தது போலும்; திருப்பணிக்கு ஒரு செங்கல் தருபவர், கல் வேக மரம் கொடுப்பவர், மரம் இழுத்த வண்டிமாடு, சரீரவாக்குச் சகாயம் புரிந்தவர், கூலிக்குப்பணி செய்தவர்– எல்லோரும் நற்கதி பெறுவர் என்று இவர் செப்புவது இந்த எண்ணத்தை தருகின்றது. மூன்று பாடல்கள் இவற்றைத் தெரிவிக்கின்றன.*

உறுதியாச் சிவால யத்திற்கு
 ஒருசெங்கல் அடுக்கு தற்குச்
சிறிதுதந் திடுவோர் தாமும்
 சிவலோகத் தடைவர் என்றால்
பெறுதிருப் பணித னக்கும்
 பெரும்பொருள் உதவும் பேற்றை
அறுதியிட் டடிவள வென்றே
 அறைவதற் கெளிமை யன்றே.

தட்டிலா திப்பதி தனில்தி ருப்பணிக்
கிட்டிகை வேகுதற் கிடுவ தாகவே
வெட்டிய தருக்களும் மிக்க வண்டியில்
கட்டிய கிடாக்களும் கதிபொ ருந்துமே.

இரும்புகழ் முழுவை வாழும்
எம்பிரான் திருப்ப ணிக்குப்
பெரும்பொருள் மிளகு நல்கப்
பெற்றிலம் என்பார் முற்றுந்
தரும்பல சரீர வாக்குச்
சகாயங்கள் புரிவோர் கூலிக்
கரும்பணி முயல்வோர் தாமும்
கயிலையில் அமர்ந்து வாழ்வார்.

*சூளைக்குப் பயன்பட்ட மரங்களுக்கும் வண்டிமாடு கட்கும் நற்கதி என்று சொல்வது, பெரிய புராணத்தில் ஆண்பனை பெண்பனையான செய்தி கூறிய விடத்து ஞானசம்பந்தப் பிள்ளையாரின் திருவாக்குப் பயந்தமை யால் அப்பனைகளும் முன்புள்ள பாசம் விட்டு, சிவமே கூடின என்று கூறியதை நினைவுகூரச்செய்கின்றது.*

பிள்ளை யார்தந் திருவாக்கில்
பிறத்த லால்அத் தலமும்முன்
புள்ள பாசம் விட்டகல
ஒழியாப் பிறவி தனையொழித்துக்
கொள்ளு நீர்மைக் காலங்கள்
கழித்துச் சிவமே கூடினவால்
வள்ள லார்மற் றவரருளின்
வாய்மை கூறின் வரம்பென்னாம்.

*பாயிரப்பகுதியில் சரியை கிரியைச் செய்திகள் பலபகர் கின்றனார். இஃது அவர் ஞானப்பிரகாச தேசிகர் பட்டார கர் என்று வழங்கப் பெற்றதற்கும், சரியை கிரியா பாத நூல்கள் பல செய்ததற்கும் பொருந்தவே உள்ளது. பிரமன்*

*பூசித்த வயிரத் தூண் இங்கே ஒரு புருடா மிருகத்தின் பூசைக்கு மகிழ்ந்து பூமியைப் பிளந்து வந்து காட்சி கொடுத்தது. பிரமனும் இங்கு வந்து வழிபட்டான்.*

அருமையாய் இருந்தும் அன்பர்
ஆனவர்க் கெளியாய் போற்றி
பெருமையால் அடியேன் செய்த
பிழைபல பொறுப்பாய் போற்றி
உரிமையாய் உலகுக் கெல்லாம்
உயிரென நின்றாய் போற்றி
தருமமா மழுவை வாழும்
தாணுவே போற்றி போற்றி

*மழுவாடிச் சருக்கத்தில் முனிவர் துதிக்கும் பாடல்:*

சகலமும் படைப்பாய் போற்றி
தருமுறை காப்பாய் போற்றி
இகழுற அழிப்பாய் போற்றி
யாவையும் மறைப்பாய் போற்றி
நிகழவே பரமா னந்தத்
திருவருள் தருவாய் போற்றி
அகிலநா யகனே போற்றி
அண்ணலே போற்றி போற்றி

*மார்க்கண்டனுக்காகச் சிவபெருமான் நடனமாடுவதைக் கூறும் பாடலின் சந்தமே படிப்போரை ஆடச் செய்யவல்லது.*

தடவுறு மண்டத் துலவிய
அம்பொற் சடையாடத்
தொடரொளி பம்பிச் சுழல்தரு
கொன்றைத் தொடையாடக்
கடலமு தங்கக் கியசிறு
திங்கட் கலையாடத்

திடமுறு வெங்கட் பாசுறு
செங்கைச் சிவனாடும்.

*சிவபெருமான் நடித்ததாகப் பத்துப் பாடல்கள் இங்கு உள்ளன. அவற்றுள் ஒன்று:*

இலகிய குணலை நடித்திடு
மியல்கண மிருகைகள் கொட்டிட
அலகைகள் கரண மியற்றிட
அடியவ ருயர்கதி பெற்றிட
உலகினில் உயிர்கள் களித்திட
உறுமரு வினைகள் ஒளித்திட
மலகரி பெள்ளி இசைத்திட
மழுவணி பரமன் நடித்தனன்.

*பாட்டைப் படிக்கும் போதே பரமன் நடித்த காட்சியை மனக்கண்ணால் காண முடிகின்றது.*

*நூலில் போற்றி என முடிகின்ற பாடல்களும் சந்தப் பாடல்களும் சைவசமய ஆசாரங்களும் அதிகமாகக் காட்டப்பெற்றுள்ளன. நைமிச வனத்தின் வருணனையில் ஒரு பாடல். (4:3)*

பாடலின் புறுவன அசுணம்; பத்திசேர்ந்து
ஆடலின் புறுவன மயில்கள்; ஆரையிற்
கூடலின் புறுவன அன்றில்; கூரமதுத்
தேடலின் புறுவன நிறைகொள் வண்டினம்.

*இச்சிறு நூலில் மடக்கையும் தலைகாட்டச் செய்கின்றார். (4:5)*

*சுவாமியின் பெயர் வைத்தியநாதர்; சுவைமிக்க ஒரு பெயர். நூல் முழுவதும் அவ் வைத்தியநாதர் புகழையே பாடி மகிழ்கின்றார் கவிஞர்.*

## 6. நிரம்ப அழகிய தேசிகர்

'நிரம்ப அழகியவர்' என்பது இவருக்குப் பெற்றோர் இட்ட பிள்ளைத் திருநாமம். இது சிவபெருமானின் திருநாமம். 'நித்தமணாளர் நிரம்ப அழகியர்' என்பது திருவாசகத் தொடர் (அன்னைப்பத்து-3). இவர் வேதாரண்யத்தில அபிடேகத்தர் என்று வழங்கும் தேசிகர் மரபில் தோன்றியர். சிவபக்தி மிக்கவர். சில புராணங்களும் சாத்திரங்களும் செய்த காரணம்பற்றித் தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறப்பான இடம் பெற்றுள்ளார். இவர் செய்த நூல்களால் இவர் வடமொழியும் தென்மொழியும் கற்றுத் துறைபோய வித்தகர் என்பது புலனாகின்றது. இவர் கமலை ஞானப்பிரகாசரின் மாணாக்கர். இவர் செய்த புராணங்கள் (1) திருப்பரங்கிரிப்புராணம் (2) சேதுபுராணம் (3) திருஜயாற்றுப்புராணம் என்ற மூன்று புராணங்கள்.

அழகியார் காலம்: கி.பி. 1550–75.

**(1) திருப்பரங்கிரிப் புராணம்:** வடமொழிக் காந்தத்துள் தலமான்மியம் கூறும் பகுதியில் இஃது உளதென்பர். இத்தமிழ்ப் புராணம் பாயிரம் உட்பட 11 சருக்கங்களும் 526 பாடல்களும் உடையது. வழக்கமான துதிப்பாடல் களோடு தலத்துக்குப் பொருத்தமாக தெய்வயானை, வள்ளியம்மை, நவவீரர், திருமால், திருமகள் துதிகள் உள்ளன. முருகன் திருமணம் காணவந்த பவளவாய்ப் பெருமாளுக்கும் திருமகளுக்கும் தனி வணக்கங்கள் உள்ளன.

அக்காலத்துப்புராணம் பாடுதலில் பதிகம் அமைத்தல் என்ற மரபுக்கேற்ப பாயிரச் சருக்கத்திலேயே நான்கு பாடல்களில் பதிகம் சொல்லி நைமிசாரண்யப் பகுதியை யும் பாயிரத்திலேயே அடக்கி விடுகின்றார். அடுத்த இரு சருக்கங்கள் குமரன் உபதேசம், தவம். அடுத்தது சிபி வேந்தன் பூதானம்; பிரமகூவம்; தலவிசேசம்; அரிச்சந்திரச்

*சருக்கம், திருவிழாச்சருக்கம்–அரிச்சந்திரன் இங்குவந்து வழிபட்டு ஆலயம் எடுத்துத் திருவிழா செய்ததைக் கூறும். அடுத்த நக்கீரச் சருக்கத்தில் கதை புதுமையானது. நக்கீரர் தாம் முருகனைப்பாடாமையால் குகை–சிறை தண்டனை என்று அறிந்து திருமுருகாற்றுப்படை பாடினார். பாடலை* ***'மலைகிழவோனே'*** *என்று முடித்தார். முருகன் தோன்றி "நான் கிழவன் என்று நீ பாடியுள்ளமையால் வர நாளாகும்" என்று சொன்னான். பின்னர் இவர் "என்றும் இளையாய்' என்று வெண்பா பாடினார். அதன்மேல் முருகன் இவரை விடுவித்தான். இக்கதை வழங்கும் வரலாற்றிலிருந்து சிறிது வேறுபட்டது. இப்புதிய போக்கு அடியில் காணும் இரண்டு பாடல்களாகவும் அறியப் படுகின்றது.*

சுவையூறும் தமிழ்மாலை உலகமென
எடுத்தோதித் தொன்னூர் வீற்றின்
நுவலியது கிழவோனே யெனக்கூற
நெடுங்கால நோன்பு கோடி
புவியிலிளைத் தறிவரிய குமரவேள்
அவன்கனவு பொருந்தத் தோன்றி
அவனிதனில் கிழவனென வரச்சிறிது
நாளாமென்று அறைந்து போனான்.

அப்பொழுது நற்கீரன் தமிழ்மாலை
இளையோனென் றறைந்து சூட்டச்
செப்பரிய குடமுனிவர்க் குபதேசஞ்
செலுத்துமொரு செஞ்சொ லாளி
இப்பொருப்பி லடையாளங் கலியுகத்தோர்
கண்டிடவேல் எறியப் பாறை
யொப்பறநே ரேகிழித்தங் கிருபிளவாய்ப்
பிளந்திடவே உவப்பின் வந்தான்.

*அடுத்த இரண்டு சருக்கங்கள் சூரசம்காரம், திருக்கலியாணம். திருப்பரங்கிரிப் புராணத்திலுள்ள கற்பகவிநாயகர் வணக்கப்பாடல் மிகவும் பிரசித்தமானது. இதனுள் ஒன்று முதல் எட்டு வரையிலுள்ள எண்கள் தொனிக்கும்படி அமைந்திருப்பது அற்புதம்.*

வஞ்சகத்தி லொன்றானை, துதிக்கை மிகத்
திரண்டானை, வணங்கா ருள்ளே
அஞ்சரண மூன்றானை, மறைசொலுநால்
வாயானை, அத்த னாகித்
துஞ்சவுணர்க் கஞ்சானை, சென்னியணி
யாறானை, துகளெள் ழானை,
செஞ்சொன்மறைக் கெட்டானை, பரங்கிரிவாழ்
கற்பகத்தைச் சிந்தை செய்வாம்.

*திருக்கலியாணத்தின்போது, தெய்வயானை வரும் நேரம்; சேடியர் கட்டியங்கூறுகிறார்கள்:*

உண்டிட உவட்டா தெழுந்தபுத் தமுதே,
ஊற்றெழப் பழுத்ததீங் கரும்பே
வண்டெழா தலர்ந்து வளர்ந்தபூங் கொடியே
வடித்திடாத் தெளிந்தசெந் தேனே,
எண்டிசை விளக்க வருந்தனி விளக்கே,
இனித்தினித் தருந்துகற் கண்டே,
மண்டலம் புகழ வளர்த்தபெண் ணரசே,
மறமெலா தெழுந்தபே ரொளியே.

மழலையங் கிளவி துளும்புவாய்க் கிளியே,
மரகதப் பசியமா மயிலே,
ஒழுகுதே னூறி உவட்டெழுங் கனியே,
ஒளிகிடந் திமைத்தபொற் கொடியே,
தழையிசை செழும்பாண் மிழற்றிய குயிலே,
தளிரெழுந் தசைத்தபூங் கொம்பே,

எழுமிருட் படலங் கிழித்தமா மணியே,
எழுதரி தானசித் திரமே.

*மணவறையைச் சூழ்ந்து செய்த அலங்காரங்களில் பதுமைகளும் உள்ளன. அவற்றின் செய்கை:*

பரதநா டகத்தைத் தருஞ்சில பொம்மை
பாண்மிழற் றிடுஞ்சில பொம்மை,
இருகையால் தாளம் புடைக்குமோர் பொம்மை,
இலகுபாய்ந் திடுஞ்சில பொம்மை,
சுருதியை இசையாச் சொலுஞ்சில பொம்மை
துடையறைந் தசையுமோர் பொம்மை,
வரிசையாக் கதைசொல் வகுக்குமோர் பொம்மை,
வட்டமிட் டாடுமோர் பொம்மை.

கின்னர மெடுத்துத் தெரிக்குமோர் பதுமை,
கேடகம் சாற்றுமோர் பதுமை,
மன்னிய கதிர்வாள் விதிர்க்குமோர் பதுமை,
வலியகட் டியஞ்சொலும் பதுமை
தன்னிலே குகன்சீர் சாற்றுமோர் பதுமை,
தலையசைத் துலவுமோர் பதுமை,
பொன்னனி கவரி விரட்டுவோர் பதுமை,
புதுமையாய் விசிறுமோர் பதுமை.

*என்ற பாடல்களில் காண்க.*

***(2) சேதுபுராணம்:*** *அழகியார் செய்த நூல்களில் இதுவே அளவால் பெரியதும் சிறப்புப் பொருந்தியது மாகும். இதை ஆசிரியர் வெறும் தலபுராணமாக மட்டு மல்ல, ஒரு காப்பியமாகக் கருதியே அமைத்துள்ளார்.*

*தொடக்கத்தில் பாயிரம், திருநாட்டுச்சிறப்பு, கந்த மாதனச்சிறப்பு, நைமிசாரண்யச் சிறப்பு என்ற நான்கு பகுதிகளும் 45 சருக்கங்களும், 3438 பாடல்களும் கொண் டது. விநாயகர் சார்பாக இரண்டு பாடல்கள் உள்ளன.*

*சபாபதி வணக்கத்தோடு கடவுள் வாழ்த்துப் பகுதி தொடங்குகின்றது. சரசுவதிக்கும் மெய்கண்ட தேவருக்கும் இவர் வணக்கம் சொல்லியிருப்பது சிறப்பு. மெய்கண்டார் வணக்கப்பாடல் சைவ உலகில் பிரசித்தமானது:*

அல்லாத பரசமய அலகைத்தேர் விண்டகல
அகல்புனற் பெண்ணை அயல்சூழ் வெண்ணெய்ப்
பொல்லாத இபமுகத்துப் புத்தேள் தன்பாய்
புனிதசிவா கமப்பொருண்மை பொருந்த ஆய்ந்து
நில்லாத நிலையிதுமற் றென்று மொன்றாய்
நிற்கும்நிலை இதுவெனமெய்ந் நெறிநேர்ந் தியாரும்
வெல்லாத சிவஞான போதம் சொன்ன
மெய்கண்டான் சரணமுடி மீது கொள்வாம்.

*இவருக்குச் சைவமரபில் எவ்வளவு பற்றுதல் இருந்தது என்பதை இப்பாடல் அழகாகக் காட்டுகின்றது.*

*அவையடக்கத்தில், அறிஞர் தம்மை அழைத்துச் சேதுவில் இராகவன் இராமநாதனை நிறுவிய கதையைச் சொல்லெனத் தாம் பாடியதாகச்செப்புகின்றார்.*

*திருநாட்டுச் சிறப்புச் சருக்கத்தில் பாண்டித்தலம் பதினான்கையும் தனித்தனி ஒவ்வொரு பாடலால் சிறப்பிக்கின்றார். இத்தலங்களைக் குறிப்பிடுபோது ஒவ்வொன்றின் பெயரையும் நயமுற எதுகையில் வைத்துப் பாடுவது சிறப்பு. ஓர் எடுத்துக்காட்டு: திருவாடானை பற்றியது.*

வீடானை பிறவானை நினையானை
மறவானை வேறொன் றோடும்
கூடானைப் பிரியானைக் குணங்குறியொன்
றில்லானைக் குகப்பி ரானை
நீடானை முகத்தானைப் பயந்தானைத்
தொழுதமரர் நிரப்பு நீங்கும்

ஆடானை நகருமுடைத் தன்னதமிழ்
நாடதன்சீர் அளவிற் றாமோ.

சமயதத்துவங்களையும் இதனுட் கலந்து பாடுவது பின்னும் சிறப்பு. 'குற்றாலம் குறும்பலவென்றிரண்டும் ஒருங்குள வழுதி கொற்றநாட்டில்' என்று புகழ்கின்றார். நாட்டுச்சிறப்புப் பெருங்காப்பியம்போல் மிக விரிந்தது; 12 பாடல்களைக் கொண்டது. கவிதா சாமர்த்தியம் பலவும் இப்பகுதியில் காணலாம். முரண்தொடை, கடைமடக்கு முதலான பாடல்கள் பல.

இந்த நூலுள் தீர்த்தம் உரைக்கும் சருக்கங்கள் இருபது. அவற்றுள் இராமன், அநுமன், இலக்குமி, இலக்குவன், காயத்திரி, சரசுவதி, ஆகியவை குறிப்பிடத்தக்கன. இராமகுண்டம், சீதைகுண்டம், பிரமகுண்டம் என மூன்று குண்டச் சருக்கங்கள் உள்ளன. சேதுவோடு மருவியது கந்த மாதனமலை என்று அதன் சிறப்புச் சொல்லப்படுகின்றது. முதலாவதான சேதுச் சருக்கம் சேதுவில் ஆடுவதன் புண்ணியம் புகல்கின்றது. சேதுவந்த சருக்கம், இராமன் சேதுக்கரையடைந்ததும், அங்கு நளனைக்கொண்டு அணை கட்டுமாறு கடலரசன் கூறியதும் சொல்லுகின்றது.

நூல்முழுதும் தோத்திரப்பாடல்கள் அதிகம். பிற காப்பியங்களில் துதிப்பாடல்கள் ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வந்த வரிப்பாடல்கள் போல, மும்மூன்றாக அமைந்திருக்கும். இந்த அமைப்பைச் சிலப்பதிகாரம் போன்ற காவியங்களில் காணலாம். ஆனால் நிரம்ப அழகியார் இங்குப் பத்துப்பாடல்களை ஒருபதிகம் போல் அமைக்கின்றார். நூலெங்கும் தேவார திருவாசக சந்தமும், தொடர்களும் கருத்துகளும் கம்பராமாயணத்தொடர்களும் யாப்புப் பொருளும் நிரம்பி இருக்கக் காணலாம்.

இராமன் சேதுவில் தன் பெயரால் இலிங்கம் தயாரித்த போது மாருதி இராமனை வணங்குகின்றான்.

மாறேதுமில் இன்ப அகண்டித
வாழ்வு சேர்வார்
பேறே பிரியாதமர் பூரணப்
பெற்றி யானே
வேறே உடனேஇவை இன்றமர்
மிக்க விண்ணோர்
ஏதே துணைநீ எனக்கு,
உன்பொருட்டு வணக்கம்.

இவ்வாறு மூன்று பாடல்கள் உள்ளன. போற்றி என்றும், நம என்றும் ஆசிரியர் பாடியிருப்பினும் காலப்போக்கை யொட்டிக் கருதும்போது இவருடைய வணக்கம் என வரும் பாடல் சிறப்பானது. சருக்கந்தோறும் இறுதியில் ஒரு பலசுருதிப்பாடல் அமைக்கின்றார். அப்பாடல் தவறாது சந்தப்பாடலாக உள்ளது.

நூல் இறுதிச்சருக்கம் சேது பலச்சருக்கம் என்ற பெயருடையது. இங்கு சேதுவில் நீராடி வழிப்பட்டோர் நற்கதி அடைவர் என்பதையும் இப்புராணம் படித்தவரும் சிறப்படைவர் என்பதையும் 180 பாடல்களால் சொல்கிறார்; தம் புராணத்தை 'உலகமெல்லாம்' என்ற சொல்லோடு முடிப்பதும் கருதத்தக்கது. மேலும் ஒரு சிறப்பை இங்குக் காண்கின்றோம். ஆசிரியர் சைவத்துறவி; பாடுவது சிவபிரான்புகழ், இராமன் நிறுவிவழிபட்ட தலத்தின் பெருமை. ஆயினும் இவர் வைணவம் என்றும் சைவம் என்றும் பாகுபடுத்தாமல் யாரை வழிபட்டாலும் எப்பெயரைக் கூறினாலும் முத்தியடைவர் என்று சிறப்பாய்க் கூறுகின்றார். மதுரை, மயிலாடுதுறை, வெண்காடு, பழமலை, வேங்கடம்... அரங்கம் இபக்கா (ஆனைக்கா), வைத்தியபுரம் (புள்ளிருக்கும்வேளூர்), குடந்தை, காசி, பருப்பதம், கமலாலயம், காஞ்சி ஆகிய

இப்பெ ரும்பதி முதலிய
ஈசன்மால் பொருந்தும்
ஒப்பெ ரும்பதி யாவினும்
ஓரியாண் டுறைந்த
அப்பெ ரும்பலனடையும்
என்றால் அகன்துறைநீர்
மெய்ப்பெ ருந்தனுக் கோடியின்
பெருமையார் விரிப்பார்.

*இங்கு ஈசன்பதி மால்பதி ஆகிய எதில் உறைந்தாலும் பெரும்பலன் அடையலாம் என்பதைக் குறிப்பிடுகின்றார். இதேபோல் இங்கு 'நமச்சிவாய' என்று ஓதாதார் பிறவியும் 'நமோ நாராயணாய' என்று எட்டெழுத்தை உருவேற்றதார் பிறவியும் சேது நீராடலால் தாவியோடும் என்கின்றார்.*

ஆவி கட்கித மாமஞ் செழுத்தையும்
ஓவிலா நமசி வாயஎன் றோதிடார்
பாவி யாருளங் கேளார் பவங்களும்
தாவி யோடுமிச் சேதுவி னானத்தால்.

முந்தை யாமெழுத் தோடு நமோவென
நந்தி எங்குகை நாராய ணாயவென்று
இந்த எட்டெழுத் தாலுரு வேற்றலார்
சிந்தி யார்பலஞ் சேதுவிற் சிந்திடும்.

*பின்னும் மற்றப்பாடல்களில், சிவலிங்கத்தையும் சாளக்கிராமத்தையும் துவாரகா சக்கரத்தையும் பூசியாதவர் பாவமும், உருத்திராக்கம் அணியாதவர் பாவமும், கோபிசந்தனம் அணியாதார் பாவமும், சேதுவில் மூழ்க நீங்கும் என்கின்றார். செய்ய வேண்டிய நற்கருமங்களைச் செய்யாது விட்டவர்களுடைய எத்தகைய பாவங்களும் சேதுவிற் கெடும் என்று முப்பது பாடல்களால் உரைக் கின்றார். இங்கு சிவகருமம், விட்டுணுகருமம் இரண்டை யும் சேர்த்தே சொல்கிறார். அவற்றுள் ஒன்று, மார்கழித்*

திங்கள் வைகறையில் மாபெரும் சீரியர் பூசை செய்யாத தீமை.

ஆரணப் பரியினா னாதி யோர்தமை
மார்கழித் திங்கள் வைகறையின் மாபெரும்
சீரியற் பூசைசெய் யாத தீமையும்
நீரலைச் சேதுவில் நீங்கு மாலரோ.

திருமால் வழிபாட்டைக் கூறும்போது, கோபி சந்தனத்தை நெற்றி நெஞ்சு புயத்தினில் அணியாத தீமை என்கின்றார்; திருமண் என்று செப்பவில்லை. ஒரு பாடலில் உருத்திராக்கமும் அடுத்ததில் துளாய் மணியும் குறிப்பிடுகின்றார். இரவு முடிகின்ற பிராமிய முகூர்த்தத்தில் எழுந்து சுத்தனாய் அரியரன் நாமம் துதித்தல், காயத்திரி சந்திசெய்தல், சித்திரை மதியில் சித்திரகுத்தருக்கு வழிபாடு செய்தல்- முதலாயின இவரால் இங்குக் குறிப்பிடப் பெற்றுள்ளன.

சேதுபுராணம் படிப்போருக்குப் பலன் சொல்லுமிடத்து ஒருசருக்கம் கூறினால் கேட்டவர் இரண்டு சருக்கம், 10, 20, 30, 40, 50 சருக்கம் படித்தவருக்கும்–என்று பலன் விரிவாகச் சொல்லுகின்றார். பின்னர் அனைத்தையும் ஒருமுறை கேட்டவர், இயம்பினோர், இருமுறை, மும்முறை நான்முறை என்று பின்னும் விரிக்கின்றார். இதற்கு மேலும் ஒரு பாடல்:

ஒருகவியே தானாதல் இதிற்பாதி
யாதல்இந்த உயர்வு புராணத்து
ஒருபதமே தானாதல் ஒருமொழியே
தானாதல் உண்மை சான்ற
ஒருபுனித எழுத்தாதல் ஒற்றாதல்
ஒருமுறை கேட்டு உரைத்தால் அந்த
ஒருவிசையில் அன்றன்றங் குகுற்றுபா
வம்அனைத்தும் ஒழிக்கு மாதோ

என்று கூறுவது காண்க. 'ஆசேது இமாசலம்' என்பது நம்நாட்டுப் பழமொழி; சேதுமுதல் இமம்வரை என்பது பொருள். ஆண்டுதோறும் வடநாட்டிலிருந்து பருவமொன் றில்லாமல் தினந்தோறும் எண்ணற்ற மக்கள் குடும்பம் குடும்பமாகச் சேது நீராட்டத்திற்கும் சேதுமகாதேவரைச் சேவிக்கவும் வந்த வண்ணம் உள்ளனர். இவண் குறிப்பிட்ட பாடல்களின் கருத்தே இத்தனைக்கும் அடிப்படைக் காரணம் என்று உறுதியாகக் கருதமுடியும்.

**(3) திருவையாற்றுப் புராணம்**[13]: இப்புராணம் இரண்டு காண்டங்களாலானது. முதல் காண்டத்தில் 35 அத்தியாய மும் 1534 பாடல்களும், இரண்டாம் காண்டத்தில் 13 அத்தியாயமும் 1073 பாடல்களும் ஆக 48 அத்தியாயம் 2007 பாடல்களைக் கொண்டாதயுள்ளது. நூலில் பலவகைச் சந்தப்பாடல்கள் மிகுதி. இறைவன் பெயரான செப்பேசர் பிராணதார்த்திகரர் முதலான பெயர்கள் போற்றியுரைக் கப் பெறுகின்றன. அன்னதான மகிமை முதலிய பலசிறப்புகள் சொல்லப்பெறுகின்றன.

பாயிரப்பகுதியில் செம்பொற்சோதி, ஒப்பிலா நாயகர், அஞ்சசெலன்ற பெருமான், பஞ்சநதம், அறம் வளர்த்த நாயகி, அழகிய பொன்னனையாள், தொண்டர்க்கினியான் சைவராய மூவர் என்ற துதிகள் குறிப்பிடத்தக்கன. காப்புச் செய்யுளில் ஆனந்தப் புதுத்தேனை நாவிற் கொள்வான் என்று நயம்பட உரைக்கின்றார். பஞ்சநத வணக்கம் பாடல் பஞ்சநதம் என்ற சொல்லுக்கேற்ற சந்தத்தில் அமைந்து, இதுபோல திருச்சிற்றம்பலம் பொன்னம்பலம் முதலான தொடர்களின் சந்தத்தில் நம்பி திருவிளையாடலில் அமைந்துள்ள பாடலகளை நினைவூட்டுகின்றது.

பிறப்பும் பிணியும் பிழைக்கும் பகையும்
பிழைக்கும் கவியும் பிரித்தம் புவிநின்று

---

13. 17-ஆம் நூற்றாண்டின் தொடக்கம்.

இறக்கும் துயருண் டிருட்கும் பிவிழுந்
திளைக்குந் தலநின் றெடுக்குந் தவனுந்
துறக்கும் கமலங் கட்குன் றிவைமுன்
சுரக்கும் சுகமுண் டிருக்கும் திருவும்
சிறப்பும் பயனும் கொடுக்கும் பதியும்
திருப்பஞ் சநதம் திருப்பஞ் சநதம்.

*அறம்வளர்த்த நாயகியையே அழகிய பொன்னனையாளாகப் பாடுகின்றார். "சிவகணத் தொருவனான திருவம்பலவன் மொழிய அன்னோன் அடிதொழுது பஞ்சநதிப் புராணத்தை அறையலுற்றேன்" என்று புராண வரலாற்றில் பேசுகின்றார். அடியிற்காணும் அவையடக்கப் பாடல் சுவையுடையது.*

அந்தண்ஐயா ருடையான் எவ்வுருக்கொள்ளும்
அவ்வுருவு மாங்கே கொண்டு
வந்தணையும் அறம்வளர்த்த நாயகியை
வடிவுடைய மங்கை தன்னை
சந்தணையு முலைவண்டார் குழலாளைத்
தேனுற்ற சொல்லி தன்னைப்
பந்தணைமேல் விரலானை அழகியபொன்
னனையாளைப் பணிதல் செய்வாம்.,

*பத்துப்பாடலில்காவியமான்மியம் சொல்லுகின்றார். நூற்பிரிவின் பெயரில் அத்தியாயம் சருக்கம் என்ற இரண்டு பெயர்களும் காணப்பெறுகின்றன. நான்கு பாடல்களில் 44 தலப்பெயர்களைச் செறித்துச் சொல்லுகின்றார். கௌதமன் துதிக்கின்ற இடத்தில் 'புண்ணியாநின் பொன்னடி பணிந்தேன்' என்ற முடிவையுடைய மூன்று பாடல்கள் காணப்பெறுகின்றன. அவற்றுள் ஒன்று:*

காரண முதற்றுணைகள் கற்பனை கடந்தாய்
ஏரணவு மாறுசுவை இன்பநிகழ் வித்தாய்

ஆரணம் உரைக்கரு சுகத்துருவ மானாய்
பூரண வரத்தநின் பொன்னடி பணிந்தேன்.

இவை தவிர வேறு பலர் செய்த வேணுவனப்புராணம், திருவாரூர்ப் புராணம், திருவொற்றியூர்ப் புராணம், திருக்காளத்திப் புராணம் முதலிய பல புராணங்களும் உள்ளன. அவை விளக்கப் பெறவில்லை.

## 7. சைவ எல்லப்ப நாவலர்

இவர் சோழநாட்டில் வெண்காட்டிற்கும் திருக்கடையூருக்கும் இடையிலுள்ள பூந்தாழை எனப்படும் ஊரில் பிறந்தவர். தாயார் ஊர் தாழைநகர்; தந்தையார் ஊர் இராதா நல்லூர். கார்காத்தார் மரபினர். பெற்றோர் இவருக்கு இட்ட பெயர் எல்லப்பன் என்பது. சிவபக்தி மிக்கவராதலாலும் பல நூல்களைப் படைத்தனாலும் சிவ என்றஅடைமொழி சேர்ந்து சைவஎல்லப்பநாவலர் என்ற பெயரால் வழங்கப்பெற்றார். 'சைவத்தில் மேற்சமயம்' என்ற இவர்தம் திருஅருணைக் கலம்பகப் பாடலும், சிவன்புகழையே பாடும் இயல்பும் இவருடைய பெயருடன் 'சைவ' என்ற அடைமொழி சேரக் காரணமாயிற்று. இவர் பாடியபுராணங்கள் (1) அருணாசல புராணம்; (2) திரு விரிஞ்சைப்புராணம்; (3) தீர்த்தகிரி புராணம்; (4) திருவெண் காட்டுப் புராணம்; (5) செங்காட்டங்குடிப் புராணம்; (6) செவ்வந்திப் புராணம். (சிராமலை) என்பவையாகும். இவற்றுள் மூன்று மலைசார்ந்த தலம்; மூன்று பிற. முதல் மூன்று தொண்டை நாடு; பிற மூன்று சோழநாடு.

புராணங்கள் அனைத்திலும் வழக்கமாகச் சொல்லும் துதிகள் அன்றி, திருத்தொண்டர், தலத்தில் வழிபட்ட முனிவர் முதலியோருக்கு வணக்கம் சொல்லுகிறார். தீர்த்தச்சிறப்புதனியே எல்லாப் புராணங்களிலும் சொல்லு கிறார். அவையடக்கம் எல்லாவற்றிலும் நயமாக உள்ளது.

எல்லாநூல்களிலும் இறுதியில் வேதம் ஆகமம் ஈசன் அடியார் ஆகியோரை வாழ்த்தி முடிக்கின்றார்.

புராணங்களில் கதைகளைச்சொல்வதுடன் சிவபக்தி, அடியார் பக்தி, சிவபுண்ணியச் செயல்கள், சிவசின்னங் களின் பெருமை ஆகியவற்றைத் தவறாது சொல்லுகின்றார். புராணங்கள் யாவும் அளவால் சிறியவை; வெண்காடு பெரியது 614 பாடல். நூற்பொருளாகிய பதிகம், ஒரு பாடலிலோ (விரிஞ்சை) பல பாடல்களிலோ தவறாது சொல்லுகிறார். மடக்கு, முரண் தொடை, சந்தம் முதலான அமைப்புகள் எல்லா நூல்களிலுமே சிறப்பாகக் காணலாம்.

***(1) அருணாசலபுராணம்[14]:*** திருவண்ணாமலைக்கு அருணாசலம் (நெருப்பின் செந்நிறம் பொருந்தியமலை)[15] என்ற பெயர் உண்டு. பிறபெயர்கள்: அருணகிரி, சோணகிரி, சோணாசலம் என்பன. இப்புராணம் பாடியவர் சைவ எல்லப்ப நாவலர். இதனைப் பாடியதனாலே எல்லப்பர் புகழின்பெரும்பகுதி சேர்கின்றது. பிழை மலிந்த நூலாக இருந்த இதனை எல்லாவகையாலும் திருத்தி தமிழ்க் **கடல் இராய. சொ.** பதிப்பு உரையுடன் வெளிவந்துள்ளது. உரை யாசிரியர் மழவை மகாலிங்கையர் என்பதாகக் கூறுவர் வாகீச கலாநிதி **கி.வா. ஜகந்நாதன்.**

***தலப்பெருமை:*** அண்ணாமலை பெரியார்கள் பலரா லும் பெரிதும் போற்றித் துதிக்கப்பெற்ற தலம்.

அண்ணாமலை தொழுவார்வினை
வழுவா வண்ணம் அறுமே[16]

என்பர் ***சம்பந்தப் பெருமான்.***

---

14. 16-ஆம் நூற்றாண்டு.
15. பஞ்சபூதத்தலங்களில் ஒன்று. தேயு-தலம்.
16. சம்ப.தேவாரம் 1. 10:1

ஆதியே அமரர் கோவே
அணியணா மலையு ளானே[17]

*என்று **கூறுவர் நாவுக்கரசர்.***

அண்ணா மலையானைப்
பாடுதுங்காண் அம்மானாய்[18]

*என்று போற்றுவார் **மணிவாசகப் பெருமான்.***

அண்ணா மலைமேல் அணிமலையை
ஆரா அன்பின் அடியவர்தம்
கண்ணார் அமுதை[19]

*என்று சிறப்பிப்பார் **சேக்கிழாரடிகள்.***

*'கற்றார் தொழும் அருணசாசலம்' என்று புகழ் பாடுவார் **வில்லிபுத்தூராழ்வார்.**[20]*

ஞானத் தபோதனரை வாஎன்று
அழைக்குமலை அண்ணாமலை

*என்று பாராட்டுவார் **குருநமசிவாயர்.***

பெருமானை அருணகிரி பெம்மானை
அடிபணிந்து பிறவி தீர்ப்பாம்.

*என்பர் இந்நூலாசிரியர் எல்லப்பநாவலர். இன்னொரு பாடலில்,*

அளகை வளம்பதி தனினும்
வளம்பதி அருணை வளம்பதியே.

*என்று போற்றுவார்.*

17. அப்பர் தேவாரம் 4. 63:1
18. திருவா. திருவம்மானை-10
19. பெரிபு. திருநா. புரா. 313
20. வில்லிபாரதம் அர்ச்சு - தீர்த்தயாத் - 15

சிவபெருமான் நாமத்தை 'நமப்பார்வதி பதயே' என்று தொடங்கி ஒருவர் கூறினால் யாவரும் 'ஹர ஹர மகாதேவா' என்று கூறும் வழக்கம் நெடுங்காலமாகத் தமிழ்நாட்டில் நிலவுகின்றது. 'ஹர ஹர' என்பது அரோகரா என்று வழங்குகின்றது. இது திருவண்ணாமலையில்தான் பெருவழக்காகக் கேட்கப்பெறுகின்றது. 'அண்ணாமலைக்கு அரோகரா' என்ற முழக்கம் அந்தத் தலத்தில் பெருகி வழங்கும். இப்புராணத்தில்,

'அரகர' என்பது கடலில்
முழங்கியது அருணை வளம்பதியே.[21]

என்பதில் இச்செய்தி குறிக்கப்பெறுகின்றது.

(i) **நூல் அமைப்பு:** அருணாசலபுராணம் இருபகுதி களாக அமைந்துள்ளது. முதற்பகுதி பாயிரத்துடன், திருநகரச் சருக்கம், திருமலைச் சருக்கம், திருஅவதாரச் சருக்கம், திருக்கண்புதைத்த சருக்கம், பார்வதி இடப்பாகம் பெற்ற சருக்கம், வச்சிராங்கத சருக்கம் என்ற ஆறு சருக்கங் களையும் 451 பாடல்களையும் உடையது. இப்பகுதியை ஆசிரியர் வடமொழி சிவபுராணத்திலுள்ள உருத்திர சங்கி தையிலிருந்தும் பின்பாகத்தை இலிங்க புராணத்திலிருந்தும் பாடியதாகச் சொல்லுகின்றார்.

தேங்கு மன்பிற் சிவபுரா ணந்தனில்
ஓங்கு ருத்திர சங்கிதை ஓதினன்
பாங்கி லிங்க புராணம் பரப்பினும்
ஈங்க றிந்த படியும் இயம்பினேன்.

இரண்டாம் பகுதி தீர்த்தச் சருக்கம், திருமலை வலம்புரிச் சருக்கம், ஆதிச்சருக்கம், பிரதத்தராசன் சருக்கம், தீர்த்த சருக்கம், புன்காதிபர் சருக்கம் என ஆறு சருக்கங் களையும் 137 பாடல்களையும் உடையது. மொத்தச் சருக்கம்

21. பாயிரம்-4

*12; பாடல்கள் 588. இரண்டாம் பாகத்துக்கும் தனியாக ஒரு கடவுள் வணக்கப் பாடலைத் தொடக்கத்தில் சேர்ந் திருப்பது காணத்தக்கது.*

*பாயிரத்தில் நூல்வரலாறு கூறிய இடத்தில் இரண்டு பாடல்களால் (21-22) நூல்பொருள் (பதிகம் போல) கூறுகின்றார். அப்படியே இரண்டாம் பாகத்தின் முதற் சருக்கம் (தீர்த்தச் சருக்கம்) 5-6பாடல்களில் அதற்கான நூற்பொருள் (பதிகம்) கூறுகின்றார்.*

*இந்நூல் வியாசர் கூறிய புராணம் என்று கூறும் காப்புச் செய்யுளோடு தொடங்குகின்றது. பாயிரத்தில் நடேசர், தல மகிமை (3 பாடல்கள்), பரசிவம், அருணாசலேசர் (3 பாடல்கள்) உண்ணாமுலையம்மை, விநாயகர், முருகர், மூவர் முதலிகள், வாதவூரடிகள், தொண்டர் (2 பாடல்கள்) என்ற பகுதிகள் உள்ளன. பல சந்தப் பாடல்கள். அவை யடக்கத்தில் ஓர் அருமையான கருத்து. "புதிய நூலாக இதனைச் செய்துள்ளேன். பழைய நூல்கள் பல உள்ளன. பழையவற்றைச் சிறப்பிப்பதும் என்நூல் புதியதென்று இகழ்வதும் யாரேனும் சொல்லக்கூடும். எட்டிமரம் வளர்ந்து பழையதாக நின்று கனி தருகின்றது. அதில் இனிமை உண்டா? கரும்பு புதியது. அதற்குச் சுவை இல்லாமல் போகுமா? செய்யுளின் சுவையில் உயர்வு இழிவு என்று பார்ப்பதேயன்றிப் பழமைபுதுமை என்பதற் காகச் சிறப்பிப்பதோ இழித்துக் கூறுவதோ முறையாகாது" என்ற கருத்தடங்கிய பாடல்,*

அழகுதரக் கனிந்தநச்சு மரம்பழைய
தெனினும்அதில் அமுதுண் டாமோ?
விழைவுதரு சுவைக்கரும்பு புதியதுவே
எனினும்அதில் இரதம் போமோ?
இழிவுறுபா டலும்உயர்வு தங்கியசெய்
யுளும்அவைபோல் இருக்கும் ஆகில்

பழமைஎன நலந்தருமோ? புதுமைஎன
இகழ்படுமோ? பயன்கொள் வோர்க்கே (19)

*என்பது. இந்த அவையடக்கப் பாடல் சித்தாந்த சாத்திர மாகிய சிவப்பிரகாசத்தில் வரும் "தொன்மையாம் எனும் எவையும்"(12) என்ற அவையடக்கப் பாடலைப் பின்பற்றி அமைந்ததாகக் கருதலாம்.*

(ii) ***துதிப்பாடல்கள்:*** *இதிலுள்ள துதிப்பாடல்கள் நம் உள்ளத்தை உருக்குவனவாக அமைந்துள்ளன.*

***(அ) நடேசர் துதி:*** *சிறப்பானது.*

முதிரும்சுவை மதுரம்பெற
மொழியுந்தமிழ் விரகன்புகழ்
பதிகம்புனை பவனம்பினர்
பலபஞ்சன ணமலன்கதிர்
உதிரும்படி பகிரண்டமு
முடையும்படி இலகும்படி
அதிரும்படி நடனம்புரி
அதிருங்கழல் அதிருங்கழல்.

***(ஆ) பரசிவத்தோத்திரம்:*** *இதுவும் சிறப்பானது.*

உறவொடு பகையகல்
ஒருமுத லவனெவன்
இறுதியி லுலகருள்
இறையவ னவனெவன்
பிறைமுடி யினில்நடம்
வளர்பவ னவனெவன்
அறிவினில் லறிபவன்
அடியிணை தொழுதனம்

*இப்பாடல் **'உயர்வற உயர்நலம் உடையவன்'** (1.1:1) என்ற நம்மாழ்வரின் திருவாய்மொழியின் முதல் பாசுரத்தைத் தழுவியது.*

*(இ) அண்ணாமலையார்துதி:*

ஒருமானைக் கரத்தினில் வைத்து ஒருமானைச்
சிரத்தினில் வைத்து உலகம் ஏழும்
தருமானை இடத்தினில் வைத்து அருள்வானை,
பவளநெடுஞ் சயிலம்போல
வரும்ஆனை முகத்தானை அளித்தானை
பொரும்ஆனை மகிழ ஏறும்
பெருமானை அருணகிரி எம்மானை
அடிபணிந்து பிறவி தீர்ப்பாம் (8)

*(ஈ) உண்ணாமுலையம்மைத்துதி:*

காரொழுகும் குழலாளை, கருணைவழிந்து
ஒழுகும்இரு கடைக்கண் ணாளை
மூரல்இள நிலவுஒழுகுப் புழுகுஒழுக
அழகுஒழுகும் முகத்தி னாளை
வார்ஒழுகும் தனத்தாளை, வடிவுஒழுகித்
தெரியாத மருங்கு லாளை
சீர்ஒழுகும் பதத்தாளை, அருணைஉண்ணா
முலையாளைச் சிந்தை சேர்ப்பாம் (9)

*இப்பாடலில் ஒழுகுதல் என்ற சொல்லும் கருத்தும் பாட்டு முழுமையிலும் ஒழுகும்படி பாடியிருத்தல் அற்புதம்.*

*இந்நூலின் இரண்டாம் பாகத்துக்கும் தனியே ஒரு கடவுள் வாழ்த்துப் பாடி சேர்க்கப்பெற்றுள்ளது. இப்பாடல் விநாயகர், முருகன், அருணாசலேசர் உண்ணாமுலை அம்மை ஆகியோரைத் துதிப்பது. பாடல் இது.*

செருமலையும் களிற்றுமுகப் பிள்ளைபதம்
போற்றி,திரு வாயால் முத்தம்
தருமலையும் ஒருமலையும் தொலைத்தமலைக்
கிழவன்இரு சரணம் போற்றி

பொருமலையும் இரங்கலையும் அடியாருக்கு
ஒழிக்கஅழற் பொருப்பாய் நின்றென்
கருமலையும் செம்மலையும் பச்சைமலை
மடந்தையையும் கருத்துள் வைப்பாம்.

இதில் எல்லப்ப நாவலருக்குரிய நடை காணப்ப கின்றது.

(i) **நகரச்சருக்கத்தில்** *15 நதிகளை ஒரு பாடலிலு காசி, ஆரூர், சிதம்பரம், முதுகுன்று, கேதாரம், பருப்பத காளத்தி, கச்சி, விரிஞ்சை ஆகிய தலங்களைத் தனித்தனி பாடல்களிலும் கூறுகின்றார். பூந்தராய், ஐயாறு, இடை மருது, குடந்தை, ஆனைக்கா, சிராமலை, வாட்போக் ஒருபாடலிலும்; மதுரை, இராமேச்சுரம் ஒரு பாடலிலு சொல்லப் பெறுகின்றன. ஒருபாடலில் இலிங்கவ ஆரிடம் முதலான ஆறு என்றும், அருணையில் மலை இலிங்கம் என்றும் செப்புகின்றார். இது தென்கயிலை பெண்ணை செய்யாறு மலைநதி மூன்றும் இடைபிங்கல சுழுமுனை.*

தில்லையைக் காண காசியில் இறக்கச்
சிறக்கும் ஆரூர்தனில் பிறக்க
எல்லையில் பெருமை அருணையை நினைக்க
எய்தலால் முத்திஎன் றுரைத்தீர்

என்ற பாடலில் தலங்களின் பெருமை சொல் பெறுகின்றது.

(ii) ***திருமலைச்சருக்கத்தில்:*** இதில் நான்முகனு திருமாலும் சிவபெருமானது அடிமுடி தேடியவரலா இயம்பப் பெறுகின்றது. நான்முகனுக்கும் நாரணனுக்கு ஒருவாக்குவாதம் நடைபெறுகின்றது. நான்முகன் செ வான். "நான் எல்லாவற்றையும் படைத்தேன். படைப் தொழில் இல்லையாயின் நீ எங்ஙனம் அளித்

தொழிலைச் செய்வாய்? ஆகவே உன் தொழிலுக்கு ஆதாரம் என் தொழில்தான்" என. அதற்குத் திருமால் "என்னுடைய உந்தியில் தானே நீ முளைத்தாய்? என்னிடம் தோன்றிய நீஎன்னைவிட எவ்வாறு வலிமையுடையவனா வாய்? என்று கேட்க அதற்கு ஏற்ற விடையைச் சொல்லுகின்றான். "நான் உந்தித் தாமரையில் உதித்தேன் என்றால் நீ தூணில் உதிக்கவில்லையா? நானாவது உயிருள்ள தாமரையில் உதித்தேன். உன்னிடம் பிறந்தத னால் உன்னிடம் வலியவனாக முடியாதோ? மூங்கிலில் பிறக்கும் தீ அந்த மூங்கிலையே அழித்து விடுகின்றதே" -இப்படிப் பேசினான் நான்முகன்.

உந்திமல ரோன்என
 இகழ்ச்சிஉரை யாதே
முந்திஒரு தூணிடை
 முளைத்தனை; உனக்குத்
தந்தையென வோ?அலது
 தாய்அதுஎன வோ?சொல
செந்தழல் பிறந்துகழை
 தீய்ப்பதறி யாயோ? (101)

அதற்கு நாராயணன் தக்கவிடை தருகின்றான். "தந்தைதான் மைந்தர் பிழையைப் பொறுப்பர் என்றே இப்படிப் பேசுகின்றாய்? தவறு செய்தால் மைந்தன் என்று பார்க்கமாட்டேன். மதுகைடவர்கள் என் மைந்தர்களாகப் பிறந்தார்களாயினும் அவர்களை அழித்தேன். உடம்பி லேயே நோய் தோன்றுகின்றது. அந்த நோய் தன்னிடம் தோன்றிற்று என்று விட்டுவிடுவார்களா? அதனை அறுத்துப்போக்க மாட்டமார்களா?" என்கின்றான்.

கன்றும்மது வும்கயிட
 வப்பகடு தானும்

என்றனையர் ஆகவும்
இகழ்ந்துஉயிர் குடித்தேன்;
மன்றஒரு தீமைசெயின்
மைந்தன்என உண்டோ?
அன்றிஉடல் நோயையும்
அறுத்தெறிகி லாரோ? (26)

*நான்முகன் தன் அகந்தை நீங்கிச் சிவபெருமானை வணங்கித் துதிக்கின்றான் (148–152) அங்கே வரும் ஐந்து பாடல்களும் மிக அழகியவை. இறுதியில் உள்ள பாடலில் ஓர் அருமையான கருத்து உள்ளது. "நான் உன்னை அளந்து உன்முடியைக் கண்டுபிடிப்பேன் என்று எண் ணியதே பிழை. அங்ஙனம் எண்ணியதற்கு அப்பொழுதே தண்டனை கிடைத்தது. அந்த எண்ணம் தோன்றிய அளவில் படைப்பு தொழிலாற்றும் நிலையில் உள்ள நான் வெறும் பறவையாகிவிட்டேன். இஃது அந்த எண்ணத்தின் தீமையைப் புலப்படுத்துகின்றது" என்ற கருத்துப்பட அவன் புலம்புகின்றான்.*

அறிதற்கரி தாம்உன்முடி
அறிவேன்எனும் அளவே
பறவைப்படிவு ஆயினேன் இனி
மேலோஇடர் படுவேன்? (132)

*இந்தச் சருக்கத்தில் எங்கும் சந்தத் தொடர்களும் முரண் தொடைகளும் காணப்படும். ஓரிடத்தில் சிலபாடல்கள் முழுமையும் அடிமடக்காகவே வரக் காண்கின்றோம். ஏழு நாளும் வலம் வரும் பலனைத் தனித்தனியே உரைக்கின் றார். அணி அண்ணாமலை என்ற தலம் சொல்லப் பெறுகின்றது.*

(iii) ***அண்டலிங்கம்:*** *சோதிலிங்கமாக நிற்கும் பெருமான் எவராலும் அளவிடற்கரியவன். அவனுக்கு எவர் பூசை புரிய முடியும்? அந்த லிங்கம் அண்டலிங்கமாக விரிந்திருப்*

*பது. அந்த லிங்கத்தைப் பற்றித் திருமூலர் ஒரு பாடல் தரு கின்றார். இந்த நிலமே ஆவுடையாராம் (சக்தி); வட்டமாக நிலத்தை, தன் விளிம்பு தொடத்தோற்றும் வானமே இலிங்க மாம். கடலே மஞ்சன சாலையாம்; மேகமே திருமஞ்சனக் குடமாம்; மழையே திருமஞ்சனமாம்; நட்சத்திர வரிசையே மாலையாம்; திசைகளே பரிவட்டமாம்.*

தரைஉற்ற சக்தி; தனிலிங்கம் விண்ணாம்.
திரையொரு நீரது மஞ்சன சாலை;
வரைபொரு மஞ்சுநீர்; வானஉடு மாலை;
கரையற்ற நந்தி கலையும் திக்காமே.

*இந்த அண்டலிங்கத்துக்கு அகண்ட பூசை நடைபெறு கின்றதாம். திருவண்ணாமலை சோதிலிங்கத்துக்கும் அப்படி ஓர் அகண்ட பூசை நடைபெறும். "வழிபடுவார்க்கு ஏற்றபடி அவர்கள் பூசைக்கு எளிய பிண்டலிங்கமாகவும் எழுந்தருள வேண்டும்" என்று தேவர்கள் வேண்டிக் கொண்டார்களாம். அண்டலிங்கத்துக்கு நடைபெறும் பூசையை இவ்வாசிரியர் சொல்லுகின்றார்.*

'அடுத்துஅருண கிரியானே! உனக்குவிண்நீர்
அலதுபுனல் ஆட்டுவார்யார்?
தொடுத்தஉடுத் திரள்அலது திருமுடிக்கு
மணிமாலை சூட்டுவார்யார்?
கடுத்திகழும் மிடற்றானே! கதிர்களன்றி
மணித்தீபம் காட்டுவார்யார்?
எடுத்திறைஞ்சும் பூசைசெய்ய, இதன்கீழ்ஓர்
இலிங்கவடி வெடுப்பாய்' என்றார்.

*என்ற பாடலில்.*

(iv) **உவமைநயம்:** *(அ) திருவண்ணாமலையைச் சார்ந்த இடங்களில் தாம்புக் கயிற்றின் இரு நுனிகளிலும் இரண்டு குடங்களைக் கட்டி ஒன்று கீழே சென்று மொள்ள*

மற்றொன்று மேலே இருக்க, மீட்டும் மேலிருப்பதைக் கீழிறங்கி மொள்ளச் செய்து கீழிருப்பதை மேலேற்றித் தண்ணீர் எடுப்பார்கள். இந்த வழக்கத்தை நூலாசிரியர் ஒரு கவிதையில் உவமையாக்குகின்றார்.

சோதிமலையாய் நின்ற இறைவனை அன்னமும் பன்றியுமாக உருவெடுத்து முடியும் அடியும் தேட அயனும் மாலும் செல்வது முத்துக் குடமும் நீலமணிக்குடமும் மேலும் கீழும் போவதுபோல் இருந்ததாம்.

மெத்தும்அரைக் கணத்தினுக்குஆ யிரம்காதம்
புறத்தயனார் விரைந்து போனார்
துத்திஅரா எடுத்தபுவி கணத்தினுக்கா
யிரம்காதம் தொளைத்துப் போனார்
அத்தகையோர் செயல்உரைக்கின் கனகமணி
நெடும்பூட்டுக்கு அருகில் ஓடும்
நித்தியப்பொற் குண்டிகையும் நீலமணிக்
குண்டிகையும் நிகர்த்த மாதோ.(123)

என்ற பாடலில் இந்த உவமையைக் கண்டு மகிழலாம்.

***(ஆ) இன்னொரு சிறப்பும் நயமும் பொருந்திய உவமை:*** திருவண்ணாமலையில் பூசைநடைபெற்றால், எல்லாத்தலங் களுக்கும் பூசை நடந்ததாகும் என்ற கருத்திற்கு ஏற்றஉவமை ஒன்றைச் சொல்கின்றார் ஆசிரியர், "வேரில் நீர் சொரிந் தால் பூ இலையெல்லாம் குளிர்ச்சி பெறுவதுபோல" என்கின்றார்.

"வீசுஅவர் இலைமெய் குளிர்ந்திடும் கொடியின்
வேரில்நீர் சொரிந்திடின்; அதுபோல்
பூசனை அருணை, நகரிலே சிறிதும்
புரைஅற நடக்குமே ஆகில்

காசியே முதல்எத் தலமெலாம் பூசை
களம்பெற நடந்ததாம்" (76)

என்ற பாடலில் உவமை நயத்தைக் கண்டு மகிழலாம்.

**(இ) தவம் புரிந்த உமாதேவியாருக்கு** அருள எம்பெரு மான் எழுந்தருள்கின்றான். தன் திருமேனியில் பாதியை அருளப்போகின்றான். அவன் வரும் கோலத்தை எடுத் துரைக்கையில் அவன் திருமார்பில் உள்ள முப்புரிநூலுக்கு ஓர் உவமை கூறுகின்றார். இனி நடைபெறப் போவதை எண்ணி அதற்கேற்ற உவமையை அருளுகின்றார்.

'புவியைப்
பெற்ற மாதினுக்கு ஒருபுறம்
அளித்திடப் பிடித்த
எற்று நூல்எனப் புரிமுந்நூல்
மார்பகத்து இலங்க (395)

மரம் முதலியவற்றை அளவு பிடித்து அறுக்க மையிலே தோய்ந்த நூலைப்பிடித்து எற்றி அடையாளம் செய்வது வழக்கம். அந்த நூலுக்கு எற்று நூல் என்று பெயர். இங்கே அம்பிகைக்கு எற்று நூலைப்போல இருந்தது பூணூல் என்ற உவமையின் நயம் அறிந்து இன்புறத்தக்கது.

இங்ஙனம் பல்வேறு சிறப்புகளை உடையது அருணாசல புராணம். இதில் தொட்ட இடமெல்லாம் சைவப் பயிர்; தெய்வத்தமிழ் என்று போற்றிக் கொண்டேபோவதைக் காணலாம். சில ஏடுகளில் **அருணகிரிப் புராணம்** என்றே காணப்பெறுகின்றது. உரையோடு கூடவே புராணம் உள்ளது.

*(2)* **திருவெண்காட்டுப்புராணம்**[22]: திருவெண்காடு- சைவசித்தாந்த முதல் சந்தானாசாரியராகிய மெய்கண்டார் அவதாரச் சிறப்புக்குக் காரணமான தலம்; எல்லா

22. 16-ஆம் நூற்றாண்டு

வகையாலும் பெருஞ்சிறப்புடையது. ஆசிரியரான எல்லப்பநாவலர் பிறந்த இராதா நல்லூர் என்பது இத்தலத்திலிருந்து நாலுகல் தொலைவேயுள்ளது. புராணம் பாயிரமும் 18 சருக்கங்களும் 614 பாடல்களும் உடையது. பாயிரப்பகுதி 35 பாடல்கள்; முதல் 25 பாடல்கள் கடவுள் வாழ்த்து, அவையடக்கம், நூல்வரலாறு; அடுத்த இரண்டு பாடல் பதிகம்; பின் எட்டுப் பாடல்கள் நைமி சாரணியத்தின் சிறப்பு. பிறகு நூல் தொடங்குகின்றது.

கடவுள் வாழ்த்துப் பகுதியில் இத்தலத்துக்குச் சிறப்பாயுள்ள அகோரமூர்த்திக்கும் தட்சிணாமூர்த்திக்கும் வணக்கம் சொல்கிறார். தனியாக மூவர்பாடிய திருமுறை கள் ஏழையும் ஒரு தனிப்பாடலால் துதிப்பது சிறப்பானது. பின்னர் நால்வர், திருநந்திதேவர், பட்டினத்தார் இவர் கட்கு வணக்கம் சொல்கிறார். நந்தியைக்குறித்த பாடலில் இவர் நூல்களில் காணப்பெறுவது போல பிறருக்கும்-நந்தி, அப்பாலும் அடிசார்ந்தார், அகத்தியர் ஆகியோருக்கும்-வணக்கம் சொல்கிறார். இரண்டுபாடல்களில் மெய்கண் டார் வணக்கம் வருகின்றது. இறுதியில் இரண்டு பாடல் களில் தொண்டர்வணக்கமும் நான்கு பாடல்களில் அவை யடக்கமும் வருகின்றது.

இவர்தம் உமையம்மையின் வணக்கம் அற்புதம். இஃது இவருக்கு 'திவ்வியகவி' என்று சிறப்பு பெறுவதற்குரிய பெருமையை அளித்து விடுகின்றது.

அடையார்தாம் புறமூன்றும் அடர்ந்தபிரான்
புவனமுய்ய ஆடா நிற்பான்
பெடைதழுவும் சுவேதவனம் புடைசூழும்
சுவேதவனப் பெருமா னார்தம்
தொடைதிகழும் மணிப்புயமும் திருமார்பும்
குழைத்த கொங்கைத் துணியினாளை
இடைசிறிய நாயகியை அருட்பெரிய
நாயகியை இறைஞ்சு வாயே.

*மெய்கண்டாரைப் பற்றி புராணசாரமாக இவர் அமைத்திருக்கும் இரண்டு பாடல்கள் மிக அற்புதம். மெய் கண்டார் மூன்று வயதாகி, அதுவரையில் மௌனமாக இருந்து பின்னர் பரஞ்சோதி முனிவர் உபதேசம் பெற்று தம் தாய் மாமன் திருவெண்ணெய் நல்லூர்க் காங்கேய பூபதியால் வளர்க்கப்பெற்றார் என்பதற்கு ஆதாரம் இப்புராணம் கூறும் வரலாறு ஒன்றேயாகும்.*

*நூலில் பல பொருள்கள் சிறப்பானவை. சிவபெரு மானின் கண்கள் மூன்றும் முக்குளங்கள். சுவேதவணக்கச் சருக்கத்தில் நதிகள், மலைகள் ஒவ்வொரு பாட்டினாலும் தலங்கள் இரண்டு பாடல்களாலும் கூறுகின்றார். எமதூதர் பிணித்தபோது வேதராசி என்பவன் சிவபெருமானை 'முறையோ' என்று ஓலமிடுகின்றான்.*

துனியா மடியார் துணையே முறையோ
கனியே எளியார் கதியே முறையோ
இனியா கினியார் இலைகாண் முறையோ
முனிவோ ரரசே முறையோ முறையோ

*என்ற பாடலில் இதனைக் காணலாம். மேலும் இதே சருக்கத்தில் வாழ்நாள் முடிந்ததாயின் முள்கிழித்தாலும் உயிர் போகும்; வச்சிரம் உருவினாலும் உறுதி நாள் உள்ளவர்கள் வாழ்வர் என்று செப்புகின்றார்.*

இறுதி நாள்வரின் முட்கிழிக்கினும்
எவரும் ஆவி இழப்பர்காண்
உறுதிநாள் உளதாயின் வச்சிரம்
உருவினார்களும் உய்வர்காண்.

*அடுத்து, சுவேதன் தன்னைப் பற்ற வந்த எமனை வெருட்டுவதாக ஏழு பாடல்கள் அமைத்துள்ளார்.*

பாரெடாவரு பன்றி தேடிய
பாதமென்துணை பாசமாய்

நாரெடாதினி யோடு நின்வழி
　　தான்வராமல் இருக்கவும்
வேரெடாகெட வந்ததென்ன விசார
　　மென்னை வெருட்டநீ
ஆரடாகடி தோட டாகொலை
　　அந்தகாகொலை அந்தகா

*என்பது முதல் பாடல். இப்பாடல்,*

பட்டிக் கடாவில் வருமந்த
　　காவுனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண் டலாது
　　விடேன்வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருதசெவ் வேற்பெரு
　　மான்திரு முன்புநின்றென்
கட்டிப் புறப்பட டாசக்தி
　　வாளென்றன் கையதுவே(64)

*என்ற கந்தரலங்காரப் பாடலை நினைக்கச் செய்கின்றது.*

*மருத்துவச்சருக்கத்தில் மருத்துவனது படையை அழிக்கின்ற இடபத்தின் செயல் பல பாடல்களால் விரித்துச் சொல்லப் பெறுகின்றது. ஒரு பாடலை ஈண்டுக் கருதலாம்.*

பெருகு கிம்புரி மருவு கொம்பிரு
　　பிறையெ னும்படி கிளரவே
கிரண சங்கிலி சாம ரம்பல
　　கிண்கி ணித்தொகை புரளவே
சரண நூபுரம் அணிச தங்கைகள்
　　சலச லஞ்சல சலெனவே
பொருக ளம்புடைப் படந டந்தது
　　புவிய ரேவிய இடபமே.

*இங்குச் சொல்லப்பெற்ற செய்திகள் போர் வருணனை போல் அமைந்துள்ளது.*

*சத்தியவிரதச் சருக்கத்தில் கட்குடியின் இழிவு பற்றி விரிவாகச் சொல்லப்பெற்றுள்ளது. இலிங்கச் சருக்கத்தில் திருவெண்காட்டைச்சுற்றியுள்ள பலதலங்களும் அங்குள்ள சிவமூர்த்தங்களும் விரித்துரைக்கப்பெற்றுள்ளன. இத்தலத் துக்குரிய தாண்டவம் 'கௌரிதாண்டவம்' என்று வழங்கப் பெறும். வெண்காட்டு ஈசர் ஆனந்தக் கூத்து ஆடியதைப் பற்றிய இவர்தம் பாடல்கள் திருமந்திரத்தை நினைவூட்டு கின்றன.*

தேவ ராடினார் சித்தரும் ஆடினர்
தாவ ராதிகள சங்க மாடின
மூவ ராடினர் முச்சுடர் ஆடின
ஆவி லேறினான் ஆனந்த மாடவே

சுத்த வேதச் சுருதிகள் ஆடின
பத்தர் ஆடப் பதஞ்சலி ஆடினன்
நித்த னேகன் நிமலன் அசஞ்சலன்
சத்த னானந்தத் தாண்டவம் ஆடவே.

இம்ப ராட இருடியர் ஆடினர்
தும்பி யாரிரு தோளவர் ஆடினர்
கம்பை நாயகி கைத்தளம் கொட்டி
சம்பு வானந்தத் தாண்டவம் ஆடவே.

*ஒவ்வொரு தலவரலாறும், அத்தலமே எல்லாவற்றுக்கும் மேலானது என்று கூறுவது ஒரு புராண மரபு. இங்கும் ஆசிரியர் அங்ஙனமே சொல்லுகின்றார். 'பொற்பொது, அருணை, ஆரூர், காசி, தெரிசிக்கச் சிந்திக்கச் செனிக்கமாய- ஒப்பறுவீடுதவும்: அவை உதவும் பேற்றை ஒருங்காவே கணப்போதில உதவும் இவ்வூர் (திருவெண் காடு).*

*இவர் பாடிய திருவாதவூரர் துதி எல்லாரும் நன்கு அறிந்தது.*

சிற்றம்பலக் கோவைத்
தேன்சொரியும் செம்முகிலை
மற்றொப்பி லாததிரு
வாசகத்தின் வாரிதியைக்
கற்றைச் சடையான்
கருத்துருக்கும் காதலனைக்
கொற்றத் திருவாத
வூரனைக்கை கூப்புதுமே.

*திருவெண்காடராகிய பட்டினத்தார் துதி இவர் பாடுவது இயல்பு. அவர்பற்றிய இருபுதுக் கருத்துகளைக் கூறுகிறார். ஒன்று, அவர் திருவாரூர் மும்மணிக்கோவை பாடினார் என்பது; இரண்டு, திருவெண்காட்டு திருவிசைப்பா பாடினார் என்பது.*

தம்மகத்திற் செல்வமெல்லாம் பொய்யென் றெண்ணிச்
சத்தியமெய்ப் பொருளுணர்ந்து தவத்தோர் போற்றச்
செம்மலுக்குத் திருவிசைப்பா இசைத்துத் தெய்வ
சிகாமணியாம் திருவாரூர்ச் செல்வ னார்க்கு
மும்மணிக் கோவையும் பகர்ந்துதிரு வெண்காட்டின்
முதல்வருக்கு மகபூசை முடித்தோர் நாகப்
பைம்மணித்தார் காவிரிப்பூம் பட்டி னத்துப்
பட்டினத்துப் பிள்ளைபதம் பரவு வாரே.

*என்ற பாடலால் இவற்றை அறியலாம்.*

*ஞானத்தின் சிறப்பைக் கூறுகின்றது ஒரு பாடல்.*

அரச னுக்கிணை யாகுமோ
பரிசன மனைத்தும்
தெரியின் ஞானநே ராகுமோ
கிரியையின் திரளும்
பரிசனங்கள் பற்பல பெரிநல்
அரனோர் படைக்கும்

கிரியை பற்பல புரிந்திடின்
ஞானமும் கிடைக்கும்.

*நகரச்சருக்கத்தில் ஒரு பாடல் இத்தலத்துக்குரிய 14 திருப்பெயர்களையும் கூறுகிறது.*

*திருமுறைகளிடத்து ஆசிரியருக்கு மிக்க ஈடுபாடு. தேவாரத்திருமுறை ஏழுக்கும் தனிவணக்கம் பாடியுள்ளார்.*

காழிதனிற் பெருமானைக் காட்டியகைத்
தமிழ்விரகன் கழற்றாள் போற்றி
ஆதியிலே குண்டரிடும் கல்மிதப்ப
வந்தபிரா னடியை ஏத்திச்
சூழியிப மன்றுரித்தார் துணையான
தோழனடித் துணையை வாழ்த்தி
வாழியவர் திருமறைக ளேழையும்தம்
மனதார வாழ்த்து வோமே.

*அன்றியும் நூலின் இறுதி வாழ்த்துப்பாடலில் 'திருமுறை களேழும் வாழியே' என்னும் தனியே வாழ்த்துவதும் காணத்தக்கது.*

*(3)* ***செவ்வந்திப்புராணம்:*** *இப்புராணம் திருச்சிராப் பள்ளிஎன்ற பாடல் பெற்ற தலத்துக்குரியது. இதுதலப் பெயர் சூட்டப்பெறாமல் ஒரு மலர்ப் பெயர் சூட்டப் பெறுவது இதற்குரிய தனிச்சிறப்பு. புராணம் 14 சருக்கங் களும் 550 பாடல்களும் உடையது.*

*சாரமா முனிவர் என்பவர் சிராமலைப் பெருமானுக்குச் செவ்வந்திமலர் நந்தவனம் ஏற்படுத்தி அம்மலரால் இறைவனைப் பூசித்தார். பூவிற்பவன் அப்பூக்களை அங்கு ஆட்சிபுரிந்த சோழமன்னனின் மனைவியிடம் கொடுத்து வந்ததை முனிவர் மன்னனிடம் முறையிட்டும் அவன் கேட்காமையால் இறைவன் கட்டளைப்படி மண்மாரி பெய்து உறையூர் அழிந்தது. அரச குடும்பத்தில் தப்பிய*

குழந்தையே பிற்காலத்தில் கரிகாற் சோழனானான். செவ்வந்தி மலர் காரணமாகப் புராணம் செவ்வந்திப் புராணம் ஆயிற்று.

*பதிகம்:* திருமலைச் சருக்கத்தின் இறுதியில் மூன்று பாடல்கள் பதிகமாக அமைகின்றன. இறைவன், ஆற்று வெள்ளத்தால் தாய் வர முடியாத போது, தாமே தாய் போல் வந்து மகளின் பிள்ளைப்பேற்றுக்கு மருத்துவம் பார்த்த வரலாற்றால் தாயுமானவன் என்ற பெயர் பெற்றான். இறைவனுடைய பெயர்களை நயமாக இரண்டு பாடல்களில் செப்புகின்றார்.

சங்க ரன்சிவன் சதாசிவன்
    ஈசன் ஈசானன்
புங்க வன்திரி புராந்தகன்
    புராதனன் புராணன்
கங்கை நாயகன் கரைமிடற்
    றிறைநுதற் கண்ணான்
எங்கள் நாயகன் நிராமயன்
    சிராமலை இறைவன்.

பூர ணன்பரன் பராசரன்
    வெள்ளியம் பொருப்பன்
கார ணன்மத னாந்தகன்
    காலனைக் கடிந்தோன்
வார ணந்தனை புரித்தவன்
    மறைபொருள் வகுத்தோன்
நார ணன்தனக் கரியவன்
    சிராமலை நாதன்.

இப்புராணத்தில் உள்ள முருகக்கடவுள் வணக்கம் மிகச் சிறப்பானது. இது நாவலருக்கு முருகனிடத்தில் உள்ள சிறப்பான ஈடுபாட்டைக் காட்டுகின்றது.

ஓகையால் திரைமுன் னாளில்
உழக்குமா வினையும் வாட்டும்
ஏகவெவ் வரைவி னெல்லை
இடித்திடும் இமையோர் போற்றத்
தோகைமேல் உலவும் கந்தன்
சுடர்க்கரத் திருக்கும் வெற்றி
வாகையே சுமக்கும் வேலை
வணங்குவ தெமக்கு வேலை.

*மணிவாசகப் பெருமான் துதி சிறப்பு மிக்க பாடல். இதில் ஆசிரியர் பெருமான்திருவாசகம் திருக்கோவையார் என்ற இரண்டுமே செய்தார் என்று திட்டமாய்க் கூறுகின்றார்.*

தேனூறும் வாசகங்கள் அறுநூறும் திருக்கோவை
நானூறும் அமமுதூற மொழிந்தருளும் நாயகனை
வானூறும் கங்கைநிகர் மாணிக்க வாசகனை
யானூறு படாதவகை இருபோதும் இறைஞ்சிடுவேன்.

*என்ற பாடலில் இதனைக் காணலாம்.*

*நான்முகன் சிவன் முடியைக் கண்டதாகச் சொல்லிய பாவம் நீங்க இங்கு வழிபட்டான் என்பதைச் சொல்லும் போது, சிராமலையை இரும்பு செம்பு சொர்ணம் (பொன்) என்ற சொல் நயம் பொருந்தப் பாடல் நன்கு அமைகின்றது.*

எந்தையார்க்கு அனுதினம் இருப்பு மாமலை
சிந்தைநைந் தமரர்கள் செப்பு மாமலை
சுந்தரன் தூதன்முன் சொன்ன மாமலை
கந்தமா மலருறை கஞ்சன் போற்றினான்.

*மடக்கு முரண் முதலான பண்புகள் அமைந்த கவிதையின் இயல்புகளையும் நயங்களையும் நூலெங்கும் காணலாம். அம்மைதுதி: இனிய பாதமாம் இருபோதும்*

*தலைமேல் துதிப்பாம். **முருகன்துதி:** வாகையே சுமக்கும் வேலை வணங்குவதெமக்கு வேலை. **அப்பர்துதி:** கற்றூணால் அத்தியைக் கடந்த நாவுக்கரசினை வணங்கு வோமே (அத்தி, அரசு மரப்பெயர்கள்) **சண்டேசர்துதி:** தாதை இணைத்தாளைத் தடிந்திறைவர் துணைத்தாளை அடைந்தவர் தாள் இறைஞ்சுவோமே. **சுந்தரர்** பெருமான் என்று சொல்லித் துதிக்கும் பாடல் மிகச்சுவையுடையது.*

தீங்கும் பெருமா நிலத்திடரும்
　　தீரத் தீரத் திரைக்கடலில்
தூங்கும் பெருமா ளுடன்வேதன்
　　துடிக்கும் படிக்குச் சுடர்க்கிரியாய்
ஓங்கும் பொருள் புகழ்பரவி
　　ஓரா யிரம்பொன் ஒருமொழிக்கு
வாங்கும் பெருமாள் சவுந்தரியப்
　　பெருமாள் பதத்தை வணங்கிடுவாம்.

*சுந்தரர் என்ற சொல்லை இங்கு 'சவுந்தரியப் பெருமாள்' என்று சொல்லியிருப்பதைக் கண்டுமகிழலாம்.*

*திருமலைச்சருக்கத்தில் ஒரு சந்தப்பாடல். மடக்கு:*

சோதி மதியின் பாதி யரவம்
　　சூடு சடையன் தோடு கமழும்
காதி லமிர்தம் போல அரசும்
　　காழி யிறையும் கூறு தமிழின்
பாத கமலம் பாடு மவர்தம்
　　பாத கமலம் பாறி யகலும்
போது செறியும் போது விரியும்
　　பூவை மருவும் பூவை மருவும்

*நூலின் சருக்கத் தொகை பாடல் தொகையை ஆசிரியரே சொல்கின்றார்: சிராமலையின் புராணம் தன்னை,*

ஏதமற வடநூலைத் தமிழ்நூ லாக்கி
இனியசருக் கங்களொடு பதினொன் றாகப்
போதமறத் திருவிருத்தம் ஐந்நூற் றைம்பான்
பொருந்திஇக் கதைவிரித்துப் பரவ லுற்றேன்.

சிராமலை ஆசிரியர் திருமலைக்கொழுந்து என்றே எங்கும் சொல்கின்றார்.

நூலின் நீண்ட சருக்கம் சூரவாதித்த சோழன் வரலாறு. சங்ககாலத்தில் உறையூர் சிறப்புடைய நகரமாயிருந்தது. தேவாரகாலத்தில உறையூர் பெருமை குன்றி எல்லாப் பெருமைகளும் சிராமலைக்குரியனவாயின். உறையூர் மண்மாரியால் அழிந்த தென்பது வழக்கு.

இதையும் புராணத்தின் பகுதியாக ஆசிரியர் பாடியுள்ளார். சூரவாதித்த சோழன் காலத்தில் நாகலோகத்திலிருந்து செவ்வந்தி மலர்பூலோகத்திற்குக் கொண்டு வந்து, அதைச் சாரமாமுனிவர் நந்தவனத்தில் பயிரிட்டுச் சிராமலைப் பெருமானுக்குச் சாத்திவந்தார். இம்மலர் அணிந்த காரணத்தால் சுவாமி செவ்வந்தி நாதர்; இது பற்றியே புராணமும் செவ்வந்திப்புராணம். 49 தலைமுறை கழித்து அரசாண்டவன் பராந்தகச் சோழன். இச்செவ்வந்தி மலர்களைக் கொண்டுவரச் செய்து தானும் தன் தேவியுமாக அணிந்தான். இது தகாதென்று சாரமாமுனிவர் எடுத்துச் சொல்லி அறிவுறுத்தியும் அவன் அதற்குச் செவி சாய்க்கவில்லை. அவருடைய சாபத்தால் மண்மாரி பெய்து நகர் அழிந்தது. அரசனும் அழிந்தான். கருவுற்றிருந்த அரசி ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டு பிழைத்தாள். அவன் வயிற்றிற் பிறந்தமகனே கரிகால் சோழன். பட்டத்து யானை அவனை முடிபுனையத் தூக்கிக் கொண்டு சென்றபோது தாய் அவன் காலில் கரிக்கோடிட்டு அனுப்பியமையால் கரிகாலன் எனப் பட்டான் என்பது இங்குள்ள கதையாகும்.

சிவபெருமான் ஒரு பெண்ணின் பிள்ளைப் பேற்றிற் காகத் தாயாக எழுந்தருளிவந்தமையால் 'தாயுமானவர்' என்று வழங்கப்பெற்றார் என்ற வரலாறு இறுதிச் சருக்க மான தாயான சருக்கத்தில் கூறப்பெற்றுள்ளது.

*(4) திருவிரிஞ்சைப் புராணம்:* 'திரிவிரிஞ்சிபுரம்' என்பது வடார்க்காடு மாவட்டத்தில் உள்ளது. இது வைப்புத்தலம். ஆகவே பதிகம் பெறாத தலம் என்பது உரைக்குறிப்பு.

இத்தலத்தைப்பற்றிப் புராணம் பாயிரம், நைமி சாரண்யம், கௌரிபுரி, வண்டுபுரி, விரிஞ்சபுரி, வழித்துணை, பரலோகம், பாலனுக்குத் திருமுடிவளைத்தது என்ற எட்டுச் சருக்கங்களையும் 370 பாடல்களையும் கொண்டது. அம்மை பூசித்தமையால் கௌரிபுரி; திருமால் பூசித்தமையால் விண்டுபுரி; கரன் என்ற கழுதை முக அசுரன் பூசித்தமையால் கரபுரி; விரிஞ்சன்-பிரமன். மிளகு வாணிகனுக்கு வழித்துணை சென்றமையால் வழித் துணைநாதர், மார்க்கசகாயர் என்ற பெயர்கள் இறை வனுக்கு ஏற்பட்டன. இளம்பிள்ளையாகிய ஒரு சிவவேதி யக்குழந்தை பூசை செய்யும்பொருட்டுப் பெருமான் இத்தலத்தில் அவனுக்கு எட்டத்தக்கவாறு முடி வளைத்த பெருமை யுடையது. செந்தமிழ் குலவும் தலம் என்று ஒரு பாடல் புகழாரம் சூட்டுகின்றது.

எல்லப்பநாவலர் நூலுக்குரிய கவியழகு முழுமையும் இந்தச் சிறுநூலில் கண்டுமகிழலாம். முருகன் துதி சிறப்புடையது.

அந்திப் போதழகுறவே நடித்தருளும்
வழித்துணைவர் அருளும் கோவை
வந்திப்போர் நினைத்தபடி மயிலேறி
அயிலெடுத்து வருஞ்செவ் வேளைச்
சந்திப்போம், மலர்சொரிவோம், புகழ்ந்திடுவோம்
அவன்கமலத் தாளும் தோளும்

சிந்திப்போம்; ஆதலினால் நமதுபழ
வினைகளெல்லாம் சிந்திப் போமே.

*பாயிரத்தின் இறுதிப்பாடல் நூல் சருக்கங்களைத் தொகுத்துக் கூறுகின்றது. 'இளைதாக முள்மரம் கொல்க' என்ற குறட்கருத்தை அடிப்படையாக வைத்து ஞாதியரையும் அவ்வாறு அழிக்க வேண்டும் என்று நுவலும் பாடல் இங்குச் கருதத் தக்கது.*

ஞாதியரை முட்செடியை நஞ்சையழல் தன்னை
ஏதம் ஒழிப்பதூம் எய்துவதன் முன்னே,
ஆதலின் அவர்க்குரிமை யானபொரு ளெல்லாம்
நீதியிலார் கைக்கொள்ள நினைத்திவை உரைப்பார்.

*இதனையடுத்து வேதியச் சிறுவன் ஒருவன் தனக்குத் திருக்கோயிலில் கிடைக்க வேண்டிய முதல் தாம்பூலம் வேண்டுமென்று இறைவனை 'வழித்துணை மருந்து' என்று விளித்துக் கேட்கும் பாடல்கள் குறிப்பிடத்தக்கன. இறைவன் முடி வளைத்த கதை மிக உருக்கமாய் அமைந்துள்ளது.*

என்புநெக்கு நெக்குருக என்னிதயத்தி லிருப்பான்
மன்பதைக்கெலாம் உயிருமாய் உணர்வுமாய் வளர்ப்பான்
அன்பருக்கெலாம் நினைத்திடும் வார்த்தையும் அளிப்பான்
வன்பருக் கெல்லாம் கொடியவன் திருமுடி வளைத்தான்.

*இவருக்குச் சொற்களைச் அடுக்கிச் சொல்வதில் விருப்பம் அதிகம்.*

அஞ்சுமுகி நாலுமுகி ஆறுமுகி மாறா
மஞ்சுமுகி நேரேனும் வராகமுகி வானாள்
நெஞ்சுமுகி கார்முகி சிலீமுகிய ராகி
விஞ்சுமுகில் நானொலி விளைத்தமர் விளைத்தார்.

பிரியாவிடை பிரியாவிடை பிரியாவிடை யுடையாய்
சரியானதி னுரியாகிய கலைமேவிடு தலைவா,

அரியார்தொழ அரியாய்என ஆராமை யுரைத்தே
பரிவான்மனை சென்றேகிளை பலரோடு மகிழ்ந்தான்.

இங்கு அஞ்சுமுகி மகேசுவரி; நாலுமுகி அபிராமி; ஆறுமுகி கௌமாரி; வராகமுகி வராகி; மஞ்சுமுகி நாராயணி; நெஞ்சுமுகி இந்திராணி; கார்முகி சிலீமுகி வில்லும் அம்பும் உடையவர். நூலில் அழகான சந்தப்பாடல்கள் அமைந்துள்ளன.

இவரது பாயிரப்பகுதி அமைப்புத் தனிப்பெருமை வாய்ந்தது. தேவாரமூவர் முதலிகட்கும் வணக்கம் சொல்லி, அங்கு மணிவாசகப் பெருமானுக்கு வணக்கம் சொல்லாமல், அடுத்த பாடலில் நந்தி தேவர், மணிவாசகர், சண்டேசர் ஆகிய மூவருக்கும் வணக்கம் கூறுகின்றார். அவையடக்கப் பாடலில் தாம் அருணைமாநகர் சிறப்புரைத்தமையால் இரண்டு புராணங்களும் இவர் பாடியது உறுதியாகின்றது.

இத்தலத்திற்கு மார்க்கசகாயர் பாடிய 'திருவிரிஞ்சன் முருகன் பிள்ளைத்தமிழ்' மிகுபுகழ் வாய்ந்தது.

(5) **தீர்த்தகிரிப் புராணம்:** 'தீர்த்தகிரி சேலம்' மாவட்டத்தைச் சேர்ந்த ஊற்றங்கரை வட்டத்தில் உள்ளதாகச் சொல்லப்பெறும். நாவலர் படைத்த இப்புராணம் பாயிரமும் 14 சருக்கங்களும் 445 பாடல்களும் கொண்டது. இதிலுள்ள தண்டகவனம், பருப்பதம், திருநாமம், சுவேதகேது என்ற நான்கையும் தவிர ஏனைப் பத்துச் சருக்கங்களும் தீர்த்தப் பெயர் பெறுவது பொருத்தமுடையதாகின்றது. ஊர் பெண்ணையாற்றின் வடகரையில் உள்ளது. 'அருணையும் தானும் பொருள் வேறு தராதது' என்று சொல்வர்.

தேவார மூவர் முதலிகளை மூன்று பாடல்களால் துதித்து ஆசிரியர் அடுத்தபாடலில் வாதவூரர், வான்மீகர், பரத்துவாசர், அகத்தியர், சூதர், வியாசர், சண்டேசர்

ஆகியோர் அனைவருக்கும் வணக்கம் சொல்வது நோக்கத் தக்கது. இராமகாதை பாடிய வான்மீகி இப்புராணத்தைப் பரத்துவாசருக்குச் சொன்னதாக வரலாறு. முதல் சருக்கமாகிய தண்டகவனத்தின் சருக்கத்தில் தொடக்கத் தில் இரண்டு பாடல்கள் நூலுக்குப் பதிகம்போல் அமைந்துள்ளன. சைவருக்கு அடிப்படையான சைவ இயல்பு இங்கும் சைவசமயத் தொண்டர் துதியில் புலப்படுகின்றது.

தெய்வமாகஓர் தேவரை யுஞ்சொலோம்
சைவ வைணவர் தாளிணைப் போற்றுவோம்;
வைய மீதினில் வன்தொண்ட னுக்குமுன்
ஐயன் ஏவல் புரந்தனன் ஆதலால்

தண்டக வனத்தை வருணிக்கும்போது, தமது தமிழ் இலக்கண அறிவை வெளிப்படுத்துகின்றார்.

அங்குறிஞ்சி யகப்புறப் பாட்டினால்
சங்கமும் தமிழுக்குத் தலைமையால்
துங்கமானசெய் யுட்டளை தோய்தலால்
பொங்குவாணி புலவரை யொத்ததே.

இவர்தம் வருணனைக்கு எடுத்துக்காட்டாக ஒரு பாடல்.

தீரமெங்கும் நிறைந்தன செங்கர
வீரமுங்கனி காரமும் வேழமும்
நாரமும் சுரநாகமும் பூகமும்
ஆரமும் குயிலாலும் அசோகுமே

தீர்த்தகிரிக்குப் 13 பெயர்கள் உள்ளன என்பதை ஒரு பாடல் பேசுகின்றது. வழக்கம்போல நூலில் பல சந்தப் பாடல்கள் அழகுகொழிக்க அமைந்துள்ளன. உமாதேவி யார், இராமன் முதலியோரைத் துதிக்குமிடத்து துதிப் பாடல்களாகப் பல அமைத்துள்ளார். அவற்றுள் ஒரு பாடல் இது.

உயிரினூ டொளித்தி ருப்பைப்
புரிய பாலில் வெண்ணெய்போல
தயிரி னூடு காணநின்ற
தன்மை தாப தற்குநீ
வெயிலி னூடு புனல்பரந்து
வெயிலி னூடு புலர்தல்போல்
மயல றாத சகலமுன்
னிடத்தில் வந்து பாயுமே.

இராமன் 'தீர்த்தம் அருளுமாறு அருள்க தீர்த்தமே' என்று ஆறுபாடல்களில் துதிப்பது அற்புதம். இத்தலத்தின் பெயர் 'தீர்த்தகிரி' என்று இருப்பதற்குப் பொருத்தமாக இங்குத் தீர்த்தங்களின் சிறப்பே அதிகமாகக் கூறப் பெற்றுள்ளது. இறுதிப் பாடல் வழக்கம்போல் 'சிவபூசையும் அடியார்களும் தழைக்க' என்று நிறைவு செய்வதுபோல் அமைந்துள்ளது.

இவர் எழுதிய 'திருச்செங்காட்டங்குடிப் புராணம்' அச்சேறவில்லை.

**வேறு சில புராண ஆசிரியர்கள்:** பெரும்புராணங்கள் செய்தோர் பலர். கந்தபுராணம் பாடியகச்சியப்ப சிவாச்சாரியர் வரதுங்க, அதிவீரராம பாண்டியர்கள் பெரும்பற்றப்புலியூர் நம்பி, பரஞ்சோதிமுனிவர்- இந்த வரிசையில் வைத்துப் போற்றப்பெற்றவர்கள் சிலர் உள்ளனர். அவர்களைக் காண்போம்.

## 8. புராணத்திருமலைநாதர்

எல்லா இடங்களிலும் இவருடைய பெயர் 'புராணத் திருமலை நாதர்' என்றே குறிப்பிடப் பெற்றுள்ளது. இவர் திருமுறைகளிலும் பழைய தமிழ் இலக்கியங்களிலும் பழைய தமிழ் நூல்களிலும் தலபுராணங்களிலும் சைவசாத்திரங்களிலும் நல்லபயிற்சியுள்ளவர். இவர் பாடிய

சிதம்பர புராணத்தைக் கேட்டு அரசன் சொற்சுவை பொருட்சுவைகளை நன்றாக உணர்ந்த அக்காலத்துப் பெரியோர்களான தில்லைமூவாயிரவர் போன்றோர் இன்புற்று இவரைப் **'புராணத்திருமலை நாதர்'**. என்றே வழங்குவாராயினர். சிவமகாபுராணமாகிய பெரியநூலைத் தமிழில் பெயர்த்தமையால் **'புராணத்திருமலை நாதர்'** சிறப்பு அடைமொழி இவருடைய பெயருடன் அமைந்தது மிகப் பொருத்தமேயாகும். (பதினாறாம் நூற்றாண்டு.)

**(1) சிவமகாபுராணம்:** தமிழில் இவர் நூல் முழுமையும் மொழிபெயர்க்கவில்லை. சமகாலத்தில் கிடைத்தவரை மொழி பெயர்த்தார். இப்பெரும் புராணத்தில் இன்று கிடைப்பன மூன்று துண்டுப் பகுதிகளும் தனிநூலாக வழங்கும் சிதம்பரப்புராணமு மேயாகும். கிடைத்த மூன்று பகுதிகளும் சிறு பகுதிகள். தஞ்சை சரசுவதிமகால் நூல்நிலையத்தில் உள்ளன. அச்சு வாகனம் ஏறவில்லை.

**(2) சரபபுராணம்:** கிடைக்கும் மூன்று பகுதிகளுள் இதுவே அளவால் பெரியது. சரபம் என்பது இதிகாசங் களால் மட்டும் அறியப்பெறும் ஒரு பிராணி. கோயில் வடிவங்களில் நாலு கால்களும் இறக்கையும் உடையதாய்ப் பறக்கும் வலிமையுடைய பிராணி போலக் காட்சி தரும். திருமால் எடுத்த அவதாரங்களில் ஒவ்வொன்றையுமே பரமேசுவரன் ஆட்கொண்டதாகச் சிவபுராணங்கள் செப்பும். அந்த முறையில் நரசிங்கத்தை ஆட்கொண்ட வரலாறு கூறுவது சரபபுராணம். பிரகலாதனுக்காக நரசிங்க வடிவு கொண்ட திருமால் இரணியன் ஆகம் பிளந்து உதிரம் குடித்த வெறியில் மிகவும் தருக்கி உலகையே அழிக்கத் தலைப்பட்டார். அப்போது தேவர்களின் வேண்டுகோட்கிரங்கிச் சிவபெருமான் சரப மூர்த்தியாகத் தோன்றி நரசிங்கத்தின் செருக்கை அடக்கினார் என்பது ஐதிகம்.

*நூல்: சரபபுராணம் 431 பாடல்களை உடையது. பாயிரம் தொடங்கி நரசிங்க உற்பத்திச் சருக்கம், கடவுளர் முறையிடு சருக்கம், வீரபத்திரன் எழுச்சி, அறிவுறுத்திய சருக்கம், சலந்தரன் வதைச்சருக்கம், சக்கரம் பெற்ற சருக்கம், நரசிங்கர் வதைச் சருக்கம் என ஏழுசருக்கங்களை யுடையது. தொடக்கத்தில் கற்பக விநாயகரை விழிபடும் பாடலையுடையது.*

தற்ப ரத்தொளிர் தற்சில சிற்புரத்
தற்பு தத்தை யறிந்தடைந் தின்புற
முற்ப வக்கடல் சாடிய மும்மத
கற்ப கத்தைக் கருத்துள் இருத்துவாம்.

*இச்சிறு நூலுக்குப் பாயிரப்பகுதி விரிவானது. அர்த்த நாரீசுவரமூர்த்தியாகிய பரம்பொருள் வணக்கம் கூறியபின் மதுரையில் ஈசன், பிராட்டி இருவரையும் வணங்கு கின்றார்.*

வையமெலாம் மகிழ்ந்து போற்றி
அருளிவிளையாட்டு எனவியப்ப அருந்தமிழ் நாட்டு
அணிமதுரை அதனுள் எண்ணெண்
திருவிடையாட் டுடையபிரான் செங்கமலப்
பொற்பாதம் சென்னி வைப்பாம்.

*என்கின்றார். பின் அங்கையற்கண்ணம்மை துதி. வீரபத் திரரே சரபமூர்த்தியாக வருகிறார் என்பது புராணமாத லால் அடுத்து வீரபத்திரர் துதி:*

கரமிழப்பத் தழற்கடவுள் கண்ணிழப்ப
விண்ணிரவிக் கருதாத் தக்கன்
சிரமிழப்ப ஏழுதேவர் உயிரிழப்பத்,
தேவர்பிரான் திண்டோற் கொண்ட
உரமிழப்பத் திருமாலும் திசைமுகனும்
முனிவரரும் உடைந்து தங்கள்

வரமிழப்ப வந்தெழுந்த வயவீர
பத்திரன்தாள் வணக்கம் செய்வாம்.

*இதன்பின்னர் முறையே சரபர், விநாயகர், குமரன்; இவர்கட்கு வணக்கம் சொல்லப் பெறுகின்றது. அடுத்து நால்வருக்கும் ஒரே பாடலில் வணக்கம் சொல்கின்றார்.*

அழுதுலகை வாழ்வித்த திருஞான
சம்பந்தர் அமரர் கொண்ட
பழுதுடைய நெறிகடந்து பார்புகழ்ந்த
வாகீசர், பகிரண் டங்கள்
முழுதுடையான் தொடர்ந்தாண்ட முதன்மைபெறும்
ஆரூரர், முதல்வன் தாளைப்
பொழுதுதொறும் போற்றுதிரு வாதவூ
ரண்ணல்பதம் போற்றல் செய்வாம்.

*தொடர்ந்து சண்டேசர், அடியார் துதிகள், வாழ்த்து, புராணவரலாறு; பின்னர் மதுரையிலிருந்த சைவத் தொண்டர் வேண்டத் தாம் சரபபுராணத்தைத் தமிழில் பாடியதாகச் சொல்கின்றார்.*

*முதல் சருக்கம் நரசிங்கத்தோற்றம், இரணியவதம், வீரபத்திரர் எழுச்சி விரிவாகச் சொல்லப் பெறுகின்றன. சரபரைப் பற்றிய குறிப்பு தமிழில் மிகவும் அருமையாகவே காணப்படும். திருமாளிகைத் தேவர் முதல்திருவிசைப் பாவில் சரபரைத் துதிக்கிறார். பதினோராந் திருமுறையில் நம்பியாண்டார் நம்பி கோயில் திருப்பண்ணியர் விருத்தத் தில் இரண்டு முறை சரபத்தைச் 'சிம்புள்' என்கின்றார், சரபமூர்த்தின் உருவ வருணனை பிற்காலத்தில் காஞ்சிப் புராணத்தில் சொல்லப்பெற்றுள்ளது.*

நன்னா லிரண்டு திருவடியும்
நனிநீள் வாலும் முகமிரண்டும்

கொன்னார் சிறகும் உருத்திரமும்
　　கொடும்பே ராப்பும் எதிர்தோற்றச்
செந்நீர் பருகிச் செருக்குநர
　　மடங்கல்ஆவி செகுத்துக் கொண்டு
ஒன்னார் குலங்கள் முழுதழித்த
　　உடையான் சரபத் திருவுருவம்.

*சரபபுராணத்தின் இறுதியில் நூற்பயன் கூறும் பாடல் இது:*

இக்கதை விரும்பினர்கள்
　　கேட்டவர்கள் இசைத்தவர்கள்
தக்கசிவ லோகத்தில்
　　இறங்கிமகிழ்ந்து இறைவனுடன்
ஒக்கவுறைந் தவனுடைய
　　உருவமும்பெற் றழியாத
மிக்கபரி பூரணத்தில்
　　நீங்காமல் விளங்குவர்கள்.

*(3) **ததீசி புராணம்:** ததீசி என்பவர் சிவபுராணங்களில் சொல்லப்பெற்ற சிவபக்தி நிறைந்த ஒரு முனிவர். இவர் வரலாற்றைத் திருமலைநாதர் 48 பாடல்களில் ஒரு புராணப்பகுதியாகப் பாடியுள்ளார். இது தனித்த புராணம் என்று கொள்ளாமல் ஒரு விரிந்த புராணத்தின் சருக்கங்களில் ஒன்று என்றே கொள்ளத்தக்கது. பின்வரும் பாடலில் 'சிவபெருமான் நரசிங்கத்தை அழித்து அதன் தோலைப் போர்த்ததைக் கூறிப் பின்னர் 'ததீசி மேன் மையை உரைப்போம்' எனக் கூறுவதைக் காணலாம்.*

மன்று நாயகன் சரபமாய் மானிட அரியைக்
கொன்று தோல்முகம் புனைந்தமை கூறினம்; இப்பாற்
துன்று வண்டலிற் றுன்பமால் ஆழியைத் தொலைத்து
வென்றி கொண்டிடு ததீசிதன் மேன்மையை உரைப்பாம்.

***இதன் வரலாறு:*** *நான்முகன் தும்மலில் தோன்றிய குதன் என்பவன் வச்சிராயுதம் பெற்றுப் பூமியை ஆண்டுவந்தான். அதர்வமகரிஷியின் மகன் ததீசியுடன் நட்புக்கொண்டான். ஒரு நாள் உலகில் முதன்மையுற்றவர் யாரெனப் பேச்சு நடைபெற்றபோது தேவர் ததீசி முனிவர் என, குதன் மன்னவர்களே என்று சொல்லி அவருடன் சண்டையிட்டான். வச்சிராயுதத்தால் ததீசைப் புடைத்தான். சுக்கிரனால் மிருத சஞ்சீவியைப் பெற்ற ததீசி சிவபெருமானை வேண்டி வச்சிரயாக்கை பெற்றார். குதனை எதிர்த்தார். குதன் தானும் வச்சிரயாக்கை பெறத் திருமாலை வேண்டினான். திருமால் ததீசை எதிர்த்தார். சக்கராயுதத்தை ஏவினார். சக்கராயுதம் சாம்பராயிற்று. திருமால் தேவர்களுடன் சேர்ந்து போரிட்டுத் ததீசியிடம் தோல்வியுற்றார். ததீசி திருமாலின் மார்பில் உதைத்தார். திருமால் நாணி வடுப்பட்ட தமது மார்பில் இலக்குமியை வைத்து மறைந்தார் என்பது இப்புராணம் கூறும் கதை.*

*இதில் சில பாடல்கள்:*

நீச ராயினும் மறையவ ராயினும் நீங்காப்
பாச ராயினும் பவத்துவக் களித்திடும் பாச
நாச ராயினும் அடியவர் நாசமொன் றில்லாத்
தேச ராகுவர் என்றுமுன் செப்பினன் பரமன்**(25)**

என்று கூறலும் மாயனும் உருத்துடன் எழுந்து
வென்றி மாதவர் வெருக்கொள விச்சுவ வடிவாய்
நின்று தன்னிடைச் சராசரம் நிலம்புனல் அனல்கால்
துன்று மண்டங்கள் யாவையும் தோன்றுவித் தனனால்
**(32)**

வானி றைந்த தேவர் யாரும்
வந்து போர்செய் காலையில்
தேன லர்ந்த கொன்றை திங்கள்
சென்னி வைத்த சிவபரன்

கானு றைந்த சிந்தை மெய்த்த
தீசி யால காலமுன்
மேன டந்த டர்ந்த தென்ன
வெகுளி யான டந்தனன் **(41)**

தீதகன் றொளிரும் சக்கர மழிந்து
செருவினி லுடைந்தது மன்றி
மாதவ னிடது தாளினால் உதைப்ப
வருந்திய வருத்தமுங் கண்டு
போதல ரகத்தோன் கடிதுவந் தடைந்த
பூசலை யகற்றின னகன்றான்
பாசபங் கயமத் ததீசியைப் பணிந்து
மாயனும் பாற்கட லடைந்து;

*இந்தப் புராணத்தின் முதற்பாடல் இது:*

மனித்த ராயினும் தேவர்க
ளாயினும் வணங்க
நினைத்த போதிலும் அறிவிலா
வீடருள் நிமலன்
பனித்த வாணுதல் அம்பிகை
பரவிடம் அன்றிக்
குனித்த குஞ்சிதத் தாள்மலர்
சென்னிமேற் கொள்வாம்.

*இப்பனுவலின் இறுதிப் பாடலைக் காட்டுவேன்.*

அரியமா தவனும் மாலு நேர்பொரு
தவத்தல நனேகர மதனில்
உரியதோர் தீர்த்த மதனையா டினர்சா
யுச்சியம் பெறுவரிக் கதையைப்
பரிவுடன் படித்தோர் கேட்டவர் பயமும்
அடைவிலர் நினைத்ததும் பலிக்கும்
இருவினை யறுக்கும் காதையீ தென்றால்
யாரிதன் பெருமையை இசைப்பார்.

*(4) **வினாவிடைப் புராணம்:*** கிடைக்கும் ,சிவபுராணத்தில் இது மூன்றாம் பகுதி. இது சிவபுராணத்தின் ஒரு சருக்கம் போன்றது. இதன் பாடல்கள் 44. இதன் இறுதியில் 'சிதம்பரபுராணம் அருளிச் செய்த சிவபுராணத்தின் வினாவிடைப்புராணம் முற்றும்' என்ற தொடர் காணப்பெறுகின்றது.

இதில் சைவத்தின் பெருமையும் சிவபெருமானுடைய திருவிளையாடல்களும் பேசப்பெறுகின்றன. அகத்தியர் முருகக் கடவுளிடம் கேட்கும் வினாவும் அதற்கு அக் கடவுள் கூறும் விடையுமாக நூல் உள்ளமையால் **'வினாவிடைப்புராணம்'** என்ற பெயர் பெற்றது.

***வினா:*** கயிலையங்கிரி இருக்கையில் சுடலையின் நடமிட்டதேன்?

***விடை:*** எல்லோருடைய உடல்களும் வெந்தழியும் இடம் சுடலையாதலின் அதனைச் சிவபிரான் சிறப்பிடமாகக் கொண்டார்.

***வினா:*** கொன்றைமாலை முதலானவை இருக்கத் தலைமாலையணிந்ததேன்?

***விடை:*** தேவர்கள் தொகுதி வெந்தழிந்த பின் அவர்களது எலும்பு மண்டையோடு இவற்றை மாலையாகத் தரித்தார். இவ்வாறாக விபூதியணிந்து நடனம் ஆடியது, எருதேறியது முதலானவை கூறப்பெற்றுள்ளன.

14–ஆம் நூற்றாண்டில் எழுந்த **'சதமணிக்கோவை'** என்ற ஒரு சைவசாத்திர நூல் இதுபோலவே வினாவிடையாக அமைந்திருப்பது அறியத்தக்கது.

*(5) **சிதம்பர புராணம்[23]:*** இது சைவமகாபுராணத்தின் ஒரு பகுதியாகும். இப்புராணம் காப்புச் செய்யுளும்

23. காலம் கி.பி. 1508.

பாயிரமும் ஒன்பது சருக்கங்களும் கொண்ட 814 பாடல்களுடையது.

பாயிரப் பகுதியில் பரஞ்சுடர், சிற்றம்பலத்தில் ஒளிரும் பேரொளி, சிதம்பரம், சிவகாமசுந்தரி, கற்பகவிநாயகர், குமரன், நந்திதேவன், நால்வர், தில்லை மூவாயிரவர், நடேசர், சண்டேசர் முதலான உருத்திர பல்கணத்தவர் ஆகியோருக்கு முறையே வணக்கம் சொல்கிறார். தாம் நூல் செய்த காலத்தை ஒரு பாடலால் கூறுகின்றார்.

இந்நூல் அளவில் சிறிதாயினும் சிறந்த சிவபுராணங் களில் ஒன்று. ஆசிரியர் பல இடங்களில் பெருங்காப்பியத் தன்மை தோன்றத் தம் நூலைச் செய்துள்ளார். நாட்டு வருணனை, நகர வருணனை, பல சருக்கங்களிலும் அமைந்துள்ளது; இப்பகுதிகள் பொருட்சுவையில் பெருங்காப்பியப்பகுதிகளையும் விஞ்சுவன. சொல்நயமும் இத்தகைய காப்பிய நயமும் சிறப்பாகப் பொருந்தியுள்ளமை யால் '**புராணத் திருமலை நாதர்**' என்ற பெருஞ்சிறப்பு இவருக்கு எல்லாவகையாலும் பொருந்தும் என்பது நன்கு விளங்குகின்றது.

## 9. மறைஞானசம்பந்தர்

சைவசமயத்தில் சிறியனவும் பெரியனவுமான எண் ணற்ற நூல்கள் செய்தவர் பேராசிரியர் மறைஞானசம்பந் தர். இவர் களந்தை என்ற ஊரில் பிறந்தவர். அவ்வூரில் ஞானப்பிரகாச பண்டாரம் என்பவரிடம் சமயக்கல்வி பயின்றார். இவர் சிவயோகத்தில் திளைத்திருந்த காலத்தில் பக்குவ முதிர்ச்சி பெற்று இந்திரியங்கள் புறத்தே செல்லாதபடி தம் கண்ணைக் கட்டிக்கொண்டு வாழ்ந்தார் என்றும், அது காரணமாகக் '**கண்கட்டிப் பண்டாரம்**' என்று மக்கள் இவரை வழங்கினர் என்றும் சொல்வதுண்டு. இவர் வாழ்ந்த இடம் கண்கட்டி மடம். இது சிதம்பரம் வீதியில்

தென்கிழக்கு மூலையில் இருந்ததென்றும் சோமசுந்தர தேசிகர் கூறுவார். இப்பெரியார் **'கமலாலயப் புராணம்'** **'அருணகிரிபுராணம்'** என்ற இரண்டு தலபுராணங்களும் செய்துள்ளார்.

***(அ) கமலாலயப் புராணம்:*** *கமலாலயம். இது திருவாரூரிலுள்ள சிவதீர்த்தம். திருமகள் இங்கு வழிபட்டு வரம் பெற்றமையால் தலமே கமலாலயம் ஆயிற்று. பரப்பில் மிகப்பெரியது. கோயிலும் அளவால் பெரியது. அங்கு திருவாரூர்க் கோயிலும் ஐந்து வேலி; கமலாலயமும் ஐந்து வேலி. இங்கு அம்பிகை கமலாம்பிகை. அம்பிகை வணக்கம் கூறுகிற பாடல் 'கமலாலய நாயகி பாதம் நினைவாம்' என்று கூறுவதும் கருதத்தக்கது.*

*இப்புராணம்[24] பாயிரப்பகுதிகள் உட்பட 24 சருக்கங்களும் 1066 பாடல்களும் கொண்டது. ஆசிரியர் பாடல்களை எளிய நடையில் அழகு பொருந்த அமைத்துள்ளார். அக்கால இயல்பையொட்டி அதிகமான பாடல்கள் சந்தத்திலும் சிலபாடல்கள் மடக்கிலும் அமைத்துள்ளார். இந்த நூலில் சிவலிங்கப் பிரதிட்டையும் தீர்த்தங்களும் எண்ணிலாதன சொல்லப்பெறுகின்றன.*

***நூல்:*** *நூல் விநாயகர் காப்போடு தொடங்குகிறது. இதுவே அழகிய சந்தச் செய்யுள்.*

திருவாரூர் பிரியாதே
  திகழ்வானை மதியானை
உருவானை உமைபாகத்
  தருவானை உணர்வாரை
இரவாமல் அருள்வானை
  இருள்நேர வருமாறு
தருவானை அடிபேண
  இயலோசை தவிராதே.

24. காலம் கி.பி. 1546. (16-ஆம் நூற்றாண்டு)

பாயிரப்பகுதி 33 பாடல்கள் கொண்டது. இங்கு வழக்கம்போல் அமையும் கடவுள் வணக்கப் பாடல் களோடு நந்திகேசுவரன், நந்திமாகாளர், சனற்குமாரன், வியாசன், சூதன், காரைக்கால் அம்மையார், மெய்கண்ட தேவர், இயற்பகை, சிறுத்தொண்டர், சிவனடியார், முசுகுந்தன், முப்போதும் பூசைபுரிபவர் ஆகியோருக்கு வணக்கம் சொல்வது குறிப்பிடத்தக்கது. வாழ்த்து கூறும் இடத்துள்ள பாட்டு குறிப்பிடத்தக்கது.

ஆரியங் கற்று முற்றும் அறிவுடை யாளர் வாழ்க
ஆரியம் தெரிந்தும் சாரும் அருந்தமிழ் ஆய்வார் வாழ்க.
ஆரியம் தமிழா ராயும் அதிமதி நிபுணர் வாழ்க
ஆரியம் தமிழா ராய்வார்க் கணுக்கரும் வாழ்க அன்பால்.

நூல் செய்த ஆண்டு கி.பி. 1546 என்று சொல்லப் பெறுகின்றது. சைவர் புற்றிடம் கொண்டார் புகழைத் தமி ழால் உரைக்கக்கேட்கவும் தேவாசிரிய மண்டபத்தில் எழுதியதாகவும் வடமொழி காந்தத்தில் உள்ளது என்றும் கூறுகின்றார்.

பதிகம் எட்டு பாடல்கள். இங்கு மண்டல வளச் சருக்கம் திருவாரூர்ச் சிறப்புச் சருக்கம், சோழ தேசவளம் கூறப் பெறுகின்றன. ஒரு பாடல் திருத்தொண்டர் தொகையைச் சிறப்பிக்கின்றது. பிற பாடல்களில் சுந்தரருக்குத் தூது சென்றது, கலிக்காமர் பிணக்கு தீர்த்தது, நமிநந்தி நீர் விளக்கு ஏற்றியது முதலிய புராண வரலாறுகள் விரிவாகச் சொல்லப்பெறுகின்றன. திருநீலகண்டர் யாழ்ப் பாணருக்கு அவருடைய வேண்டுகோளுக்கு இணங்கித் திருவாரூர்த் திருமூலட்டானர் வடதிசையில் புதுவாயில் செய்வித்து யாழ்கேட்டார், விறன் மிண்டர் புறம்பு என்று சொன்னமையாலே சுந்தரர் பாட்டினால் சிவமயம் ஆயினர் என்று இருசெய்திகள். இங்குச் சுந்தரர் வரலாற்றில் புதுமையாக உள்ள ஒன்று. கூனன் ஒருவன்

தம்பிரான் தோழராகிய சுந்தரரே தனக்குத் தெய்வம் என்று கொண்டு, மணமலர்தொடுத்துக் கொடுக்க, சுந்தரர் அருட்பார்வையால் கூன்தீர்ந்து சிவபுரி அடைந்தான் என்பது. மற்றொன்று ஒருகுருடன் தடுத்தாட்கொண்டவரே தனக்குத் தெய்வம் என்று கொண்டு அவருக்கு அடைக்காய் கொடுத்து அவருடைய புன்முறுவலைக் காணக் கண்ணும் பெற்று அவரருளால் சிவபுரம் பெற்றான் என்பது.

தேவர் செய்த புற்றில் பெருமான் தோன்றி அவர்கள் அல்லல் நீங்கினமையால் தேவாசிரியம் ஆயிற்று. இவ்வூரில் திருமால் கையில் பிடித்த வில்லின் நாண் அறுந்தவுடன் வில்நிமிர்த்து அவர் தலையைக் கொய்த்தது என்ற வரலாறு சொல்லப் பெறுகின்றது. சிவலிங்கம் நிறுவி வழிபட்டோர் பட்டியலைப் பார்க்கும்போது இங்கு வழிபடாத தேவரே இல்லை என்று தெரிகின்றது. பொதுவாகப் புராணங்களில் துன்புற்ற தேவர் முதலியோர் இறைவனைத் துதிக்கும்போது சிவபிரானைத் துதிக்கும் பாடல்கள் மட்டுமே காணப்படும். ஆனால் இங்கு திருமால் தனது இதயத்தில் சோமசுந்தரரை வைத்துப் பூசித்துத் தனித்தனியே சிவபெருமானையும் உமையம்மையையும் முருகவேளையும் பூசிக்கிறார். சோமாஸ்கந்தர் வழிபாடு இத்தலத்திற்கும் இப்புராணத்திற்கும் சிறப்பு. இவரே தியாகராசர்.

கோகன்னனுக்கு இயமன் நரகத்தைக் காட்டுகின்றான் என்ற இடத்து 21 பாடல்களில் ரௌவரம் முதல் மைதரணி நரகம் வரையில் 21 நரகங்களும்இன்ன பாவத்திற்கு இன்ன நரகத்தில் தண்டனை என்பது முதலான செய்திகளும் விரித்துச் சொல்லப்பெறுகின்றன.

குலிசன் பூசித்த செய்தி 12 குலிசேசுவர சருக்கத்தில் 50 பாட்ல்களில் விரிந்துரைக்கப் பெறுகின்றது. இவ்வரசன் துர்வாசருக்குப் புலால் படைத்த பாவத்தால் புலியா

கின்றான். இந்தப் புலி நந்தினி என்ற பசு சிவலிங்கத்திற்குத் தனது பாலை அபிடேகித்து வரும்போது அதனைப் பிடிக்கப் பாய்கிறது. பசுவானது புலியை மிகவும் வேண்டித் தான் தன் அபிடேகம் முடித்து தன் கன்றுக்குப் பால் ஊட்டித் திரும்பிப் புலிக்கு இரையாவதற்கு வரும்போது இக்கன்று பசுவிற்குப் பதிலாக தானே பலியாவதாகச் சொல்வதையும் மற்றப் பசுக்கள் தடுத்ததையும் பொருட் படுத்தாமல் மீண்டு வந்து புலியின் முன்நிற்கின்றது. அதைக் கண்டமாத்திரத்தில் புலி முன்னுணர்வு பெற்றுச் சிவலிங்க பூசைசெய்து குலிசமன்னராகச் செல்லுகிறது.[25]

இங்கு தான் மீண்டு வருவதாகப் புலியிடம் பசு சொல்லும்போது, வராவிட்டால் இன்ன இன்னபாதகம் செய்தாருடைய பாவத்தில் செல்வதாகப் 17 பாடல்களில் சமார் 70 பாவங்களை இப்புராணம் குறிப்பிடுகின்றது. இஃது ஒரு சிறப்பான பகுதி. பின்னும் இன்ன சந்தர்ப்பங் களில் சொன்னசொல் தவறலாம் என்று பசுக்கள் நந்தி னிக்கு எடுத்துச்சொல்வதும் சிறப்பான உலக நிதியாகும். அதனைக் கூறும் பாடல்:

கேட்டழுங்கிச் சுரபிகளும் கிளர்ந்தமொழி
தவறுதலும், கீழ்மை யார்க்கும்,
ஈட்டுக்கு நிதிதன்னை இழக்கவரும்
காலத்தும், எதிர்த்துத் தம்மை
வாட்டுமவர் வரும்பொழுதும், வாள்விழியார்
கலவியினும், வனிதை தன்னை
வேட்டிடுமங் கலந்தனிலும், வெவ்வினையா
கா;போகேல் என்ற வேலை.

முனிவர் சிவபெருமானைப் பூசிக்கின்றனர் என்ற விடத்து சிவபெருமானுடைய அருள் காரணமின்றிப்

25. இதுபோன்ற கதையை திருக்குறுங்குடி திவ்விய தேச வரலாற்றிலும் காணலாம். (நம்பாடுவான் கதை).

பொழிவதாதலால் அகாரணோபகாரி என்கின்றார். இம்முடிவையுடைய மூன்று பாடல்களில் ஒன்று இது:

பாலனுய்ய வெண்ணியுன் பதம்பணிந்த போதுறும்
காலனைய வன்றுதைத்த காலனேய காலனே!
வேலைநஞ்செ ழுந்தபோது விண்ணுளோர் வணங்கவே
ஆலமுண்ட கண்டனே அகாரணோப காரியே.

'கயாதீர்த்தம்' என்ற சருக்கத்தில் பேய்களின் வருணனை, சிராத்தம், கயாசிராத்தம் முதலிய செய்திகளைக் காணலாம்.

சர்வ தீர்த்தாசிரயச் சருக்கம் என்ற பகுதியில் இவர் விரிந்த புராணங்களின் இயல்புக்கு ஏற்றபடி யுகதர்மம் கலிகாலக் கொடுமை, 'விக்கிரங்கள் திருட்டு' முதலிய செய்திகள் வருகின்றன. இது இருபதாம் நூற்றாண்டோ என நாம் நினைக்கத் தோன்றுகின்றது!

இறுதியாக, நூல் கேட்கும் முறை, எழுதும் புண்ணியம் என்பன சொல்லுவதுடன் நூல் நிறைவு பெறுகின்றது.

**(ஆ) அருணகிரிபுராணம்:** அருணகிரி என்பது திருவண்ணாமலை. இப்புராணம் 613 பாடல்களை யுடையது. பாயிரம் உட்பட எட்டுச் சருக்கங்களைக் கொண்டது. பாயிரப் பகுதியில் 35 பாடல்கள். விநாயகர் சார்பாக மூன்று பாடல்கள். அண்ணாமலையையும் பராசக்தியையும் அண்ணாமலையாரையும் உண்ணா முலையம்மையையும் தனித்தனியே போற்றுகின்றார். இவர் களையன்றித் தனியே சபாநாதர், அண்ணாமலைநாதர், அதிகார நந்தி, நந்தி, மகாகாளர், இடபதேவர், என்போர் வணக்கமும் முனிவர் வணக்கமும் குறிப்பிடத் தக்தவை.

ஆசிரியர் தமக்குரிய வழக்கம்போல் காரைக்கால் அம்மையார், நால்வர், மாளிகைத் தேவர், மெய்கண்டார் ஆகியோருக்கு வணக்கம் சொல்கிறார். மெய்கண்டார் துதி எல்லோரும் அறிந்தது.

வேதத்தின் அரும்பொருளை விமலன்அருள் நந்திக்குப்
போதித்த சிவஞான போதத்தைக் குருமரபால்
ஓதித்தேர்ந் தருந்தமிழால் எமக்குணர்த்தி எம்மூலம்
சேதித்த மெய்கண்ட தேவரடி சிந்திப்பாம்.

*சிவபக்தர்களையும் நாயன்மார்களையும் வணங்குகின்றார். பதிகம் என்ற பகுதியையும் பாயிரத்துட் சேர்த்தே கூறுகிறார். இப்பகுதி ஏழு பாடல்களைக் கொண்டது. நூலைத் திருநாட்டுச் சிறப்பு திருநகரச்சிறப்பு என்ற அங்கங்களோடு தொடங்குகின்றார். நாடாவது அருணை நாடு. எல்லாப் பாடல்களுமே அருணைநாடு, அருணை தேசம் என முடிகின்றன. திருநகரச் சிறப்பும் அது போலப் பெருங்காப்பியத் தன்மை பொருந்த மிகவும் விரிவாக 53 பாடல்களால் அமைந்துள்ளது. அருணாசலோதயச் சருக்கத்தில் அயன், திருமால் என்ற இருவர்களுடைய உளச்செருக்கை அருணைசோதி தீர்த்தது சொல்லப்பெறுகின்றது. இதுவும் நீண்ட சருக்கம். இறுதியில் நான்கு பாடல்கள் கடைமடக்காக அமைந்து சிவபெருமான் துதியாக உள்ளன. இந்த இயல்பு சருக்கந்தோறும் காணமுடிகின்றது.*

*இரண்டாவது அருந்தவச் சருக்கம் என்பது, உமையாள் கயிலையில் திருக்கண்புதைத்து அந்தக் குற்றம் நீங்கக் காஞ்சி சென்று தவம் செய்ததைச் சொல்லுகிறது. இங்கு, தொண்டைமண்டலம் என்று முடிகின்ற நான்கு பாடல்கள் அதன் சிறப்பைச் சொல்லுகின்றன. அதேபோல் காஞ்சி என்று முடிகின்ற ஏழுபாடல்கள் காஞ்சி நகரின் புகழைப் பேசுகின்றன. மகிடன் என்ற அசுரனை துர்க்கை வதைத்த வரலாறு ஈண்டுச் சொல்லப்பெறுகின்றது. தேவி பூசை முடித்த இடத்தில் துதிக்கின்ற பாடல்கள் ஐந்து போற்றி என்று முடிவன. சருக்க இறுதியில் வழக்கம் போல் கடைமடக்கான நான்கு பாடல்கள் உள்ளன.*

அடுத்தது வலம்புரிச் சருக்கம். இதன் தொடக்கத்தில் கரிமுகவன், சிவபிரான், உமை ஆகியோரின் வணக்கம் மூன்று பாடல்களில் அமைகின்றது. பிறகு வரகிரிவலம், ஆலயவலம், ஆலயதரிசனம் செய்வார் நிற்கும் எல்லை, பணியும் முறைமை, சாதிகளின் உற்பத்தி, பூசை செய்யும் முறை என்பன சொல்லப் பெறுகின்றன. இறுதியில் நான்கு பாடல்கள் சிவபிரான் துதி. அவற்றில் முதல் இரண்டு பாடல்களும் கடைமடக்கு.

அடுத்தது ஆலயத்தொடு புரியாக்கியச் சருக்கம். முன்போல் மூன்று வணக்கப்பாடல்கள். இறுதியில் இரண்டு பாடல்கள் மடக்கு. இரண்டுத் துதி. சிற்பிகள் ஆலயம் அமைத்த செய்தி இங்கு இயம்பப் பெறுகின்றது. இறுதியில் தராபதி புழுகு முதல் மூன்று பாடல்கள் முன்போல் துதி. இங்கு ஒரு புழுகுப் பூனை புழுகு சாத்தி முக்தி பெற்ற வரலாறு சொல்லப் பெறுகின்றது. முன்போல இறுதி இரண்டு பாடல்கள் கடைமடக்கு; மற்ற இரண்டு துதி.

நூல் முழுமையும் சந்தப் பாடல்களும் பக்திச் சுவையும் நிரம்பிக்காணப்பெறுகின்றன. இவருக்குப் பாடல்கள் எளிதாகச் சொல் நயமும் சுவைநலமும் பொருந்த அமைகின்றன. பெருங்காப்பியம் செய்யும் திறன் உடையார் என்று இந்நூற்பாடல் தோறும் காணலாம். இவருடைய பாடல் நயங்காண இரண்டொரு பாடல்களை மட்டிலும் ஈண்டுக் குறிப்பிடுவோம்.

கருவினைக் கழிக்கலாம் கரியகட் டழிக்கலாம்
ஒருமையுற் றிருக்கலாம் ஒளிருநிட் களத்துநீர்
இருவருக்கும் எட்டொணா எரிமயக் கனத்தினாம்
அருணவெற்பு அகத்துளீர் அயர்வினைத் தடுத்துமே.

கண்ணார்மதி சூடுஞ்சடை முடியானடல் விடையான்
அண்ணார்புரத் தொருமால்வரை நயந்தன்றருள் புரிந்தான்

பண்ணார்மொழி உமையாள்வலப் பாகன் பரிப்பாகன்
அண்ணாமலை யமலன்அடி பணிவாம்முடி அணிவாம்.

நாலாகிய மறையாகம நாலேழையும் நவின்றே
மேலாகிய வழிதன்னையும் விரித்தானுய எவரும்
ஆலாகிய விருவர்க்கரு மருந்தானவன் வாமப்
பாலாகிய உண்ணாமுலை பாதம்பணி வாமே.

## 10. அனதாரியப்பப் புலவர்

*இவர் தொண்டை மண்டலத்துச் செங்காட்டுப் பகுதியில் சேயாற்றின் சங்கத்துக் கருகிலுள்ள வயலூரில் வேளாண்மரபில் பிறந்தவர். இளமையில் இவர் கல்விப் பயிற்சிக்காக சோழநாட்டில் உள்ள உறத்தூர் என்ற ஊரில் வாழ்ந்த தமிழ் மேகம் எனப் போற்றத்தக்க ஒருவேதியரிடம் மாணாக்கராகித் தமிழ் பயின்று புலமை சான்றவராய் விளங்கினார். பின்னர் திருவாரூர்க் கருகிலுள்ள கன்றாப் பூர் சிங்கராயன் என்ற வள்ளலின் ஆதரவில் வாழ்ந்தார். சிறிது காலம் சென்று திருச்சிராப்பள்ளிக் கருகிலுள்ள மன்றை (மன்றச்ச நல்லூர்)[26] என்ற ஊரின் தலைவனா யிருந்த திருவிருந்தான் என்ற வள்ளலுடைய ஆதரவைப் பெற்று வாழ்ந்து வந்தார். இக்காலத்தில்தான் வடமொழி யிலுள்ள சுந்தரப் பாண்டியத்தைத் தமிழில் பாடினார்.*

***சுந்தரபாண்டியம்:*** *இது மதுரைபற்றி மூன்றாவது புராணம். முதலில் கற்பகவிநாயகர் வணக்கம் சொல்கிறார். கிடைக்கிற பகுதியில் உற்பத்திகாண்டம், திக்குவிசய காண்டம், உக்கிரகாண்டம், லீலாகாண்டம் என்கின்ற நான்கு பகுதிகள் உள்ளன. இவற்றில் முறையே 20, 15, 15, 4 சருக்கங்கள் உள்ளன. கிடைக்கிற மொத்தப் பாடல்கள் 2017.*

---

26. திருவரங்கத்திற்கு வடக்கிலுள்ளது. இன்று ஒரு வாணிகப் பெருமையுடைய ஊர். 'மணச்ச நல்லூர்' என்று மக்கள் வழக்கிலுள்ள பெயர்.

தொடக்கத்தில் பாயிரப்பகுதியில் சொக்கப்பெருமான், அங்கயற்கண்ணி, சித்தி வேழம், முருகன், நால்வர் ஆகியோர் வணக்கம் சொல்கின்றார். பின்னர் மூன்று பாடல்களில் அவையடக்கம் கூறி அடுத்த நான்கு பாடல் களில் நூல்வரலாறு கூறுகின்றார். ஆசிரியரே இந்நூலைக் காண்டங்களாகப் பாகுபாடு செய்துள்ளார். ஒவ்வொரு காண்டத்தின் தொடக்கத்திலும் ஒரு துதிப்பாடலை அமைத்துள்ளார். இது பெருநூல் செய்யும் ஆசிரியரின் இயல்பு. கம்பராமாயணம் வில்லிபாரதம் பரஞ்சோதி திருவிளையாடல் போன்ற நூல்களின் இந்த இயல்பைக் காணலாம்.

இரண்டாம் காண்டத்தொடக்கத்திலுள்ள துதிப் பாடல்.

அரியயன் முனிவர் வானோர் அருமறை தெளியா ஆதிப்
பரிபுரம் ஒலிப்ப வெள்ளி மன்றிடைப் பதஞ்ச லிக்கா
விரிமலர்ப் பதமு கைத்தும் வீசியும் கரங்கள் பத்தும்
உரிமையிற் கிளர ஓங்கும் நடத்தினை உளத்தில் வைப்பாம்.

ஆசிரியர் அனதாரியப்பர் தமது நூலைச் சோமசுந்தரக் கடவுளின் புகழைக் கூறுமுகமாக: தடாதகையின் அவதாரம், தடாதகையின் திக்குவிசயம், தடாதகையின் புதல்வனான உக்கிர குமாரன் வரலாறுகள், பிறகு அவன் காலத்திலும் பின்னரும் சோமசுந்தரர் செய்த லீலைகள் என்ற முறையில் நூலைப் பாகுபடுத்தி அமைக்கின்றார். எனினும் தாமும் திருவிளையாடல் எட்டெட்டும் கூறுவதாகவே சொல்கிறார் தமிழைப் பல இடங்களிலும் போற்றிச் சொல்கிறார். வைகையின் வருகை 'பொருவில் ஐந்திணை துறை பொருந்திப் பொற்பினைத்தருதலாற் பொருளுடைத் தமிழும் ஒக்குமே' என்கிறார். 'திருந்து பாடலவர் அருந்தமிழ் தேர்வுழியினியாம் பொருந்து வாரென... வேனில் வந்துதித்தது' என்கிறார். திருக்குறள்,

கம்பராமாயணம் என்ற இரு நூல்களின் சொற்களும் தொடர்களும் கருத்துகளும் தொட்ட இடம் எல்லாம் தட்டுப்படுவனவாகவுள்ளன.

16-ஆம் நூற்றாண்டுப் புராணங்களில் மிகுதியாகக் காணப்படுவது போல் இந்நூலிலும் தோத்திரப்பாடல்கள் அதிகமாகப் பயில்வதைக் காணமுடிகின்றது. நான்கு பகுதிகள் சிறப்பிக்கப்பெறுகின்றன. காசி, தென்கயிலை, தில்லை, கலந்துயிர் இறக்க, போற்ற, காணமுத்தி; ஆலவாய் கேட்கமுத்தி என்கின்றார். இது புதுமை.

தாண்டவ சருக்கத்தில் இறைவன் நிலை தத்துவ நோக்கில் சொல்லப்பெறுகின்றது. மூலாதாரத்தில் தியாகேசனாயும் (ஆரூர்), சுவாதிட்டானத்தில் சம்புநாதனாயும் (ஆனைக்கா), மணிபூரகத்தில் அண்ணாமலை நாதராயும் (சோணாசலம்), அனாகத்தில் ஆனந்தத் தாண்டவராயும் (அம்பலம்), விசுத்தியில் காளத்தியீசராயும் (காளத்தி), ஆக்ஞையில் விசுவநாதராயும் (காசி), பிரகாந்திரத்தில் சீகண்டபரனாயும் (கயிலை), துவாசாந்தத்தில் சுந்தரனாயும் (ஆலவாய்) விளங்குவதாகச் சொல்கிறார். திருவிளையாடல் எட்டெட்டும் கூறுவதாகவே சொல்கிறார் (நகரச்சருக்கம் 5)

அரசாங்கப் பதிப்பு (1955) ஒன்றே உள்ளது. இது பிழைமலிந்த சருக்கமாக உள்ளது. "எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்; படித்தவன் பாட்டைக் கெடுத்தான்" என்ற பழமொழி இதற்கு முற்றிலும் பொருந்தும். காகிதப்பிரதி எடுத்தவரும் அச்சிட்டவரும் செய்த பிழைகள் நூலில் பிரதிபலிக்கின்றன.

## 11. பரஞ்சோதி முனிவர்

இவர் சோழநாட்டு வேதாரண்யத்தைப் பிறப்பிட மாகக் கொண்டவர். சைவ வேளாள குலத்தவர். இவர் அதிவீர ராம பாண்டியன் காலத்து மதுரையிலிருந்த புலவர் திலகர்.

இவர் செய்த திருவிளையாடல் புராணம் மிகுபுகழ் பெற்றது.

***திருவிளையாடற் புராணம்:*** புராணத்தின் பெயர் சொன்னாலே பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல் என்ற பெயரை எவரும் அறிவர். இதனினின்றும் வேறு பிரித்தறியவே 'நம்பி திருவிளையாடல்' என்று சொல்லப் பட்டது. இது நானூறு ஆண்டுகட்கு முன் தோன்றியது. காலத்தினால் பிற்பட்டதாக இருப்பினும் 'முன்னே முளைத்த காதிலும் பின்னே முளைத்த கொம்பு வலிது' என்றவாறு பக்திச் சுவையிலும் தமிழ்நலத்திலும் இதுவே சிறந்து திகழ்கின்றது. தமிழுலகம் எங்கும் நன்கு பரவி வழங்கும் புராணம்.

சிவபெருமான் முக்கண்ணனின் அந்த மூன்று கண் களைப் போல் சைவச் சான்றோர்களால் போற்றப் பெறும் புராணங்கள் மூன்று. அவை பெரிய புராணம், கந்த புராணம், திருவிளையாடற் புராணம் என்பவை. இந்த மூன்றும் மூன்று வகையானவை.

பெரியபுராணம் தமிழில் முதலில் தோன்றிய மூலநூல். புராணம் என்பதற்காக அதனைத் தலபுராணம் வரிசை களில் சேர்க்கலாகாது. அஃது ஒருகாவியம். இவ்வுலகில் புகழொடு வாழ்ந்து அருஞ்செயல்கள் செய்த சிவனடியார் களின் வரலாறு கூறுவது; அடியார்களின் திறம் கூறுவதில் ஈடு இணையற்றது.

கந்தபுராணம் மகாபுராணங்கள் பதினெட்டில் ஒன்றன் பகுதி. திருவிளையாடல் புராணம் என்பது மதுரைத் திருத் தலத்தில் இறைவன் நிகழ்த்திய 64 திருவிளையாடல்களை விரித்துச் சொல்வது. இஃது ஒரு தலத்தின் புராணம். சைவத் திருமுறைகளில் ஒன்றாக அமைந்த பெரியபுராணத்தோடும் மகாபுராணங்களில் ஒன்றாகிய கந்தபுராணத்தோடும் ஒரு நிரலாக வைத்து எண்ணப்படும் பெருமை ஒரு தல

புராணத்திற்கு அமைந்தற்கு அப்புராணத்தின் சிறப்பே காரணம். சிவத்தலங்களில் எல்லாம் சிறந்ததாக முன் வைத்து எண்ணப்படுவதும் அடையின்றி **'கோயில்'** என்று சொல்லப் பெறுவதுமான தில்லைக்குரிய புராணத்திற்குக் கூட இத்தகைய சிறப்பு அமையவில்லை என்று நீள நினைந்து நோக்கத்தக்கது.

வடமொழியிலுள்ள தலபுராணங்கட்குப் பெரும்பாலும் இலக்கிய மதிப்பு இல்லை. ஆனால் தமிழில் பல புலவர்கள் இயற்றிய தலபுராணங்கள் சொற்சுவை, பொருட்சுவை, நிரம்பியுள்ளனவாய்த் திகழ்கின்றன. பரஞ்சோதி முனிவர் இயற்றிய புராணம் அத்தகைய சிறப்புகளைப் பெற்றுள்ளது.

**நூல்:** இதனை இயற்றிய பரஞ்சோதி முனிவர் ஒரு துறவி. இப்பெரியார் திருமறைக்காட்டில் சைவவேளாளர் மரபில் தோன்றியவர். இவர் மதுரைமாநகருக்கு வந்திருந்த பொழுது இவர்தம் பக்தியையும் புலமையையும் நன்குணர்ந்த சான்றோர்கள் பலர் இவரை இந்தப் புராணம் பாடும்படி வேண்டிக்கொண்டனர். வடமொழியில் உள்ள **'ஹாலாஸ்ய மகாத்மியம்'** என்ற நூலைத் தழுவி இயற்றலாம் என்று முனிவர் எண்ணினார். ஒரு நாள் இவருடைய கனவில் அங்கயற்கண்ணம்மை ஓர் இளம் பெண் உருவில் எழுந்தருளி வந்து "இந்தப் புராணத்தை அருள் செய்வாயாக" என்று பணித்தருள, அதனால் ஊக்கம் பெற்ற முனிவர் இப்புராணத்தைப் பாடத்தொடங்கி **'சத்தியாய்'** என்று முதலில் அன்னையின் பெயரை வைத்துப்பாடினதாக ஒருவரலாறு உண்டு.

இப்புராணம் மதுரைக்காண்டம், கூடற்காண்டம், திருவாலவாய்க்காண்டம் என்று மூன்று பெரும்பகுதிகளையும் 64 திருவிளையாடல்களையும் சொல்லும். 64 படலங்களையும் 3363 பாடல்களையும் அவற்றிற்குமுன் கடவுள்வாழ்த்து பாயிரம், அவையடக்கம், நாட்டுச்சிறப்பு,

நகரச்சிறப்பு, திருக்கயிலாயச் சிறப்பு, புராணவரலாறு, தலச்சிறப்பு, தீர்த்தச் சிறப்பு, மூர்த்திச் சிறப்பு, பதிகம் என்னும் பகுதிகள், இறுதியில் அர்ச்சனைப் படலம் என்னும் பகுதி ஆகியவற்றையும் கொண்டது.

இத்தலபுராணத்துக்கு இணையான மற்றொன்று இல்லை என்பது அறிஞர்களின் கருத்து. முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் மதுரைநகரில் சங்கத்தலைவராக அமர்ந்து பெரும் புலவாகளோடு ஒன்றித் தமிழ் ஆராய்ந்த பெருமை மதுரையைத் தவிர வேறு எந்த நகருக்கும் இல்லை. பரஞ்சோதிமுனிவர்,

> கண்ணு தற்பெருங் கடவுளும் கழகமோடு அமர்ந்து
> மண்ணு றத்தெரிந்து ஆய்ந்தஇப் பசுந்தமிழ்[27]

என்று பெருமிதமாகப் பேசுவர். 'கண்ணுதற்பெருங் கடவுள்' என்று கம்பனின் சொற்றொடரை இப்புலவர் பெருமான் பொன்னேபோலப் போற்றியிருப்பது ஒரு சிறப்பு.

நால்வர் பற்றிய நான்கு வணக்கப்பாடல்கள், அதாவது **'கடி அவிழ் கடுக்கை'** (19) **'அறப்பெருச்செல்வி'** (20) **'அரவு அகல அல்குலார்'** (21), **'எழுத அரும் மறைகள்'** (22) என்று தொடங்கும் பாடல்கள் மிக அருமையாக அமைந்திருப் பவை.[28] தவிர, அங்கயற்கண்ணிபற்றி **'பங்கயற்கு அண்ண'** (9), என்று தொடங்கும் பாடலும், தடாதகை பற்றிய **'செழியர் பிரான்'** (12) என்ற பாடலும், கூத்தபிரான் பற்றி **'உண்மை அறிவு'** (10) என்று தொடங்கும் பாடலும், சோமசுந்தரர்பற்றி **'சடை மன்றத்து'** (11) என்ற பாடலும் படிப்போர் நெஞ்சினை நெகிழ்வித்துப் பக்தியின் கொடுமுடிக்கு அவர்களை இழுத்துச் செல்பவை. 'ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்', என்ற பழமொழிப்

27 பரஞ். திருவிளை-நாட்டுச்சிறப்பு-செய. 57.

28. பாடல்எண்கள் 'மதுரைக்காண்டம்' (இராய. சொ. பதிப்பில் உள்ளபடி).

படி இத்துடன் இந்நூல் விளக்கம் நிறுத்தப்பெறுகின்றது. ஏனையவற்றை நூலெங்கும் காணலாம்.

## 12. சிவஞானமுனிவர்

தென்பாண்டிநாட்டில் பொதியமலைச்சாரலை அடுத்துள்ள பாவநாசம் என்னும் திருப்பதிக்கு அருகிலுள்ள **விக்கிரமசிங்கபுரம்** என்னும் சிற்றூரில் சைவவேளாளர் குலத்தில் பிறந்தவர் இவர். தாயார்: மயிலம்மை. தந்தையார்– ஆனந்தக் கூத்தர். பெற்றோர் இட்டபிள்ளைத் திருநாமம் **முக்களாலிங்கர்**. இளமையில் முறையாகக் கல்வி கற்று கவிதை இயற்றும் திறன் பெற்றார். சமயத்தில் மிக்க ஈடுபாடு கொண்டு சமயநூல்களைப் பழுதற ஓதிப் பண்பாடுற்றார். மனம் துறவுநிலையை நாடியது. பெற்றோர் இசைவு பெற்று திருவாவடுதுறை மடத்தை அடைந்தார். மடத்து அடியார்கள் அவரை நாகர் கோயிலுக்கு அருகிலுள்ள சுசீந்திரத்தில் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த சின்னப்பட்டத்துத் தம்பிரானாகிய வேலப்பதேசிகர் எழுந்தருளியிருந்த ஈசான மடத்திற்கு இட்டுச் சென்று அங்குள்ள நவச்சிவாய மூர்த்தியின் திருவுருவத்தை வணங்கிய பின்னர் வேலப்பதேசிகரையும் வணங்கினர்; அடியார்கள் முக்களாலிங்கரை அறிமுகம் செய்து அவரது விருப்பத்தைத் தெரிவித்தனர். வேலப்பதேசிகர் முக்காளலிங்கரின் அறிவுக் கூர்மையையும் பண்பையும் அறிந்து அவருக்குச் சமயதீட்சை, விசேட தீட்சை செய்வித்து காவியுடை அணிவித்து துறவு நிலையையும் எய்துவித்தார்.

சில ஆண்டுகள் முக்காள லிங்கர் வடமொழியிலும் தமிழிலும் உள்ள இலக்கிய இலக்கணநூல்களை ஓதி அறிவும் ஒழுக்கமும் உடையவராய் இருந்தார். அது கண்டு ஆசிரியர் வேலப்ப தேசிகர் முக்களாலிங்கருக்கு நிர்வாண தீட்சை செய்து **'சிவஞானம்'** எனத் தீட்சைத் திருப் பெயரிட்டு மெய்கண்ட நூல்களையும் பண்டார நூல்களை

யும் உரைத்தருளினார். இவரே சிவஞான சுவாமிகட்கு ஞானாசிரியர். சிவஞானசுவாமிகள் இருமொழிகளிலும் வல்லுநராயும் விளங்கினார். நாளடைவில் தமது வாழ் நாளில் இலக்கண, இலக்கிய சமயசாத்திர, கண்டன நூல்களை இயற்றினார். இவற்றின் தொகை 30. அவற்றில் ஒன்று **காஞ்சிபுராணம்.**

***காஞ்சிபுராணம்:*** இது வடமொழியிலுள்ள காஞ்சி புராணத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு.[29] இது காஞ்சியில் பலபுலவர்கள் முன் அரங்கேற்றப்பெற்றது. இந்நூல் பாயிரம் ஒன்றும், பதிகம் ஒன்றும், படலங்கள் 642 உம் திருவிருத்தம் 2742-ம் கொண்டது. இதில் சிறு சிறு படலங்கள் அதிகமாக உள்ளன. முரசபந்தம், கோமூத்திரி, உபயநாகபந்தம், சுழிகுளம், சருப்பதோபத்திரம் என்ற மிறைக்கவிகளும் உள்ளன. திரு. சி. அருணைவடிவேல் பதிப்பு உரையோடும் பாடற் சொற்குறிப்போடும் அமைந்தது. பாயிரம் காப்பு, தலவிநாயகர், சபா நாயகர், காமாட்சி அம்மையார், விகடசக்கரவிநாயகர், குமாரக்கடவுள், வயிரவக்கடவுள், திருநந்தி தேவர், நால்வர் (தனித்தனியாக) அறுபத்து மூவர். சேக்கிழார், திருக்கூட்டத்தார், பஞ்சாக்கரதேசிகர், பின் வேலப்பதேசிகர், மற்றைய சிவநேசர்கள் வணக்கங்க ளுடனும், நூல்செய்தற்குகாரணம், அவையடக்கம், சிறப்புப்பாயிரம் ஆகியவற்றுடன் 27 திருவிருத்தங்களுடன் நிறைவுபெறுகின்றது. திருநாட்டுப்படலம், திருநகரப் படலத்தை அடுத்துப் பதிகம் அமைகின்றது. பதிகம் பலவகைப் பொருள்களையும் 31 திருவிருத்தத்தால் தொகுத் துக் கூறுகின்றது. இவைதவிர மீதிப் பாடல்கள் படலங்களில் அடங்கும்.

---

29. 'பிள்ளையார் பாளையம்' (காஞ்சியில் ஒரு பகுதி) மணியப்ப முதலியார் அவர்களின் வேண்டுகோளின்படி இயற்றப் பெற்றது. காஞ்சியில் சுவாமிகளும் அவருடைய மாணாக்கர் களும் தங்கியிருந்த காலம் முழுவதும் பொருளாலும் பணி யாலும் உதவினவர் இரு பெருமகனாரே.

*தலவிநாயகரின் வணக்கம் சிறப்புடையது.*

விகட சக்கர ஆரணந்
தொடர்வரும் வித்தக முகிழ்வீச
விகட சக்கர விந்தமன்
வைன்றனக் கருளுமெய்த் தலைவர்க்கு
விகட சக்கர வாகமென்
முலையும் கான்முளை என்னாச்சே
விகட சக்கர ரேந்திர
மெனச்சுழல் வெம்பவக் கடல்நெஞ்சே (2)

*இது காப்பாக வருவது.*

விழிமலர்ப்பூ சனையுஞற்றி திருநெடுமால்
பெருமாழி மீள வாங்கி,
வழியொழுகாச் சலந்தரன்மெய்க் குருதிபடி
முடைநாற்றம் மாறு மாற்றால்,
பொழிமதநீர் விரையேற்றி விகடகடப்
பூசைகொண்டு புதிதா நல்கிப்
பழிநபுதன் தாதையினும் புகழ்படைத்த
மதமாவைப் பணிதல் செய்வாம் (5)

*இது வணக்கமாக வருவது. முருகவேள் வணக்கமும் சிறப்புடையது.*

முருகோட்டந் தரப்பாயும் மும்மதமும்
ஊற்றெடுப்ப முரிவிற் கோட்டும்
ஒருகோட்டு மதகளிற்றை இருகோட்டு
முதுகளிறா உலகைக் காட்டிப்,
பருகோட்ட நறைவேட்டுப் பைங்கோட்டுத்
தினைப்புனத்துப் பரண்மேற் கொண்டு
குருகோட்டும் பெடைமணந்த குமரகோட்
டத்தடிகள் குலத்தாள் போற்றி (9)

*குமரகோட்டத்துக் குமரவேளின் வணக்கம் கூறுவது இது. குமரகோட்டம் மிகுபுகழ் வாய்ந்தது.*

*நால்வர் வணக்கப் பாடல்கள் சொற்சுவையும் பொருட் சுவையும் பக்திச்சுவையும் மிளிர அமைந்தவை. அவையும் ஈண்டுத் தரப்பெறுகின்றன.*

பரசமயக் கோளரியைப் பாலறா
வாயனைப்பூம் பழனஞ் சூழ்ந்த
சிரபுரத்துத் திருஞான சம்பந்தப்
பெருமானைத் தேய மெல்லாங்
குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளுங்
கவுணியர்தங் குலதீ பத்தை,
விரவியெமை ஆளுடைய வென்றமழ
விளங்களிற்றை விரும்பி வாழ்வாம். (10)

*இது காழிப்பிள்ளையாரின் வணக்கம் கூறுவது.*

இடையறாப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவா ரத்தின்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம். (11)

*வாகீசப்பெருமானைப் பற்றிய இந்தப் பாடல் உள்ளத்தை உருக்குகின்றது அவர்தம் திருத்தாண்டகப் பாடல்கள் போல். அப்பர் சுவாமிகளின் திருத்தாண்டகம் என்றுமே அடியேனின் நெஞ்சை நெகிழ்விக்கும்.*

ஒருமணத்தைச் சிதைவுசெய்து வல்வழக்கிட்
டாட்கொண்ட உவனைக் கொண்டே

இருமணத்தைக் கொண்டருளிப் பணிகொண்ட
வல்லாளன் எல்லாம் உய்யப்,
பெருமணஞ்சீர்த் திருத்தொண்டத் தொகைவிரித்த
பொருளின் பெருமாள் என்றுந்,
திருமணக்கோ லப்பெருமாள் மறைப்பெருமாள்
எமதுகுல தெய்வ மாமால். (12)

*இல்லறநெறியில் முறைப்பட ஒழுகி எம்பெருமானை மறவாத நெஞ்சுடைய தம்பிரான் தோழரின் வணக்கம் இது.*

பெருந்துறையிற் சிவபெருமான் அருளுதலும்
பெருங்கருணைப் பெற்றி நோக்கிக்,
கரைந்துகரைந் திருகண்ணீர் மழைவாரத்
துரியநிலை கடந்து போந்து,
திருந்துபெருஞ் சிவபோகக் கொழுந்தேறல்
வாய்மடுத்துத் தேக்கிச் செம்மாந்
திருந்தருளும் பெருங்கீர்த்தி வாதவூ
ரடிகளடி யிணைகள் போற்றி (13)

*இது "மனங்கரைத்து மலங்கெடுக்கும்" வாசகத்தை அருளிய மணிவாசகப் பெருமானுக்கு வணக்கம் தெரிவிப்பது.*

*குருநாதர் வேலப்பதேசிகருக்கு வணக்கம் தெரிவிக்கும் பாடல் இது:*

எவ்வெவ்வர்கோட் படுபொருளும் அஞ்செழுத்தின்
அடக்கிஅவற் றியல்பு காட்டி,
மெய்வகைஅஞ் சவத்தையினும் நிற்குமுறை
ஒதுமுறை விளங்கத் தேற்றி
அவ்வெழுத்தின் உள்ளீடும் அறிவித்துச்
சிவபோகத் தழுந்தி நாயேன்,
செய்வினையும் கைக்கொண்ட வேலப்ப
தேசிகன்தாள் சென்னி சேர்ப்பாம். (18)

*திருநாட்டுப் படலத்தில் மழைபற்றி மூன்று பாடல்கள் மிகுநயம் வாயந்தவை.*

போதம்மே லாகப் பண்டே
  புல்லி மலநோய் தீர்ந்தும்
வாதனை தாக்கு மாபோல்
  மழைப்பெயல் மாறித் தீர்ந்துங்,
காதல்செய் துறையும் புள்ளும்
  மாக்களும் கவன்று நெஞ்சம்
நோதக மரங்க ளெல்லாம்
  நுண்துளி துவற்றும் மாதோ (12)

*என்பதில் சிவஞானசூத்திரத்தின் கருத்து தொனிப்பதைக் காணலாம் (சிவஞா. சூத் 9. அதிகர. 3). இதே படலத்தில் ஐநில வருணனை சொல்லப் பெறுகிறது. அவற்றுள் முல்லைநில வருணனைப்பற்றிய பாடல் இது:*

நவிலும் இந்நிலப் புறம்பயில்
  புறவநன் மடந்தை
குவிவ ருந்தழல் வெம்மைகூர்
  கொடும்பசி தணியச்
செவிலி யாய்முகில் தீம்பயம்
  ஊட்டிட வளர்ந்தாங்
கவிழு நீள்வர காதியாம்
  மகப்பியந் தளிக்கும்.

*பாடல் அற்புதம்.*

*திருநகரப்படலத்தில் காஞ்சிமாநகர் வருணிக்கப் பெறுகின்றது.*

கச்சிமா நகர்ஓர் தட்டும்,
  கடவுளர் உலகோர் தட்டும்
வைச்சுமுன் அயனார் தூக்க,
  மற்றது மீது செல்ல

நிச்சயம் முறுகித் தாழ்ந்து
நிலமிசை வீழும்இவ் வூரை
இச்சகத் தூர்க ளோடும்
எண்ணுதல் மடமை பாற்றே (1)

*காஞ்சியம்பதியும் தேவருலகும் கீழும் மேலுமாக நிற்கும் இயற்கைக்குப் பிறிதொரு காரணம் கற்பித்தவாறு.*

*அகநகர் பரத்தை வீதியைப் பற்றியும் பல பாடல்கள். அவற்றுள் ஒன்று.*

விற்றிடும் அல்குல் தன்னை
மீளவும் தமதே யாக்கி
மற்றைய நாளும் விற்கும்
வரைவிலார் வீதி இச்சீர்
கற்றிலா வணிக மாக்கள்
ஆவணக் கவினை நோக்கிப்
பற்றுவெண் தரளக் கோவைப்
பத்தியால் சிக்கும் மன்னே. (56)

*இல்லறம் பார்க்காது நேரே துறவறத்தைத் தழுவிய அடிகள் இல்லறத்தாருக்கு இதனைச் சுட்டி மகிழச் செய்கின்றார்.*

*இந்நூலிலுள்ள பாடல் யாவும் சொற்பொருளழகும் தத்துவ சமயக் கருத்துகளும் நிறைந்தவை. தல விசேடப் படலத்தில் ஒரு பாடல்:*

வழிச்செலவில் புகுந்தேனும் மறந்தேனும்
பொருளாசை மருவி யேனும்
கழிப்பருஞ்சீர்க் காஞ்சியினிற் கணப்பொழுது
வதிந்தோறும் கலப்பர் முத்தி
பழிப்பிலாக் காஞ்சியெனத் தன்னியல்பான்
ஒருபொழுது பகரிற் கண்ணில்

ஒழிப்பரும்பா தகமனைத்தும் ஒழிந்துபெருந்
துறக்கவீ டுறுதல் உண்மை (20)

*வழிச்செலவில் புகுந்தானாயினும், மறதியாலாயினும், பொருளாசையாலாயினும் காஞ்சியம்பதியில் ஒரு நொடி நேரம் தங்கினவர்களும் முத்தி அடைவார்கள். 'காஞ்சி' என்று ஒரு முறை தற்செயலாகச் சொன்னாலும் நினைத்தாலும் எல்லாப் பாவங்களும் நீங்கிப் பெரிய மோட்சத்தை அடைதல் உண்மையாகும்.*

*திரு ஏகம்பத்தில் திருஏகம்பத்தின் பெயர் மாட்சியைக் குறிப்பிடும் பாடல்:*

ஏதம் நீக்குசொல் வடிவினும் தனிமா
எனப்ப டுந்தரு வடிவினும் அதற்கு
நாதர் யாமெனத் தெளிமின்இங் கெமது
நாமம் ஏகம்ப நாதன்என் றுரைப்ப,
ஆதி மந்திரம் அஞ்செழுத் திதுவே
ஐம்பெ ருங்கொடும் பாதகம் அறுக்கும்
ஓதும் ஐவகைப் பிரமமந் திரத்தும்
அஞ்செ ழுத்தினும் உயர்ந்ததிம் மனுவால் (27)

*வேதம் மாமரமாகவும் சிவபெருமான் அதன்கீழ் இலிங்கமாகவும் இருப்பதையும், தன் பெயர் ஏகாம்பர நாதன் என்பதையும், ஆதிமந்திரமாகிய ஐந்தெழுத்தும் இதுவே[30] என்பதையும் அதுவே ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதானம் என்ற ஐந்தும் என்பதையும் பிரமமந்திரம் ஐந்தெழுத்தினும் உயர்ந்தது என்பதையும் தானே கூறுகிறார்.*

*காஞ்சியில் சிவனடியார் வேண்டுகோட்கிணங்க இப்புராணம் உரைத்ததாகக் கூறுவர்.*

30. ஏகாம்பரநாத: என்பதன் திரிபு ஏகம்பரநாதன். இதில் ஒற்றை நீக்கி ஐந்தெழுத்தாதல் காண்க.

பொருவில் கச்சியம் புராணம்வண்
டமிழிற் பகலென்
றிருநி லம்புகல் மணிமதிற்
கச்சிஏ கம்பர்
திருவ ருட்குரி யான்றவர்[31]
கூறிய சிறப்பால்
உரிமை யுற்றெழும் ஆசையான்
உரைத்திடலுற்றேன்.

*இவ்வாறு தொடங்கிய புராணத்தை,*

நந்திபிரான் அருள்பெற்றுச் சனற்குமாரன்
நவின்றபடி வியாத மேலோன்
இந்துவாழ் சடைப்பெருமான் திருவடிகாண்
பதற்கேது இதுவே யென்ன,
அந்திலெனக் குரைசெய்த அரும்பொருள்இங்
குமக்குரைத்தேன், அறிவின் ஆன்ற,
சிந்தையீர் தெளிமின்எனச் சூதமுனி
முனிவரர்க்குத் தெருட்டி னானால்.
(அந்திலி—அசைநிலை)

*என்ற பாடலால் நிறைவு செய்கின்றார்.*

***விளக்கம்:*** *'அரன்திருவடிகாண்டற்கு ஏது எங்களுக்குக் கதி (புராணவரலாற்று–25) எனக் கேட்ட நைமி சாரண்ய முனிவர்களுக்கு, 'சிவனைக் காண்பதற்கு இதுவே கொண் மின்' (தலவிசேடம் 30) எனவிடை கூறிய சூதமுனிவர், 'அத்தலமேன்மை அனைத்தும் விரித்தருள்' (திருநெறிக்–1) எனக்கேட்டமுனிவர்களுக்கு இதுகாறும் காஞ்சித் தலத்தின் பெருமையை விரித்துரைத்து, 'இக்கலிநாள் முந்தி எய்தி யிடும் விழைவுடையோர்[31] திருக்காஞ்சியிடம் பிரியாதிருத்*

31. காஞ்சி பிள்ளையார்பாளையத்து மணியப்பமுதலியார் முதலோர்.

*தல் வேண்டும்' (சிவபுண் 120) 'வியாத மேலோன் "பெருமான் திருவடிகாண்பதற்கேது இதுவே என்ன உரைசெய்த அரும்பொருள் இங்கு உமக்குரைத்தேன்... தெளிமின்' (மேலது 121) என்று மறித்துணர்வு நிகழக் கூறித் தெருட்டினார் எனக்கூறி, 'இத்திருக்காஞ்சி வைப்பிற் பலதனியிடத்தும் மேவி கம்பவாணர் அவரவர்க்கருளிச் செய்த காதையெல்லாம் சூதன் அன்றுரைத்தவாறே உரைப்பேன்" (திருநகர்-126) எனப்புகன்ற ஆசிரியர் தாம் எடுத்துக் கொண்ட நூலை இனிது முடித்தனர் என்க.*

*இனி, புராணங்களில் வரும் கவசத் தோத்தரங்களை எடுத்துகாட்டி இந்த இயலை நிறைவு செய்கின்றேன். 'கவசம் இலக்கியம்' தோத்திரமாதலின் தோத்திர இலக்கியத்தின்கீழ் இருக்கலாம் என்று சிலர் கருதுவர். ஆனால் அது புராணங்களில் அமைந்ததாதலால், புராணப் பகுதியிலேயே இருத்தற்பெற்றது என்பது அறியத்தக்கது. புராணமும் பக்தி நூல்தானே.*

## கவசத்தோத்திரங்கள்

*சிவபுராணங்களில் 'கவசம்' என்ற ஒரு தோத்திரப்பகுதி அமைதிருப்பது ஒரு புராண இயல்பாகத் தெரிகின்றது. உடலைப்பாதுகாப்பதற்காகப் போருக்குச்சென்ற வீரர்கள் இரும்புக் கவசத்தை அணிந்தார்கள். அதுபோல இறைவன் புகழைச் சொல்லி அவன் இன்ன இன்ன உறுப்புகளைக் காப்பானாக என்று அவன் பெயர்களையே சொற்கவசமாக அமைத்துக் கொள்ளுதல் ஒரு தோத்திர கவசமாகும்.*[32] *இவற்றை ஓதி இன்னார் நற்பலன்கள் அடைந்தனர் என்று புராணம் கூறுகின்றமையால், பின்வந்த மக்களும் இவற்றை ஓதி நற்பலன் பெறும் நம்பிக்கை யடைகின்றனர்.*

---

32. வைணவ சமயத்தின் திருமண்காப்பின் தத்துவம் இதுவே யாகும் என்பதை ஈண்டுச் சிந்திக்கலாம்.

இறைவனையே கவசமாகச் சொல்லால் அமைத்துக் கொண்டு பாடும் செய்யுள் நூல் கவசம் எனப்படும். வடமொழியில் இத்தகைய கவசங்கள் பல. அவை போலத் தமிழிலும் பல ஏற்பட்டுள்ளன. உண்மையில் பார்த்தால் ஞானசம்பந்தர் பாடிய **'வேயுறு தோளிபங்கன்'** "(2.85) என்ற கோளறுபதிகமே ஒரு கவசமாகும். பிற்காலத்தில் அவரவருக்கு விருப்பமாக ஒரு தெய்வத்தையும் அதன் பல பெயர்ககளையும் சொல்லி இன்ன பெயருள்ள தெய்வம் இன்ன உறுப்பைக் காக்குமாக, இன்ன இன்ன திசையிலும் இன்ன நேரத்திலும் காக்குமாக என்று பக்தர்கள் பாடுகின்றனர். இப்படிப் பெருநூல்களின் பகுதியாகவே பெரும்பான்மையான கவசங்கள் பாடப்பெற்றுள்ளன.

பெருநூலில் இன்னகவசத்தைப் பாடி இன்னார் நற்பலன்கள் அடைந்தார் என்று சொல்லப்பட்டமையால் பின்வந்த அடியார்கள் தாங்களும் அதே பாடல்களைப் பாடி இறைவன் அருளுக்குப் பாத்திரமாக எண்ணுகின்றனர். இவ்வாறு பல நூற்றாண்டுகள் பல்லாயிரம் பேர் அப்பாடல்களை உச்சரித்து வருவதால், அவைமந்திரம் போன்ற தன்மையைப் பெற்று விடுகின்றன. பின்னும் பலர் குறித்த நன்மை பெறவும் தீமை அகலவும் வேண்டி நாள்தோறும் 108 உரு அல்லது மேலும் இத்தனை உரு என்று கணக்கிட்டு மந்திரமாகச் செபித்து வந்துள்ளனர். அவரவர்க்குப் பலன் கிடைத்ததெல்லாம் அவரவர் பக்குவத்தையும் நம்பிக்கையையும் பொறுத்தது; இஃது ஆராய்ச்சிக்குரிய பொருளுமன்று. இவ்வாறு கவசத்தைச் செபித்தல் சைவரிடமும் உண்டு; வைணவரிடமும் உண்டு. தமிழிலும் உண்டு வடமொழியிலும் உண்டு.

தமிழில் எழுந்த சைவசமயத்தைச் சார்ந்தனவாக உள்ள கவசநூல்களை ஈண்டுக்காட்டுவேன். இவற்றில் தனி நூல்களும் உண்டு; புராணநூல்களின் பகுதிகளாகவும் உள்ளன.

*(1)* ***விநாயகர் கவசம்***[33]: *இது விநாயகர் புராணத்தில் உள்ளது. கச்சியப்பமுனிவர் பாடியது; ஒன்பது விருத்தப் பாடல்களைக் கொண்டது. "ஆதியில் இக்கவசத்தைக் காசிபமுனிவர்; முத்கலமுனிவருக்கு அருளிச் செய்ய அவர் மாண்டவ்ய முனிவருக்கு உபதேசித்தருள அவர் பல முனிவர்களுக்குத் திருவாய் மலர்ந்தருளச் செய்தனர் என்றறிக. நித்திய கருமங்களை முடித்துப் பரிசுத்தமாகிய ஓரிடத்தில் இருந்து கொண்டு ஒன்று பட்ட மனத்துடனே விநாயகரைத் தியானித்து இதைச் செபிக்க வேண்டும்" என்பது இதன் முகப்பிலுள்ள குறிப்பு. முதற்பாடல:*

வளர்கையைப் பராபரமாய் வயங்குவிநா
யகர்காக்க; வாய்ந்த சென்னி
அளவுபடா சவுந்தர தேகமமா
தோற்சுடர்தாம் அமர்ந்து காக்க;
விளரற நெற்றியைஎன்றும் விளங்கியகா
சிபர்காக்க; புருவம் தம்மைத்
தளர்வின்மகோ தரர்காக்க; தடவிழிகள்
பாலச் சந்திரனார் காக்க.

*(2)* ***சிவகவசம்***[34]: *இதுவரதுங்கராம பாண்டியர் பாடிய 'பிரமோத்தரகாண்டத்'தில் 12 சிவகவசம் உரைத்த அத்தியாயத்தில் உள்ளது. 20 பாடல்களால் இக்கவசம் கூறப் பெறுகின்றது. உடலின் ஒவ்வொரு பாகத்தையும் குறிப்பிட்டு, இதனை இப்பெயருடைய இறைவன் காக்க என்று கூறுவது முதல் பாடல்.*

அகிலநா யகனாய் ஞான
ஆனந்த ரூபி யாகித்
துகள்தரும் அணுவாய் வெற்பின்
தோற்றமாய் உயிரை எல்லாம்

33. 19-ஆம் நூற்றாண்டு.
34. 16ஆம் நூற்றாண்டு.

தகவுடன் அவனி யாகித்
தரிப்பவன் எம்மை இந்த
மகிதல மதனில் தீமை
மருவிடா தருளிக் காக்க.

*இக்கவசம் தோன்றிய நாள் தொடங்கிச் சைவப் பெரு மக்களின் வழிபாட்டுக்கும் பாராயணத்துக்கும் உரியதாய் விளங்குகின்றது.*

*(3) **சக்தி கவசம்**[35]: இது வச்சிரபஞ்சரம் (வயிரக்கூடு) என்ற மறுபெயரையுடையது. அதிவீரராமர் பாடிய காசிக்கண்டத்தில் 72-ஆம் அத்தியாயமாக உள்ளது; 12 பாடல்களைக் கொண்டது. தேவர்கள் தங்களுக்கு நெடுநாள் இடரிழைத்திருந்த துர்க்கன் என்னும் அசுரனை உமா தேவியார் சங்கரித்து அவ்விடரை நீக்கியது கண்டு அத்தேவியை வணங்கித் துதி செய்தது இக்கவசம் என்றறிக. 'துர்க்கனை அழித்தநிலையில் அம்பிகைக்குத் '**துர்க்கை**' என்ற திருநாமம் ஏற்பட்டது என்பது இதுபற்றிய குறிப்பு. உடம்பின் ஒவ்வோர் உறுப்பையும் சுட்டி, துர்க்கையின் அம்சம் இன்னின்ன தேவதைள் காக்க என்று பாடுகின்றது. எடுத்துக்காட்டாக முதற்பாடல்:*

அங்கையிற் காகம் தாங்கும்
பிரமாணி அருளி னோடும்
துங்கமென் சென்னி காக்க;
வயிணவி துகளி லாகம்
எங்கணும் காக்க, செய்ய
ஏந்தொழில் உருத்தி ராணி
தங்குமென் திசையும் அன்பு
தழைத்திட இனிது காக்க.

35. 16-ஆம் நூற்றாண்டு

இக்கவசம் தோன்றிய நாளாகச் சைவச்சான்றோர் மனப் பாடம் செய்து வழிபடுவதற்குரிய ஒரு பாடல் தொகுதி யாக இருந்து வருகின்றது.

*(4) **சிவாட்டகம்**[36]: அதிவீரராமர் பாடிய காசிக் கண்டத்தில் பத்தாம அத்தியாயத்தில் சிவசன்மா பரவித் துதித்ததாக உள்ள எட்டுப்பாடல்கள் இப்பெயரால் வழங்கும். இதனைச் செபிப்பவர் மகப்பேறு பெறுவர் என்பது குறிப்பு. இதன்முதற்பாடல்:*

அருவுருவாய் ஏகமாய்க் குணங்குறிகள்
எவையுமின்றி அசல மாகி
நிருமலமாய் எவ்வுயிர்க்கும் உயிராகிச்
சுடரொளியாய் நித்த மாகிக்
கருதரிய ஆனந்தக் கடலாகி
மெய்ஞ்ஞானம் கனியாய் நின்ற
வரத்தின நடிக்கமலம் மனத்திருத்திக்
கொழுமலர்தூய் வழுத்தல் செய்வாம்.

*(5) **மிருத்யுஞ்சயதோத்திரம்**: யமனுடைய பாசத்தி லிருந்து தன்னைக் காக்கும்படி மார்க்கண்டேயர் துதித்த தாக வடமொழியில் பாடல் சொல்லப் பெறும். 'சிவபெரு மானைத் தலையால் வணங்குகிறோம்; யமன் வந்து எம்மை என்ன செய்வான்' என்பது பாடலில் கருத்து. அதிவீரராம பாண்டியர் செய்த மாகபுராணத்தில்[37] ஞானசம்பந்தர் 'மாசிக்கடலாட்டுக் காணாதே போதியோ பூம்பாவாய்!' என்று கூறியவிடத்து இந்த நீராடலைத் தான் குறிப்பிடு கின்றார். இப்புராணத்தில் மார்க்கண்டன் பிறப்புரைத்த அத்தியாயம் என்ற பகுதியில் 17 பாடல்கள் காணப்பெறு*

36. 16ஆம் நூற்றாண்டு
37. மாகமாசத்தில் (மாசி) தீர்த்தமாடுவதன் புண்ணியத்தைக் கூறுவது மாக புராணம். மாகஸ்நானம் என்பது மாசி மாதத்தில் புனித நீராடல்.

*கின்றன. மணிவிழா, முத்துவிழா, பவளவிழா சதாபிஷேகம் முதலான சாந்தி விழாக்களில் மிருத்தியஞ்சயமூர்த்தி (காமனைவென்ற மூர்த்தி)யை ஓமம் செய்து வழிபடும் அன்பர்களுக்கு இத்தமிழ்த் துதி மிகவும் பயன்படும்.*

முத்தொ ழிற்கும்மு தற்பொருள்தனை
முக்கு ணத்தினும் மேலதாம்
தத்து வத்தின் விளக்கமாகிய
தற்ப ரத்தினை ஒருவனை
வித்த கக்கண நாதர்சூழ்வர
வெற்பின் வாழ்தனி வெற்பினை,
பத்தி யின்தொழு வேனையோ
நமனார் முனிந்தெதிர் பகருமோ?

*(6) **கந்தர் சஷ்டி கவசம்:** தேவராயசுவாமிகள் செய்தது[38] என வழங்கும் இந்நூல் ஆசிரியப்பாவால் ஆனது. 240 அடிகட்கு மேலும் உடையது. பிற கவசத் தோத்திரங்கள் காக்க என்று மட்டும் அமைந்திருக்க, இதுமட்டும் மந்திரங் களும், அவற்றிற்குரிய அக்கரங்களும் உச்சாரணமும் அடங்கியுள்ளது. மற்றவற்றைவிட, இதுவே கல்வியில்லா தோராலுங்கூட மனப்பாடம் செய்து உருவேற்றப் படுகின்றது. இக் கந்தர்சஷ்டி கவசமானது செந்தில்மேய கந்தவேளுக்குரியதென்றும், திருச்செந்தூராகிய இப்படை வீடு இரண்டாவது என்றும் ஏனைய ஐந்துக்கும் பிற்காலத் தில் இதுபோலவே புனையப்பெற்ற ஐந்து கவசங்கள் உரியன என்றும் சொல்லி ஆறுகவசங்கள் அச்சிடப் பெற்றும் உள்ளன. பிறவற்றுக்கு ஆட்சி இல்லை. இத்தொகுப் பினுள் காணப்படுபவற்றுள் இஃதொன்றே ஆட்சியி லுள்ளது.*

கந்தர்கை வேலாங் கவசத் தடியை
வழியாய்க் காண வகையாய் விளங்கும்

38. 18-ஆம் நூற்றாண்டு.

விழியால் காண வெகுண்டிடும் பேய்கள்
பொல்லா தவரைப் பொடிபொடி யாக்கும்
நல்லோர் நாவிலே நடனம் புரியும்.

*(7) சண்முக கவசம்:* இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த பாம்பன்-குமர குருதாச சுவாமி கள் செய்தது. முதல் எழுத்துகள் அகரவரிசையில் அமைந்த முப்பது பாடல்கள் கொண்டது. இதை ஓதிப் பலர் முருகன் அருள்பெற்றதாக வரலாறு உண்டு.

அண்டமாய் அவனி ஆகி
அறிவொணாப் பொருள தாகித்
தொண்டர்கள் குருவு மாகித்
துகளரு தெய்வம் ஆகி
எண்திசை போற்ற நின்ற
எண்ணருள் ஈசன் ஆன
திண்திறல் சரவ ணத்தான்
தினமுமென் சிரசைக் காக்க.

என்பது இதில் ஒருபாடல்

## சூரியதோத்திரம்

கமலை ஞானப்பிரகாசருடைய[39] மாணாக்கர் பலர். எல்லோரும் தமிழ்ப் புலமையுடையோராயும் சமய அறிவு வல்லவராயும் இருந்தனர். பலர்தோத்திர சாத்திர நூல் செய்துள்ளனர். ஒருவர் சூரியதோத்திரம் செய்தார். சிவபூசையில் முதலாவது அநுட்டானம். பின் சூரியபூசை. அடுத்தே சிவபூசை. மூன்றுக்குமான விதிகளை ஞானப் பிரகாசரே அகவலாகப் பாடியுள்ளார். அநுட்டானத்தி லும் பூசையிலும் சூரியனுக்குத் தோத்திரம் சொல்லப்படும். ஞானப்பிரகாசருடைய மாணாக்கர் ஒருவர் இதன் பொருட்டுத் தமிழில் பதினான்கு பாடல்கள் உதயதிவாகர

39. மெய்கண்ட சந்தானத்தில் வந்தவர்.

தோத்திரமாகச் செய்தார். தொடக்க வெண்பா ஒன்றில் இவர் 'கமலை அண்ணலே' என்று தன் குருநாதரை விளித்துத் துதிக்கின்றமையால், இவர் ஞானப்பிரகாசருடைய மாணாக்கர் என்று தெரிகின்றது.

சாதித்து மூவுலகும் தானாகி யேவிளங்கும்
ஆதித்த னே,கமலை அண்ணலே–பேதித்த
நாளாகி நாழிகையால் நாயேன் தலையிலிருந்
தானாகி வைத்தியே தான்.

அடுத்து காணப்பெறுபவை தோத்திரப்பாடல்கள்; உதயதிவாகர தோத்திரம் என்று சொல்லப்பெறும்,

கடல்தனில் நீயெழுவாய் காரண காரணனே,
புடைபட நின்னடியார் போதஉனைத் தொழுவேன்
அடையவும் ஒருதேர்மேல் அசைய எழுந்தருளும்
உடையவ னாருயிரே, உதய திவாகரனே.

காலையில் மேல்வருவாய், கதிர்பல வும்உடையாய்
வேலையின் மேல்வருவாய் வேதிய வேதியனே
சாலவுனைத் தொழுதேன், என்சங்கை யறுத்தருளும்
ஓலமெனும் துணையே உதய திவாகரனே

கிளர்கதி ராயிரம் கெழுமி எழுந்தருளும்
வளரிள ஒளிமுகவா, வானவர் நாயகமே,
உளமுற உட்புகுவாய், உதய திவாகரனே!

பத்தியி னாலடியேன் பாடிய பதினாலும்
நித்தம் நினைந்துருகி நெஞ்சினில் வைப்பவர்தம்
வைப்புமிருப்புமவர் வானுலகுந் தருமே[40]

உதித்து வெளிகாட்டி ஒடுங்கி இருள்காட்டி
அதித்து மழைகாட்டும் ஐயா–மதித்த
சுடரே,என் கண்ணிலாஸ் சுயஞ்சோதி அன்பர்
இடரே களைவாயும் நீ.

40. இந்த இருபாடல்களிலும் முதலடி காணப்பெறவில்லை.

# 6. பிரபந்த இலக்கியங்கள்

*சங்கஇலக்கிய காலந்தொட்டே தமிழில் சிறுபிரபந்தங்கள்*[1] *தோன்றிவிட்டன என்று கருதலாம். பத்துப்பாட்டுள் முதல் பாட்டாகிய திருமுருகாற்றுப்படையே ஒரு பிரபந்தம்; இதுபோலவே சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, கூத்தராற்றுப் படை என்பனவும் ஆற்றுப்படைப் பிரபந்தங்களாகும். 10–ஆம் நூற்றாண்டுக்குரிய பன்னிரு பாட்டியல் முதன் முதலாகச் சில பிரபந்தங்களுக்கு இலக்கணம் கூறுகிறது. 80 பிரபந்தங்கள் அங்குச் சொல்லப் பெறுகின்றன.*

*நாற்பது, எழுபது, முதுமொழிக்காஞ்சி என்ற பிரபந்த வகைகள் பதினெண்கீழ்க்கணக்கில் உள்ளன. பன்மணி மாலை, மாடலூர்ச்சி போன்ற சில யாப்பருங்கல விருத்தியில் குறிப்பிடப்பெற்றுள்ளன. ஆனால் நூல்கள் இல்லை.*

*ஆழ்வார்களும் நாயன்மார்களும் அருட்பாசுரம் பாடத் தொடங்கிய காலம் முதலே பிரபந்தங்கள் தோன்றி விட்டன. பிரபந்தம் என்ற பெயரும் அது எத்தனை வகை என்ற எண் வரையறையும் அமையாவிட்டால் பலபாசுரங்கள் பிரபந்தங்களாகவும், பிற்காலத்தில் தோன்றிய பிரபந்த இலக்கணத்துக்குப் பொருந்துவனவாகவும் உள்ளன; இஃது*

---

1. ஒருபொருள் குறித்துச் செய்யப்பெற்ற ஒரு நெடும்பாட்டு பிரபந்தம் என்று வழங்கப்பெறுகின்றது. நன்கு யாக்கப் பெற்றது பிரபந்தம்.

இயல்புதான். அப்பாசுரங்களின் தன்மையைப் பார்த்துத் தானே இலக்கணம் பின்னால் எழுந்தது? அந்தாதி, மடல், பல்லாண்டு, பள்ளி எழுச்சி, பாவை, எழுகூற்றிருக்கை என்பன ஆழ்வார் பாசுரங்களில் பல நூற்றாண்டுக்கு முன் எழுந்த முழுப்பிரபந்தங்கள். தேவாரத்தில் எழுகூற்றிருக்கை அங்கமாலை, தாண்டகம் என்பன; காரைக்கால் அம்மையார் பாடலில் இரட்டைமணிமாலை, அந்தாதி என்பன; பிற திருமுறைகளில் ஆற்றுப்படை, மும்மணிக் கோவை, உலா என்பன. மாணிக்கவாசகர் பாடிய ஊசல், சதகம், தசாங்கம் போன்ற பதிகம் அனைவரும் பாடியுள்ள னர். இவ்வாறு நோக்கினால் 20 பிரபந்தங்களே பழைய பிரபந்தங்களாய்த் தெரிகின்றன. தனிப்பிரபந்தமாகக் கிடைக்கும் நூல் மிக அருமை. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் எழுந்ததெனக் கருதப்பெறும் பாண்டிக் கோவையொன்றே சிறப்புடைய தனிப்பிரபந்தம் (இறையனார் களவியலுறை யில் காணப்பெறுவது). பிரபந்தங்கள் யாவும் அருட்பாசுரத் தொகுப்பில் அடங்கிவிட்டன.

'பிரபந்தம்' என்ற வடசொல்லுக்கு தொடர்பாகச் செய்யப்பெற்றது என்பது பொருள். ஒரு பொருள் குறித்துச் செய்யப்பெற்ற நெடும்பாட்டுக்கு அல்லது பாடல் தொகுதிக்குப் பிரபந்தம் என்ற பெயர் இப்போது வழங்குகின்றது. பிற்காலத்துச் சிறந்த இலக்கியப்பிரிவு களாய் வளர்ந்த கலம்பகம், பிள்ளைத்தமிழ், தூது என்பன 9-ஆம் நூற்றாண்டுவரை காணப்பெறுவில்லை. 17-ஆம் நூற்றாண்டில் படிக்காசுப் புலவர் தாம் பாடிய 'சிவந்தெழுந்த பல்லவராயன் உலா' என்ற நூலில் 96 பிரபந்தங்கள் என்று முதன் முதலில் குறிப்பிடுகின்றார். எனினும் 12, 14, 16ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய வச்சணந்திமாலை, நவநீதப் பாட்டில், சிதம்பரப் பாட்டியல்[2] முதலாயின குறிப்பிடும் பிரபந்த வகைகள்

2. இதன் காலத்தும் பிரபந்த மரபில் 96 குறிப்பிடுகின்றது.

96-க்கும் குறைந்தவையேயாகும். ஆனால் உண்மையில் பாட்டியல்களில் சொல்லப் பெற்ற அநேகப் பிரபந்தங்கள் வழக்கில் உள்ளன. பிரபந்தம் என்ற பெயரும் 96 என்ற வரையறையும் புதியனவேயன்றி பிரபந்தப்பாட்டு புதியதன்று. 11-ஆம் திருமுறையே **'பிரபந்தமாலை'** என்று பிற்காலத்தில் வழங்கியதாக அறியப்படுகின்றது. இதில் அடங்கியுள்ள நூல்கள் அனைத்தும் ஏதோ ஒருவகையில் பிரபந்தங்களே. நம்பியாண்டார் நம்பி செய்த பிரபந்தங் களைத் தவிர வேறு எந்தப் பிரபந்தங்களும் கிடைக்க வில்லை; எழுதப்பெற்றனவாகவும் தெரியவில்லை. 14-15 நூற்றாண்டுகளிலும் அதன் பின்னரும் பல்வேறு பிரபந்த வகைகள் தோன்றியுள்ளன. இந்தப் பிரபந்தங்களில் சைவத் தைச் சார்ந்த ஒரு சில பிரபந்தவகைகளைக் காண்போம்.

## 1. உலா பிரபந்தங்கள்

**உலா இயல்பு:** தலைன் வீதியில் பவனிவருதல் பெருங்காப்பியங்களில் சிறப்பித்துச் சொல்லப்பெறும். அவ்வாறு வரும்போது ஏழு பருவமகளிரும் கண்டு மயங்குவதாகப் புலவரால் புகழ்ந்து பாடப்பெறும் தனிநூல் வகை உலா எனப்பெயர் பெறும். இது கலிவெண்பாவால் இயன்றது. குலமகளிர் மயங்குவது அறமன்று. ஆதலால் பொதுமகளிரே (பரத்தையர்) இவ்வாறு மயங்கினர் என்று ஆன்றோர் நூல் செய்வர். கோயில் திருவிழாக்காலத்தே தேவகணிகையர் வீதிவழியே இறைவன் உலாவர மகளிர் கண்டு மயங்கினர் என்று நூல் செய்தல் மரபு. பிற்காலத்தில் 96 வகை என்று கணக்கிடப்பெற்ற பிரபந்த வகையுள் இது மிகவும் பழமையான ஒரு வகையாகும்.

சேரமான் பெருமாள் பாடிய **திருக்கயிலாய ஞான உலாவே** காலத்தால் மிகவும் பழையது; இதுபற்றி **ஆதியுலா** என்றும் அது சொல்லப்பெறும்; திருவுலா

மாலை என்றும் சொல்வதுண்டு[3]. இறைவன் உலாவரும் போது தலவரலாறு, சிறப்பு, பெருமானுக்குரிய ஆராதனை, தேருக்கு எழுந்தருளுதல், உடன் வருவோர், மகளிர் குழாங்கள் கண்டு காமுறுதல் என்ற செய்திகள் உலாவின் பொருளாக அமையும். ஏழுபருவ மகளிராவார் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என்போர். இப்பருவங்களுக்குரிய வயதும் இலக்கணங்கள் கூறும். ஏழு பருவத்துக்கும் உரிய ஆண்டுகளை முறையே 5-8, 9-10, 11-14, 15-18, 24, 29, 36 என்பது பன்னிரு பாட்டியல்; 7, 11, 18, 19, 25, 31, 40. என்பது பிங்கல நிகண்டு. பிறபாட்டியல் நூல்களும் வெவ்வேறாகக் கூறும்.

பேதை தனக்குப் பிராயமும் ஏழு;
பெதும்பைக்கு ஒன்பது;
ஓதிய மங்கைக்குப் பன்னிரண் டாகும்;
ஒளிர்ம டந்தை
மாதருக் கீரேழ்; அரிவை பதினெண்;
மகிழ்தெ ரிவைச்
சாதி மூவேழெனும்; பேரிளம் நாலெட்டுத்
தைய லார்க்கே.

என்று ஒரு தனிப்பாடல் உரைக்கும். காதல் தோற்றியும் தோற்றாது உள்ளது பெதும்பைப் பருவமாதலால், அதைப் பாடுவது கடினம் என்ற கருத்தோடு 'பேசும் உலாவிற் பெதும்பைப்புலி' என்று ஒரு பழம்பாடல் பகரும்.

'உலகியலை அறியாத இளம்பருவம் பேதைப்பருவம் என்றும், உலகியலை ஒருவாறு உணர்ந்தும் உணராமலும் உள்ள நிலை பெதும்பைப் பருவம் என்றும், காமநுகர்ச்சிக்கு ஏற்புடையது மங்கைப்பருவம் என்றும், அந்த நுகர்ச்சியில் பயின்றது மடந்தைப் பருவமென்றும், முதிர்ந்

3. இது பற்றி விவரம் இந்நூல் 4 திருமுறை ஆசிரியர்கள்- பக். 123-124 காண்க.

தது அரிவைப் பருவமென்றும், மகப்பேருடைய நிலை தெரிவைப்பருவம் என்றும், காமநுகர்ச்சி தளரும் நிலை பேரிளம் பெண் என்றும் ஒருவாறு அவற்றின் இயல்பு களைக் கூறலாம்.[4]

உயிர்களெல்லாம் இறைவனுக்கு ஆட்பட்டவர்கள். ஆகவே இறைவனான நாயகன் உலாவர ஆருயிர்களாகிய நாயகியர் தத்தம் பக்குவத்திற்கேற்ப வெவ்வேறு நிலையில் காமுறுகின்றனர் என்ற தத்துவக்கருத்தும் உண்டு. இதன்படி அவசமுற்றவர் ஆடவரும் மகளிருமே. அங்க வருணனை முதலியன கூறியது உயிர்களைக் குறித்த புனைந்துரை என்று கொள்ள வேண்டும்.

இங்கு ஒரு நிலை கருதத்தக்கது. இறைவனை உலாப் பாடுவது எல்லாவகையாலும் பொருந்தும். இறைவன் மீது எல்லா மகளிரும் காதல் கொள்ளலாம்; கொண்டார் கள் என்று சொல்வது தமிழ் மக்கள் வாழ்க்கை மரபுக்கும் இலக்கிய மரபுக்கும் முரணல்ல[5]. இரண்டாவது அடியார் கள் ஆசாரியர்கள்; இவர்களும் இறைவனை யொத்தவர்கள். இவர்கள்மீது மகளிர் காமுற்றார்கள் என்று சொல்லும் போது[6] சொல் எப்படியிருப்பினும் பொருள் அருட்காதல் அல்லது ஞானக்காதல் ஆதலால், இதுவும் மரபுக்கு முரணல்ல. இறைவனே ஆசாரியனாக எழுந்தருள்கின்றான். அடியவர் வழிபாடு இறைவழிபாட்டினும் மேலானது என்ற கருத்துகள் நம் நாட்டில் எல்லாச் சமயத்திற்கும் பொது. ஆளுடைய பிள்ளையார் திருவுலா இவ்விரண்டா வது வகைக்கு உரியதாகும்.

---

4. டாக்டர் உ.வே.சா. திருக்கழுக்குன்றத்து உலா-முகவுரை.
5. 'திருப்பாவை' இறைவன்மீது மகளிர் காதல் உறுதலைக் கூறுவது.
6. 'திருவெம்பாவை' அடியார்கள்மீது மகளிர் காதல் கொள்வதாக உரைப்பது.

இனி, மூன்றாவது வகை ஒரு தலைவனைப் புகழ்ந்து பாடுவது. வரலாற்றில் ஒட்டக்கூத்தர் பாடிய மூவர் உலா முறையே விக்கிரமசோழன், குலோத்துங்க சோழன் இராசராசசோழன் ஆகிய மூன்று சோழர்மீதும் அடுத் தடுத்துப் பாடிய உலாக்களைக் கொண்டவை. இவை அர சனைப் பாடுபவை. இங்கு மரபுக்கு முரண் விளைந்திருக்கக் காண்கின்றோம். எல்லா மகளிரும் தெய்வத்தின்மீது காதல் கொள்ளலாம். ஓர் அரசன்மீது காதல் கொள்வது முறையன்று. ஒட்டக்கூத்தர் இவ்வாறு பாடியபிறகு காதல் கொள்ளும் பெண்கள் குலமகளிர் அல்லர் பொதுமகளிர் என்று சொல்லும் ஒரு சமாதானம் பிற்காலத்தில் எழுந்தது என்று கருதலாம்.

(1) தில்லை உலா[7]: நூல் முழுதும் இன்று கிடைக்க வில்லை. 244 கண்ணிகளே கிடைத்துள்ளன. இவை தொடக்கத்திலிருந்து அரிவைப் பருவத்தொடக்கம் 9 கண்ணிவரை. எஞ்சிய அரிவைப்பகுதி, தெரிவைப்பருவம், பேரிளம் பெண் பருவக் கண்ணிகள் ஆகியன கிடைக்க வில்லை. இப்பகுதியைப் பண்டிதர் உலகநாதப்பிள்ளை தஞ்சை சரசுவதிமகால் சுவடிநிலையத்தில் கிடைத்த அபூர்த்தியான ஓர் ஏட்டிலிருந்து பிரதி செய்து **'தமிழ்ப் பொழில்'** ஏட்டில் வெளியிட்டார். கிடைத்த இந்நூல் பகுதியானது, உலாப்பிரபந்தவரிசையில் மிகவும் சிறப்பான இடம் பெறுவதற்குரியது.

இந்நூல் **மூன்று** வகையில் சிறப்புடையது. **ஒன்று** இது ஆசிரியரின் இணையற்ற சிவபக்தியைக் காட்டுகின்றது. **இரண்டு**, சில வரலாற்று நிகழ்ச்சிகட்குச் சான்று பகர்கின்றது. **மூன்று**, சிறப்பான பண்டைய ஒழுகலாறுகள் பலவற்றை வேறெங்கும் காண்பதற்கு இல்லாதவை என்று எடுத்துக் காட்டுகின்றது. இவற்றைக் காண்போம்.

7. 12-ஆம் நூற்றாண்டு.

கிடைத்த நூற்பகுதியில் காப்புச் செய்யுள் இல்லை. முதல் அடியிலேயே சிவகாம சுந்தரியின் பெயர் வருகின்றது. அம்மையார் தாளமிட, பெருமான் தாண்டவமாடுவதை இருமுனிவரும் மாயனும் பிரமனும் கண்டு வணங்கி 'பல்லுயிருங்காண நடித்தருள்' என்று ஏத்த, பெருமான் தில்லைவனத்தில் நடித்தார். நூபுர ஒலிகேட்டு இமையோர் வந்து இறைஞ்சி, அஞ்செழுத்து எழுதிய கனக ஓடு அம்பலத்தில் வேய்ந்தார்கள்.

—தில்லை வனத்து
ஆனந்த நூபுரம் நின்று ஆர்க்கும் ஒலிகேட்டு

வானின் இமையோர்கள் வந்திறைஞ்சி—நான்மறையில்
ஆய்ந்த பொருளானஅஞ்செழுத்தைக் செங்கனகப்

பூந்தகடு தோறும் புறத்தெழுதி—மேய்ந்து
திசைவிளங்கு நாமத் திருவம் பலத்தே

இசைவிளங்க நின்றாடும் ஈசன். (5–8)

வேட்டைக்குச் சென்று பன்றியைத் துரத்தி வந்த அரசன் தில்லையை அடைந்ததும் பன்றியும் குதிரையும் தானும் பொன்னானமையைக் காண்கின்றான். ஊரின் பெருமை யைக் கண்ட அரசன் இங்கு மூவாயிரவரைக் கொண்டு வந்து குடியேற்றுகின்றான். ஒரு சமயம் அவர்களுள் ஒருவர் காணாமற்போகவே, பெருமான் தாமே தில்லை மூவாயிரவருள் ஒருவர் என்று காட்டுகின்றார். இப்பெரு மான் நால்வர் முதலாயினோர்க்குத் தம்பிரான். திருநீற்றி னொளி விளங்க சோழன் கண்ட திருநாளில் ஒரு நாள் சிவாகமப்படி பூசை பெற்று, எதிரம்பலத்தில் அம்பிகை யுடன் தங்கியிருந்து பின் பள்ளியுணர்ந்து, அணிகளும், மாலைகளும், புனைகின்றார். திருமாலும் சண்டேசரும் தேவரும் போற்ற, மூவாயிரவர் முதலியோர் துதிக்க, திருவோடு தண்டேறி மூன்று வாசலும் கடந்து

திருத்தேரேறு கின்றார். மாலோன், குபேரன், வேலன், வேதா, ஐங்கரன், மாரன்முதலியோர் தத்தம் ஊர்திகளுடன் உடன் வருகின்றனர். நால்வரும் முப்பத்து முக்கோடி தேவரும், விறன்மிண்டர் முதலிய நாற்பத்தெண்ணாயிரம் திருநீற்றுத் தொண்டர், சேரமான், வரகுணன் ஆகியோரும் வருகின்ற னர். திருநீற்றுச் சோழன் படிமமும் குதிரைமீது வருகின்றது. கண்டமகளிர் பெருமானைக் காமுற்று பலவாறாகப் புலம்புகின்றனர்.

இவ்வாறு சொல்லி முடித்துப் பின் ஆசிரியர் பேதை முதலான ஏழுபருவ மகளிரின் நிலையை வருணிக்கின்றார். பேதையின் வருணனையும் பெதும்பையின் வருணனையும் சிறப்பானவை. பெதும்பைப் பருவத்துக் கழங்காடலையும் மங்கைப்பருவத்துத் தசாங்கத்தையும் கூறுகின்றார். இதுவே இந்நூலின் மேம்போக்கான பொருளமைதி.

ஆசிரியர் தமது சிவபக்தியின் முதிர்ச்சியைப் பல இடங்களில் புலப்படுத்திச் செல்கின்றார். ஆலகால விடத்தைச் சிவபெருமான் உண்ண மனம் ஒருப்பட்ட தேவர் செயலைப் பொறுக்கலாற்றாது,

—ஆழிவாய்
ஒப்பற்ற வல்விடத்தை ஊட்ட மனமிசைந்த
முப்பத்து முக்கோடி மூர்க்கர்

என்கின்றார். சமயாச்சாரியர் நால்வரையும் மிக்க அழகாகப் போற்றுகின்றார். சம்பந்தர்-புகலிப்பிள்ளை, கவுணியன், பரசமய வாதுவென்ற பிள்ளை, திருமுத்தின் பந்தர்க்கீழ் வந்த பாலன்; அப்பர்-வாகீசர், வஞ்சனைகள் வென்றார்; சுந்தரர்-தூது சென்று வா என்ற தோழர், சேரன்தன் நண்பர்; சுந்தரர்க்குத் தன்னந்தனியாகத் தூது தாள் சிவக்கப் போனார்; மாணிக்கவாசகர்-கோதிலியாம் தென்னற்கு வாய்ந்த திருவாதவூரர், பாரிற் பெருவாழ்வை யெல்லாம் பெருந்துறையில் நீத்த திருவாசகப்புலவன்;

மூவர் உரைத்த தமிழ் என்பார். தில்லைவாழ்அந்தணரைப் பலமுறை குறிப்பிடுகின்றார். சண்டேசரைத் தந்தை இருதாள் துணித்த சைவத் தவமுனிஎன்பார். சேரமானை- ஆதியுலாச் சொன்ன நரபதி தெய்வஉலாச் சேரன் என்பார். வரகுணபாண்டியனை இரண்டிடங்களில் சிறப்பித்துக் கூறுகின்றார். காரைக்காலம்மையையும் குறிப்பிடுகின்றார்.

இந்த ஆசிரியர் சிறுத்தொண்டர் வரலற்றில் பெரிதும் ஈடுபட்டவர்.

—முடித்தொண்டன்
கொண்டிருந்த பாலகனைக் கூசாமல் கூறாக்கக்
கண்டிருந்த செங்கமலக் கண்மூன்றும்

என்றுபெதும்பை கழங்காடுமிடத்து மூன்று என்ற எண் ணுக்குரிய பொருளைக் கூறியவர், மீண்டும் மங்கைப் பரு வம் கூறுங்கால், மங்கையின் துயரம் அறியாதவர் என்று கூறும் தாயின் கூற்றாக அடியிற் கண்டவாறு பாடுவர்.

பைங்காட்டி லஞ்சப் பரிபுரம்நின் றோலமிடச்

செங்காட்டில் முன்போன சேவடியும்—முன்காட்டில்
மாதவம் செய்திருந்து வாழ்வா ரகத்திற் போய்ப்

பாதகம் செய்த பவளமும்—காதலித்துப்
பெற்றோர் பிடித்தரியும் பிள்ளைக்காற் பூச்சதங்கைச்

சிற்றோசைக் கேளாத் திருச்செவியும்—பெற்றோர்
சிறுசாந்து மென்குறங்கு செய்தார்க ளென்றும்

கறிகண்டு கூசாத கண்ணும்—பிறவிதனில்
பற்றினோர்க் கெல்லாம் படைக்கும் தலையிறைச்சி

பெற்றிலோ மென்னும் பெரும்பசியும் —சற்றிரங்கா
வன்னெஞ்ச மும்உடையான் வல்வினையேன் பெற்றெடுத்த

அன்னம் படுவ தறியீரோ—முன்னம்
அரிந்த மகவை அழைப்பித்தார் மீண்டும்

புரிந்து நகைசெய்து போனார் (196–202)

இங்ஙனமே மடந்தையை வருணிக்கும்போது சிவபிரான் பற்றிய செய்திகளை உவமையாக வைத்தே வருணிக்கின்றார். சங்கரன் சடாமுடிமேல் திங்கள் அனைய திருநுதலாள், புலியூர் போற்றலர் தம் நெஞ்சிலும் இருண்ட கார் குழலாள் என்கின்றார்.

கண்ணிகள்தோறும் இவ்வாறே பக்திச் சுவை ததும்புகின்ற கருத்துகளையும் சொல்தொடர்களையும் காண்கின்றோம். இவர் திருநீற்றினிடத்திலே அன்புமிக்கவர் என்பதைப் பல இடத்தும் காண்கின்றோம். சோழமன்னனின் பெயர்களில் பல இருக்க, திருநீற்றுச் சோழன் என்ற பெயரையே இவர் ஆளுகின்றார். விறல் மிண்டரைக் குறித்த இடத்தில் அடியார்களைத் திருநீற்றுத் தொண்டர் என்கின்றார். சீகாழியைக் குறிப்பிட எண்ணிய இவர்

—திருநீற்றின்
வென்றி விரும்பு மீனவர்கோன் நன்னாட்டில்
சென்றபுலவன் திருப்பதி

என்று பாடுகின்றார்.

அடுத்து, இந்நூலால் தெரியும் பல புதிய வழக்காறுகளும், ஒழுகலாறுகளும்; பெருமானை மன்றுடையான், ஆதிரையான் என்று கூறும் இவர் சில இடங்களில் ஊருடையான் என்று வேறு அடை எதுவுமின்றியே குறிப்பிடுகின்றார். ஊர் எனப்படுவ்து உறையூர் என்பது பழஞ்சொல்; இவருக்கு ஊர் புலியூராகிய தில்லையாயிற்று. உடன் வந்தோரைக் கூறுமிடத்து சம்பந்தர் முத்துப்பந்தர் நிழற்றவும், மற்ற மூவரும் பொற்றேர் மீதும் வந்தனர் என்று கூறுவர். திருநீற்றுச் சோழனை இரண்டு இடங்களில்

குறிப்பிடுகின்றார்; உடன் வந்தோரில் ஒருவனாகத் திருநீற்றுச்சோழனைக் குறிப்பிடுவார்; இங்கு சோழபடிவம் குதிரை வாகனத்தின்மீது எழுந்தருளுவிக்கப் பெற்றதென்று கருத வேண்டும். திருநீற்றுச் சோழன்- முதற்குலோத்துங்க சோழன். உடன் வந்தோருள் திருவேளைக்காரரைக் குறிப்பிடுகின்றார்; வேளைக்காரராவார், மெய்காப்பாளர்; தலைவனுக்குத் துன்பம் வருங்காலத்து உயிரையும் விடத் துணிந்தவர்கள். ஓரிடத்தில் விறல்மிண்ட நாயனாரைக் குறிப்பிடுகின்றார். இந்நாயனார் தேவராசிரிய மண்டபத்தி லிருந்த சிவனடியார்களை வணங்காது சென்ற சுந்தர மூர்த்தியைக் கண்ணுற்று "இவ்வாறு சென்றவன் தொண்ட னும் புறகு; அவனையாட்கொண்ட சிவபிரானும் புறகு' என்று கூறுவர்;

—தப்புரைக்கில்
நாதனையும் பின்னென்னும் நாற்பத்தொண் ணாயிரவர்
சோதித் திருநீற்றுத் தொண்டரும்

என்பார். இங்கு மண்டபத்திலிருந்தவர்கள் நாற்பத் தெண்ணாயிரவர் என்பது பெரிய புராணத்தில் காணாத புதுச்செய்தி. நாற்பத்தெண்ணாயிரம் இருடிகள் என ஒரு வழக்கு உண்டு.

இனி, முதற்பராந்தக சோழன் திருச்சிற்றம்பலத்தைப் பொன்வேய்ந்தான் என்று கூறும் இவ்வுலா ஆசிரியர், இமையோர் வந்து இறைஞ்சி வேதத்தின் பொருளான திருவைந்தெழுத்தையும் பொற்றகட்டிலே எழுதி அம்பலத்தே வேய்ந்தனர் என்று கூறுவர். 'தில்லைவனத்து நூபுரம் ஆர்க்கும் ஒலி கேட்டு இமையோர் அஞ் செழுத்தைச் செங்கனகப் பூந்தகடுதோறும் எழுதிப் புறத்து வேய்ந்தார்கள்' என்ற அடிகளால் இதனை அறியலாம். மற்றோரிடத்திலும் 'திருவைந்தெழுத்தால் சேணாடர்

பொன் வேய்ந்த சிற்றம்பலம்' என்று கூறுவர். இவ்வாறு இவர் குறிப்பிடுவது மிகவும் சிறப்பான ஒரு செய்தி.[8]

(2) மதுரைச் சொக்கநாதர் உலா.[9] இது புராணத் திருமலைநாதர் என்பாரால் செய்யப்பெற்றது. இது மதுரையில் எழுந்தருளியுள்ள சொக்கநாதப் பெருமான் பற்றிச் செய்யப்பெற்ற பிரபந்தம். இது **'மதுரை உலா'** என்றும் பெயர் பெறும். தனிப்பாடல்களாக மூன்று வெண்பாக்களும் *516* கண்ணிகள் கொண்ட கலிவெண்பாவும் உடையது.

ஆசிரியர்காலத்தில் பரஞ்சோதி திருவிளையாடல் எழவில்லை; நம்பி திருவிளையாடலே இருந்தது. அதையொட்டியே இவர்தம் நூற்செய்திகளை அமைத்துள்ளார். அமைத்தபோதிலும் சிலவரிசை முறைகள் மாறாக உள்ளன. இவர் *64* திருவிளையாடல்களையும் தம்நூலில் முறைப்படுத்திச் சொல்லி வருவது போற்றத்தக்கது.

முன்னோர் பாடிய உலா அமைப்பில் இவர் ஒரு மாறுதல் செய்துள்ளார். எல்லோரும் திருவிழாவில் ஒருநாள் பெருமான் உலாவர அன்றே ஏழுபருவ மகளிர் முறையேகண்டு காமுறுவதாகப் பாடுவர். இவரோ ஏழுநாள் ஏழுஊர்திகளில் பெருமான் உலாவந்தார். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பருவமகளிர் கண்டு காதலித்ததாகப் பாடுகின்றார். கூறப்பெற்ற பிற பொருள்கள் தசாங்கம், சிற்றில், பாவை, கழங்கு, ஊசல், கிளிவிடுதூது, யாழ், புனலாட்டு, பொழில் விளையாட்டு என்பன.

ஆசிரியருடைய சிவபக்தியும் சமயாசாரியரிடத்தும் நாயன்மாரிடத்தும் உள்ள ஈடுபாடும் பிறதலங்களில் உள்ள

---

8. இந்த உலாவின் காலம் குலோத்துங்கன் காலத்திலும் (கி.பி. 1150) அல்லது சற்றுப் பிற்பட்டுக்கூட இருக்கலாம்.
9. 16-ஆம் நூற்றாண்டு.

பக்தியும் தமிழன்பும் பண்டைய நிகழ்ச்சிகளைப் போற்றும் பண்பாடும் நூலெங்கும் காணலாம். திருமுறைகண்ட செய்தியையும், சம்பந்தர். மாணிக்கவாசகர் வரலாறுகளை விரிவாகக் குறிப்பிடுவதையும் காணலாம். சைவசமயப் பொருள்களை நன்கு தெரிந்து சொல்லுகின்றார். சரபமூர்த்தியைக் குறிப்பிடுவது ஒரு சிறப்பான செய்தி. இவரே சரபப் புராணமும் பாடியவர். எங்கும் சொல்லழகு பொருந்தவே பாடவல்லவர்.

—கறைகமழும்
வான்பாயும் சோலை வயற்செந்நெல் கன்னலுக்குத்
தேன்பாயும் பாண்டித் திருநாடன்—தான்பாடல்

தங்கு மறையோனது சங்கத் தமிழோசை
பொங்கு மதுரா புரிவேந்தன்

என்ற கண்ணிகள் இவர் பாடலுக்கு எடுத்துக்காட்டாகச் சொல்லத்தக்கவை. 'சைவ சௌராதி சண்டாந்த அர்ச்சனைகள்' என்று கூறுவது இவரது சிவபூசையறிவைப் புலப்படுத்தும். ஆய்ந்து சொல்லுமிடத்து இவ்வுலா மிகச் சிறந்த உலாப்பிரபந்தங்களுள் ஒன்று என்பது தெளிவாகப் புலப்படும்.

**நூற்பொருளமைப்பு:** மதுரைச் சொக்கநாதப் பெருமான் பூசை ஏற்று ஆபரணம் அணிந்து திருத்தேரில் ஏறி சைவ சமயாசாரியர் முதலியோர் சூழ்ந்துவர வீதியில் உலாவருகின்றார். மகளிர் அவருடைய திருமேனியழகில் ஈடுபட்டு மயங்குகின்றனர். தொடக்கத்தில் தசாங்கம் சொல்லப் பெற்றுள்ளது.

**பேதை:** முதல்நாள் தாய்மார் செல்லத் தானும் உடன் சென்று தரிசிக்கின்றாள். பெருமான் கையிலேந்திய மான் முதலியவற்றைக் கண்டு தன்னோடு விளையாட வந்தார் என்று எண்ணுகின்றாள். அவருடைய திருத்தேர்மீது தன்னையும் ஏற்ற வேண்டுமென்று வேண்டுகின்றாள்.

எழுகடல் அழைத்தது முதல் **எட்டுத்** திருவிளையாடல்கள் இப்பகுதியில் கூறப்பெற்றுள்ளன.

**பெதும்பை** இரண்டாம் நாள் வெள்ளையானைமீது வரும் பெருமானைக் கண்டு ஏழுகடலில் தீர்த்தத்தில் நீராடியபின் தரிசிக்கின்றான். விருப்பம் உண்டாகின்றது. அணிகள் முதலியன கழல்கின்றன. இப்பருவத்தில் ஆசிரியர் மாணிக்கம் விற்றது முதலான **எட்டுத்** திருவிளையாடல் களைக் கூறுகின்றார்.

**மங்கை:** மூன்றாம் நாள் குதிரைமீது பவனிவரும் பெருமான்மீது மால்கொண்டு சிந்தை இளைக்கின்றாள். இங்கு பழியஞ்சியது முதல் **எட்டுத்** திருவிளையாடல் களைக் கூறுவதுடன் குயில் கிளி முதலியனவும் இங்குச் சொல்லப்பெறுகின்றன.

மடந்தைப் பருவம் அடுத்தது. நாலாம் நாள் பெருமாள் இடபவாகனத்தில் வருகின்றார் என்று இவள் தூதுவிட்ட கிளிவந்து இவளுக்கு உரைக்கின்றது. இவள் சென்று பலவாறு போற்ற, ஐயன் திருப்பார்வை ஈந்தருளகின்றான் இவளும் சிந்தை களிகூர்ந்து மீளுகின்றாள். இங்கு அட்டமா சித்தி உபதேசித்தது முதல் **எட்டு** திருவிளையாடல்கள் தெரிவிக்கப் பெறுகின்றன.

**அரிவை:** ஐந்தாம் நாள் தரும தேவதையாகிய மழவிடை மீது வரும் பெருமானை மால்கொண்டு தொழுகின்றாள். இங்கு விறகு விற்றது முதல் **எட்டுத்** திருவிளையாடல்களை எடுத்துரைக்கின்றார்.

**தெரிவை:** ஆறாம் நாள் கற்பகத்தரு விமானத்தில் வரும் பெருமானைக் கண்டுவணங்கி அவனருள் பெறுகின்றாள். திருவாலவாயானது முதல் **எட்டுத்** திருவிளையாடல்கள் ஈண்டு இயம்பப்பெறுகின்றன.

*பேரிளம் பெண்: ஏழாம் நாள் இந்திர விமானத்தில் வரும் இறைவனைக் கண்டு தொழுகின்றாள். இங்கு வலை வீசியது முதல் எட்டுத் திருவிளையாடல்கள் எடுத்தோதப் பெறுகின்றன.*

*தோத்திரச் சிறப்பைச் சொல்லுமிடத்து,*

—கொற்றமறை

தண்டமிழும் வாசகமும் சங்கத் தமிழமுதம்
கண்டும் திருவிசையும் மந்திரமும்—தொண்டர்

அருள்விரித்த சேக்கிழார் ஆன்ற தமிழ்ப்பாடல்
திருவிருத்தச் செய்யுட் சிறப்பும்—இரு மருங்கும்

பொங்க

*என்கின்றார் சொற்களை மடக்கிச் சொல்லும் இவருடைய ஆற்றலை,*

—வைகைஎதிர்

ஏடேற்றித் தென்னவனை ஈடேற்றி வெஞ்சமணக்
காடேற்ற மேறக்கழுவேற்றி—நீடேற்றம்

தானேற்ற புத்தன் தலையி லிடியேற்றும்
கானேற்ற பாடற் கவுணியனும்—

*என்ற அடிகளில் காணலாம்.*

*உலாவின் முற்பகுதி முன்னிலை என்றும், மகளிரைக் கூறும் பகுதி பின்னிலை என்றும் பெயர் பெறும். முன்னிலைப்பகுதியில் இத்திரன் பழி தீர்த்தது முதல் மூன்று திருவிளையாடல்களையும், தடாதகைப் பிராட்டியார் திருவவதாரம் முதல் ஐந்து திருவிளையாடல்களையும் கூறுகின்றார்.*

*அடியிற்காணும் மூன்று பாடல்களும் உலாப்பதிப்பில் சிறப்புப் பாயிரமாக அச்சிடப் பெற்றுள்ளன. முதல் பாடல் ஆசிரியரையும் நூற்பெயரையும் கூறுவது.*

சீரார் புராணத் திருமலைநா தன்கருணைப்
பாராளன் மெய்ஞ்ஞானப் பால்விளங்க–ஆராய்ந்து
வேதக் குலாவால் விரித்தால வாய்ச்சொக்க
நாதர்க் குலாப்பாடி னான்.

*இரண்டாவது பாடல் முழைசை வீரமாறன் காலத்தில் இவ்வுலா செய்யப்பெற்றதென்று இயம்புகின்றது.*

வேதநூல் தென்முழைசை வீரமா றன்கடல்சூழ்
பூதலங்கள்அன்பாய்ப் புரக்குநாள்–ஆதி நெறித்
தெய்வ மதுரைத் திருவால வாயுறைந்த
ஐயருலாக் கொண்டரு ளினார்.

*மூன்றாம் பாடல் பொதுவான வாழ்த்தாக அமைகின்றது.*

வாழி மறைவாழி மன்னன் புகழ்வாழி
வாழி மதுரைநகர் வாழி–வாழியே
தண்ணளிகூர் வைகைத் தமிழ்நாடு வாழியே
கண்ணுதலோன் சைவாக மம்.

*இந்த நூலின் பதிப்பு உ.வே.சா. அய்யருடையது. அவர் குறிப்புரையுடன் வெளிவந்துள்ளது. (1931)*

*(3) **காளத்தி நாதர் உலா**[10]: இது கவிராசபிள்ளை என்பவரால் செய்யப்பெற்றது. இவர் விரைந்து கவிபாடும் வேந்தர். இத்தகைய புலவர் பலரினும் மேம்பட்டவர். இது பற்றியே இவர் '**கவிராசர்**' என்ற விருதுபெற்றார். இவர் காளத்தியில் சிறிதுகாலம் வாழ்ந்திருந்போது அத்தலத்தில் வாழ்ந்த வேங்கடராய முதலியார் (செங்குந்தர் மரபினர் என்ற வள்ளலால் போற்றப்பெற்று '**காளத்தி நாதர் உலா**' பாடினார் என்பது அறியப் பெறுகின்றது.*

10. 16-ஆம் நூற்றாண்டு.

***நூல்:*** *இது காப்பு வெண்பா ஒன்றும் 578 கண்ணிகளும் கொண்டது. இதன் பெயர்* ***'காளத்தியாள்வார் உலா'*** *என்றும் ஏடுகளில் காணப்பெறுகின்றது. நூல் இறுதியில் அடியிற் காணும் வெண்பா ஒன்று ஏடுகளில் காணப் பெறுகின்றது.*

பாவையர்கள் மாலேறப் பஞ்சசரன் போரேறத்
தேவர் கரங்கள் சிரமேற—யாவும்
கருதுபொருள் தென்கயிலைக் கல்லா லடியில்
ஒருதலைவன் வந்தான் உலா.

*மிகச் சிறந்த உலாக்களில் இதுவும் ஒன்று. தமிழ் கற்போர் தொடக்கத்தில் இந்நூலைக் கற்பாராயின் பெரும்பயன் அடைவர்.*

*இந்த நூலில் சொல்லணிகளும் பொருளணிகளும் மிகவும் அதிகம். எங்கு எடுத்தாலும் மடக்கும் சிலேடையு மாக இருக்கும். பொருள் செய்வதில் கடினமின்றி எளிதாகவே இருக்கும். தமிழ் மொழியின் நயத்தையும் வளத்தையும் இதில் மிகுதியாகக் காணமுடியும். நான்கு பதிகளின் சிறப்பைச் சிவபெருமான் உமாதேவிக்கு உரைக்கின்றார்.*

ஆயிரத்தெட் டுண்டு பதிஆய்ந் தவற்றெடுத்த
நாயகமாம் பதிகள் நான்கவற்றுள் —நீ நம்மைக்

கூடிவிளையாடுவது கோலவட காசியிலே
ஆடல் புரிவதுபொன் னம்பலத்தே—நீடுமுது

குன்றிற் குலாவல் குடும்பத்துடன் இருக்கை
தென்றிக் கயிலையிலே சேயிளையாய
(தென்கயிலை—காளத்தி)

*திருவேங்கடமலைமேல் இரண்டு யோசனை தொலை வில் நின்று தன்னை மால் தொழுகின்றார் என்று*

குறிப்பிடுவர். இப்படியே திருக்காளத்திப் புராணமும் செப்புகின்றது. பஞ்சபூதத் தலங்களையும் குறிப்பிடுகின்றார்.

ஆரூரி லேபுவியாய் ஆனைக்கா விற்புனலாய்ச்
சீரூர் அருணையிலே செந்தீயாய்–பேரூரும்
ஏகாம் பரத்தில் இயங்கொலியாய்த் தன்னூரில்
ஆகாய மாய்நிற்கும் ஆடலான்.

*(ஒலி-காற்று, வாயுத்தலம் காளத்தி என்பது ஒரு மரபு)*

*தொடக்கத்தில் இப்பகுதி ஆற்றூர் வளநாடு. இங்கு விக்கிரம சோழன், குலோத்துங்க சோழன், இராஜேந்திர சோழன் ஆகிய சோழர் மூவர் திருப்பணி செய்தமையால் இது மும்முடிச் சோழபுரம் என்று ஆயிற்று. வரகுண பாண்டியன் வழிபட்டான் என்ற செய்தியைச் சொல் கிறார். இப்படியே சொல்லணியாகப் பல செய்திகளை முறைப்படுத்திச் சொல்கிறார். கால அளவைப் பெயர் களான அணு, துடி, கலை, காட்டை, கணம், மாத்திரை, எல்லை, கடிகை, நண்பகல், காலை, உச்சி, இரவு, அந்தி, திதி, வாரம் நட்சத்திரம், யோகம், கரணம் ஆகிய பஞ்சாங்கம், ஓரை, மாதம் உலா வருடம், உகம், கற்பம், சங்காரம் என்ற பெயர்களைத் தொனியால் அமைத்துச் சொல்கிறார். மேடம் முதலான பன்னிரண்டு இராசிகளையும் இவ்வாறு அமைத்துச் சொல்லுகிறார்.*

*பின்னர் பெருமானுடைய வருணனையைச் சொல்லும்போது பன்னிரண்டு தலப்பெயர்களைச் சிலேடையாகவும் மடக்காகவும் அமைக்கிறார். இடையே பருத்தியால் செய்த பொருள்களான பச்சை, வடம், கலை, மேற்கட்டி, சிறுபாகை, அணைபாகு, சட்டை, கச்சு, பவந்தம், துப்பட்டி, துண்டம், கோவணம், போர்வை, வேட்டி என்ற பெயர்களை அமைக்கின்றார்.*

பேதைப் பருவ வருணனையில் நீரின் தொடர்புடைய கடல் கழிநீர், ஏரி நீர்க்குளம், கால்வாய், துரவுக் கிணறு, நீர்வற்றாத் தடாகம், மடு, கேணி, வாடவி, ஆறு, அகல், ஊற்று ஓடை என்ற பெயர்கள் தொனிக்குமாறு அமைத்துள்ளார். அடுத்து இவை போல கரும்பின் தொடர்புடைய பெயர்களான வயல், ஆலையாடல், அல்லாலை, கோது, காது என்பன. பின்னர் இப்படியே மடந்தையின் வடிவை வருணிக்கும் இடத்தில் 19 தலப் பெயர்களைச் சொல்லணியாக அமைக்கிறார். பெருமான் உலாவுக்கு எழுந்தருளும்போது வருகின்ற குழாங்களின் தொகுதியை விரிவாக விளக்கிச் செல்லுகிறார்.

பேதைப் பருவம் மிகவும் விரிவாக உள்ளது. பெதும்பைப் பருவத்தில் அவள் கழங்காடுவது சொல்லப் பெறுகின்றது. ஏழு எண்களுக்கும் பொருத்தமான ஏழுபொருள்கள் சொல்லப்பெறுகின்றன. எல்லோரும் மிகவும் விரிக்கின்ற மங்கைப் பருவத்தை இவர் சுருக்கமாகவே சொல்லுகின்றார்.

—கோதையே!
வண்டிலங்கு மேனியிலே வாழும் மடவரலைக்
கண்டிலையோ நெஞ்சம் கரந்தாயோ—பண்டுநீ

கற்றகலை யெல்லாம் கழன்ற கலையுடனே
அற்றவோ? நின்னை அவர்கொண்டால்—உற்றணைக்க

மாமியார் உண்டோ? மலையில் பெருநீலி
யாமவருளுஞ் சக்களத்தி ஆகாளோ—காமிக்கை

தோற்சேலைக் கோபிச்சைச் சோற்றுக்கோ, ஓட்டுக்கோ,
மேற்சாம்பற்கோ, சுடலைவீட்டிற்கோ,—நாற்சந்தி,

அம்பலத்துக்கோ, எலும்பின் ஆபரணம் பூணுகைக்கோ,
வெம்பணி மாலைக்கோ, பேய்வேலைக்கோ—சம்பந்தம்

நல்லிடத்திற் சோதித்தாய்! நம்போலி யருக்கும்
இல்லறத்திற்கு இத்தனையும் ஏற்குமோ?—அல்லதுமிவ்

வாண்டார் ஒருவர்க்கு அகப்படு வரோ?

*மங்கைப் பருவத்தில் இரு செய்திகள் சிறப்பாய்க் குறிப்பிடத்தக்கன. ஒன்று மங்கை அம்மானையாடுதல்; 'அம்மானை' என்ற சொல் பல பொருள்களில் வருமாறு ஏழுமுறை அமைந்திருப்பது சுவையுடையது:*

—வேள்வியிலே
தன்னைமறந் தாட்டுத் தலையசைத்த அம்மானை
அன்னைதனை ஈன்றமலை அம்மானை—முன்னைநாள்

கொங்கையொரு மூன்றுடைய கொம்பையரு ளம்மானை
அங்கையிலே வீற்றிருக்கும் அம்மானைக்—கங்கெயனும்

அம்மானைப் பெற்றசடை அம்மானைப் பாடியவள்
அம்மானை யாடும் அளவிலே (346–9)

*மற்றது, பெருமானைக்கண்டு காமுற்றமங்கை தாதியரை நோக்கி 'இவர் தமியேனை ஆள்வாரோ?' என்று கேட்கவும், அவர்கள் 'இந்தச் சம்பந்தம் ஆகாது' என்று அறிவுறுத்தும் பகுதி பின்னும் சுவையுடையது.*

—கோதையே,
வண்டிலங்கு மேனியிலே வாழும் மடவரலைக்
கண்டிலையோ, நெஞ்சம் கரந்தாயோ பண்டுநீ

கற்றகலை யெல்லாம் கழன்ற கலையுடனே
அற்றனவோ? நின்னை அவர்கொண்டால்—உற்றணைக்க

மாமியார் உண்டோ? மலையிற் பெருநீலி
யாமவளும் சக்களத்தி யாகாளோ—காமிக்கை

தோற்சேலைக்கோ, பிச்சைச் சோற்றுக்கோ, ஒட்டுக்கோ
மேற்சாம்பற் பூச்சுக்கோ, சுடலை வீட்டிற்கோ—நாற்சந்தி

அம்பலத்துக் கோஎலும்பி னாபரணம் பூணுகைக்கோ
வெம்பணிமா லைக்கோ பேய்வேலைக்கோ?—சம்மந்தம்

நல்லிடத்திற் சோதித்தாய், நம்போலியர் இருக்கும்
இல்லறத்துக் கித்தனையும் ஏற்குமோ?

என்று சொல்லி ஆரூரில் செங்கமல மங்கைக்கும், மதுரையில் வலைச்சேரி மங்கைக்கும், கமலையிலே கொங்கை தழுவக் குழையன்புள்ள மங்கைக்கும், காளத்தியில் சகல கலை மங்கைக்கும் மதுரையில் பாண்டிவள மங்கைக்கும் அருளிய அன்பைக் காட்டி 'நீயும் அவர்களைப்போல மாதவத்தைச் செய்' என்று தேற்றுகின்றனர்.

அடுத்த மடந்தைப் பருவத்தில் அவள் கனவில் பெருமான் வரக்கண்டு அவரோடு பேசுகின்றாள். இது வாக்குவாதம் போலச் சிலேடையில் அமைந்துள்ளது; சுவைமிக்க இதைத் தோழியரிடம் சொல்லிக் கொண்டிருக்கும் நேரம் பெருமான் வீதியிலே வருகின்றார். அடுத்த பருவத்தில் அரிவையின் வருணனை மிகவும் சிறப்புடையது. தெரிவைப் பருவத்தில் அவள் 'கயிலையார்க்குத் தூது போய்ச் சொல்' என்று வசந்தன், கோகிலம், மதனன் முதலியோரைக் கேட்க, அவர்கள் அஞ்சி மறுக்கின்றனர். அந்தநேரம் பெருமான் உலாவரக் காண்கிறாள். பேரிளம் பெண் பருவத்தில் தசாங்கம் கூறுகின்றார். தசாங்கத்தில், திருநீலகண்டராணையான் என்று சொல்கிறார். பெரிய புராண சரித்திரத்தைக் கருதி விரையாக்கலி என்பது சிவபெருமான் ஆணை என்று பலநூல்களில் சொல்லப் பெற்றிருக்கும். இங்கு மூங்கை கவி கொண்டான். (முகஸ்துதி) என்று குறிப்பிடுகின்றார்.

கச்சபாலயத்தை பலமுறை குறிப்பிடுகின்றார். இது பாடல் பெற்ற தலமன்று. இதனிடத்து இவருக்கு ஈடுபாடு அதிகம் என்பது தெரிகின்றது. கொக்கினிறகே தாரன் என்ற இடத்து கொக்கிறகு ஒரு மலர் என்றே குறிப்பிடுவது

காணத்தக்கது. கொக்காகிய புள்ளின் சிறகு என்பார் கூற்றுப் பொருந்தாது என்று விளங்குகின்றது.

**திருக்காளத்தி நாதர்** உலா மிகச் சிறந்த சொல்லமைப் புடையது. ஆசிரியருக்குச் சொல்லும் பொருளும் புராணச் செய்திகளும் தலச்சிறப்புகளும் 'நான், நான்' என்று முந்திவந்து ஏவல் புரிகின்றன. சொல்லும் பொருளும் அணியும் சேர்ந்து துள்ளிக் குதித்து ஆடி எக்காளமிட்டுக் குழைந்து தவழ்ந்து வருவதைக் கண்ணிதோறும் கண்டு மகிழ்கின்றோம். தமிழ்மொழியின் ஆற்றலைப் பிற்காலச் சிறுநூல்களில் பலவற்றுள்ளும் இந்நூல் மிகவும் நன்றாக எடுத்துக் காட்டுகின்றது. நூலை ஒருமுறை பயின்றாலும் மீண்டும் மீண்டும் தன்னிடத்து ஈர்க்கும் தன்மையுடையது. நூலாசிரியரைக் 'கவிராசர்' என்று பிற்காலத்தார் சிறப்பித்ததில் வியப்பில்லை.

*(4)* **வாட்போக்கி நாதர் உலா**[11]: இந்நூல் **இரத்தினகிரி உலா** எனவும் வழங்கும். திருவாட் போக்கி ஒரு பாடல் பெற்ற தலம். இரத்தினகிரி, மரகதாசலம், மாணிக்கம் மலை என்ற பெயர்களையும் உடையது. இம்மலை சிவபெருமான் எழுந்தருளியுள்ள மலைகளில் மிகவும் உயர்ந்தது என்றும், காகம் அணுகாத மலை என்றும் வழங்குவது. நல்ல படிகள் அமைந்த மலையாயினும் ஏறுவது எளிதன்று. மலையுச்சியில் அழகான பெரிய கோயில் உள்ளது.

வாட்போக்கி என்ற ஊரிலிருந்த வேலாயுதன் என்ற பெயருடைய வள்ளல் விரும்பியவாறு கவிராசபிள்ளை என்ற புலவர் இவ்வுலாவைப் பாடியதாக வரலாறு.

இவ்வுலாவின் தொடக்கத்தில் ஒரு காப்பு வெண்பாவும், 408 கண்ணிகளும், இறுதியில் ஒரு வாழ்த்து வெண்பாவும் உடையது. சிவாயநகர் என்று இத்தலம் சொல்லப்

11. 16-ஆம் நூற்றாண்டு.

படுகின்றது. சிவமந்திரவடிவாய் மலை அமைந்தபடியால் சிவாயம் எனப்பட்டது என்று புராணம் கூறும்.

பொதுவாக இவ்வுலா காளத்திநாதர் உலா அளவு சிறப்புடையதாக இல்லை. அதனை அடியொற்றியே இதையும் செய்துள்ளார். அமைப்பிலோ பொருளிலோ மாற்றம் காணப்பெறவில்லை.

திருநீலகண்டச் சோழன் இங்குத் திருப்பணிகள் செய்ததாகக் குறிப்பு நூலில் உள்ளது. தலச்சிறப்புப் பகுதியில் தசாங்கம் சொல்கிறார். காகம் அணுகாக் கனகிரி; அஞ்செழுத்தாணை. தமிழ் மாதப் பெயர்கள் தொனியால் அமையுமாறு பாடுகின்றார். வாத்தியங்கள் பலவற்றை இரண்டு கண்ணிகளால் கூறுகின்றார். உடன் வந்தோருள் பின்கண்டவர் சொல்லப்பெற்றுள்ளனர்.

—எந்தை
பரவைமனைக் கேகப் பரவுதமிழ் வேந்தன்
மரபு தனிலுதித்து வந்ததே—குருவடிவு

கொண்டு சிவாயநகர்க் கோயி லிடத்துறையும்
பண்டிதராம் வாட்போக்கிப் பண்டிதரும்—எண்டிசைமேல்

செல்லும் புகழசேர் தியாகவிநோ தக்குருவும்
சொல்லும் பழைய சுருதியுணர்—வல்லமையான்

மண்டலஞ்சேர் மாணிக்க வாசகநற் றேசிகரும்
முண்டகநேர் தட்சிணா மூர்த்தியெனும்—பண்டிதரும்

பேரான கீர்த்திப் பெரியோர்பக் கம்பையனும்
சீரான செங்கோல் செலுத்திவரப்—பாரோரும்

வண்டாரு மாதவரும் வேலாயுத முகிலும்.

இங்கு வாட்போக்கி பண்டிதர், தியாக விநோதக்குரு, மாணிக்கவாச தேசிகர், தட்சிணாமூர்த்தி, பண்டிதர்ப் பக்கம்பையன், வேலாயுதம் இவர்களைக் குறித்து எந்த

வரலாறும் தெரியவில்லை. இவர்கள் கவிராசர் பிள்ளை காலத்து அங்கு வாழ்ந்தவர்களாக இருக்கலாம். இவர்கள் வேண்டுகோளுக்கிணங்கியே இவ்வுலா பாடினார் போலும்.

இங்கு பெதும்பைப் பருவ வருணனை சிறப்பாக அமைந்துள்ளது. இங்கும் இவள் ஒன்று முதல் ஏழுவரையில் சொல்லிக் கழங்காடுகின்றாள். பெருமான் உலாவரக் கண்டு சொல்வன அங்குப் போலவே உள்ளன; மங்கை அம்மானை ஆடுகின்றாள்; ஏழுஅம்மானை சொல்லப் பெறுகின்றது; பல மங்கையரைப் பற்றிய குறிப்பு அங் குள்ளது போலவே இங்கும் உள்ளது. கேதாரி மங்கைக்கு மயல் அகற்றினார், பூவாலேதினம் பரவி வாழ்த்திய கன்றாப்பூர் மங்கைக்குச் செவி தாழ்ந்திருந்தார் என்று தோழியர் கூறுகின்றனர்.

மடந்தைப் பருவ வருணனை சிறப்புடையது. தெரிவை யாழ் வாசிக்கின்றாள். அப்போது பெருமான் உலா வருகின்றார். முடித்தழும்பர் என்று சொல்லுமிடத்து எட்டுத்தழும்பரைக் கூறுகின்றார். 'பண்ணுதமிழ்ச் சங்கத்தோன் வேண்டச் சீரத்தையேயுதவித்-துங்கத்தி யாகி[12] எனத் தோன்றும் உமக்கு' என்கின்றார். இதைக் காளத்திநாதர் உலாவிலும் 'அந்தாதி கீரனருளத் திருமேனி இந்தா தியாகமெனத் தந்தோன்' என்கின்றார். நக்கீரரிடத்து இவ்வாசிரியருக்கு மிக்க ஈடுபாடு என்பதைச் சேயூர் முருகன் உலாவிலும் காணலாம்.

சீகாளத்திப் புராணம் நக்கீரச் சருக்கத்தில், கயிலை காண்பதற்குப் பதிலாகத் தென்கயிலையாகிய திருக்காளத் தியைக் கண்டு கயிலைபாதி அந்தாதி காளத்தி பாதி அந்தாதி பாடியதற்கு மகிழ்ந்து, பெருமான் அவருக்கிருந்த

12. இப்பகுதி வரலாறு விளங்கவில்லை என்பது சோம சுந்தரதேசிகர் குறிப்பு.

நோய் நீக்கி நல்ல மேனி தந்தமையை இப்பகுதி குறிப்பிடுகின்றது. பேரிளம்பெண் பருவத்தில் கூடல் இழைத்தல் சொல்லப்பெறுகின்றது. அவளைச் 'சிற்றின்பமெல்லாம் பேரின்ப மாக்கும் பெருமிதத்தாள்' என்கின்றார்.

**ஆரிய மன்னன் வரலாறு:** இங்கு ஆரிய மன்னன் வரலாறு சிறப்புடையது. ஒரு சமயம் இவனுடைய மணிமுடி மறைந்து போகிறது. இங்குப்போய்ப் பெற்றுக் கொள்ளுமாறு பெருமான் கனவில் உணர்த்துகின்றார். அவனும் அவ்வாறே இங்கு வருகின்றான். இங்குப் பெருமான் ஒரு வேதியராகத் தோன்றி ஒரு கொப்பறையைக் காட்டி 'இதைக் காவிரி நீரால் நிரப்பினால் மணிமுடி கிடைக்கும்' என்கின்றான்; மலையடிவாரத்திலிருந்து காவிரி ஐந்து மைல் தொலைவிலுள்ளது. அவ்வாறே அவன் சென்று ஆயிரம் குடம் கொண்டு வருகின்றான். ஆனால் ஆயிரத்தைக் கணக்கிட்டுக் கொண்டிருந்த வேதியர் இது தொள்ளாயிரம், மிச்சம் நூறும் பொசிவாசிக்காகத் தள்ளுபடி'[13] என்கின்றார்.

அதற்கும் பணிந்து அரசன் மீண்டும் நூறுகுடம் கொண்டு வருகின்றான். இதில்பத்து பொசிவாசி என்கிறார் வேதியர். அவன் மீண்டும் பத்து கொணர்கின்றான். அதில் ஒன்று பொசிவாசி என்கின்றார். அவன் ஒன்று கொண்டுவரவும் அதில் உழக்குப் பொசிவாசி அதையும் கொண்டு வரப்பணிக்கின்றார். இவ்வளவு பொறுத்த அரசனுக்கு இப்போது கோபம் வந்துவிடுகின்றது. வாளை உருவி வேதியரை வெட்டுகின்றான். அவ்வெட்டைப் பெற்ற வேதியர் மறைந்து வாட்போக்கி நாதராக இடபாரூடராய் அரசனுக்குக் காட்சி தருகின்றார். வேதியர் மண்டை

13. பொசிவாசி- மண்குடத்தில் நீர்கசிவதாகக் கழிக்கப்படும் வட்டம். பொசிதல்-கசிதல்; வாசி-வட்டம். 'வாசிதீரவே காசு நல்குவீர்' என்ற சம்பந்தர் பாடல் காண்க.

பிளந்தது, இறைவனுக்கும் முடியில் தழும்பாய் உள்ளது. இதனால் அவருக்கு **'முடித்தழும்பர்'**[14] என்ற திருநாமமும், தலத்திற்கு **'வாட்போக்கி'** என்ற திருப்பெயரும் அமைகின்றன. முடித்தழும்பன், பொசிவாசி என்ற தொடர்கள் உலாவிலும் பலமுறை பயில்கின்றன.

*(5)* **சேயூர் முருகன் உலா15:** கவிராசபிள்ளை பாடிய இரண்டாவது உலா இது. இவ்வுலா அச்சேறவில்லை. இதன் காகிதப்படி திருவான்மியூர் உ.வே.சா.அய்யர் நூல் நிலையத்தில் உள்ளது.

இவ்வுலா **செய்யூர் உலா, சேயூர் கந்தர் உலா** எனவும் வழங்கும். தொடக்கத்தில் காப்பு வெண்பா ஒன்றும், இறுதியில் இருவெண்பாக்களையும் உடையது. நூல் 513 கண்ணிகளை உடையது. காளத்திநாதர் உலாவில் சொல்லிய இயல்புகள் அனைத்தையும் இங்குக் காணலாம். அசுரரை வென்று, சேயாகிய முருகன் வந்து தங்கிய காரணத்தால் ஊர் சேயூர் (செய்யூர்) ஆயிற்று. எனினும் நூல் முழுமையிலும் செய்யூர் என்றே வருகின்றது.

**நூல் செய்திகள்:** முன்னிலைப் பகுதியில் தொண்டைமான் வரலாறு சொல்லப்பெறுகின்றது. இது மணிமேகலையில் காணப்பெறும் வரலாற்றோடு ஒத்துள்ளது. சேட (நாகலோக) ராசன் மகள் பீலிவளை. அவ்வுலகு (கீழ்உலகு) விட்டு மேலே காவிரிப்பூம்பட்டினம் வந்து விளையாடி மலர் கொய்து பின் தன் உலகு சேர்வாளை வளவன்கண்டு பின்சென்று, 'நீர்வார்த்துக் தருக' என்று சேடனைக் கேட்க, அவள் அவ்வாறே தருகின்றாள். பின்னர் அவள் தொண்டைமானை ஈன்றாள். தொண்டைமாலை புனைந்தமையால் தொண்டைமான். அவன் நாகலோகத்தில் தன் மாமனிடத்தே வளர்ந்தான். ஒருநாள் அவன் தாமரை

14. முடித்தழும்பை இன்றும் காணலாம்.
15. 16-ஆம் நூற்றாண்டு.

நாளத்தைப் பிடித்தேறி மேலுலகு வந்து ஒரு மரத்தில் தன் பரியைக் கட்டிவிட்டு விளையாடக் கண்டு அவன் தந்தை இன்னான் என்று அறிந்து தங்கள் கிளைக்கரசு ஆக்கினான். இச்செய்தி மணிமேகலையன்றி வேறெந்த நூலிலும் காணப்பெறவில்லை. இவ்வாசிரியர் தம் காலத்தில் மணிமேகலையைப் பயின்றிருக்க வேண்டும்; அல்லது இவர் சூழ்நிலையில் இப்பீலிவளை வரலாறு புகழ் பெற்று வழங்கியிருக்க வேண்டும் என்று நாம் கருதலாம். இவ்வாறு கிளைக்கரசு ஆக்கப்பெற்ற குமரனே இளந்திரையன்; இவனே பல்லவ குலத்துக்கு மூலம் என்ற வரலாறும் தமிழில் சொல்லப்பெறுவதுண்டு.

பின் ஆசிரியர் செய்யூர், பிறையூர் நாடு, பொன்னூர் செம்பூர்க்கோட்டம் என்கின்றார். பலநாட்டுப் பெயர் களைக் குறிப்பிடுகின்றார். மலையாளன், கங்கன், செங்க லிங்கன், வங்கன், லாடன், கொங்கன், துளுவன் ஒட்டியன், சிங்களவன், கன்னாடகத்தான், கூர்ச்சரத்தான், வடுகன் என. வழக்கம்போல் பல வண்ணங்களில் மடக்கு அமைக்கின்றார். முருகன் தலங்களாக செந்தில், தணிகை, பரங்குன்றம், ஆவினன்குடி, அலைவாய், செய்யூர் என்பன வற்றைக் குறிப்பிடுகின்றார். தம் உலாவோசையையும் பெருமான் கேட்கின்றான் என்பதை,

> —முற்றத்தில்
> ஓடிவரும் தென்ற லுடனே உலாவோசை
> நீடி வரஉகந்து நின்றருளி

என்ற கண்ணியால் சுட்டுகின்றார். உடன்வருவோரும் அவரவர்கள் ஊர்திகளும் விரிவாய் சொல்லப் பெறுகின் றன. சைவமுத்தமிழை ஓதினோன் (சம்பந்தர்), வாகீசர், பரவைகேள்வன், மாணிக்கச்சொற்பாவலன் அருணகிரி நாதன் ஆகியோரும் உடன் வருகின்றனர். ஓதுவார் மூவர் தமிழும் முழங்கு திருவாசகமும் கோவை திருப்புகழும் ஓதுகின்றனர்.

*முருகன் வருகையைக் கூறும்போது பலசாதிப் பெயர்கள் அவனுக்குரியனவாக சிலேடையில் சொல்லு கின்றார். செட்டி, குறவன், தட்டான், மலைமான், கன்னான், பார்ப்பான், நத்தமன், வலையன், பிள்ளை, முத்தரையன், அகம்படியன், உடையன், வண்ணான்- எத்தலத்துச் சாதிக்கு மேலான் என்று.*

*பேதை ஒன்று முதல் ஏழுவரை என்று சொல்லிக் கழங்கு ஆடுகின்றாள். பெதும்பைப் பருவத்தில் பன்னிரு இராசிப் யெர்களையும் சிலேடையில் சொல்கிறார். மடந்தைப் பருவத்தில், பெருமானுடன் இவள் உரையாட லைச் சிலேடையில் செப்புகின்றார். காலாயுதக் கொடி யோன் (காலாயுதம்-கோழி) என்கின்றார். இத்தொடரைப் பிற்காலத்தில் சுப்பிரதீபக்கவிராயர்.*

காலா யுதக்கொடியோன் கையா யுதவிழியாள்
மாலாயுத மீன்ற மாமணியாய்த் தானு திர்த்தாள்.

*என்று அமைத்திருக்கக் காணலாம்.*

*அரிவையைக் கேசாதி பாதமாக வருணிக்கின்றார். இவருக்குத் திருமுருகாற்றுப்படையில் ஈடுபாடு மிகுதி என்பதைப் பின்காட்டப்பெறும் வெண்பாவினாலும், இங்கு*

தொடையிற் செறிகீரன் சொன்ன முருகாற்றின்
நடையிற் சிறந்த நடையான்

*என்ற கண்ணியாலும் அறியலாம். தெரிவைப் பருவத்தில் சங்கப்பலகை, நக்கீரர், திருப்புகழ் என்ற பொருள்களை மறுபடியும் கூறுகின்றார். முருகனுக்குத் தசாங்கம் செப்பு கின்றார். தணிகைப் பொருப்பு, பாலாறு, தொண்டைநாடு, செய்யூர், கடம்பந்தார், பச்சைநிறத் தோகைப்பரி, அயிராவதம், யானை, கோழிக் கொடி, திசையெல்லாம் முற்றி முழங்கும் முரசு;*

—சந்திரனும்
பானுநா ராயணனும் பங்கயனும் சங்கரனும்
ஆனதலை மேற்சுமக்கும் ஆணையான்.

*அமணை முருகப் பிறந்த நீ என்கின்றார். இறுதியில் 'சைவர் உளம் உருகப் போந்தான் உலா' என்று இவ்வாசிரியர் அமைத்திருப்பது வேறெங்கும் எந்த உலாவினும் காணப் பெறாத அருமைப்பாடுடையது. அடுத்த நூற்றாண்டில் இவ்வூருக்குப் பிள்ளைத் தமிழ்பாடிய அந்தகக் கவி வீரராகவர்தம் பிள்ளைத் தமிழ் அம்புலிப் பருவத்தில்.*

கவிராசன் இப்பிரான் மிசைசெய்த திருவுலாக்
கவிவெள்ளை கற்றுருகலாம்

*என்று ஆசிரியர் பெயரையும் சொல்லி அருமையாகப் போற்றியுரைப்பது கண்டு மகிழத்தக்கது.*

*சைவசமயத்தைச் சார்ந்த உலாக்களில் மேலும் குறிப் பிடத்தக்கவை அந்தகக்கவி வீரராகவ முதலியார் வரைந்த திருக்கழுக்குன்றத்து உலா, திருப்பாலைப்பந்தல் உலா போன்ற பல இலக்கிய உலாக்கள் உள்ளன.*

## 2. அந்தாதிப் பிரபந்தங்கள்

*அந்தாதி-அந்தத்தைஆதியாக உடையது. முன்நின்ற செய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்து வரும் செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது; இங்ஙனம் பாடும் நூலினது ஈற்றுச் செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமைய வைத்தல் மண்டலித்தல் எனப்படும்.*

*இஸ்லாமியர் படையெடுத்து வந்து மதுரையை அழித்த போது அங்கிருந்த பாண்டியர் தெற்கு நோக்கி பல கிளைகளாகப் பிரிந்து கொற்கை, கரிவலம் வந்த நல்லூர் தென்காசி முதலான இடங்களில் சிறுசிறு நிலப்பகுதிகளை*

ஆண்டு வந்தனர். திருக்கருவையில்[16] ஆட்சி புரிந்த சடையவர்மன் பராக்கிரம பாண்டியனுக்கு (கி.பி. 1543-88) இருமக்கள்- ஒருவர் வரகுணராமர், மற்றொருவர் வரதுங்க ராமர். முன்னவர் முடிசூடவில்லை (வாயுசங்கிதை, இலிங்க புராணம் பாடியவர்). வரதுங்கராமர் கரிவலம் வந்த நல்லூரில் ஆட்சி புரிந்த காலத்தில் அத்தலத்துப் பெருமானிடம் பக்தி பூண்டு வாழ்ந்தவர். இவர் ஈசான முனிவர் என்ற சிவாச்சாரியரிடம் தீட்சை பெற்று சிவபக்தி மிக்கவராய் வாழ்ந்த காலத்தில் பிரமோத்தர காண்டம் (புராணம்), திருக்கருவை கலித்துறை அந்தாதி, திருக்கருவை வெண்பா அந்தாதி ஆகியவை பாடினார்.[17]

இவர் காசி அரசர் மகள் சிவகாம சுந்தரியை மணந்து கொண்டார் இவர் பிறந்தநாள் அசுவனி. இருவருக்கும் மகப்பேறு இல்லை. இவர் பின்னர் பரணி முதல் இரேவதி நாள் ஈறாக இருபத்தாறு மங்கையரை மணந்தார். காமநூல் விதிப்படி அவர்களைச் சுகித்திருந்தார்.[18]

(1) **திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி:** மூன்றிலும் முதன்மையானது- யாப்பு வேறுபாட்டால் பத்துவகை யான செய்யுள் விகற்பத்தால் பத்துப் பத்தாகத் தொடர்ந்து நூறு பாடல்களால் ஆன அந்தாதி. இந்நூல் ஓர் அந்தாதிப் பிரபந்த விகற்பம். திருவாசகத்திலுள்ள திருச்சதகம் இத்தகைய பிரபந்தமே.

இந்நூல் காப்புச்செய்யுட்களும் உடையன. இது நெடுங்காலமாகச் சைவமக்கள் விரும்பிப்பயிலும் சிறந்த தோத்திர நூல். இதன் பக்திச்சுவையின் சிறப்புகாரணமாக

---

16. கரிவலம் வந்த நல்லூர்-கருவை என மருவி வழங்கியது.
17. கருவை இறைவனின் பெயர்கள் பால்வண்ண நாதர் முகலிங்கர்; அம்பிகை ஒப்பனையாள். தலவிருட்சம், களா.
18. இளமைக்காலத்தில் 'கொக்கோகம் என்ற காமநூலை மொழிபெயர்த்தார்; இஃது இவர்தம் அநுபவ நூலாகும்.

இதனை ஆன்றோர் '**குட்டித்திருவாசகம்**' என்று கூறி வந்தனர் என்றால் அதற்கு மேல் இதுபற்றிப் பேசுவது. மிகை. பக்தி வெள்ளம் இச்சிறுநூலில் ஊற்றெடுத்துப் பொங்கி வழிவதுபோல் பிற்காலத்தில் வேறு எந்த நூலிலும் காண்பது அரிது. சாத்திரக்கருத்துகள் நூலெங்கும் சிறந்து காணப்பெறும். பாடல்களைப் பயிலப்பயில நாவினிக்கும்; பக்தி கசியும்; தமிழ் வளம் படிப்போரை ஈர்த்துச் சமய அறிவைச் சிறக்கச் செய்யும். எடுத்துக்காட்டாக அடியிற் கண்ட பாடல்கள் இக்கருத்துகளை மெய்ப்பிக்கும்.

கண்ட கண்கள் புனல் பாயக்
 களிப்பால் உள்ளம் கரையழிய,
விண்ட மொழியும் நாக்குழற,
 விம்மி மேனி மயிர்பொடிப்ப,
பண்டை வளம்போய் பரவசமாய்ச்
 பரமா னந்தத் தெளிநறவம்
உண்டு தெவிட்டா அருள்புரிந்தான்,
 கருவை வாழும் உறவோனே.

தோன்றியபோ துடன்தோன்றித்
 தோன்றாது மறைத்தென்னை
ஆன்றசெழுஞ் செம்பிலுறை
 களிம்புபோல் அகலாமல்
ஊன்றுமலத் துகளகற்றி
 உன்னருளும் பெறுவேனோ?
மூன்றுலகும் தொழுதேத்தும்
 முகலிங்கா! முதற்பொருளே!

சிந்தனை உனக்குத் தந்தேன்,
 திருவருள் எனக்குத் தந்தாய்,
வந்தனை உனக்குத் தந்தேன்
 மலரடி எனக்குத் தந்தாய்
பைந்துணர் உனக்குத் தந்தேன்
 பரகதி எனக்குத் தந்தாய்,

கந்தனைப்பயந்த நாதா,
கருவையி லிருக்குந் தேவே. (63)

*அந்தாதியில் ஆறாம்பத்து நயம்பொருந்திய சந்தப் பாடல்கள் அமைந்தது. எடுத்துக் காட்டுகள்:*

உருவாகி நிற்றி; அருவாகி நிற்றி
உயிரோடு வைக்கும் உறவாய்
மருவாகி நிற்றி; மலராகி நிற்றி;
மறையாகி நிற்றி; மறையின்
பொருளாகி நிற்றி; உனையான்அு றிந்து
புகழ்கின்ற வாறும் அறியேன்
கருவா புரிக்குள் உறைதேவ தேவ!
கதியேதுஎ னக்கு மொழியே (52)

உன்நாமம் ஓதி உனையேவ ணங்கி
உறுபூசை பேணும் உரவோர்
பொன்னாடுஅ ளிக்க வரம்தங்கும் ஆதி
புனித! க ளாவல் உறையோய்!
முன்னேஉ னக்குயான் அடியானும் அல்லன்;
முழுஞானி அல்லன் எளியேன்;
என்னேபி ழைத்த பிழைகோடி உள்ள
எனினும்பு ரத்தல் க்டனே (58)

*இறுதிப் பத்துப்பாடல்கள் 'போற்றி'யாக அமைக்கப் பெற்றுள்ளன. அவற்றில் ஒரு பாடல்:*

ஐய னே! சரண் போற்றி என்னையாள்
அப்ப னே!சரண் போற்றி! பொய்யிலா
மெய்ய னே!சரண் போற்றி! வானவா
வேந்த னே!சரண் போற்றி! மான்மழுக்
கைய னே!சரண் போற்றி! காலனைக்
காய்ந்தவா!சரண் போற்றி! நீநிறச்
செய்ய னேசரண் போற்றி! காமனைச்
செற்ற வா!சரண் போற்றி!தேவனே! (97)

*தாம் அவனை நினைந்து உருகிக் கனிந்த பாடல் செய்யும் ஆற்றல் அடையுமாறு அவன் அருள் பாலித்ததையும் குறிப்பிடுகின்றார்.*

முன்னைப் பிறவித் தவப்பயனோ?
முழுதும் அறியா மூடனிவன்
என்னக் கருத்தில் எண்ணியோ?
யாதோ அறியேன், இரவுபகல்
கன்னல் பாகில் கோல்தேனில்
களியில் கனிந்த கவிபாட
அன்னத் தொகுதி வயற்கருவை
யாண்டான் என்னை ஆண்டதுவே(6)

*இதைக் குட்டித் திருவாசகம் என்ற கூற்று முழுமையும் பொருந்துவதே என்று இதன் ஒவ்வொரு பாட்டாலும் நன்கு உணர முடிகின்றது. முதல் பத்துதான் மிகவும் சிறப்பும் உருக்கமும் உடையது என்று நாம் சொல்ல முற்பட்டால் அடுத்த பத்துகள் இதனிலும் சுவையில் விஞ்சி நிற்பதைக் காண்கின்றோம். இறைவனுடைய பெருந்தகுதியையும், தகுதியற்ற தமக்கு எளிவந்த அவனுடைய எளிமையையும் இவர் திருவாசகத்திற் போல விரித்து உரைத்து உரைத்து வருகின்றார். இவர் அரசர் என்பதையும் நாம் நினைவில் வைக்க வேண்டும். சமயதத்துவக் கருத்துகளையும் ஆங்காங்கு செம்மையுறப் புலப்படுத்திச் செல்லுகின்றார்:*

எவன்உயிருக்குயிரா எள்ளும் எண்ணெயும் போல
எங்கணும் இடையறா, நின்றான்,
எவன்அனைத் துலகும் ஈன்றுகாத் தழிக்க
இறைமைசால் மூவுரு எடுத்தான்,
எவன்முத லிடைவீ றின்றிஎஞ் ஞான்றும்
ஈறிலா மறைமுடி யிருப்பான்
அவன்எதைப் புரக்கத் திருக்களா நீழல்
அமர்ந்தருள் புரிந்தகார ணனே.[19]

---

19. நம்மாழ்வார் திருவாய்மொழியின் ‘உயர்வற உயர்நலம்’ (1.1:1) என்ற பாசுரத்தின் கருத்தைத் தழுவியது.

என்னை யாள்பவன் என்னு ளிருப்பவன்
தன்னை யான்தொழத் தண்ணளி தந்தவன்
பொன்னை யாளும் புயன்தொழ நின்றவன்
கன்னி பாகன் கருவைக் கிறைவனே.

உணராத நின்னிலையை
நீயுணர்த்த உணர்ந்ததற்பின்
புணராத தாடலையில்
புணர்ந்ததெனப் புகழோங்கத்
தணவாமல் எனையுனக்குத்
தந்துருகி இரண்டற்றேன்
பணராசச் சிலம்பணிந்த
பழமறைஎம் பெருமானே.

*இறைவன்பால் பத்தியே வேண்டும், வேறு போகங்கள் வேண்டா, முத்திகூட வேண்டா என்று பத்தர் பாடுவதைக் காண்கின்றோம். இவரும் சொல்கின்றார்.*

உத்தி வாளரா முடித்தபால்
வண்ணனே யுனது
பத்தி வேண்டுவ தன்றியே
நரகிடைப் படினும்
முத்தி வேண்டிலேன் துறக்கமும்
வேண்டிலேன், முனிவர்
சித்தி வேண்டிலேன், வேண்டினேன்
திசாதிபர் சிறப்பே.

சிறக்கத் தக்கது கருவையான்
திருவடி நேயம்;
மறக்கத் தக்கது மற்றுள
சமயத்தின் மயக்கம்;
துறக்கத் தக்கது இவ்வுடம்பை
யானென்றுறு தொடர்பு;

பிறக்கத் தக்கது சிவானந்த
வாரியின் பெருக்கே.

*இறுதிப் பத்தாகிய போற்றி என்ற பத்து திருச்சதகத்தில் இதே போல மாணிக்கவாசகர் பாடியுள்ள போற்றிப்பத்தை ஒத்தே உள்ளது. திருச்தகமும் ஒரு பதிற்றுப்பத்தந்தாதி. இரண்டையும் வைத்து ஒப்பு நோக்கும்போது வரதுங்க ராமர் தமக்கு அத்திருச்சதகத்தையே மூலமாய்க் கொண்டா ரென்று சொல்லத் தோன்றுகின்றது.*

*இனி, மற்ற இரண்டு அந்தாதிகளையும் ஒருசேரவைத்து நோக்கும்போது, இவ்வந்தாதி விருத்தப்பாக்களில் இயன் றுள்ளமையால் பெரிதும் இசைக்கு இடம் கொடுக்கின்றது. இவ்விசைத் தன்மையைக் கலந்து கலந்து இவ்வந்தாதியைப் பின்னும் உருக்கமும் குழைவும் உடைத்தாய்ச் செய்துள்ளது என்பதையும் அறிய முடிகின்றது.*

***(2) திருக்கருவை கலித்துறை அந்தாதி:*** *இப்பனுவல் விநாயகர் காப்பும் நூறு கட்டளைக் கலித்துறைகளும் உடையது. நூலைப் பயிலும்போது பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப்பொங்கித் ததும்புவதைப் பாடல் தோறும் பார்க்கலாம். அடியிற்காண்பன சில எடுத்துக் காட்டுகள்.*

வாழ்த்திட நாவுண்டு, பாவிக்க
நீயுண்டு, மண்ணிலுறத்
தாழ்ந்திடச் சென்னியு முண்டுகண்
டாய்,தண் கனவின்மலர்
ஊழ்ந்திட கீழலுறைவார் அடியுண்
டுஉனை நிரயம்
வீழ்ந்திடு வாருமுண் டோ,நெஞ்ச
மே,என் மெலிவதுவே?

வழுத்துதல் போற்றல் வணங்கல்
குழைதல்மகிழ்தல் நெஞ்சிற்

பழுத்தஅன் புற்றுப் பலகால்
உருகுதல் பாவனைபோய்
முழுத்தஇன் பக்கடல் மூழ்கிக்
களித்தல், முகலிங்கன்தாள்
அழுத்தஎன் சென்னி கொடுத்தபின்
பெற்ற ததிசயமே.

கருத்தறு மாயை இருளுக்குத்
தீபம்; கழிபிறவி
பெருத்தெழு நோவுக்கு அமிர்த
சஞ்சிவினி, பேதித்துள்ளம்
வருத்திடு துன்பத் திரைவா
ரிதிக்கு வடவை,மன்றத்
தருத்திபின் ஆடும் கருவைப்
பிரான்திரு அஞ்செழுத்தே.

பாடுவ துன்திரு நாமங்கள்;
நாடொறும் பத்திசெய்து
சூடுவ துன்பொற் றிருவடித்
தாமரை, தொண்டுசெய்து
கூடுவ துன்னடி யார்திருக்
கூட்டம்,அக் கூட்டத்துடன்
ஆடுவ துன்னிலை காண்கரு
வாபுரி நாயகனே.

*இவ்வந்தாதியை இவர்தம் இளமை கழிந்த பின் பாடினார் என்று கருத ஒரு பாடல் இடந்தருகின்றது.*

புகுவது மூப்பு வனப்போ
டிளமையும் போயது,இனி
மிகுவது நோயும் தருமென்
றால்,அடன் மேவலரூர்
நகுவதன் முன்னெரித் தோர்கள
வீசரை நாம்பணியத்

தகுவது காண்நெஞ்சமே,இது
போலுஞ் சதுரில்லையே.

*கனவில் வந்து தேனிகனாய் ஆண்டு அருள் செய்த பெருமான், தனது புகழைப் பாடுவதற்கேற்ற புலமையும் அளித்துத் தொண்டு கொண்டான் என்று குறிப்பிடு கின்றார்.*

தேசிக னாகக் கனவில்வந்
தாண்டருள் செய்தவட
காசியன், எங்கள் கருவைப்
பிரான்,கவைக் கோட்டுவிடை
வாசியன், ஒப்பனை பாகன்என்
றேத்திஎன் வாய்திறந்து
பேசிய போதுள்ளம் ஆனந்த
வாரி, பெருகியதே.

அல்லும் பகலும் ஒழியாது
தம்புகழ் ஆதரித்துச்
சொல்லும் படிக்குக் கவிநா
வளித்தென்னைத் தொண்டுகொண்டார்
வல்லும் குழைமுலை யொப்பனை
பாகர், வரிசிலையாக்
கல்லும் குழைத்த புயத்தர்
களாநிழல் கண்ணுதலே

*வரதுங்கராமர் தம்பி அதிவீரராமபாண்டியர் செய்த நைடதத்தைப் பார்த்து, 'நம்தம்பியும் மற்றோர் மண்ணுல கின் மன்னனைப் பாடுவதா? என்று இரங்கிப் பாடி யுள்ளார். மூவர் தமிழ் மாலையைக் குறிப்பிட்டு அப்பாடல் சாத்திய இடத்துத் தாம் பாடல் சாத்துவது, பஞ்சகாக்களின் நாண்மலர் புனைபவர் எருக்கம்பூவுச் சூடுவதுபோல என்கின்றார் (42).*

ஏத்திய மூவர் தமிழ்மாலை
சாத்தும் இணையடிக்கென்
நாத்தரும் புன்சொற் றொடைபுனை
வாய்ச்செம்பொ னாட்டிலைந்து
காத்தரு நாண்மலர் சூடும்
புரிசடைக் காட்டெருக்கம்
பூத்தரு மாலை புனைகள
ஈச புராந்தகனே.

*'வேலன் கவியை அன்பால் கல்லாதவர், கூற்றன் விடுங்கயிற்றால் கழுத்தில் சுருக்கிட்டு இழுக்குமன்றோ கவிகற்கின்றது' என்று அருணகிரிநாதர் கந்தரலங்காரத்தில் வினவுகின்றார்.*

அழுக்கற்ற நெஞ்சிலும் பொன்னம்ப
லத்தும் அமர்ந்துநின்ற
முழுக்கற்றை யஞ்சடி லக்கள
ஈசனை முன்னியன்பு
பழுக்கத் திருத்தொண்டு செய்யார்கள்
கால படர்நரகுக்
கிழுக்கக் கழுத்திற் கயிறிடும்
போதுமற் றென்செய்வரே.

*எல்லாம் இறைவன் செயல் என்று உணராதவர்கள் நன்மை வந்தால் தாம் என்றும் தீமைவந்தால் விதி என்றும் கருதுகின்றனர்.*

தளர்வுவந் தெய்தின் விதியினை
நோவர், தழைக்குஞ்செல்வக்
கிளர்வுவந் தெய்தில் தமைத்தாம்
புகழ்வர்; கிளைத்தபசுந்
துளவுவந் தோனும் முளர்வந்
தோனும் துதித்துநிற்பக்

களவந் தோன்செய்த கற்பனை
ஈதென்று காண்கிலரே.

என்செய லாவது யாதொன்று
மில்லைமற் றியான்புரிதல்
நின்செய லாக நினைவளித்
தாய்,உன்னில் நீக்கமற்றேன்
புன்செயல் ஈதென்றும் நன்செயல்
ஈதென்றும் புந்திசெய்யேன்
உன்செயல் யாவும் என்றே
கருவேச உளந்தெளிந்தே

*ஐயாறன் அடித்தலம் தொழுவேர்க்குப் பொன்னுல காள ஏணிப்படி நெறியிட்டுக் கொடுக்கும் என்றுஅப்பர் சுவாமிகள் பாடுகின்றார். அப்பாடலும் இது:*

பேணித் தொழுமவர் பொன்னுள
காளப் பிறங்கருளால்
ஏணிப் படிநெறி யிட்டுக்கொடுத்
திமையோர் முடிமேல்
மாணிக் கம்ஒத்து மரகதம்போன்று
வயிரம் மன்னி
ஆணிக் கனகமும் ஒக்கும்
ஐயாறன் அடித்தலமே (4.92:16)

*இப்பாடலை எடுத்து நம் அரசர் களவீசர் பொற்பாதங் களுக்கேற்றிச் சொல்கின்றார்.*

விண்ணிடு வில்லும் புனன்மேல்
குமிழியும் மின்னுமென்ன
மண்ணிடைத் தோன்றி யழியுமிக்
காயத்தை மாய்விலதென்
றெண்ணிடும் எண்ணம் தவிர்த்தழி
யாமுத்தி யேறுதற்குப்

பண்ணிடும் ஏணிகண் டீர்,கள
ஈசர்பொற் பாதங்களே

முத்திக் கொருவித்துமோகா
டவிக்கு முழங்குசெந்தீ,
சித்தக் கவலைப் பிணிக்கோர்
மருந்து, சிவதவஞ்சேர்
புத்திக் கொடிக்குப் படரும் கொழு
கொம்புபோலும் கண்டீர்
துத்திப் பணியணி யுங்கள
ஈசர் துணையடியே.

*(3) திருகருவை வெண்பா அந்தாதி*[20]*: இப்பிரபந்தம் காப்பும் நூறு நேரிசை வெண்பாக்களும் உடையது. முந்தியது போன்றே பக்திச் சுவையும் சொற்சுவையும் தொடை நயமும் சிறக்கப் பொருந்தியது. எடுத்துக்காட்டாகச் சிலவற்றை ஈண்டுத் தருவோம்.*

என்னெஞ்சில் வைத்தற் கினியதவம் யாதுசெய்தேன்!
பொன்னஞ் சிலையாற் புரமெரித்த—முன்னவனே,
அன்னம் பயில்கருவை யானே அரவுதொழப்
பொன்னம் பலத்தாடும் பூ (5)

சிவகருமஞ் செய்யார், திருநீறு சாத்தார்;
தவநிலையாஞ் சைவநெறி சாரார்—அவனிதனிற்
கான்பரந்த பச்சைக் களாநிழலைக் கைதொழார்
ஏன்பிறந்தார் மானிடராய் இன்று (18)

பேறுபெற்றேன், வாழ்ந்தேன் பிறவிக் கினியஞ்சேன்,
ஆறுபெற்ற வேணியனுக் காட்பட்டேன்,—நூறுவட்டம்
சிந்தித்தேன் தெய்வத் திருக்களவைக் கைகூப்பி
வந்தித்தேன், தீர்ந்தேன் மயல் (27)

---

20. இதன் ஆசிரியர் அதிவீரராம பாண்டியர் என்று வை. மு.கோ. அவர்கள் பதிப்பித்துள்ளார்கள் (1930). இது தவறு.

*இங்கும் இவர் களவீசர் தம்மைக் கவிபாடச் செய்ததைக் குறிப்பிட்டுப் பாடுகின்றார்:*

சேணிற் கொடிநுடங்கும் தென்கருவை அம்மானே
கோணைப் பறையணியும் கோமானே—பேணித்
தொடுக்கும் கவிதைத் தொழும்பனுக்கு வந்த
இடுக்கண் களையாத தென்?

நன்கவிரு ணாகவியன் நாவளித்து நாடோறும்
தன்கழலே பாடும் தரமளித்தான்—நன்கவைத்த
சூலத்தான், தென்பொதியத் தொல்லோன் தொழுதமணக்
கோலத்தான், தென்கருவைக் கோ **(37)**

*யாக்கை நிலையாமையை இரண்டு பாடல்களில் நன்கு தெளிவாக்குகின்றார்.*

உயிரிறந்த பொய்க்காட்டை உற்றார் எடுத்து
வயிரவிற கில்தீ மடுத்தும்—பெயரழியச்
சுட்டுநீ றாக்குமுனம் சொல்வீர் கருவைமன்றில்
நட்டவிடும் காலின் நலம் **(72)**

தாரம் மனைமட்டும், தனையறிந்தோர் ஊர்மட்டும்,
சேரும்உறவு அவ்வூர்த் தெருமட்டும்—சார்வதன்றி
நங்கருவை யானென்ற நல்வினைபோல் செல்கதியின்
எங்குமுத வாரே இவர் **(74)**

*பெருமான் திருவுருவத்தை ஒரு பாடலில் படம் பிடித்துக் காட்டுகின்றார்.*

இமைப்பொழுதும் நீங்கா திருகண்ணும் நெஞ்சும்
கறைக்களமும் செஞ்சடிலக் காடும்—பிறைக்கொழுந்தும்
புண்டரிக வாண்முகமும் பூங்களவின் நீழலோன்
ஒண்தரளப் புன்மூர லும்.

*இவ்வந்தாதியில் 'பவுரி' என்ற சொல் பலமுறை பயின் றுள்ளது. வெறும் கல்வியினால் பயனில்லை என்று பேசும் ஒரு பாடல்.*

சென்றது காலம், சிதைந்தது இளமைநலம்
நின்றதுசா வென்று நினைந்துருகி—மன்றில்
நடிக்கின்ற பால்வண்ணன் நாமமெண்ணா மாந்தர்
படிக்கின்ற நூலெல்லாம் பாழ்.

வரதுங்கராமனது கவிதையையும் பக்தி விசேடத்தையும் அக்காலத்தோரே நன்கு உணர்ந்திருந்தனர். இவர் அவையில் புலவர் பலர் இருந்தனர் என்பது உண்மை. ஒருவர் பாராட்டிய பாடல் இது.

பூணித் திலத்துப் புயவீர
மாறன் புகல்கவிக்கு
நாணிப் புலவர்செல் லாதென்செய்
வார்இந்த நானிலத்தே
ஆணிக் கனகம் மணந்தரிற்
பூமணம்யார் கொள்ளுவார்?
மாணிக்கந் தித்திக்கில் என்னாகும்
மற்றை மதுரங்களே.

வீரமாறன்-வீரபாண்டியன் என்று பெயர் புனைந்திருந்தவர் வரதுங்கராமர்; பட்டம் எய்தும் முன் இவர் பெயர்கள் அழகிய சொக்கனார், அபிராமன், வரதுங்கராமன், அபிராம சுந்தரேசுவரன்; பட்டமெய்திய பின் வீரமாறன், அபிடேக வீரபாண்டியன். மங்களங்கள் பாடிய காசிக்கலியன் கவிராயரே இப்பாடல் பாடியிருத்தல் கூடும்.

இங்ஙனமாக இம்மூன்று அந்தாதிகளும் ஓர் அரசர், குடும்பம் பாடித்தந்தமை சைவ உலகுக்குக் கிடைகத்தற்கரிய ஒருபக்திக் கருவூலம். ஏழாம் நூற்றாண்டில் சம்பந்தர் தொடங்கிப் பக்திப் பாடல்கள் இடையறாது தமிழ் மொழியை வளப்படுத்தி வந்துள்ளன என்பதற்கு இவையும் ஒரு சான்றாக அமைகின்றன.

**(4) திருஅருணை அந்தாதி:** அருணைக்குப் பல அந்தாதிப் பிரபந்தங்கள் உள்ளன. அவற்றுள் இது காலத்தால் முந்தியது. கட்டளைக் கலித்துறைப் பாடலால் இயன்றது. இது திரிபந்தாதியாகும். இத்திரிபு முயன்று பிரித்துப் பொருள் செய்யுமாறு இன்றி எளிதில் பொருள் விளங்கும் தன்மையிலுள்ளது. காப்புச் செய்யுள் இரண்டும் 100 பாடல்களும் உடையது. தலச்சிறப்புப் பொருந்த அந்தாதி என்ற சொல்லின் பொருளை வைத்து இவர் நயமாக முதற்பாடல் பாடியுள்ளார்.

செந்தா தியம்நெறி சோணா
சலதரைச் செந்தமிழின்
அந்தா தியமனைச் செற்றோர்க்கும்
கோசல நாடுவிட்டுத்
தந்தாதியில் வனம்புக் காரும்
வேதச் சதுமுகரும்
அந்தாதி கண்டிலா யானோ
அந்தாதி அறைகுவனே?

துதிப்பாடலுக்கு எடுத்துக்காட்டாக வருவது இது.

தொழவாரும் மானிடர்கள் நாகேழையும்
தூர்க்கும் வண்ணம்
முழவாரும் கோயில் வலம்செய்
வாரும் முதன்மடக்கே
உழவாரும் அங்குஅவர் மங்கை
நல்லாரும் ஒதுக்கிமுத்தை
எழவாரும் செந்நெல் வயல்கு
ணேசரை யேற்றரையே (19)

சித்தம் இழுக்குறத் தீமையுறார்,
பெருஞ்செல் வமறார்,
முத்தமி ழுக்கு முதன்மையு
மாகுவர், முண்டகப்பூங்

கொத்த மிழுக்கு வரக்கனி,
    யூரல் குளிர்நதிபாய்
நத்தமி ழுக்கு மயலரு
    ணேசரை நத்தினரே (32)

அருணா சலம்பதிய யாயுறை
    வாசுர வாபரணர்,
அருணா சலநிதி யேமுதல்
    ஈறுங் கலையுமில்லாத்
தருணா சலஞ்சல மும்மயி
    ராவதத் தந்தமும்போல்
மருணா சலங்கொழு தாரருக்
    காதருள் மாதருக்கே (40)

*(5) **அருணகிரி அந்தாதி:** குகை நமசிவாயர் திருவண்ணாமலையில் ஒருசித்தராக மலைக்குகையில் இருந்தவர். அவருக்கு ஒரு சீடர். குரு அவருக்கு 'நமசிவாயம்' என்று திருநாமம் இட்டார். அவர் காலமும் 16–ஆம் நூற்றாண்டின் இறுதி பகுதி. இவர் பாடியது **அருணகிரி அந்தாதி**.*

*இந்நூல் காப்பும், நூறு வெண்பாக்களும் கொண்டது. பக்திச் சுவை மிக்கது. தாம் குகையில் சென்று திரித்தையும் ஒரு பாடலில் குறிப்பிடுவர்.*

என்றும் அருணேசன் இருபதத்தை நம்பாதார்
குன்றில் வனத்தில் குகையதனில்–சென்று
திரிந்தேன், பலமருந்து தின்று சிலகாலம்
இருந்தேன், இராமல்இருந் தேன்.

*அன்னமிடல் வேண்டும என்பதைப் பலமுறை வற்புறுத்துகின்றார். சாகாவரம் பற்றி இருபாடல்களில் குறிப்பு உள்ளது; சாகாவரம் என்று தருவாய்-அக்கமாலை கொண்டு நாவார ஐந்தெழுத்தை எண்ணினால், சாகாவரம்*

*பெறலாம். இங்கெல்லாம் இவர் கருத்து, உயிர்மீண்டும் பிறப்பெடுக்காது சிவபெருமானது திருவளிலேயே தோய்ந்து பேரானந்தம் பெறலாம் என்பதேயாகும். இந்தப் பூதவுடல் சாகாமற் காப்பாற்றுவது என்பதல்ல எனத் தெரிகின்றது.*

*சிவபெருமானுக்கு அவதாரம் இல்லை என்பதை ஒரு பாடலில் குறிப்பிடுகின்றார்.*

எல்லார் பிறப்பும் இறப்பும்இயற் பாவலர்தம்
சொல்லால் தெளிந்தோம்;நம் சோணேசர்—இல்லிற்
பிறந்ததை யும்கேளேம் பேருலகில் வாழ்ந்துண்டு
இறந்ததை யும்கேட்டி லோம் (70)

*மூவர் செய்த அற்புதங்களை இரண்டு பாடல்களில் பேசுகின்றார்; மணிவாசகரைக் குறிப்பிடவில்லை.*

வன்பெருக்கில் கல்மிதக்கும், வாய்முதலை பிள்ளை தரும்
என்புருக்கொள் பெண்ணா யிருக்குமே—அன்பருக்கு
நாட்டுகுரு சோணகிரி நாதனடி யார்மூவர்
பாட்டினிசை கேட்ட பரம் (16)

வெய்ய பிறவிதனை வேரறுக்கும் சோணகிரி
ஐயரடி யார்பாட்டிற் கல்லாமல்—துய்யகரா
வாய்க்குமோ பிள்ளையும்,தண் வாரிதியிற் கல்மிதந்து
காய்க்குமோ ஆண்பனையும் காய் (23)

*அடியிற் குறிப்பிடும் பாடல் யாவரும் நன்கு அறிந்தது.*

சும்மா கிடைக்குமோ சோணாசலன் பாதம்
அம்மால் விரிஞ்சன் அறிகிலார்—நம்மால்
இருந்துகதை சொன்னக்கால் என்னாகும் நெஞ்சே!
பொருந்த நினையாத போது (64)

*அடியிற் குறிப்பிடும் பாடல் இவ்வந்ததாதிக்குரிய சிறப்புப் பாயிரமாகும்.*

அருணிகிரி அந்தாதி அழகுவெண்பா நூறும்
கருணையுடன் கற்றோரைக் கண்டால்—அருணையண்ணல்
வீறான பொன்னுலகை வேந்தனுக்கு மாற்றியங்கே
மாறாகக் கொடுப்பார் மகிழ்ந்து.

*(6) **கந்தர் அந்தாதி:** இதனை அருளியவர் **அருணகிரி நாதர்**[21]. இதில் காப்பில் இரண்டுபாடல்களும் நூலில் 100 பாடல்களும் உள்ளன.*

வாரணத் தானை அயனைவிண்
ணோரை மலர்க்கரத்து
வாரணத் தானை மகத்துவென்
றோன்மைந் தனைத்துவச
வாரணத் தானைத் துணைநயந்
தானை வயலருணை
வாரணத் தானைத் திறைகொண்ட
யானையை வாழ்த்துவனே

*வாழ்த்து இரண்டு பாடல்களில் இது முதற்பாடல். பொதுவாக எல்லாப் பிரபந்தங்களிலும் பிள்ளையார் வணக்கம் தவறாமல் அமைந்திருப்பதைக் காணலாம். இந்த அந்தாதியின் ஒரு சிறப்பு என்னவென்றால் காப்பு உட்பட எல்லாப் பாடல்களிலும் நான்கடிகளும் ஒரே சொல்லால் தொடங்குகின்றது. கீழ் ஏதோவகையில் காட்டப் பெறும் இதனைக் காணலாம். 'அந்தாதி' என்ற பெயருக்கேற்ப எல்லாப் பாடல்களும் அகராதிமுறையில் அமைந்தவை.*

*சில பாடல்களை ஈண்டுக் காண்போம்.*

தேங்கா வனமும் மதகரி
வேந்துடன் சேர்ந்தவிண்ணோர்
தேங்கா வனமுனை யவ்வேற்
பணியெனும் சேயிடமேல்

21. இவர் வரலாறு 'அருணகிரியார் படைப்புகள்' என்ற தலைப்பின் கீழ்க் காணலாம். இந் நூல் பக். 346.

தேங்கா வனமும் தளர்நடை
யாயஞ்சல் செண்பகப்பூந்
தேங்கா வனமுங் கழுநீடரி
வஞ்சியுஞ் செந்திலுமே (13)

சேவற் கொடியும் பனிசாந்
தகனுந் திருக்கரத்துச்
சேவற் கொடியுங் கொடியகண்
டாய்தினை சூழ்புனத்துச்
சேவற் கொடியும் திவளத்
தவளுந் தந்திக்களபச்
சேவற் கொடியும் உடையாய்
பிரியினுஞ் சேரினுமே (16)

தித்திக்கும் தொந்திக்கு நித்தம்
புரியுஞ் சிவன்செவிபத்
தித்திக்குந் தொந்திக் கறமொழி
பாலக தேனலைத்துத்
தித்திக்கும் தொந்திக் கிளையாய்
விளையுயிர்க் குஞ்சிதைதோல்
தித்திக்கும் தொந்திப் பனவேது
செய்வினைத் தீவிலங்கே (52)

சிவசிவ சங்கர வேலா
யுதத்தினை வஞ்சிகுறிஞ்
சிவசிவ சங்கர வாமயில்
வீர செகந்திருக்கண்
சிவசிவ சங்கர மாவை
யெனுந்திற லோய்பொறைவா
சிவசிவ சங்கர மான்பட்ட
வாவொளி சேர்ந்தபின்னே (84)

திகிரி வலம்புரி மாற்கரி
யார்க்குப தேசஞ்சொன்ன

திகிரி வலம்புரி செய்யா
ரிலஞ்சிசெந் தூர்கனதந்
திகிரி வலம்புரி வேறும்
படைத்தருள் சேய்தப்பில்
திகிரி வலம்புரி சூடிய
வாநன்று சேடியின்றே (91)

செல்வந் திகழு மலநெஞ்ச
மேயவன் றெய்வமின்னூர்
செல்வந் திகழு நமதின்மை
தீர்க்கும்வெங் கூற்றுவற்குச்
செல்வந் திகழும் திருக்கையில்
வேறினை காத்தசெல்வி
செல்வித் திகழும் மணவாள
னல்குந் திருவடியே (100)

நயமான பாடல்கள்தாம். கந்தரலங்காரம், கந்தரநுபூதிப் பாடல்கள்போல் அநுபவிக்க முடிவதில்லை. நூல் முழுதும் யமக அந்தாதியானபடியாலும் நடைகடினமாகவும் வகையுளி அதிகமாகவும் இருப்பதாலும் அநுபவத்திற்குத் தடை ஏற்படுகின்றது. இதுபற்றியே **"கந்தரந்தாதியைப் பாராதே. கழுக்குன்றத்து மாலையை நினையாதே"** என்ற பழமொழியும் எழுந்துள்ளதுபோலும் என்று கருதலாம்.

## 3. கலம்பக நூல்கள்

கலம்பகம் ஒருவகைப் பிரபந்தம். ஒரு போகும், வெண் பாவும் கட்டளைக் கலித்துறையும் முதற்கவியுறுப்பாக முதலில் கூறப்பெறும். தொடர்ந்து புயவகுப்பு, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னும் பதினெட்டு உறுப்புகள் இயைந்து

அமையும். இதில் மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியவிருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, கலிநிலைத்துறை, வஞ்சிவிருத்தம், வஞ்சித்துறை, ஆசிரியத் துறை, வெண்டுறை என்ற யாப்பு வகைப்பாடல்கள் அமைந்திருக்கும்; இடையிடையே வெண்பாவும் கலித் துறையும் விரவி வரும். மடக்குச் செய்யுளும், வண்ணம்; சந்தம் முதலியனவும் பொருந்த அந்தாதித் தொடையால் முற்றுறும். முதற்பாடலும் இறுதிப்பாடலும் மண்டலித்து[22] அமையும். இக்கலம்பகம் தேவர்க்கு நூறும், அந்தணர்க்குத் தொண்ணூற்றைம்பதும், அரசர்க்குத் தொண்ணூறும், அமைச்சர்க்கு எழுபதும், வணிகர்க்கு ஐம்பதும், வேளாளர்க்கு முப்பதுமான பாடல்களால் பாடப்பெறும். ஆனால் இவ்வெல்லை என்றும் ஆட்சியில் இருந்ததில்லை.

'கலம்பகம்' என்ற சொல், இன்று பலநிறமும் மணமும் கொண்ட மலர்களையும் இலையையும் கலந்து தொடுத்த மாலையைக் 'கதம்பம்' என்று சொல்வது போல, பல வகையான பாக்களால் தொடுத்த ஒரு பாமாலையாகும். **'களிவண்டுமிழற்றிய கலம்பகம் புனைந்த அலங்கல் தொடையல்'** என்பர் தொண்டரடிப் பொடியாழ்வார். இவற்றுள் 'நவரசம்' எனப்படும் ஒன்பது சுவைகளும் பொருந்தி நிற்கும். நந்திக்கலம்பகமே முதன்முதலாகத் தமிழில் தோன்றிய முதற்கலம்பகம் என்று கூறுவர் வர லாற்றாசிரியர்கள் (ஒன்பதாம் நூற்றாண்டு). இவ்வகையில் ஒருசில சைவகலம்பக நூல்களைக் காண்போம்.

**(1) திரு அருணைக்கலம்பகம்[23]:** இது திருவண்ணா மலைக்கு உரிய கலம்பகம். இதில் காப்புச் செய்யுள் இரண்டும் நூறுபாடல்களும் அடங்கியுள்ளன. இதன்

22. நூலினது ஈற்றுச் செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையவைத்தல், மண்டலித்தல் எனப்படும்.
23. பதினாறாம் நூற்றாண்டு இறுதிப்பகுதி.

*இறந்தும் கமலையில் பிறந்தும் தில்லையில் (திருநடனத்தைக்) கண்டும் பெறத்தக்க பேறுகள் அனைத்தையும் கருதின மாத்திரத்தில் இங்கேயே பெறலாம் என்றும் பாடுகின்றார்.*

வேற்று மருந்தால் விடாதவெம் பிறவியை
மாற்று மருந்தா மலைமேல் மருந்தா
அழகிய நாயகி அருளுடை நாயகி
புழுகணி நாயகி பொருந்திய புனிதா
காசியில்இறந்தும் கமலையில் பிறந்தும்
தேசமர் தில்லையுள் திருநடங் கண்டும்
அரிதினிற் பெரும்பே றனைத்தையும் ஒருகால்
கருதினர்க் களிக்கும் கருணையை விரும்பி
அடைக்கலம் புகுந்தனன்அடியேன்
இடர்க்கடல் புகுந்து எடுத்தருள் எனவே.

*பல பாடலகள் சந்தத்தில் உள்ளன.* **'முத்தமிழ் மறையொடு'** *என்ற பாடல், திருப்புகழைப் போலவே அமைக்கப் பெற்றுள்ளது. புயவகுப்புப் பாடலில் சரபமூர்த்தி செய்தியை 'இரணியன் உரங்கிழித் தளவறு பதங்கொழித் தெழுநர மடங்கலைத் தடமார் பிடந்தன்' என்ற சொற்களால் குறிப்பிடுகின்றார். மால் நான்முகன் என்ற இருவராலும் காணமுடியாத அருணேசன் பூசனையால் உருகுவான் என்பதை நயமாகக் குறிப்பிடுகின்றார்.*

ஆராலும் அளவிடுதற் கரியஉனை ஒருகரத்து
நீராலும் மலராலும் நெஞ்சுருகப் பணலாமே.

*ஒரு பாடலில் நான்முகன், நாராயணன் ஆகிய இருவரும் தங்கள் நினைப்புக்குரிய தண்டனையை அப்போதே பறவையாகியும் விலங்காகியும் பெற்றுவிட்டதாகக் கூறுவர். பாடல் இது.*

யாதவர் குலத்துநெடு மாதவன்
மருப்புடைய ஏனமிரு கத்துருவமாய்
வேதமொழி பெற்றஅயன் ஓதிமம்
எனப்பறவை வேடமும் எடுத்ததிலையோ
ஓதருணை வித்தகரை மூவரில்ஒ
ருத்தர்என ஓதிவிடும் அற்பமதியீர்!
சீதமதி வைத்தமுடி பாதமல்
லாச்சிறிது தேடுதல் நினைத்த பரமே(6)

*(2) **திருச்செந்திற் கலம்பகம்:** இதனை இயற்றியவர் சுவாமிநாத தேசிகர். இவர் பாண்டி வளநாட்டில் சைவ வேளாளர் மரபில் சற்றேறக் குறைய 300 ஆண்டுகட்குமுன் தோன்றியவர். கல்வியறிவு ஒழுக்கங்களில் சிறந்து விளங்கினார். திருவாவடுதுறை ஆதினத்தை அடைந்து அப்போது ஆண்டு எழுந்தருளியிருந்த குருமகா சந்நிதானம் அம்பலவாண தேசிகரிடம் சிவதீட்சை பெற்றுத் துறவறத்தை மேற்கொண்டு தம்பிரானாயிருந்தார்.*

*அக்காலத்தில் நெல்லையிலிருந்து மடத்திற்கு வந்திருந்த மயிலேறும் பெருமாள்பிள்ளை என்பவர் தேசிகரின் நல்லொழுக்கத்தையும் அன்பின் திறத்தையும் கண்டு வியந்து, தாம் கற்ற கல்விப் பொருளை இத்தகையோருக்கு வழங்க நினைத்து தம் கருத்தை இவர்பால் வைத்தார். தேசிகர் கட்டளைப்படி இவரை நெல்லைக்கு இட்டுச் சென்று தமது இல்லத்தில் வைத்து மிகுந்த அன்புகாட்டி அருந்தமிழ் இலக்கிய இலக்கணங்களைப் பன்னீராண்டு கற்பித்தனர். பின்னர் செப்பறைப்பதியில் உறையும் கனகசபாபதி சிவாச்சாரியரால் வடமொழி வியாகரண முதலிய நூல்களையும் கற்பிக்குமாறு செய்தார்.*

*பின்னர் தேசிகர் ஆதினத்துக்குத் திரும்பி வந்து நிர்வாண தீக்கை பெற்று சிவஞானபோதம் முதலிய சமய நூல்களைக் கற்றுத் தெளிந்தார். இங்ஙனம் இருந்தபோது*

ஆண்டு வந்த வைத்தியநாத நாவலர் இவருடன் நட்புக் கொண்டார். சிலகாலம் கழிந்தபின்னர் இவருக்கு ஞானா. சிரியர் ஆசாரிய அபிடேகம் செய்து நெல்லையில் தமது ஆதீன மடாலயத்திலிருக்குமாறு பணித்தார். இக்காலத்தில் விழாக்காலந்தோறும் திருச்செந்தூருக்குச் சென்று முருகக்கடவுளை வழிபட்டார். பின்னர் அப்பெருமான் மீது பலவகை யாப்புகளாலியன்ற திருச்செந்திற்கலம்பகம் இயற்றியருளினார். வேறுபல நூல்களையும் படைத்தார். இலக்கணக்கொத்தும் உரையும் இவர் படைப்பு.

இந்நூல் பாயிரம் காப்பு (2 பாடல்) நூல் 100 பாடல் களைக் கொண்டது. பாயிரத்தில் நூலியிற்றிய தன்னைக் குறிப்பிட்டு காப்பில் விநாயக வணக்கம் அமைக்கின்றார். இதில் அமைந்த யாப்பு வகைகளாவன்: மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா, கலித்துறை, ஆசிரியவிருத்தம், கலிவிருத்தம், குறளடி வஞ்சிப்பா, கலிப்பா, வெளிவிருத்தம், வஞ்சித்துறை, அம்மானை, மடக்குத்தாழிசை, வஞ்சி விருத்தம். ஒரொலி வெண்டுறை, ஆசிரிய வண்ணவிருத்தம், ஆசிரியத்தாழிசை, மருட்பா, வஞ்சித்தாழிசை, வெண்டா ழிசை, ஊசல், வேற்றொலி வெண்டுறை, வெண்பா (நேரிசை, சிந்தியல், குறள், கலி) குறட்டாழிசை, அடி மண்டில ஆசிரியப்பா, ஆசிரிய வண்ணவிருத்தம், சிந்தடி வஞ்சிப்பா, கலிமூரி, இணைக்குறளாசிரியப்பா, கலித் தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரியத்தாழிசை, கலிவிருத்தம் ஆகியவை. பாடல்கள் அந்தாதித் தொடையில் அமைந்தவை.

மதிக்கும் பரிதிக் கடவுளுக்கும்
  வழங்கும் விழியா னருண்மதலைக்
குதிக்கும் படிக்குங் கலம்பகப்பா
  விசைக்குந் தமிழா லினிதிசைத்தான்
புதுக்குந் தமிழ்த்தென் கடல்கடக்கப்
  பொருத்துந் தோணி போலியல்செய்

துதிக்கும் தமிழார் துறைசைநகர்ச்
சுவாமி நாத தேசிகனே.

*என்பது பாயிரம்; இதில் நூலாசிரியர் பெயர் வந்திருத்தல் காணலாம்.*

கற்றாலும் நீடூழி கழித்தாலும்
கழியாத கரையில் வாழ்வு
பெற்றாலும் முருகனடிக் கன்புபெறா
தவருலகிற் பிறவி தீரா
நிற்றாலுங் கலிநலிய விரந்தாலும்
பேதையரா யெழுத்தா றுள்ளத்
தற்றாலும் அவனிருக்கும் செந்திலென்றார்
முந்திலென்று மடைவர் தாமே (4)

வரங்கொண்ட வுமைமுலைப்பால்
மணங்கொண்ட செவ்வாயும்
பரங்கொண்ட களிமயிலும்
பன்னிரண்டு கண்மலரும்
சிரங்கொண்ட மறையிறைஞ்சும்
சேவடியும் செந்தூரன்
கரங்கொண்ட வேலும்என்றன்
கண்ணைவிட்டு நீங்காவே (20)

பணிப்பகை மயிலும் சேவற்
பதாகையும் பன்னிரண்டு
மணிக்குழை களுமோ ராறு
வதனமும் வாகைவேலும்
தணிப்பசுங் கடப்பந் தாரும்
தண்டையந் தாளும்நாளும்
கணிப்பருஞ் செந்தி லாய்என்
கருத்தைவிட்டு அகன்றிடாவே. (88)

*என்பன போன்ற முருகபக்தியில் ஈடுபடச் செய்யும் அற்புதப்பாடல்களை இதில் கண்டு மகிழலாம்.*

இழைக்கும் கூடலும் என்னிரு
கண்களின் இமைகளும் இரவெல்லாம்
உழைக்குங் கூடல மர்ந்துதென்
செந்திலாய் ஒருகணம் கூடாவான்
மழைக்கண் அம்பிகை மலர்க்கரம்
கோட்டியே வார்முலை பீரோட
அழைக்க நின்று கூத்தாடிய
மணிச்சிலம் பலம்புசே வடியானே (98)

*என்ற தலைவி கூற்றாக அமைந்த பாடல் உள்ளத்தை ஊற்றெடுக்கச் செய்வது. இத்தகைய பக்திச் சுவை ததும்பும் பாடல்கள் நிறைந்தது இத்தெய்வப் பனுவல்.*

ஆர்க்கும் களிவண் டறையும் பொழிற்றிருச்செந்
தூர்க்கன் புடனீசென் றுள்ளமே—கூர்க்கு
மெழுமையினு நீபிறப்பி லெய்தாமற் சேயைத்
தொழுமயிலும் வேலும்எனச் சொல் (100)

*என்பது இறுதிப்பாடல்.*

*(3)* **மதுரைக்கலம்பகம்:** *இது குமர குருபரசுவாமிகள் அருளியது. இவர் பாண்டிநாட்டில் சீவைகுண்டத்தில் சைவ வேளாளர் குலத்தில் கிட்டத்தட்ட நானூறு யாண்டுகட்குமுன் தோன்றி ஐந்தாண்டளவும் ஊமையா யிருந்தனர். பெற்றோர் திருச்செந்தூர் சென்று முருகப் பெருமானை வழிபட அப்பெருமான் அருளால் ஊமைத் தன்மை நீங்கியது. சைவச்சித்தாந்தக் கருத்துகள் மலிந்து விளங்கும்* **கந்தர் கலிவெண்பா** *என்னும் புகழ்நூலை அருளிச் செய்தனர்.*

*முருகப் பெருமான் ஆணைப்படி இவர் ஒரு சமயம் வடதிசை செல்லும்போது* **மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்பாட,** *அக்காலத்தாராகிய திருமலை நாய்கர் அதனைத் தெரிந்து அம்மை திருமுன் அரங்கேற்ற*

உதவினர். அப்பிள்ளைத் தமிழின் வருகைப் பருவத்து ஒன்பதாவது பாடலாகிய 'தொடுக்கும் கடவுட் பழம்பாடல் தொடையின் பயனே' என்று தொடங்கும் செய்யுளுக்கு அடிகள் பொருளுரைக்கும்பொழுது மீனாட்சியம்மையார் அர்ச்சகரது பெண் போன்று திருக்கோலங்கொண்டு அரசர் கழுத்திலிருந்த மணிவடத்தைக் கழற்றி அடிகளின் கழுத்திலிட்டு மறைந்ததாக வரலாறு. பின்னர் **'மீனாட்சியம்மை குறம்' 'மீனாட்சி அம்மை இரட்டைமணி மாலை' 'மதுரைக்கலம்பகம்,' 'நீதிநெறி விளக்கம்'** என்பவற்றைப் பாடியருளினார்.

பின்பு திருவாரூர் சென்று தியாகராசப் பெருமானை வணங்கி **'திருவாரூர் நான்மணிமாலை'** என்னும் நூலையருளினார். அப்பால் தருமபுரம் சென்று அங்கிருந்து சிதம்பரம் செல்லப் புறப்பட்டு வைத்தீசுவரன் கோயிலை அடைந்து முருகப்பெருமான் மீது **'முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்'** என்னும் பிரபந்தம் பாடினார். பின்னர் சிதம்பரம் சென்று நடராசப் பெருமான்மீது **'சிதம்பர மும்மணிக்கோவை' 'சிதம்பரச்செய்யுட்கோவை' 'சிவகாமி அம்மை இரட்டை மணிமாலை'** என்னும் நூல்களை அருளினார். அடுத்து தருமபுரம் சாரவும் மாசிலாமணி தேசிகர் அவருக்கு ஞானோபதேசம் செய்தார். அக்கருணையை வியந்து தம் ஆசிரியர்மீது **'பண்டார மும் மணிக்கோவை'** என்னும் பனுவலைப் பாடியருளினார்.

பின்னர் காசியை அடைந்து விசுவாதப் பெருமான் மீது **'காசிக் கலம்பகம்'** பாடினார். அந்நாட்டு முகம்மதிய அரசனிடம் மடங்கட்ட இடம்பெற விரும்பி, தவளத் தாமரை அம்மைமீது **'சகலகலாவல்லி மாலை'** பாடி இந்துஸ்தான் மொழியையறிந்து அரசனிடம் சென்று பல அருஞ்செயல்கள் புரிந்து அவ்வரசனால் இடம் பெற்று பல சைவமடங்களும் கேதார நாதராலயமும் அமைத்தனர்.

*மதுரை:* இப்பெயர் கேட்ட மாத்திரத்தில் முத்திதரும் தன்மையது இத்தலம். குலசேகரன் என்னும் பாண்டியன் காடுகெடுத்து நகராக்கி அந்நகரத்திற்குச் சாந்தி செய்யக் கருதியபொழுது சோமசுந்தரக் கடவுள் அவன் குறிப் பறிந்து தமது திருச்சடையில் அணிந்திருந்த சந்திரனிடத் திருந்தும் அமிர்தத்தை உகுக்க அவ்வமுதம் சென்று அந்நகர் முழுவதும் பரவிச் சாந்தி செய்து மதுரமயமாக்கியதனால் மதுரை எனப்பெயர் பெற்றது என்பதைத் திருவிளையாடற் புராணச் செய்யுட்களால் (2) அறியலாம்.

*நூல்:* மதுரை மீனாட்சியம்மைமீது பாடப்பெற்றது. கணநாதர் மீதுள்ள காப்பை நீக்கி நூல் 102 செய்யுட்களால் ஆனது.

புந்தித் தடத்துப் புலக்களி
    றோடப் பிளிதுதைத்தித்
தந்திக்குத் தந்தை தமிழ்க்குத
    வென்பதென் றண்ணலர்தூய்
வந்திப் பதுதனி வாழ்த்துவ
    தும்முடி தாழ்ந்து நின்று
சிந்திப் பதுமன்றிச் சித்தி
    விநாயகன் சேவடியே.

என்பது விநாயகர் காப்பு.

தடமுண் டகக்கண் டகத்தாள
    தென்றுநின் தண்மலர்த்தாள்
நடமுண் டகமகங் கொண்டுய்ந்த
    வாவினி நங்களுக்கோர்
திடமுண் டகந்தைக் கிடமுண்
    டிலையெனத் தேறவிண்ணோர்
விடமுண்ட கந்தர சுந்தர
    சுந்தர மீனவனே. (3)

*(கந்தரம்–கழுத்து; தலையைத் தரிப்பதென்று கழுத்திற்குக் காரணப் பெயர்)*

*தேவர்களெல்லாம் 'இனி நமக்கு ஓர் உறுதி உண்டு; அகந்தைக்கு இடம் இல்லை' என்று எண்ணி அச்சந் தீர்ந்து தெளியும்படி 'இறைவா! எனது மனம் குளத்தில் தோன்றும் தாமரை முட்களோடு கூடிய நாளத்தையுடையதென்று கருதி அதனையழித்து நடனம் செய்கின்ற நினது திருவடியாகிய குளிர்ச்சியான தாமரை மலரை உட்கொண்டு நற்கதி பெற்ற விதம் என்ன வியப்பு?' என்பது இதன் பொருள்.*

மீனேறும் கொடிமுல்லை விடுகொல்லைக்
கடிமுள்ளை வெள்ளைப்பள்ளை
யானேறும் வலனுயர்த்த அழகியசொக்கர்க்
கிதுவும் அழகியதேயோ?
கானேறும் குழல்சுரியக் கர்ப்பூர
வல்லிதலை கவிழ்ந்து நிற்ப
ஊனேறும் முடைத்தலையின் கடைப்பலிகொண்
டூர்புக் குழலுமாறே (4)

*வெண்ணிறமுள்ள பருத்த இடபத்தையூர்ந்து வரும் சொக்கலிங்கமூர்த்திக்கு கர்ப்பூரவல்லி என்ற திருநாமமடைய உமாதேவி தன் கணவன் பிச்சையெடுக்கப் புறப்பட்டதனால் நாணித் தலைகவிழ்ந்து நிற்கும்படி இழிவான பிச்சையை ஏற்றுக் கொண்டு ஊர்தோறும் சென்று திரியும் தொழில் அழகையுடையதொன்றோ? –இது வஞ்சப்புகழ்ச்சியணி. கருணையினால் செய்ததாதலின் இதுவும் அவர்க்கு அழகியதேயாம் என்பது கருத்து.*

உள்ளும் புறம்பும் கசிந்தூற்
றெழநெக் குடைந்துகுதி
கொள்ளும் செந்தேறல் குனிக்கின்ற
வாபத்திக் கொத்தரும்ப

விள்ளும் கமலத்தும் வேத
சிரத்தும்விண் மீனைமுகந்
தள்ளும் கொடிமதிற் பொற்கூடல்
வெள்ளி யரங்கத்துமே (37)

*அடியார்களது மனத்திலும் உடம்பிலும் கனிந்து நெகிழ்ந்து விண்டு ஊற்றுநீர் போலக் கரைந்து உருகும்படி விளங்கும் சிவபெருமான் உள்ளத்தாமரையில் வேதாந்தத்திலும் மதுரையில் உள்ள வெள்ளியம்பலத்திலும் நடனம் ஆடுவது என்ன வியப்பு!*

***(4) கச்சிக் கலம்பகம்:*** *இது பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த பூண்டி அரங்கநாத முதலியாரால்*[24] *இயற்றப்பெற்றது. இது விநாயகர் துதி, நால்வர்துதி, இவை நீங்க 100 பாடல்களைக் கொண்டது; பலவேறு யாப்புகள் கொண்ட பாடல்களை யுடையது.*

தங்கச் சிலையெடுத் தந்தவெழுத் தாணியுங்கொள்
துங்கக் கரிமுகத்துத் தூயவனென்–சங்கையொழித்
தேடெழுத் தாணி யெடுத்தறியே யின்நூலைப்
பாடவளிப் பானற் பதம்.

*இது பிள்ளையார் துதி.*

தரையின்மிசைத் தமிழ் பெருகச் சைவநெறி
தழைப்பஅுவ தரித்த சால்பின்
மறையுறைவா மொருநால்வர் பதமலரைச்
சிரங்கொண்டு மடத்தைப் போக்கிக்
குறைவதுநாற் றோற்றத்தின் உளதாய
துயரகலக் குறிப்ப சான்றோர்
பிறைசுமந்த சடையாரென் பிழைசுமந்த
கலம்பகத்தைப் பெறச்செய் வாரே.

*என்பது நால்வர் துதி.*

---

24. இவர் வரலாறு பதிப்பித்த நூலில் காணப்பெறவில்லை.

வற்றா வளக்காஞ்சி வாழ்ந்தருளே காம்பனார்
செற்றார் புரமெரித்த தீயர்காண் அம்மானை
செற்றார் புரமெரித்த தீயரே யாமாயிற்
கற்றார்க ளந்தணராக் கழுறுவதே அம்மானை
கழறல் அறுதொழில்சேர் காரணத்தால் அம்மானை (6)

*இது அம்மானை உறுப்பு பற்றியது.*

சுகமே மறைமா வடிமே வியவென்
துணைவர்க் கெளியேன் துயரைப் பகர்வாய்
மகமே ருசிலைக் குனிவா னவனென்
மதனன் கழையே வையம் புகைக்கும்
சகமேழ் அயின்றோன் பெயர்கொள் எளியேன்
சரணா கதிசேர் தலைவேண் டினன்என்று
அகமே குழையப் புரிவாய் எனில்யான்
அயர்த்த தகலத் தருவாய் சுகமே(17)

*இது கிளியைத் தூதுவிடும் பாட்டு: தூதுபற்றிய உறுப்புஇது. மேகம் (42) நெஞ்சு (44), வண்டு (52) தூது பற்றிய பாடல்களும் உண்டு.*

தேவார முதலியவைந் துறுப்பும் வாழச்
சிறந்தமறை யாகமங்கள் செழித்து வாழத்
தாவாத சித்தாந்த சைவம் வாழச்
சந்தவரைச் செந்தமிழ்நூல் தழைத்து வாழ
நாவாரும் புகழ்க்கச்சி நகரில் காம
நயனியோடு முறைஇறைசீர் நன்கு பாடிப்
பூவாரு மலர்விழியீர் ஆடீர் ஊசல்
புத்தமுத நிகர்மொழியீர் ஆடீர் ஊசல்(49)

*இஃது ஊசல் பற்றிய பாட்டு.*

ஆடவரும் பெண்மைவிரும் பபிராமர்க்
கணங்குற்ற வறிவி லேனைச்

சாடவரும் சிறுகாலும் தழல்மதியும்
சாகரத்தின் ஒலியும் நெஞ்சம்
வாடவரும் மலர்க்கணையும் அறிவீய
விரிந்திடுமோ வாசைத் தானும்
தேடவரும் ஏகம்பர் தாமத்தைக்
கொணர்வீரேல் தேறு வேனே (54)

*இன்னும் மறம், குறம், இடைச்சியார் முதலியவற்றிற்கும் நயம் செறிந்த பாடல்கள் உள்ளன.*

## 4. தூதுப் பிரபந்தங்கள்

*தமிழ் இலக்கியத்தில் தூதுப்பிரபந்தங்கள் மிகு புகழ் பெற்றவை. பக்தி இலக்கியத்தில் இவைபற்றிக்கருதுவோம். அடியவர்கள் தங்களை நாயகி நிலையில் நிறுத்தி இறைவனாகிய நாயகனிடத்துத் தங்கள் காதலைக் கூறுமாறும் இறைவனை அழைத்து வருமாறும் பாடுகின்ற பாடல்களைத் தேவாரத் திருவாசகங்களிலும் நாலாயிரப் பிரபந்தங்களிலும் விரிவாகக் காணலாம். எடுத்துக் காட்டாக 'சிறையாரும் மடக்கிளியே' (1. 6: 10) என்ற சம்பந்தர் பாடல், 'சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள்' (4.12:1) என்ற அப்பர் பாடல், மாணிக்கவாசகர் பாடிய குயில்பத்து, திருமங்கையாழ்வார் பாடிய 'செங்காலமட நாராய்' (திருநெடுந். 27) என்ற பாசுரம், நம்மாழ்வார் பாடிய 'அஞ்சிறைய மட நாராய்' (திருவாய் 1.4:1) என்ற பாசுரம் முதலான எண்ணற்ற பாடல்களைக் குறிப்பிடலாம். இவை பக்தியால் விளைந்தவை. இந்த நிலையில் வைத்து எண்ணத் தக்கதே தூது என்ற தமிழ்ப் பிரபந்தவகை. நாயகனாகிய பரம்பொருளிடத்துப் புலவனாகிய நாயகி அவனுடைய அருளைப் பெற்று வருமாறு பலவகைப் பொருள்களையும் (கிளி, அன்னம், மயில், நெஞ்சு போன்றவை) தூது செல்ல அனுப்புவதாகும்.*

இவையேயன்றிக் கலம்பகம், அந்தாதி, இரட்டைமணி மாலை, மும்மணிக்கோவை முதலான பிரபந்த வகைகளி லும் 'தூது' என்ற உறுப்பு அமைக்கவும் பெறும்.

தூது என்ற தனிப்பிரபந்த வகையை நோக்குவோம். இது கலிவெண்பாட்டினால் பாடம்பெறும். இது புறத்திணைத் துறைகளுள் **'கடவுள் மாட்டு மானிடர் நயந்த பக்கம்'** என்பதற்குரியது. எடு. உமாபதி சிவம் தனது ஞானாசிரியராகிய மறைஞானசம்பந்தர்மீது பாடிய **'நெஞ்சுவிடுதூது'** இலக்கண காலத்திற்கு முற்பட்டதாகும். இதுவே முதல் தூது. இதனோடு சேர்த்துச் சொல்லத்தக்கது தத்துவராயர் தமது ஞானாசிரியராகிய சொரூபானாந்தர் மீதுபாடிய **'நெஞ்சுவிடு தூது'** (16-ஆம் நூற்றாண்டு) கச்சியப்ப முனிவர் பாடிய **கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டுவிடு தூது** (1800). தமிழ்த் தூதுப் பிரபந்தங்கள் யாவுமே தலைவியின் காதலைத் தலைவனிடத்து எடுத்துக் கூறி அவன் அருள்புரிவதற்கு அடையாளமாகத் தன்னு டைய அடையாள மாலையைப் பெற்று வரும்படி தூது செல்லும் பொருளுக்குத் தலைவி சொல்லியனுப்புவதாக அமைந்திருக்கும். சரியான சைவசமய தூதுப் பிரபந்தம் கிடைக்காமையால் அதனை வைத்து விளக்க வாய்ப்பு இல்லை.

## 5. கோவைப் பிரபந்தங்கள்

தமிழ்ப்பிரபந்தங்களின் வரிசையில் **'கோவை'** என்பது மிகவும் பழமையான தொன்று. **பாண்டிக்கோவை** என்ற நூல் ஏழாம் நூற்றாண்டில் சம்பந்தர், அப்பர் காலத்திலிருந்த நெல்வேலி வென்றசீர் நெடுமாறனைப் புகழ்வது. இறையனார் களவியலுரையில் எடுத்துக்காட்டுச் செய்யுட்களாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளது. **திருக் கோவையார்** ஒன்பதாம் நூற்றாண்டில் எழுந்தது. இவற்றின் வரிசையில் பிற்காலத்தில் நூற்றாண்டு தோறும் கோவைப் பிரபந்தங்கள் எழுந்து வந்துள்ளன. அவற்றுள்

*சிறப்புடைய சைவத்தைச் சார்ந்த சிலவற்றை ஈண்டுக் காண்போம்.*

*(1)* **திரு ஆரூர்க்கோவை:** *இது மிகவும் அதிகமான பாடல்களைக் கொண்ட கோவைகளில் ஒன்று. சைவ எல்லப்ப நாவலர் அருளியது. இது காப்பு, வெண்பா, அவையடக்கம் பாடல் 2, நூல் 510, சிறப்புப் பாயிரப்பாடல் 2 உடையது. ஆசிரியர் தம் திறமைகளனைத்தையும் காட்டிச் செய்தவற்றுள் ஒன்று இப்பிரபந்தம். பக்திச் சுவையும் அகப்பொருள் சுவையும் மிக்கது. தலவரலாறுகள் எண்ணற்றன அமையப்பாடியுள்ளார். அண்ணாமலைப் புராணமும் அந்தாதியும் பாடிய நினைவினால் ஆரூர்த்தி யாகராசரைக் கூறும்போதும் 'அண்ணாமலையுறை ஆரூர்த்தியாகா' என்று கூறுவார். இதன் சிறப்புப் பாயிரப் பாடல்கள் வருமாறு.*

மற்றிடங் கொண்ட புயபூ
 தரனெல்லன் மாநிலத்தில்
கற்றிடங் கொண்ட புலவோர்கள்
 யாரும் களிக்கவுமை
உற்றிடங் கொண்ட தென்ஆரூர்த்
 தியாகருக் கும்பர்தொழும்
புற்றிடம் கொண்ட வருக்கருட்
 கோவை புகன்றனனே.

*'திருவாரூர்த் திருக்கோவை புகன்றார் எல்லப்ப நயினார் என்றியம்பியது.'*

திணையாதி யாறிரண் டும்வழு
 வாமல் தெளிந்துசிவத்
திணையான தொன்றிநம் மாரூர்த்
 தியாகர் இணையடியே
துணையாக முத்தமிழ்க் கோவை
 செய்தான் வடசொற்கடற்குப்

புணையான வன்திரு உண்ணா
முலைஎல்ல பூபதியே.

நூலில் சைவ சித்தாந்தக் கருத்துகளை அதிகம் பெய்துள்ளார். முருகனிடத்து இவருக்கு அதிகமான பக்தி உண்டென்பதை இரண்டு பாடல்கள் (361, 386) புலப்படுத்துகின்றன.

நீண்ட கோவையாதலால் துறைகளில் பல புதியனவாக அமைந்திருத்தல் இயல்பு. 'நற்றாய் தமருக்கு அறத்தொடுநிற்றல்' என்பது நச்சினார்க்கினியர் குறிப்பிடுவது. இதற்கு இலக்கியம் காணல் அரிது. இவர் அதற்கு இலக்கியம் அமைத்துள்ளார்.

திருக்கோவையாருக்குக் 'கொளு' அமைந்திருப்பது போல இக்கோவைக்கும் 'கொளு' அமைந்துள்ளது. திருக்கோவையார் முழுமையும் அடியொற்றிச் செய்யப் பெற்ற பழநிக்கோவைக்கும் கொளு உண்டு.

*(2)* **நெல்லை வருக்கக் கோவை:** வருக்கக் கோவை என்பது தமிழ் நெடுங்கணக்கில் மொழிக்கு முதலில் வரத் தக்க எழுத்துகளாலாகிய அகரம் முதல் வகரம் வரையிலுள்ள எழுத்துகளை முதல் எழுத்தாகக் கொண்ட கட்டளைக் கலித்துறைப் பாடல்களால் கோவைப் பிரபந்தத்திற்குரிய துறைகள் அனைத்திலும் சிலதுறைகளை மட்டிலும் தேர்ந்தெடுத்துப் பாடி அமைப்பதாகும். கோவையுள் சற்றேறக் குறைய 100 பாடல்கள் இருத்தல் கூடும் தமிழில் இத்தகைய பிரபந்தங்கள் சில உள்ளன.

இவண் குறிப்பிட்ட கோவையானது திருநெல்வேலிப் பெருமானாகிய நெல்லை நாதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டது. இதனுள் சிறப்புப் பாயிரம் உட்பட 100 பாடல்கள் உள்ளன. சில சமயம் ஆசிரியர் ஓரெழுத்துக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பாடல்கள் செய்தலும்

*உண்டு. இந்நூலில் தொ என்ற எழுத்துக்கு இரண்டு பாடல்கள் உள்ளன. இறுதிப் பாடல் ஆசிரியர் பெயரையும் நூலின் பாடல் தொகையையும் குறிக்கின்றது.*

கண்ணூறு பத்மத் தரியயன்
போற்றும் கழைமுத்தர்க்குப்
பண்ணூறுஞ் சொல்வருக் கக்கோவை
தன்னைப் பரிவுடனே
வெண்ணூ லணியம் பிகாபதி
வீரையின் வேதியன்சொல்
தொண்ணூறு மெட்டும் படிப்பார்க்கெந்
நாளும் சுகமுண்டுமே.

*(உண்டுமேஎன்பது தென்பாண்டி நாட்டுவழக்கு)*

*இங்கு கழை முத்தர்க்குக் கோவை பாடியவர் 'வீரையில் வேதியன் அம்பிகாபதி' என்றும், இதில் அடங்கிய பாடல்கள் தொண்ணூற்றெட்டு என்றும் தெளிவாகச் சொல்லப் பெற்றுள்ளது. இந்நூல் திரட்டப்பெற்ற துறை களைக் கோவையின் பொருள் தொடர்பை நோக்கித் திரட்டப் பெறவில்லை. பாடல்கள் யாவும் முன் பின்னாக வும் உள்ளன. நூலின் இறுதியில் ஆசிரியர் ஒரு வாழ்த்து அமைந்திருப்பது கோவைத் தொடருக்குப் புதியது.*

*இதன் பாடலுக்கு எடுத்துக்காட்டாக அடியிற் காணும் பாடலைக் குறிப்பிடலாம். துறை-பாலனைப் பழித்தல்.*

நூலா மருங்கின் உமைபாகர்
நெல்லையின் நோற்றுப்பெற்ற
பாலா பகலும்வந் தாரில்லையே
கையிற் பற்றியவேல்
கோலா னெடும்புனத் திட்டமுள்
வேலியைக் கோலிமெல்லக்
காலால் வழிதட விக்கங்குல்
வாய்வரக் கற்றவரே.

நெல்லை வருக்கக் கோவையைப் பாடியவர் 'நெல்லைப் பெருமாளய்யர்' என்று ஐயரவர்கள் எழுதியுள்ளார்கள். அதற்கு ஆதாரம் வேம்பத்தூரார் செய்தவை இன்னவை என்று குறிப்பிடுகின்ற ஒரு நீண்ட ஆசிரிய விருத்தப்பா ஆகும்.[25] இதனுள் **'பிரதாபமிகு திருநெல்வேலிப் பெரு மாளையன் சொன்னான் நெல்லையின் கோவை'** என்ற தொடரில் காணலாம்.

ஐயர் அவர்கள் இதுபற்றி வரலாறு விரிவாகவே எழுதி யுள்ளார். **'தேரோடும் வீதியெலாம்'** என்ற ஒரு காப்பு வெண்பாவும் குறிப்பிட்டுள்ளார். ஆனால் அவ் வெண்பா அச்சிட்ட வருக்கக் கோவையில் இல்லை. மேலும் ஆசிரியர் பெயர் உரைக்கும் நூலின் இறுதிப்பாடல் **'அம்பிகாபதி வீரையின் வேதியன்'** என்றும் பாடல் 98 என்றும் தெளிவாகக் குறிப்பிடுகின்றது. ஆகவே இந்த நூலைப் பெருமாள் ஐயர் பாடினார் என்பது பொருந்தாது. முற்கூறிய பாடல் நெல்லையின் கோவை என்று கூறு வதால் அது வேறு நூல் என்று கருதவேண்டும். அம்பிகாபதி பாடியது வருக்கக் கோவை; பெருமாள் ஐயர் பாடியது வேறு கோவை என்று சொல்லலாம்.

**(3) பழநிக் கோவை:** இந்நூல் திட்டமாக 400 பாடல்களே கொண்டது. முழுமையும் திருச்சிற்றம்பலக் கோவையை அடியொற்றியே செய்யப் பெற்றது[26]. நூற் பெயரை அடுத்து 'இறையனார் அகப்பொருள் விளக்கம்' என்று உபதலைப்பு காணப்பெறுகின்றது இறையனார் களவியலுரைக்குப்பின் கோவை நூலெழுதினோர் சிலர் தங்கள் கோவைக்கு ஒரு கிளவித் தொகை அமைத்து அதற்கு இவ்வாறு தலைப்பு எழுதியுள்ளனர்.

25. இப்பாடலைச் செவ்வைச் சூடுவார் பாகவத புராணவரலாற்றில் காணலாம். இவ்வரலாறு முதற்பாகம், அத்தியாயம் 5.
26. 15-ஆம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதி

பாடல் ஒவ்வொன்றுக்கும் துறை அல்லது கிளவித் தலைப்பும் 'கொளுவும்' மெய்ப்பாடு பயன் என்ற குறிப்பு களும் தவறாது அமைக்கப் பெற்றுள்ளது. கோவைப் பாடல் களும், கிளவிக் கொத்தும் கொளுவும் மெய்ப்பாடு பயன் கூற்று முதலிய குறிப்புகளும் நூலாசிரியரே செய்தவை.

இதில் கொளுக்கள் ஓர் அடி அல்லது ஈரடியாகவே உள்ளன. ஓரடியில் நயமான எதுகை அமைந்துள்ளது.

கரைவு கூறி வரைவு கடாயது

ஊரன புயத்தின் வாரம் பகர்ந்தது

பருவமி தென்று வரைவு கடாயது.

என்பவற்றில் இதனைக் காண்க. இரண்டியாக வரும்போது வழி எதுகையாகவும், அடிகளில் தொடர் எதுகையாகவும் அமைந்திருக்கக் காண்கின்றோம்.

கொண்டற் பருவம் கண்டற் கிரங்கி
வில்லுமிழ் வேலோன் சொல்ல லுற்றது

பற்பல துயரொடு படரா நின்றவன்
முற்படு புயற்கு முன்னி மொழிந்தது.

என்ற அடிகள் இவ்விருவகைக்கும் எடுத்துக்காட்டுகள். இவை நூல் செய்வதில் ஆசிரியருடைய ஆழ்ந்த கவனத் தையும் அக்கறையையும் உணர்த்துகின்றன.

நூலின் தொடக்கத்தில் மூன்று பாடல்களும் இறுதியில் ஒரு பாடலும் காணப்பெறுகின்றன. தொடக்கப் பாடல்கள் கணபதி, வாணி, சுப்பிரமணியர் ஆகியோரைக் காப்பாகக் கூறுவன. இறுதிப்பாடல் வருமாறு.

மாணிக்க வாசகர் வாய்மலர்ந்
தன்றுமன் றாடினர்மேற்

பேணிக் கொளச்சொன்ன கோவையி
லேபற்றிப் பின்படர்ந்து
பேணிக்கங் காநதி யீன்றோர்
பழநிச்செவ் வேள்கடம்பிற்
பாணிக்கொள் வேலிற் படர்ந்திந்தக்
கோவை பழுத்ததுவே.

*இது பழநிக்கோவை திருச்சிற்றம்பலக் கோவையை அடியொற்றிவருவது என்று உணர்த்துகின்றது.*

*'நூலாசிரியர் பழமொழிகளைக் கூறுவதில் பெரு விருப்புடையவர். பெரும்பாலும் தவறாமல் பாடல்தோறும் ஒரு பழமொழியைக் குறிப்பிடுகின்றார்.*

நெடுமா தவனும் குறுமா
தவனும் நிலமுவரி
தடுமாறக் கால்கைக் கடங்கிவிட்
டாங்கிவள் தன்மையில்நீ
தொடுமா தவத்தவர் தொட்டாற்
பெருகும்விட் டாற்சுருங்கும்
கடுமான் மகள்கொண்கர் வையாபுரிமன்ன
கண்டு கொள்ளே.

*என்பது ஒரு பாடல். **'கால் கைக்கு அடங்கிவிட்டாற் போல',** என்பது பழமொழி. இன்னும் **'பாற்சூடுதீண்டப் பயந்தோர் பின் ஆற்றிப் பருகுவபோல்'** என்பது மிகவும் அரிய பழமொழி. **'கொம்பில் தேன்வைத்து உண்ணாது பல் பூ நாக்குரு ஈந்திரன்',** என்பது உலகியலை நன்கு விளக்குவது. **'பைந்தமிழ் நூல் அறிந்து மறந்தவன் தேர்ந் தது போல'** என்பது ஒரு சுவையான பழமொழி.*

*முந்தைய தமிழாசிரியர்களில் தொல்காப்பியர், காக்கைப் பாடினியார், நக்கீரர், சம்பந்தர், சுந்தரர், திருவாத வூரர், பொய்யாமொழியார் ஆகியோரைக் குறிப்பிடுகின்*

றார். அருணகிரியார் என்றும் அருணைப் பெரும்புலவர் என்றும் சொல்லுகின்றார். திருமுருகாற்றுப் படைக்குத் தோற்றுவாயாகச் சொல்லப்படும் கதையை **'எம்மைக் கீரன் பிரித்து விட்ட திரிதாள் அரசிலை போல் விதி நீக்கும்'** என்கின்றார். பண்தமிழ் முருகாற்றுப் படை என்பார். அருணகிரிக்கு ஆதரவு தந்த பிரபுட தேவமாராய னைக் குறிப்பிடுகின்றார். சங்கரமாமுனி என்றொருவரைக் கூறுகின்றார். **'இங்குடல் அங்குயிர்'** என்ற தொடர் நந்திக் கலம்பகத்தைக் கருதியதாகும். இவர் குறிப்பிடுகின்ற பண்டைய செய்திகள் அளவில்லாதன.

ஆசிரியர் பெயர் அறியக்கூடவில்லை. எனினும் சிறந்த புலமையுடையவர். முருகன்பால் ஈடுபாடுமிக்கவர். தமிழில் சிறந்த மரபுணர்ந்தவர் என்பதை இவர் நூலால் அறியப் பெறுவனவாம்.

*(4)* **வெங்கைக் கோவை:** இதனைப் பாடியருளினவர் துறை மங்கலம் சிவப்பிரகாச அடிகள் என்ற வீர சைவச் சான்றோர். அடிகளார் அருளிய பிரபந்தத் திரட்டும் அதில் அடங்காத பிரபுலிங்க லீலையும் கற்பனைக் களஞ்சியங்கள். இவற்றை அருளிய சிவப்பிரகாச அடிகளும் ஒரு கற்பனைக் களஞ்சியம். இவர் வெங்கை[27] என்ற ஊருக்குக் கோவை, கலம்பகம், உலா என மூன்று பிரபந்தங்களைப் பாடியுள்ளார். இவர் செய்த நூல்களுள் மிகச் சிறப்பு வாய்ந்தது நால்வர் நான்மணிமாலை. சமயகுரவர் நால்வருக்கும் நான்குமணிகள் விரவி நாற்பது பூக்களால் அழகிய மாலை தொடுத்தார். இந்த நூலில் திருவாசகம்

27. துறைமங்கலம்-திருவள்ளுவர் மாவட்டம் பெரம்பலூர் வட்டத்தில் சென்னை-திருச்சி நெடுஞ்சாலையில் திருச்சிக்கு வடக்கே சுமார் 30 கல் தொலைவில் உள்ளது. இப்போது 'வெங்கனூர்' என வழங்குவது.

*அருளிய மணிவாசகப் பெருமான்மேல் உள்ளத்தைப் பறி கொடுத்து விட்டார்.*

திருவா சகம்இங்கு ஒருகால் ஓதின்
கருங்கல் மனமும் கரைந்துஉக; கண்கள்
தொடுமணற் கேணியில் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் சிலிர்ப்ப விதிர்விதிர்ப்பு எய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை உலகில் மற்றையர் இலரே

*என உருகிய அடிகளார் நூலின் இறுதியில் மணிவாசகப் பெருமானை விளித்து 'பூவெனப்படுவது உன்பாட்டு' என்று பகர்வார். இஃது எதுபோலவெனின், உலகிலுள்ள மலர்களெல்லாம் பூக்கள் என்றாலும் திருமகள் தங்கியுள்ள தாமரையையே 'பூ' என்று கூறுதல் போல, பூவெனப் படுவது. பொறிவாழ் பூவே' எனப் போற்றுவார்.*

*இனி இவர் படைத்த வெங்கைக் கோவையை நோக்குவோம். சிறப்புப் பாயிரம், காப்பு நீங்கலாக கட்டளைக் கலித்துறையாலாகிய 426 செய்யுட்களை உடையது.*

எவைக்கடக் கும்விழி யாரைவென்
றவிய லுடையான்
காலைப்பொ ருவும்சிவப் பிரகாசக்
கடவு ளென்போன்
பாவைப்பல முடையானும் உணர்வோர்
கள்படித் துணரக்
கோவைத்தமிழ் நந்திதிரு வெங்கை
வாணர்க்குக் கூறினனே.

*என்பது சிறப்புப் பாயிரம் வெங்கைக்கோவையைச் சிவபிரகாசனான தான் உரைத்ததாக மொழிகின்றார்.*

*காப்பாக வருவது விநாயகப்பெருமான் வணக்கம் சொல்வது.*

பூவை மலர்நிறத் தெம்பெரு
மாட்டி பொருப்பரையன்
மாயை வளர்க்குங் கிளிமுன்கை
யாளொரு பான்மருவும்
தேவை வளர்சடைத் தென்வெங்கை
வாணனைச் சேர்ந்துவரும்
கோவை படர்வதற் குள்ளுறவாம்
ஒற்றைக்கொம்பனையே.

*இக்கோவை தஞ்சைவாணன் கோவையை படிச் சந்தமாகக் கொண்டு அமைக்கப் பெற்றமை தெளிவாகத் தெரிகின்றது. இது 17 கிளவித் தொகைகளைக் கொண்ட களவியல், 2 கிளவித் தொகைகளைக் கொண்ட வரைவியல் 7 கிளவித் தொகைகளைக் கொண்ட கற்பியல் என்ற மூன்று பகுதிகளையும் 426 பாடல்களையும் கொண்டது. சில துறைப்பாடல்களைக் காட்டுவேன்.*

***துறை: கற்றபாங்கன் கழறல்.***

*அதாவது. வேதாகம புராணமெல்லாம் கற்றறிந்த பார்ப் பனப் பாங்கன் தலைவனை இடித்துரைத்தல் அதற்குப் பாடல்:*

பேதைப் பொதிந்திட் டிருடுங்
களகப் பொருப்பமைய
மாதைக் கலந்ததிரு வெங்கைவாணர்
மதுரைச் சங்க
மேதைப் பகுந்தமிழ்ப் பாற்கடல்
நீந்திய வீரமொடு
பேதைக் குடைந்து நின்றாய்
தகுமோசொல் பெருந்தகையே (45)

*'தமிழ்ப்பாற்கடலை கடந்த நீ ஒரு பேதைக்குடைந்து நின்றனை. இது நின்பெருமைக்கு உகந்ததோ?' என்று பாங்கன் கழறி உரைப்பது இது.*

**துறை: தலைவனை வியத்தல்.**

*அதாவது- தலைவன் நிலைக்கு இரங்கிய பாங்கன், 'இத்தகைப் பேரழகைக் கண்டு மீண்டு வந்து நம்மை அடைந்தானே, இவன் மனவுறுதி என்னே!' எனத் தலைவனை வியந்து கூறா நிற்றல். அதற்குப் பாடல்.*

சூடும் பிறையர் திருவெங்கை
வாணர் சுடர்க்கிரிமேல்
பாடும் கவியுள் அடங்காக்
கவினுடைப் பாவையன்னார்
கூடும் குவிமுலைக் குன்றும்
கண்வேலையும் கூந்தல்நெடுங்
காடும் கடந்து வந்தான்
மிகவீரன்எம் காவலனே (57)

**துறை: தலைவியை வியத்தல்**

*அதாவது-இவ்வாறு தலைவனை வியந்த பாங்கன் 'இத்தகைய பெருவீரனாகிய நம் இறைவன் வருந்துமாறு செய்யவல்ல வளாதலால், இவளும் பேராற்றலுடையாள்' என வியந்து கூறாநிற்றல். அதற்குப் பாடல்:*

பருத்தகு விமுலைப் பாரத்தி
னால்கடற் பங்கயத்தில்
இருத்த லரிதென வந்துவன்
பூவி லிருக்குமிவர்
விருத்த கிரிமகிழ் வெங்கைவெற்
போன்மயல் வெள்ளம்கொண்டு
விருத்த விதயமலர் மீதிருந்
திடவல் லவரே. (58)

***துறை:*** *பாங்கி தலைமகற்குக் குறியிடம் கூறல்.*

*பகற்குறியிடத்தே தலைவன் தலைவியைக் கூடுமிடத் தடையாளம் கூறாநிற்றல். அதற்குப்பாடல்.*

அகலி லிருக்குஞ் சுடரென
வெங்கை யகத்திருக்கும்
புகலி லிருக்கும் பொருளனையார்
தம்பொருப் பருகே
இகலி லிருக்கும் கதிர்வே
லிறைவ விரற்கடும்
பகலி லிருக்கும் பொழில்பகல்
யாங்கள் பயிலிடமே**(133)**

***துறை: குறியுய்த்தகறல்:*** *அதாவது-பாங்கி, குறியிடத்துத் தலைமகளை நிறுத்தித்தான் அகன்று போதல். அதற்குப் பாடல்*

காதா ரமுதம் பெறவேண்டி
யன்றொரு காரிகையால்
தூதாய் நடந்ததிரு வெங்கை
வாணர் சுடர்கிரிமேல்
போதார் மலர்மல் லிகையோடு
முல்லையும் போய்க்கொணர்வேன்
பாதார விந்தம் வருந்தா
திவண்நிற்க பைங்கொடியே**(179)**

***துறை:*** *நற்றாய் தமருக்கு அறத்தொடு நிற்றல்.*

*அதாவது-நற்றாயானவள் செவிலி முன்னிலை மொழியால் அறத்தொடு நின்ற செய்தியைத் தமருக்கு வெளிப்படையாய்க் கூறா நிற்றல். அதற்குச் செய்யுள்:*

வேலோடு வாளும் பயினமர்
கானம் விளங்கிழையைப்

பாலோடு தேன்கலந் தாங்கிள
வாளை பணைமருதச்
சேலோடு பாயும் திருவெங்கை
வாணர், சிலம்பிநெடு
மாலோடு மானு மொருவே
லவற்கு மணம்செயுமே(308)

*துறை: தலைமகளை யுடன்கொண்டு சுரத்துச் செல்லா நிற்றல். அதற்குப்பாடல்.*

கொடும்பா விகளு மொருமா
தவிப்பயன் கொள்வரென
நெடும்பார் மிசையின் றறிதாம்
விழிபொழி நீர்பெருகச்
சுடும்பா லையிலுன் திருவடித்
தாமரை தோய்ந்தமையால்
அடும்பா தகநஞ்ச முண்டமை
வார்வெங்கை யாரணங்கே (320)

*இத்துடன் நிறுத்தி, மேலுள்ள அகப்பாடல்கள் படிப்பதற் கினிமையாயிருத்தலின், அவற்றைப் படித்து நுகரலாம்.*

## 6. பிள்ளைத்தமிழ் நூல்கள்

*தமிழ் இலக்கியப் பரப்பில் காலந்தோறும் சிறப்பான சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன. பெருங்காப்பியப் புலவராகும் தகுதியில்லாத சாமானியப்புலவர்கள் அதிகமாகப் பிரபந்தம் பாடியுள்ளனர். மற்றும் காப்பியம் இயற்றுவதற்கு ஏற்ற சூழ்நிலை இல்லாதபோது பெரும் புலவர்கள் கூட சிற்றிலக்கியம் படைத்துள்ளனர். சிற்றிலக்கிய வகையில் பிள்ளைத் தமிழும் ஒருவகை. பிள்ளைத் தமிழ் மூன்றாம் மாதம் முதல் இருபத்தோராம் மாதம் வரையிலும் அமைந்த மாதங்களுள் ஒற்றித்த மாதங்களில் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம்,*

வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்று வைத்துப் பாடுவர். சிற்றில் சிறுபறை, சிறுதேர் என்று ஆண் பால் பிள்ளைத் தமிழில் வருனவற்றிற்குப் பதிலாக சிற்றில் இழைத்தல், சிறுசோறாக்கல், ஊசல் என்பவற்றைப் பெண் பாற்பிள்ளைத் தமிழில் வைத்துப் பாடுவர். இங்குக் கழங்கு, அம்மானையையும் சேர்த்துக் கொள்வர். இத்தகைய இலக்கணம் அமைந்த சைவத்தைச் சார்ந்த பிள்ளைத் தமிழ் நூல்கள் சிலவற்றை ஈண்டுக் காண்போம்.

*(1)* **திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ்:** இந்நூல் முருகன் அன்பர்களிடையே மிகுபுகழுடன் வழங்கிவருகின்றது. இதனை இயற்றியவர் பகழிக் கூத்தர்.[28] இவர் இராமநாதபுர மாவட்டம் **'சன்னாசி'** எனற சிற்றூரில் பிறந்தவர். இவ்வூர் இப்போது வீரநாராயணச் சதுர்வேதிமங்கலம் என வழங்குகின்றது. இவர் முன்னோர் திருப்புல்லாணியில் தருப்பசயனத்தே அறிதுயில் கொண்டருளும் **தருப்பாதன அழகியார்** என்ற திருநாமம் கொண்ட இராமபிரான் அடியார்கள். தந்தை பெயர் தருப்பாதனன். பகழிக் கூத்தர் என்ற பெயரால் அறியப்பெறும் புலவர் ஒருவரே; அவரே இவர். இவர் இரும்புவேலை செய்யும் கொல்லர் மரபினர் என்பர். இயற்பெயர் கூத்தர்; அம்புகள் செய்து வந்த பரம்பரையாதலால் **பகழிக்கூத்தர்** எனப்பெற்றார் எனவும் (பகழி–அம்பு) சிலர் சொல்வதுண்டு. பார்ப்பனர் என்றே பலரும் கூறியுள்ளனர்; பாடலும் கூறும். அன்றியும் சேதுபதி களின் பழைய தலைநகரான **'புகலூர்'** என்ற ஊரிலுள்ள ஐயனார் (அரிகரபுத்திரர்) திருநாமம் பகழிக்கூத்தர் என்றும் பகர்வர். வடமொழி தென்மொழி இரண்டிலும் புலமை மிக்கவர். வயிற்று வலியால் துன்புற்ற இவர் முருக பக்தராகி இப்பிள்ளைத் தமிழ்பாட, அவ்வலி நீங்கியதாக வரலாறு உண்டு.

---

28. 15-ஆம் நூற்றாண்டுத் தொடக்க காலம்.

**நூல்:** பிற பிள்ளைத்தமிழ் போலவே இதுவும் காப்பு முதல் சிறுதேர் ஈறாகப் பத்துப் பருவங்களையுடையது. பாடல் தொகை 103. முத்தம், வாரானை, அம்புலியாகிய பருவங்கள் மட்டும் 11 பாடல்கள். **'பூமாது' 'செந்தமிழ்'** என்ற முதற்குறிப்பினையுடைய இரண்டு வெண்பாக்களும் அவையடக்கப் பாடல் ஒன்றும் நூல்முகப்பில் உள்ளன. நூற்பயன் கூறும் ஆசிரியவிருத்தம் ஒன்று இறுதியில் உள்ளது. 'திருச்செந்தில் மயில்வாகனக்கடவுள் எம் குரு நாதன். இனிய பிள்ளைத்திரு நாமம் எழுதுவார்... கற்பார், படிப்பார்... சிவபதம் எய்துவரே' என்று இது கூறுகின்றது. நூல்முடிவு சிறுதேர். இறுதியில் ஐந்து பாடல்களும் அறுசீர் விருத்தமாக உள்ளவை. இங்கு வழக்கமாய்ப் பருவத்திற்கு மகுடமாய்ப் பாடல்தோறும் "உருட்டுக சிறுதேரே" என்று வருகின்ற தொடர் ஒவ்வொரு பாடலிலும் நான்கடியின் மிக்கு ஐந்தாம் அடியாக அமைக்கப்பெற்றுள்ளது:

உரகநாயகன் பஃறலை பொடிபட
உருட்டுக சிறுதேரே.

இவ்வாறுள்ள அமைப்பு பிற பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தங் களில் காண்டல் அரிது.

**நூற்பொருள்:** பல இடங்களில் மிகவும் சிறப்பாய் அமைந்துள்ளது. முருகன் அவதாரம் (13), படைவீடுகள் (80), முருகன் பரத்துவம் (98), என்பன சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை. சிறுதேர் நாலாம் பாடலில் விளங்காத தல வரலாறுகளைக் குறிப்பிடுகின்றார். கொடிமரம், எருமை, இளநீர் என்பன. 10-ஆம் பாடலில் முத்துக்குரிய 34 குற்றங்களை நிரலே கூறுவதும் அருமையான செய்தி. உள்ளத்தை உருக்கும் மூன்று பருவத்து ஐந்துபாடல்களை ஈண்டுக் காட்டுவேன்.

## முத்தப்பருவம்

கத்தும் தரங்கம் எடுத்தெறியக்
கடுஞ்சூழ் உளைந்து வலம்புரிகள்
கரையில் தவழ்ந்து வாலுகத்திற்
கான்ற மணிக்கு விலையுண்டு;

கத்துங் கரட விகடதட
தந்திப் பிறைக்கூன் மருப்பில்விளை
தரளந் தனக்கு விலையுண்டு;
தழைத்துக் கழுத்து வளைந்தமணிக்

கொத்துஞ் சுமந்த பசுஞ்சாலிக்
குளிர்முத் தினுக்கு விலையுண்டு;
கொண்டல் தருநித் திலந்தனக்குக்
கூறும் தரமுண்டு; உன்கனிவாய்

முத்தம் தனக்கு விலையில்லை;
முருகா முத்தம் தருகவே;
முத்தம் சொரியும் கடலலைவாய்
முதல்வா முத்தம் தருகவே (70)

கலைப்பால் குறைந்த பிறைமுடிக்குங்
கடவு ளுடலின் விளைபோகங்
கனலி கரத்தி லளிக்க வந்தக்
கனலி பொறுக்க மாட்டாமல்

மலைப்பால் விளங்குஞ் சரவணத்தில்
வந்து புகுந்த ஓராறு
மடவார் வயிறு சூலுளைந்து
மைந்த ரறுவர்ப் பயந்தெடுப்பக்

கொலைப்பால் விளங்கும் பரசுதரன்
குன்றி லவரைக் கொடுசெல்லக்

கூட்டி யணைத்துச் சேரவொரு
கோல மாக்கிக் கவுரிதிரு

முலைப்பால் குடித்த கனிவாயால்
முருகா முத்தம் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முருகா முத்தம் தருகவே(71)

## வாரானைப் பருவம்

எள்ளத் தனைவந் துறுபசிக்கும்
இரங்கிப் பரந்து சிறுபண்டி
யெக்கிக் குழைந்து மணித்துவர்வாய்
இதழைக் குவித்து விரித்தழுது

துள்ளித் துடித்துப் புடைபெயர்ந்து
தொட்டில் உதைத்து பெருவிரலை
சுவைத்துக் கடைவாய் நீரொழுகத்
தோளின் மகரக் குழைதவழ

மெல்லத் தவழ்ந்து குறுமுரல்
விளைத்து மடியின் மீதிருந்து
விம்மிப் பொருமி முகம்பார்த்து
வேண்டு முமையாள் களபமுலை

வள்ளத் தமதுண் டகமகிழ்ந்த
மழலைச் சிறுவா வருகவே
வளருங் களபக் குரும்பை முலை
வள்ளிக்கணவா வருகவே (72)

பேரா தரிக்கும் அடியவர்தம்
பிறப்பை யொழித்துப் பெருவாழ்வும்
பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமான் என்னும் பேராளா

சேரா நிருதர் குலகலகா
சேவற் கொடியாய் திருச்செந்தூர்த்
தேவா தேவர் சிறைமீட்ட
செல்வா வென்றுன் திருமுகத்தைப்

பாரா மகிழ்ந்து முலைத்தாயர்
பரவிப் புகழ்ந்து விருப்புடனப்
பாவா வாவென் றுனைப்போற்றப்
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்

வாரா திருக்க வழியுண்டோ
வடிவேல் முருகா .வருகவே
வளருங் களபக் குரும்பை முலை
வள்ளிக் கணவா வருகவே (73)

## சிற்றில் பருவம்

தையல் மடவா ரிழைத்த வண்டல்
தன்னை யழிக்கு மதுக்கல்ல
தரள முறுத்தி யுனது பொற்பூந்
தண்டைத் திருத்தா டடியாதோ

துய்ய தவளப் பிறைமுடிக்குஞ்
சோதி யெடுத்து முகத்தணைத்துத்
தோளி லிருந்தும் பொழுதுமணித்
தோளிற் புழுதி தோயாதோ

வைய மனைத்தும் ஈன்றெடுத்தும்
வயது முதிரா மடப்பாவை
மடியி லிருத்தி முலையூட்டி
வதனத் தணைக்கி லுன்கழற்கால்

செய்ய சிறுதூள் செறியாதோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திசைமுத் தெறியும் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. (74)

சென்ற தலைமுறையில் *'பேராதரிக்கும்'* என்ற பாடலைக் கேட்டு உருகாதவர் தமிழருள் இரார். உருக்கமாய்ப் பாடிய இசைத்தட்டின் மூலம் இது மிகுபுகழ் பெற்றிருந்தது.

(2) ***மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்:*** குமரகுருபர சுவாமிகள் அருளியது.[29] கடவுள் வாழ்த்தாக விநாயகர் துதியாக ஒரு பாடலும், நூல் காப்புப் பருவம் முதல் ஊசற்பருவம் முடிய பத்துப் பருவங்களில் 102 பாடல்கள் கொண்டது இப்பனுவல். காப்புப் பருவத்தில் மட்டிலும் 12 பாடல்கள் உள்ளன. இவர் அம்மானைப் பருவம் பாடியது ஒரு சிறப்பு; எவரும் கைவைக்காதது. இப்பனுவலில் ***"தொடுக்குங்கடவுள் பழம்பாடல்"*** (61) என்ற முதற்குறிப்புடைய பாடல் மிகுபுகழ்பெற்றது; கே.பி. சுந்தராம்பாள் பாட ஒலித்தட்டில் பதிவு செய்யப்பெற்று கேட்டோரை 'மனங்கரைத்து மலங்கெடுக்கும்' தன்மை வாய்ந்தது என்பதைத் தமிழ்கூரு நல்லுலகம் நன்கு அறியும்.

நெஞ்சை உருக்கும் சில பாடல்கள் ஈண்டுக் காட்டப் பெறுகின்றன.

## முத்தப்பருவம்

பின்னற் றிரைக்கடன் மதுக்குட மறந்தேக்கு
பெய்முகிற் காருடலவெண்
மிறைமதிக் கூன்குயக் கைக்கடைஞ ரொடுபுடை
பெயர்த்திடை நுடங்கவொல்கும்

மின்னற் றடித்துக் கரும்பொற் றொடிக்கடைசி
மெல்லியர் வெரீஇப்பெயரவான்
மீன்கணம் வெருக்கொள்ள வெடிவரால் குதிகொள்ளும்
விட்புலம் விளைபுலமெனக்

29. இவர் வரலாறு கலம்பகநூல்களில் (3) 'மதுரைக் கலம்பகம்' என்ற தலைப்பின்கீழ்க் காண்க. இந்நூல் பக். 309

கன்னற் பெருங்காடு கற்பகக் காட்டுவளர்
கடவுண்மா கவளங்கொளக்
காமதே னுவுநின்று கடைவாய் குதட்டக்
கதிர்க்குலை முதிர்ந்துவிளையும்

செந்நெற் படைப்பைமது ரைப்பதி புரப்பவள்
திருப்பவள முத்தமருளே
சேல்வைத்த ஒண்கொடியை வலம்வைத்த பெண்கொடி
திருப்பவள முத்தமருளே(7)

*(கடன் மதுக்குடம்-கடலாகிய மதுக்குடம்; அற-முழுவதும்; தேக்கு-நிறைய உண்ட; கடைஞர்- மள்ளர்; கூன்குயம்-வளைவையுடைய அரிவாள்; கரும்பொன்-இரும்பு; தொடி-வளையல்; வான் மீன்கணம்-நட்சத்திரக் கூட்டம்; வரால்-துள்ளும் வரால் மீன்; விளை புலம்-வயல்; கன்னல்-கரும்பு; கடவுண்மா- ஐராவதம்; குதட்ட-அசைபோட; படைப்பை-வயல்)*

சங்கோ லிடுங்கடற் றானைக்கு வெந்நிடு
தராபதிகண் முன்றிலூர்த்த
தமனியக் குப்பையுந் திசைமுதல்வர் தடமுடித்
தாமமுந் தலைமயங்கக்

கொங்கோ லிடுங்கைக் கொடுங்கோ லொடுந்திரி
குறும்பன் கொடிச்ச ுவுநின்
கொற்றப் பதாகைக் குழாத்தினொடு மிரசதக்
குன்றினும் சென்றுலாவப்

பொங்கோல வேலைப் புறத்தினொ டகத்தினிமிர்
போராழி பருதியிரதப்
பொங்காழி மற்றப் பொருப்பாழி யிற்றிரி
புலம்பைப் புலம்புசெய்யச்

செங்கோ றிருத்திய முடிச்செழியர் கோமகள்
திருப்பவள முத்தமருளே

சேல்வைத்த ஒண்கொடியை வலம்வைத்த பெண்கொடி
திருப்பவள முத்தமருளே (8)

*(வெந்நிடு-புறங்காட்டும். தராபதிகள்-அரசர்கள்; முன்றில்-முற்றம்; தமனியக்குப்பை-பொற்குவியல்; திசை முதல்வர்-திக்குப்பாலகர்; தாமம்-மாலை; தலை மயங்க-கலந்து கிடப்ப; கொங்கு-நறுமணம்; குறும்படை-மன்மதன்; பதாகை-கொடி; இரதக் குன்று-கைலாயம்; போராழி-ஆஞ்ஞாசக்கரம்; ஆழி-தேர் உருளை; செழியர்-பாண்டியர்)*

## வருகைப்பருவம்

தொடுக்கும் கடவுள் பழம்பாடல்
தொடையின் பயனே; நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் வொழுகுநறுஞ்
சுவையே; அகந்தைக் கிழங்கை யகழ்ந்து

எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கு
ஏற்றும்விளக்கே; வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே; எறிதரங்கம்

உடுக்கும் புவனங் கடந்து நின்ற
ஒருவன் திருவுள் ளத்திலழ
கொழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிரோ வியமே; மதுகரம்வாய்

மடுக்கும் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே வருகவே;
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே; வருக வருகவே (9)

*(கடவுட்பழம்பாடல்-வேதம்; நறை-தேன்; துறைத்தீந் தமிழ்-அகமும் புறமும் ஆகிய துறைகளையுடைய இனிய*

*தமிழ்; அகந்தை-ஆணவம்; தொழும்பர்-அடியார்; சிமயம்-சிகரம்; ஒருவன்-சிவபெருமான்; மது கரம்-வண்டு; பிடி-பெண் யானை; தரங்கம்-அலை; குழற்கா-குழலாகிய காடு)*

பெருந்தேன் இறைக்கும் நறைகூந்தற்
பிடியே வருக; முழுஞானப்
பெருக்கே வருக; பிறைமௌலிப்
பெம்மான் முக்கட் சுடர்க்கிடுதல்

விருந்தே வருக; மும்முதற்கும்
வித்தே வருக; வித்தின்றி
விளைந்த பரமா னந்தத்தின்
விளைவே வருக; பழமறையின்

குருந்தே வருக; அருள்பழுத்த
கொம்பே வருக; திருக்கடைக்
கொழித்த கருணைப் பெருவெள்ளம்
குடைவார் பிறவிப் பெரும்பிணிக்கோர்

மருந்தே வருக; பசுங்குதலை
மழலைக் கிளியே வருகவே;
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக; வருகவே(10)

*(மும்முதல்-பிரமன் முதலிய மும்மூர்த்திகள்; குருந்து-குருத்து)*

## அம்மானைப் பருவம்

கள்ளூறு கஞ்சக் கரத்தூறு சேயொளி
கலப்பச் சிவப்பூறியும்
கருணைப் பெருக்கூற அமுதூறு பார்வைக்
கடைக்கண் கறுப்பூறியும்

நள்ளூறு மருவூ றகற்றுமுக மதியில்வெண்
ணகையூறு நிலவூறியும்
நற்றூள வம்மனையோர் சிற்குணத் தினைமூன்று
நற்குணங் கதுவல் காட்ட

உள்ளூறு களிதுளும் பக்குரவ ரிருவீரும்
உற்றிடு துவாதசாந்தத்
தொருபெரு வெளிக்கே விழித்துறங் குந்தொண்டர்
உழுவலன் பென்புருகநெக்

கள்ளூற வுள்ளே கசிந்தூறு பைந்தேறல்
அம்மானை யாடியருளே பகுந்த
ஆகங் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை யாடியருளே (3)

*(நள்ளூறு-நடுவிலே அமைந்த; சிற்குணம்-சித்தினது குணம்; சித்து-ஆன்மா; மூன்று நற்குணம்-சத்துவ இராசச தாமசகுணங்கள்; விழித்துறங்கும் தொண்டர்: தொண்டர் என்புருக ஊறுதேறல்.*

தமரான நின்றுனைச் சேடியரி லொருசிலர்
தடக்கையி னெடுத்தாடுநின்
தரளவம் மனைபிடித் தெதிர்வீசி வீசியிட
சாரிவல சாரிதிரியா

நிமிராமு னம்மனயொ ராயிர மெடுத்தெறிய
நிரைநிரைய வாய்க்க கனமேல்
நிற்கின்ற தம்மைநீ பெற்றவகி லாண்டமும்
நிரைத்துவைத் ததுகடுப்ப

இமிரா வரிச்சுரும் பார்த்தெழப் பொழிலூ
டெழுந்தபைந் தாதுலகெலாம்
இருள்செயச் செய்துநின் சேனா பராகமெனும்
ஏக்கமன காபுரிக்கும்

அமரா பதிக்குஞ்செய் மதுரா புரித்தலைவி
அம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகுத்தபெண்
அம்மானை யாடியருளே (5)

*(திரியா-திரிந்து; திரை-வரிசை; நிற்கின்றது-நிற்கும் காட்சி; நிரைத்து வைத்தது-வரிசைப்படுத்தி வைத்த செயலை; திமிரா-ஒலித்து; சேனாபராகம்-சேனையின் மிகுதி)*

முத்தம முத்திய அம்மனை கைம்மலர்
முளரிம ணங்கமழ
மொய்குழல் வண்டுநின் மைவிழி வண்டின்
முயங்கி மயங்கியிடக்

கொத்து மணித்திர ளிற்செயு மம்மனை
குயிலின்மி ழற்றியநின்
குழலினி சைக்குரு கிப்பனி தூங்கு
குறுந்துளி சிந்தியிட

வித்துரு மத்திலி ழைத்தவு நின்கை
விரல்பவ ளத்தளிரின்
விளைதரு மொள்ளொளி திருடப் போவது
மீள்வது மாய்த்திரிய

அத்தன் மனத்தெழு தியவுயி ரோவியம்
ஆடுக அம்மனையே
அழகு தழைத்தகல் யாண சவுந்தரி
ஆடுக அம்மனையே(7)

*(மணி-மாணிக்கம்; குழலினிசை-வேய்ங்குழல் போன்ற இசை; வித்துருமம்-பவளம்)*

கைம்மல ரிற்பொலி கதிரமுத் தம்மனை
நகைமுத் தொளிதோயக்

கண்டவர் நிற்கப் பிறர்சிலர் செங்கைக்
 கமலச் சுடர்கதுவச்

செம்மணி யிற்செய் திளைத்தன வெனவும்
 சிற்சிலர் கட்கடையின்
செவ்வியை வவ்விய பின்கரு மணியிற்
 செய்தன கொல்லெனவும்

தம்மன மொப்ப வுரைப்பன மற்றைச்
 சமயத் தமைவுபெறார்
தத்தமி நின்று பிதற்றுவ பொருவத்
 தனிமுதல் யாமென்பார்

கம்மனை யாயவர் தம்மனை யானவள்
 ஆடுக அம்மனையே
அழகு–தழைத்தகல் யாண சவுந்தரி
 ஆடுக அம்மனையே **(9)**

(நிற்க–ஒன்றும் கூறாமல்; தனிமுதல் யாமென்பார்–சிவபெருமான்; அம்மனை–தாய்; தம்மனை–மனைவி;

*இங்குச் காட்டப்பெற்ற பாடல்களை ஆழ்ந்து கற்று அநுபவித்தால் பக்தியுணர்வு கொடுமுடியை எட்டுதலைக் காணலாம்.*

***(3) முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்:*** *இப்பனுவலை அருளியவர் குமரகுருபர அடிகள்.*

'மருகிருக்கும் வயித்திமகன் குறமகளை
 மணந்தான் என்று
உருகி அரன் நஞ்சுண்டான்

*என்பது காளமேகப் புலவரின் வாக்கு. வயித்தி–வைத்தீசுவரன்–சிவபெருமான். மகன்–முத்துக்குமாரசுவாமி வைத்தீசுவரன் கோயிலில் தந்தையைவிட மகனுக்குத்தான் புகழ்*

கனியக்கனிய அமுதூறும்
கடவுள் மறையு முதற்சங்கத்

தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியும்
தண்டேன் நறையும் வடித்தெடுத்த
சாரம் கனிந்தூற் றிருந்தபசுந்
தமிழும் நாறத் தடங்கரைகொல்

அலைப்பாய் புனற்றென் கடல்வைப்பும்
அகிலாண் டமும்பன் முறையீன்றும்
அழகு முதிர முதிராவென்
அம்மை யமுது சூல்கொண்ட

முலைப்பால் நாறும் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்சேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே (4)

*(கலைப்பால்-நூற்பகுதிகள்; முதுக்குறை-பேரறிவு; கனிய-முதிர; ஊறும்-சுரக்கும்; மறை-வேதம்; பாவலர்-கவிஞர்; நறை-தேன்; கனிந்து-முதிர்ந்து; நாற-பரிமளிக்க; தடம்-பெரிய; புனல்-நீர்; தெண்கடல்-தெளிவாகிய கடல்; வைப்பு-உலகம்; ஈன்று-பெற்று; நாறும்-மணக்கின்ற)*

## வருகைப் பருவம்

மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல்
வெண்டுகில் மடித்தல நனைப்பவம்மை
மணிவயிறு குளிரத் தவழ்ந்தேறி
எம்பிரான் மார்பினிற் குரவையாடி

முழவுமுதிர் துடியினிற் சிறுபறை
முழக்கியனல் மோலிநீர் பெய்தவித்து

முளை மதியை நெளியரவின் வாய்மடுத்து
இளமானின் முதுபசிக் கறுகருத்தி
விழவுமுதிர் செம்மேனி வெண்ணீறு
தூளெழ மிகப்புழுதி யாட்டயர்ந்து
விரிசடைக் காட்டினின் றிருவிழிகள்
சேப்பமுழு வெள்ளநீர்த் துளையமாடிக்
குழவுமுதிர் செல்விப் பெருங்களி
வரச்சிறு குறும்புசெய் தவன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள்
குடிகொண்ட குமரகுரு பரன்வருகவே (2)

*(மழவு-இளமை; தேறல்-தேன்; துகில்; ஆடை; மடித்தடம்-மடியிடம்; மணிவயிறு-அழகிய வயிறு; முழவு-முழவு ஒலி; அனல்-நெருப்பு; மோலிநீர்-சடைநீர்; முளைமதி-பிறை; விழவு-அழகு; சேப்ப-சிவக்க; துளையம் ஆடி-மூழ்கி; குழவு-இளமை; களி-மகிழ்ச்சி)*

பைந்தண் கமல வட்டவணைப்
பாவை யனையார் பூவிரியும்
பசுமென் குழற்கூட் டகிற்புகையின்
படல மூட முடைநறவின்,
கந்தம் பொதிந்த செந்துவர்வாய்க்
கடைசி மகளிர் செந்நெலைப்பைங்
கன்ன லெனவும் கன்னலைப்பூங்
கமுகமெனவும் கடைக்கூடாத்
தந்தங் கருத்துக் கமைந்தபடி
சாற்றிச் சாற்றி முழுமாயச்
சலதி மூழ்கித் தடுமாறும்
சமயத் தவர்போல் தலைமயங்கும்

அந்தண் பழனக் கந்தபுரிக்
கரசே வருக வருகவே
அருளா னந்தக் கடற்பிறந்த
அமுதே வருக வருகவே (16)

*(பைந்தண்-பசுமையும் குளிர்ச்சியும் உள்ள; கமலம்-தாமரை; பாவை-திருமகளை நிகர்த்த; குழல்-கூந்தல்; படலம்-கூட்டம்; நறவு-கள்; கந்தம்-நாற்றம்; செந்துவர்வாய்-சிவந்த பவளம்போலும் அதரம்; கன்னல்-கரும்பு; கடைக்கூடா-முடிவுபெறாத; சலதி-கடல். தலைமயங்கும்-தடுமாறும்; பழனம்-வயல்)*

## சிற்றில் பருவம்

வழிக்குப் புறம்பா யாமிழைத்த
வண்டல் மனையவ் வசுரேசன்
வான்கூட் டுண்பா நடுக்கடலில்
வகுத்த நகரன் றிகழாமே

கொழிக்குஞ் சிறுமுற் றிலில்வாரிக்
கொடுவந் தடியே மனைமுன்றிற்
குவியா நின்ற மணிக்குவையைக்
குருகு பெயர்க்குன் றமுமன்றாற்

சுழிக்குண் டகழி வாய்மடுப்பச் சுடர்வால்
வளைத்தெண் சுடர்வாள் திரைக்கரத்தால்
சுரபி சொரிபான் மடையடைத்த
சோற்றி னோடுங் கலந்தூட்டிச்

செழிக்கும் தடங்கா விரிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேன் சிற்றில சிதையேலே. (3)

*(புறம்பாய்-ஒதுக்கமாக; வண்டல் மனை-மணல் வீடு; நடுக்கடலில் வகுத்த நகர்-மகேந்திரம்; அசுரேசன்-அசுரர் அரசன்; முற்றில்-சுளகு; குருகு பெயர் குன்றம்-கிரவுஞ்ச மலை; முன்றில்-முற்றம்; சுழி குண்டு அகழி-சுழிகளோடு கூடிய அகழி; மடுப்ப-விழ; சுரபி-பசு)*

## சிறுபறைப் பருவம்

மழைமுகில் பிளிறு முழக்கென
விரிசிறை மடமயில் மனமகவ
மாக்கட லோலிடு மொலியென
விரக மடந்தையர் மனநெகிழப்,

பழமறை யார்ப்பென வாகுதி
வேட்டெழு பண்ணவர் உள்மகிழப்
பரநா தத்தொலி யெனவனு
பூதி பலித்தவர் நெக்குருக,

அழவிர் சோதியெ மைய
நடஞ்செய் ஆயிர மங்கையினோர்
அண்ணல் துவைத்திடு குடமுழ
வொடுகுட ராழி யவன்கொட்டு

முழவென வமரரு முனிவரும்
ஆர்ப்ப முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி
முருகன் முழக்குக சிறுபறையே.

*(முகில்-மேகம்; பிளிறு-ஒலிக்கின்ற; சிறை-கலாபம்; மயில் இனம்-மயில் கூட்டம்; மாக்கடல்-பெரியகடல்; விரகம்-காமம்; நெகிழ-உருக; பண்ணவர்-தேவர்கள்; உள்-மனம்; நெக்குஉருக-நெகிழ்ந்து உருக; அழல்-அனல்; ஐயன்-இறைவன்; அண்ணல்-பெரியோன்; துவைத்திடு-முழக்குகின்ற; ஆழி-சக்கரம்.)*

*இப்பாடல்கள் படித்து இன்புறத்தக்கவை. இங்ஙனம் முருகனைப்பற்றி அந்தகக்கவி வீரராகவ முதலியார் அருளிய சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், மார்க்க சகாய தேவர் இயற்றிய திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், கந்தப்ப தேவர் படைத்த திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ், சிதம்பர சுவாமிகள் அருளிய திருப்போரூர் பிள்ளைத் தமிழ் போன்றவை மிகு புகழ்வாய்ந்தவை.*

## 7. அருணகிரிநாதர் படைப்புகள்

ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர்யார்?—வையகத்தோர்
சாற்றரிதுஎன்று ஏசற்றார் தன்அனையாய் முக்கண்எந்தை
நாற்றிசைக்கும் கைகாட்டி னான்[30]

*இப்புலவர் பெருமான் சுமார் 500 யாண்டுகட்கு முன்னர் திருவண்ணாமலையில் தோன்றியருளினவர். இவர் தம் இளமையில் கல்வியினை முறைப்படி ஒழுங் காகக் கல்லாதவர்; சிற்றின்பத் துறையில் அதிகமாக மூழ்கித் தமக்குரிய செல்வம் முதலிய அனைத்தையும் இழந்தவர்; நோய் வாய்ப்பட்டு நொந்தவர்.*

*இவர் இங்ஙனம் நோய்வாய்ப்பட்டு வருந்தித் துன்புற்ற பொழுது தம் முன்னைத் தவப்பேற்றால் ஆறுமுகப் பெருமான் குருவடிவாகி வந்து தடுத்தாட்கொண்டு அருள் புரிந்தனர். இவர் அனைத்துப் பற்றுகளையும் அறவே துறந்து சந்தப்பாக்களால் முருகப் பெருமான் திருப்புகழ் பாடிப் புகழ்வதே தமக்குரிய கடமையாகக் கொண்டு அப்பெருமான் எழுந்தருளியிருக்கும் தலங்கள் தோறும் சென்று அருட்பாக்களைப் பொழிந்து வந்தனர். இத் திருப் புகழ் பதினாறாயிரம் என்பர். ஆனால் இன்று ஏறக் குறைய ஓராயிரம் முந்நூறே நமக்குக் கிடைத்துள்ளது. (வ.சு.*

30. தா.பா. உடல் பொய்யுறவு-26

செங்கல்வராய பிள்ளை பதிப்பு). இவை ஆறுபடை வீடுகள் மேலனவாயும் பொதுவாயும் அமைந்து திகழ்கின்றன. இத் திருப்புகழ் முருகக்கடவுள் பூசைக் காலங்களில் அப்பிரானின் மந்திரமாகப் போற்றப் பெறுகின்றது. முருகப் பெருமான் திருவடி அன்புப் பயிர் வளர்வதற்கு இது சாலச் சிறந்த சந்தச் சுவடியாக அமைகின்றது.

இவர் இதுவேயன்றித் திருவகுப்பு, **கந்தரலங்காரம், கந்தரநுபூதி, கந்தரந்தாதி**[31] **வேல் விருத்தம், மயில் விருத்தம் திரு ஏழு கூற்றிருக்கை** முதலிய அருள் நூல்கள் பலவும் தமிழுலகம் உய்யவகைசெய்து அருளியுள்ளனர். இவருக்கு நேரிட்ட பல தொல்லைகளைக் கந்தக்கடவுள் அருளால் சமாளித்து இறுதிக்காலத்தில் கந்தரநுபூதியருளி அவர் திருவடி நிழல் எய்தினர் என்பது அவர்தம் வரலாறு. இவருடைய நூல்களில் 'செந்தில்' அதிகமாக வருவதால் திருச்செந்திலில் காலம் ஆனார் என்ற கருத இடம் உண்டு.

கந்தரநு பூதிபெற்றுக் கந்தரநுபூதி சொற்ற
எந்தையருள் நாடி யிருக்குநாள் எந்நாளோ?[32]

இனி இவர்தம் படைப்புகளை நோக்குவோம்.

*(1)* ***திருப்புகழ்:*** *சில தலங்கள்பற்றிய சில பாடல்களை மட்டிலும் காட்டுவேன்.*

***திரு அருணை:*** *இத்தலம்பற்றி முருகக் கடவுள் துதியாக ஒரு பாடல்:*

ஏறுமயி லேறிவிளை யாடுமுகமொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே

31. இந்நூல் பற்றிய குறிப்பை அந்தாதிகள் என்ற தலைப்பின் கீழ்க்காண்க. இந்நூல் பக். 300.
32. தா.பா: எந்நாட்கண்ணி-அடியார் வணக்கம்-8.

மாறுபடு சூரரைவ தைத்தமுக மொன்றே
வள்ளியைம ணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதிஅரு ணாசலம் அமர்ந்தபெரு மாளே.

*திருச்செந்தூர்: இத்தலம்பற்றி ஒருபாடல்:*

*தனதான தந்த தனதான தந்த*
*தனதான தந்த தனதான*

விறன்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து **வெயில்காய**
மிதவாடை வந்து தழல்போல வொன்றை
வினைமாதர் தத்தம் **வசைகூறக்**

குரவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப **மயல்தீரக்**
குளிர்மாலை யின்கண் ணிமாலை தந்து
குறைதீர வந்து **குறுகாயோ**

மறிமானு கந்தஇறையோன்ம கிழ்ந்து
வழிபாடு தந்த **மதியாளா**
மலைமாவு சிந்த அலைவேலை யஞ்ச
வடிவே லெறிந்த **அதிதீரா**

அறிவால றிந்து னிருதாளி றைஞ்சு
மடியாரி டைஞ்சல் **களைவோனே**
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவாயு கந்த **பெருமாளே**

*இங்ஙனமே வெவ்வேறு சந்தங்களில் பழநி, சுவாமிமலை, குன்றுதோராடல், பழமுதிர்சோலை, திருவிடைமருதூர், வயலூர், திருப்பரங்குன்றம் முதலான தலங்களுக்கும் திருப்புகழ்கள் உண்டு. பொதுவாகவும், பல சந்தப் பாடல்கள் உண்டு. எல்லாப் பாடல்களும் 'பெருமாளே' என்று முடியும். 'பொது'வுக்கு ஓர் எடுத்துக்காட்டு.*

*தானந்த தானத்தந் தனதான*

நீலங்கொள் மேகத்தின் **மயில்மீதே**
நீவந்த வாழ்வைக்கண் **டதனாலே**
மால்கொண்ட பேதைக்குன் **மணநாறும்**
மார்தங்கு தாரைத்தந் **தருள்வாயே**
வேல்கொண்டு வேலைப்பண், **டெறிவோனே**
வீரங்கொள் சூரர்க்குங் **குலகாலா**
நாலந்த வேதத்தின் **பொருளோனே**
நானென்று மார்தட்டும் **பெருமாளே**

*இங்கும் பல சந்தம் உண்டு, 'வாக்கிற்கு அருணகிரி' அல்லவா?*

*(2)* **திருவகுப்பு:** *இதில் சீர்பாத வகுப்பு, தேவேந்திர சங்க வகுப்பு, வேல் வகுப்பு, திருவேளைக்காரன் வகுப்பு, பெருத்த வசனவகுப்பு, பூதவேதாள வகுப்பு, பொருகளத் தலகை வகுப்பு... திருப்பரங்கிரி வகுப்பு முதலான பலவகை உண்டு.*

*எடுத்துக்காட்டு:*

**வேல் வகுப்பு**

*தனத்ததன தனத்ததன தனத்ததன*
*தனத்ததன தனத்ததன தனத்ததன*
*தனத்ததன தான*

பருத்தமுலை சிறுத்தவிடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தஇதழ் மறச்சிறுமி
விழிக்குநிக ராகும்

..................................

திருத்தணியி லுதித்தருளு மொருத்தன்மலை
விருத்தனென துளத்திலுறை கருத்தன்மயி
னடத்துகுகன் வேலே

**வேல்வகுப்பு**-வேலே என பாட்டு முடிகின்றது. இங்ஙனமே ஒவ்வொரு வகுப்பும் அந்தந்த பெயரில் முடியும் என்பது அறியப்படும்.

*(3) **கந்தரலங்காரம்:** காப்புச் செய்யுள் நீங்கலாக நூல் 100 கட்டளைக் கலித்துறையாலானது. இறுதியில் நூற்பயன் நுவலும் ஒரு பாடலும் உண்டு. நூலின்பாடல்களனைத்தும் நெஞ்சினை நீர்ப்பண்டமாக்கும் தன்மையன.*

அடல்அரு ணைத்திருக் கோபுரத்
தேஅந்த வாயிலுக்கு
வடஅரு கிற்சென்று கண்டுகொண்
டேன்;வரு வார்தலையில்
தடப டெனப்படு குட்டுடன்
சர்க்கரை மொக்கியகைக்கு
அடதட கும்பக் களிற்றுக்கு
இளைய களிற்றினையே.

*என்பது காப்பு.*

*நூலில் சில உருக்கமான பாடல்களைக் காண்போம்.*

மொய்தார் அணிகுழல் வள்ளியை
வேட்டவன் முத்தமிழால்
வைதா ரையும்அங்கு வாழவைப்
போன்வெய்ய வாரணம்போல்
கைதான் இருபது உடையான்
தலைபத்தும் கத்திரிக்க
எய்தான் மருகன் உமையாள்
பயந்த இளஞ்சீயமே. (22)

தண்டா யுதமும் திரிசூல
மும்விழத் தாக்கியுன்னைத்

திண்டாட வெட்டி விழவிடு
வேன்;செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியவென் னவிரோத
ஞானச் சுடர்வடிவாள்
கண்டா யடாஅந்த கா!வந்து
பார்;சற்றென் கைக்கெட்டவே (25)

பால்என் பதுமொழி; பஞ்சுஎன்
பதுபதம்; பாவையர்கண்
சேல்;என் பதாகத் திரிகின்ற
நீ,செந்தி லோன்திருக்கை
வேல்என் கிலை;கொற் றமயூரம்
என்கிலை;வெட் சித்தண்டைக்
கால்என் கிலை;மன மேஎங்ங
னேமுத்தி காண்பதுவே? (30)

நாள்என் செயும்வினை தான்என்
செயும்?எனை நாடிவந்த
கோள்என் செயும்கொடுங் கூற்றுஎன்
செயும்? குமரேசர்இரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றிடினே(38)

சேல்பட்டு அழிந்தது செந்தூர்;
வயல்பொழில் தேங்கடம்பின்
மால்பட்டு அழிந்தது பூங்கொடி
யார்மனம்; மா்மயிலோன்
வேல்பட்டு அழிந்தது வேலையும்
சூரனும் வெற்பும்;அவன்
கால்பட்டு அழிந்ததுஇங்கு என்தலை
மேல்அயன் கைஎழுத்தே (40)

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப்
பாதங்கள்; மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காஎனும்
நாமம்;கண் முன்புசெய்த
பழிக்குத் துணைஅவன் பன்னிரு
தோளும்; பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும்செங்
கோடன் மயூரமுமே(70)

சேந்தனை, கந்தனை, செங்கோட்டு
வெற்பனை, செஞ்சுடர்வேல்
வேந்தனை, செந்தமிழ் நூல்விரித்
தோனை, விளங்குவள்ளி
காந்தனை, கந்தக் கடம்பனை,
கார்மயில் வாகனனை,
சாந்துணைப் போதும் மறவா
தவர்க்குஒரு தாழ்வில்லையே (72)

*இவை அற்புதமானபாடல்கள்; எல்லாமே அற்புதப் பாடல்களே. எதை எடுப்பது? எதை விடுவது? என்று தெரியாது, தெளியாது. திண்டாடும் மனம்!*

*நூற்பயன் நுவலும் பாடல் இது:*

சலம்காணும் வேந்தர் தமக்கும்அஞ்
சார்;யமன் சண்டைக்குஅஞ்சார்;
துலங்கா நரகக் குழியணு
கார்;துட்ட நோய்அணுகார்;
கலங்கார் புலிக்கும் கரடிக்கும்
யானைக்கும்; கந்தன்நன்னூல்
அலங்காரம் நூற்றுள் ஒருகவி
தான்கற்று அறிந்தவரே.

*(4) **கந்தர் அநுபூதி:*** *அருணகிரிப் பெருமான் அருளியது. இப்பனுவல். காப்பாக ஒரு பாடலும் நூலில் 105 பாடல்களும் கொண்டது. பாடல்களை ஆழ்ந்து மனம் ஒடுங்கிப் படித்தால் அவை அநுபூதிநிலைக்கு இட்டுச் செல்லக் கூடியவை.*

நெஞ்சக் கனகல் லுநெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக் கரஆ னைப்பதம் பணிவாம்.

*என்பது காப்பு. நூலில் சில உருக்கமான பாடல்களைக் காண்போம்.*

ஆடும் பரிவேல் அணிசே வல்எனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனியா னைசகோ தரனே(1)

கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே(7)

ஆதா ரம்இலேன் அருளைப் பெறவே
நீதான் ஒருசற் றுநினைந் திலையே
வேதா கமஞா னவினோ தமனோ
தீதா சுரலோ கசிகா மணியே (26)

சாடும் தனிவேல் முருகன் சரணம்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ
வீடும் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமும் கமழும் கழலே (44)

பெரியோர் எனினும் புலையோர் எனினும்
சிறியோர் எனினும் தெளிவோர் அவரே
குறியோர் எனினும் குருவா வருவான்
நெறியோடு ஒழுகு நிலைபெற் றிடினே (81)

கல்லும் கரையக் கவிபா டிஇதம்
சொல்லும் தொழிலே தொழிலாய் விடவோ
கொல்லும் தொழிலில் கொடியோர் மடியச்
செல்லும் சுடர்வேல் செறிபா ணியனே(103)

*இங்ஙனம் நெஞ்சம் உருகி அநுபூதி நிலைக்கு ஆற்றுப் படுத்தும் பாடல்களைக் கொண்டது இத்தெய்வப் பனுவல்.*

## 8. அம்மானை இலக்கியம்

*தமிழ்ப் பிரபந்தவகை இலக்கியங்களுள் அம்மானை இலக்கியமும் ஒருவகையாகக் கருத இடம் தருகின்றது. இந்தவகை 16-ஆம் நூற்றாண்டிலேயே தொடங்கி மிக வேகமாய் வளர்ந்து வருகின்றது.*

*ஆங்கிலத்தில் 'பாலட்' (Ballad) என்று வழங்கும் கருத்தை இங்குத் தமிழில் **'அம்மானை'** என்று பெயர் வைப்பதில் பொருத்தம் உள்ளது. இதற்குக் காரணங்கள் பல. **ஒன்று:** பாடல்களில் 'அம்மானை' என்ற சொல் பயன்படுத்தப் பெறுகின்றது. **இரண்டு:** இது செந்தமிழ் இலக்கியமாக இல்லாமல் சொற்ப எழுத்து அறிவுடையவர்க்காகச் சொற்ப எழுத்தறிவுடையவர்களே பாடிவைத்த நூல்கள் என்பது. பாமர இலக்கியம் என்றும் இவற்றைச் சொல்லும் மரபும் ஏற்பட்டுள்ளது. **மூன்றாவது:** இந்நூல்களில் பெரும்பாலும் தொடர்ந்து சொல்லும் நீண்டபாடல்கள். **நான்காவது:** நெடுங்கதைப் போக்குடையன; மற்றபடி பாமரமக்கள் எளிதில் புரிந்து கொண்டு அநுபவிக்கத்தக்க*

பாடல்கள். இவையேயன்றிப் பின்னும் பல இயல்புகள் இவ்வகைப் பாடல்கட்குப் பொதுத்தன்மையாக உள்ளன.

ஆயினும் ஒன்று கூறலாம். இவ்வகை இலக்கியப் பிரிவுக்கு வித்து பதினாறாம் நூற்றாண்டில் இடம்பெற்றது என்று கருதலாம். மூவர் அம்மானை என்ற ஒருநூல் இக் காலத்தில் செய்யப்பெற்றதாகத் தெரிகின்றது.

## மூவர் அம்மானை[33]

***நூல்:*** *நெடுங்காலமாகப் புலவரும் பாமர மக்களும் விரும்பிப் பயின்று வாய்மொழியாகவே சொல்லிக் கொண்டுவரும் பாடல்களையுடைய நூல் இது. பாடல்கள் இடைமடக்காய் நான்கடியில் மிக்குவந்த கலித்தாழிசை. இரண்டாமடி மூன்றாம் அடியாக மடக்கியும் நான்காம் அடியில் சொல்லிய பொருள் ஐந்தாம் அடியில் சிலேடையாக விளக்கியும் பாடல் அமையும். மூன்று பெண்கள் கழங்கோ சோளியோ வைத்துக்கொண்டு ஆடுவதால்* ***'மூவர் அம்மானை'*** *என்று பெயர் பெற்றது. முதல்பெண் இரண்டு அடிகளால் ஒரு செய்தியை உரைக்கின்றாள். அவள்சொன்ன ஈரடிகளில் இரண்டாம் அடியை மடக்கி இரண்டாம் பெண் ஒரு வினா எழுப்புகிறாள். இவ்வினாவுக்குச் சிலேடையாக மூன்றாவது பெண் விடைகூறுகின்றாள். இதனை ஒரு பாடலை எடுத்துக்காட்டி விளக்குவோம். பழைய பதிப்புகள் பலவற்றிலும் முதல் பாடலாக வரும் பாடல்.*

ஈசன் பசுவாய் எமன்இளங் கன்றாகி
வீசுபுகழ் ஆரூரில் வீதிவந்தார் அம்மானை

*இவ்வடிகள் திருவாரூரில் ஆட்சி புரிந்த மனுநீதிச் சோழன் வரலாற்றைக் குறிப்பிடுகின்றன. திருவாரூர்*

33. 16-ஆம் நூற்றாண்டு பிற்பகுதி.

*வீதியில் வந்தவர் ஈசன் பசுவாக. கன்று யமதர்மராசன். இனிப் பின்னிரு அடிகள்:*

வீசுபுகழ் ஆருரின் வீதிவந்தார்ஆமாகில்
காசளவு பால்தான் கறக்குமோ அம்மானை?

*இந்தப் பசுவும் கன்றும் வரினும், பசு பால் கறக்குமா? காசளவு (சொற்பம்) பால்தான் கறக்குமா? என்பது இரண்டாவது பெண்ணின்வினா.*

கன்றை உதைகாலி கறக்குமோ அம்மானை

*ஈசன் யமனைத் திருக்கடவூரில் காலால் உதைத்து மாய்த்தார். ஆகவே, கன்றை உதைக்கின்ற பசு (உதைகாலி) கறக்காது என்பது மூன்றாவது பெண் தரும் விடை. இந்த முறையிலேயே நூலில் பாடல்கள் யாவும் அமைந்திருக்கும்.*

***முன்னுள்ள அம்மானைக் குறிப்புகள்:*** *முதலாவதாகச் சிலப்பதிகாரத்தில் இந்த அமைப்பைக் காணலாம். இங்கு வாழ்த்துக் காதையில் நான்கு வாழ்த்துப்பாடல்கள் உள்ளன. ஆனால் மேலே குறிப்பிட்டபடி வினாவும் விடையும் சிலேடையும் இல்லை. ஆடுகின்ற பெண்கள் மூவரே. நான்கு பாடல்களும் சோழனுடைய புகார் நகரத்தைப் பாடுவதாக அமைந்துள்ளன. மூன்று பாடல்கள் முறைப்படி ஐந்தடியாக இருக்க, நான்காம் பாடல் மட்டிலும் ஆறடியாக உள்ளது; இதில் நான்காம் அடி ஐந்தாம் அடியாக மடக்கிவருகின்றது. இப்பாடல்கட்கு இங்கு 'அம்மானை வரி' என்று பெயர். (வரி-இசைப்பாட்டு)*

அம்மனை நங்கையிற் கொண்டங் கணியிழையார்
தம்மனையிற் பாடுந் தகையேலோ அம்மானை
தம்மனையிற் பாடும் தகையெல்லாந் தார்வேந்தன்
கொம்மை வரிமுலைமேற் கூடலே அம்மானை

கொம்மை வரிமுலைமேற் கூடிற் குலவேந்தன்
அம்மென் புகார்நகரம் பாடேலோர் அம்மானை.

இது நாலாம் பாடல்.

**இரண்டாவதாக** அம்மானைப்பாடலுக்கு ஒரு பெருஞ்சிறப்பு மாணிக்கவாசகரால் கிடைத்துள்ளது. திருவாசகத்தில் எட்டாம் பதிகமாகத் 'திருவம்மானை' என்ற பெயரில் அவர் இருபது பாடல்கள் பாடியுள்ளார்.[34] பாடல் ஒவ்வொன்றும் இறுதியில் **'அம்மானாய்'** என்ற சொல்லைப் பெற்றுச் சிவபெருமானைத் துதிப்பதாக மட்டும் உள்ளது. விளையாட்டு உண்டு; **மூவர் விளையாட்டாய்** அங்குத் தெரியவில்லை.

அடுத்து, **பன்னிருபாட்டியல்** என்ற இலக்கணம் தொகுத்தவர் (10ஆம் நூற்றாண்டு) அம்மானை என்பது கலம்பகத்தின் இன்றியமையாத உறுப்புகளுள் ஒன்றாக நூற்பா செய்தார். பின்வந்த பாட்டியல் இலக்கண நூல்கள் இதனைத் தழுவியே கூறின. ஆனால் நந்திக்கலம்பகத்தில் (9-ஆம் நூற்றாண்டு) **அம்மானை உறுப்பு** இல்லை. ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகத்திலும் (11-ஆம் நூற்றாண்டு) இவ்வுறுப்பு பயின்று வரவில்லை. (நிறைவு பெறாதநூல்). இரட்டைப்புலவர் பாடிய **தில்லைக் கலம்பகம், திருஆமாத்தூர்க் கலம்பகம்** (14-ஆம் நூற்றாண்டு) என்ற இரண்டிலும் மூவர் பாடுவதாகிய கலம்பக உறுப்பு சிலேடைபொருந்த அமைந்துள்ளது. ஆனால் அடுத்த நூற்றாண்டில் எழுந்த **'திருக்கலம்பகம்'** என்ற **சைனக்கலம்பகத்தில்** இந்த அமைப்பு இல்லாமல் 'அம்மானைப்பாட்டு' வேறு விதமாய் உள்ளது. இது சந்தப்பாடல்; கலம்பக இலக்கணத்தில் சொல்லப்பெற்ற அமைப்புடையதன்று.

---

34. இதிலுள்ள ஒரு பாடல் (பாடல்-8 பண் சுமந்த)

*அம்மானை இலக்கணம்:* அம்மானை அமைப்பு எல்லாப்புலவர்களையும் இதில் ஈடுபடச்செய்துள்ளது. மாறனலங்கார ஆசிரியரே இவ்வகை அம்மானைப் பாடல் அமையும் முறைக்கு இலக்கணம் சொல்கின்றார்:

அம்மானை கைக்கொண்டு ஆடுநர் தம்மையும்
அம்மானை யாய்மதித்து ஆங்கோர் கர்த்தாவினை
நிந்தாத் துதிதுதி பெறநிகழ்த் துதலும்
அந்தோ தித்திடை யடிமடக் காகவும்
ஈற்றடி இரட்டுற இசைத்ததைத் தாபித்து
ஆற்றலின் அமைக்கும் அம்மனை மடக்கொன்றுள்
(சூத் 267)

இவர்காலத்துக்குமுன் பல கலம்பகங்களில் இவ்வாறு அம்மானை மடக்கு பாடப்பெற்றிருத்தலை அறிந்து இவர் அதை இலக்கணத்துள் அமைக்கின்றார். தாமும் தம் வழக்கம்போல் இவ்விலக்கணத்துக்கு எடுத்துக்காட்டாக **இரண்டு** பாடல்கள் செய்துள்ளார் (753, 754) அவற்றுள் ஒன்று இது.

தெண்டிரைப்பார் போற்றும் திருவெள் ளறைமாயன்
கண்டளவில் நீடுகஞ்சக் கண்ணாளன் அம்மானை
கண்டளவில் நீடுகஞ்சக் கண்ணாள னேவமுதுட்
கொண்ட பரிகலமும் கொட்டினனோ அம்மானை.
கொட்டினது முண்டு குழிதாலம் அம்மானை. (753)

உரையாசிரியர் இந்தச் சிலேடையை விளக்கி உரை எழுதியுள்ளார். 'கஞ்சக் கண்ணாளன் என்பது தாமரை போலும் கண்களையுடையவன் என்றும் வெண்கலம் கொட்டும் கன்னுவன் என்றும் **சிலேடை நிந்தாத் துதி யாயிற்று**. கொட்டினது என்பது உண்டுமிழ்தலும் தட்டுதலும்; குழிதாலம் என்பது குழிக்கப்பட்ட பூமியும் குழிதாயான உண்கலமாம்' என்பது காண்க.

பிள்ளைத்தமிழில் **அம்மானைப் பருவம்** என்ற ஒரு பருவம் பிற்காலத்தில் பெண்பாற் பருவத்தில் அமைக்கப் பெற்றது. பன்னிருபாட்டியல் பெண்பாலுக்கு அம்மானைப் பருவம் கூறவில்லை. பின்னால் குமரகுருபரரே முதன்முதலாக **மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில்** அம்மானைப் பருவம் அமைத்துப் பாடியுள்ளார்.

'மூவர் அம்மானை' ஒரு தொகுப்பு நூலன்று; இஃது ஒரு தனிநூலாக ஒருவராலே செய்யப்பெற்றது என்று கருதுவதே பொருத்தம் என்பது ஆய்வாளர் முடிவு. ஒரு புலவர் சிலேடைச் சுவையில் மிகவும் தோய்ந்தவர், தாமும் அவ்வாறு பாடவேண்டும் என்று எண்ணம் கொண்டு இந்நூல் பாடினார். சைவ-வைணவ வேறுபாடு இல்லாமல் பாடினார், பல தலங்களையும் குறிப்பிட்டுப்பாடினார், பாடல்களில் பாதிக்குமேல் தலக்குறிப்பில்லாமல் பாடினார், தத்துவக்கருத்து அமையும்படி பாடினார் என்று கொள்வதே சிறப்பு.

**ஆசிரியர்:** அம்மானை பாடிய ஆசிரியர் பெயர் அறியக்கூடவில்லை என்பதுதான் உண்மையான நிலை. ஆயினும் தில்லைக்கலம்பகம் அச்சிட்ட (1897) முருகேச முதலியார்அக்கலம்பகம் செய்த இரட்டைப்புலவரே மூவரவம்மானை பாடியவர் என்று விளக்கமாக எழுதியுள்ளார். இரட்டையர் செங்குந்தமரபினர் என்பது வரலாறு. இம்முதலியார் அம்மரபினரே. அபிமானம் பற்றி எழுதினார் என்று கருத இடமுண்டு.[35]

இரட்டைப் புலவர்களே இந்நூலைப் பாடியதாகப் பலராலும் சொல்லப்பெறுகின்றது. ஒருவர் முதல்

35. பாவேந்தர் பாரதிதாசன் செங்குந்தர் மரபினர் என்று கொண்டு சில செங்குந்தர் மரபினர் பாராட்டியதுண்டு. ஆனால் அக்கவிஞர் சாதிக்கு அப்பாற்பட்டவர். சாதிக் கொள்கையைச் சாடுபவர்.

பாதிபாட, மற்றவர் பின்பாதி பாடுவது இயல்பு. இவ் வியல்பு அவர்கள் பாடிய தனி வெண்பாக்களால் நன்கு புலப்படும். அவர்களுடைய தனிவரலாறுகளும் குறிப்பு களும் இதை நன்குணர்த்தும். எனினும், இருகலம் பகங்களும் உலாக்களும் போன்றவற்றை இவர்கள் எம்முறையில்பாடினர் என்பதற்கு விளக்கம் இல்லை.

இனி, இவ்வம்மானைப் பாடல்களை இவ்விருவருமே பாடினர் என்றால், முன்னிரு அடிகளை ஒருவர், அடுத்த இரு அடிகளை இரண்டாமவர், மீண்டும் ஐந்தாம் அடியை முதலாமவர் என்ற முறையில் பாடினர் என்று கொள்ளத் தகும்.

'பாணந்தான் மண்தின்ற பாணமே' என்ற அடியைப் பாடிய காளமேகப் புலவர் இறந்தபோது இரட்டையர்கள் வருந்திப் பாடினர் என்ற வரலாறு உண்டு. இந்த அடியைப் பொருளாகக் கொண்ட ஒருபாடலும் மூவரம் மானையில் காணப்படுகின்றது.

நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்
பாணந்தான் மண்தின்ற பாணமே அம்மானை
பாணந்தான் மண்தின்ற பாணமே யாமாயின்
சேணார் புரமெரித்த சேவகமே அம்மானை
சேவகத்தைச்சொல்லச் சிரிப்பலவோ அம்மானை.

இங்ஙனமாகப் பல்வேறு முரண்பட்ட கருத்துகளை ஆராய்ந்து முரணறுத்து முடிவுக்கு வருதல் அறிஞர் கடன். ஆனால் இந்த முடிவு ஏற்படும்வரை அம்மானைப் பாடல்களை அநுபவித்து மகிழ்வதற்குத் தடை இராது; முடிவு ஏற்பட்ட பின்னரும் பாடல்களை அநுபவிப்பதில் எவரும் தடைக்கற்களைப் போடமுடியாது.

# 7. சித்தர் இலக்கியங்கள்

*தமிழ் இலக்கிய வரலாற்றில் சித்தர் இலக்கியங்களுக்குச் சிறப்பான இடம் உண்டு. ஆனால் சித்தர்களுடைய நிலை இன்னும் விளங்காத புதிராகவே உள்ளது. தெரிந்தவரையில், ஈண்டுத் தரப்பெறுகின்றது.*

*சித்தி எய்தியவர்கள், பேரின்பம் சித்திக்கப் பெற்றவர்கள் சித்தர்கள். கடவுளைக் காணமுயல்பவர் பக்தர்; கண்டமாத்திரத்தில் முக்தி பெறுவதாகக் கொள்வது மரபு. ஆனால் பக்திநெறி அன்றி வேறு நெறியால் இறைவனைக்-கடவுளைக்- கண்டு தெளிந்து, இருவினை யொப்பு நிகழ்ந்து மலபரிபாகம் ஏற்படும்வரை உடலோடு உலாவுவோர் சித்தர். "பக்தர் சித்தர் பலர்ஏத்தும் பரமன் பழையனூர் மேய, அத்தன் ஆலங்காடன்"[1] என்ற சுந்தரர் தேவாரம் இக்கருத்துக்கு அரண் செய்யும். "திண்டிறற் சித்தர்களே கடைக்கூழை செல்மின்கள்"[2] என்பது திருவாசகம்.*

*சித்தர்கள், சித்தி அடைந்தவர்கள். கடவுளைக் காண முடியுமென்று கண்டு அல்லது அறிந்து தெளிந்தவர்கள் சித்தர்கள். இவர்கள் சிவாநுபூதி பெற்றவர்கள். பொதுவாக இவர்கள் சமயம் கடந்த மோன சமரச நன்னிலையில் நிற்பவர்கள். இவர்கள் யாவரும் மனிதநேயம் மிகுந்தவர்கள் சாதிசமய வேறுபாடு அற்றவர்கள். சமரச சன்மார்க்*

1. சுந். தேவா. 7.52.11
2. திருவா. திருப்படையெழுச்சி-2 (614)

கத்தைப் போற்றுபவர்கள். போலிச்சடங்குகளையும், பொருளற்ற செயல்களையும், மூடநம்பிக்கைகளையும் கண்டிப்பவர்கள். இது பொதுவான ஒரு கருத்து.

அட்டமான சித்தி கைவந்தவர்கள் சித்தர்கள்; இரசவாத வித்தை வல்லவர்கள் சித்தர்கள்; யோகசித்தி பெற்றவர்கள் சித்தர்கள்-என்பன போன்ற வெவ்வேறு கருத்துகளும் வழங்குகின்றன. அட்டமாசித்திகள் திருமந்திரத்திலும்[3] தேவாரத்திலும்[4] கூறப்பெறுகின்றன. மதுரையில் சோம சுந்தரக்கடவுள் எல்லாம் வல்ல சித்தராக வந்து கல்யானைக்குக் கரும்பு அருத்தியது இங்குக் கூறிய மூன்றிலும் முதல்வகையைச் சார்ந்தது; இங்கு அட்டமா சித்திகளின் விளக்கம் அறியப்பெறுகின்றது. இவ்வாறு இன்று சில சித்திகள் கைவரப்பெற்றோர் நாட்டில் இருப் பவர்களாக நாம் கேள்விப்படுகின்றோம். இனி திருப்பூவ ணத்தில் பொன்னனையாளுக்காகச் சிவபெருமான் போந்து இரசவாதம் செய்த திருவிளையாடல் இரண் டாவது வகையின்பாற்படும்.

தாயுமானவர் எண்பெருஞ்சித்திகளையும் இனிய கவிதை ஒன்றில் இலக்கியச் சுவையுடன் குறிப்பிடுவர்.

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம்;
கரடிவெம் புலிவாயையும்
கட்டலாம் ஒரு சிங்கம் முதுகின்மேல் கொள்ளலாம்;
கட்செவிஎடுத்தாட்டலாம்;

வெந்தழலில் இரதம் வைத்து ஐந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுஉண்ணலாம்;
வேறு ஒருவர் காணாமல் உலகத்து உலாவலாம்;
விண்ணவரை ஏவல்கொள்ளலாம்;

3. திருமந்திரம்-மூன்றாம் தந்திரம்-11. அட்டமாசித்தி 32-43.
4. தேவாரம்-3.36:11

சந்தமும் இளமையோடு இருக்கலாம்; மற்று ஒரு
சரீரத்தினும்புகுதலாம்;
சலமேல் நடக்கலாம்; கனல்மேல் இருக்கலாம்;
தனிநிகர்இல் சித்திபெறலாம்.[5]

இங்ஙனம் சித்திகளைக் குறிப்பிட்டுள்ள அடிகள் **'சித்தர்கணம்'** என்ற பகுதியில் (முதல் மூன்று பாடல்களில்) சித்தர் செய்யும் அருட்செயல்களை விளக்கிப் பாடி, தம்மை ஆட்கொண்டருளுமாறு வேண்டுகின்றார். சித்தர்களில் இவர் **நவநாத சித்தரைக்** குறிப்பிட்டது மன்றி **'வேதாந்த சித்தாந்த நன்னிலை பெற்ற வித்தகர் சித்தர் கணம்'** போற்றுவதையும் காண்பவாம்.

சிவபெருமானையே எல்லாம் வல்ல சித்தராக்கித் திருவிளையாடற்புராணம் காட்டியுள்ள கதைகளைக் கொண்டு சித்தர்களின் பெருமைகளை உணரலாம்.

சித்தர்கள் உலகெங்கும் உள்ளனர். எல்லாக் காலங் களிலும் எல்லா இடங்களிலும் இருக்கின்றனர். அவர்கள் உலகமக்கள் அனைவர்க்கும் பொதுவானவர்கள். சாதிசமய வேறுபாடு அற்றவர்கள். நாடு, மொழி, இனம் ஆகிய குறுகிய எல்லைகளைக் கடந்தவர்கள். அவர்கள் எங்கும் எப்போதும் தோன்றி, மக்கள் இன்புற்று வாழ நல்வழி காட்டுபவர்கள்; ஆன்மநேய ஒருமைப்பாட்டை வளர்ப் பவர்கள். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'[6] என்பதும், 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்'[7] என்பதும் அவர்தம் குறிக்கோள்கள். எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றும் அறியாதவர்கள்.

**வடநாட்டில்:** வடநாட்டில் **'நவநாத சித்தர்'** என்று ஒன்பது பேர் இருந்ததாகக் கொண்டு அவர்களுடைய

5. தா.பா. தேசோமயானந்தம்-8
6. திருமந்-5. பாயிரம் திருமூலர்வரலாறு -13 (85)
7. மேலது ஏழாம் தந்திரம் - இதோபதேசம் -3 (2104)

சமாதிகளையும் காட்டுவர். அவர்கள் **'நாதர்'** என்று முடிகின்ற பெயர் அமைந்த சத்தியநாதர், சந்தோகநாதர், ஆதிநாதர், அனாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்க நாதர் என்ற ஒன்பது பேர்கள். 'நவநாதர்' என்று தாயுமான அடிகளும் குறிப்பிடுவர். இவர்களுள் கோரக்கர் மச்சேந்திர வரலாறுகள் தமிழ் நாட்டிலும் நெடுங்காலமாக வழங்கி வருவதைக் காணலாம்.

**தென்னாட்டில்:** தமிழ் நாட்டில் சித்தர் திருமூலரோடு தொடங்குகின்றது.[8] **'மூலன்மரபு'** என்பது தாயுமானவர் வாக்கு. மூலருக்கு முன்பு சிலர் இருந்திருக்கலாம். அவர்களை நாம் அறியக்கூடவில்லை. இவரைச் சித்தர் என்று சொல்லுவதற்குக் காரணம் இவர் யோக சமாதியில் மூவாயிரம் ஆண்டுகள் இருந்து ஆண்டுக்கொரு மந்திரம் பாடினார் என்று மனித இயல்பைக் கடந்த செயலைக் கருதியதேயாகும். திருமூலர் குறிப்பிடும் சித்தர்கள்; நந்தி அருள் பெற்ற நாதர்கள்-சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர், சிவயோகமாமுனி, பதஞ்சலி, வியாக்கிரக பாதர், திருமூலர் ஆகிய எண்மர்.[9]

**பதினெண் சித்தர்கள்:** சித்தர்கள் பதினெண்மர் என்று கூறுவது மிகவும் பழமையான வழக்கு. அகத்தியர் முதலே இந்தச்சித்தர் பட்டியல் தொடங்குகின்றது. இவர்கள் அகத்தியர், இடைக்காடர், உரோமமுனி, கமலமுனி கூன்கண்ணர், கூர்மமுனி, கயிலாய நாதர், கொங்கணர், கோரக்கர், சட்டைமுனி, சுந்தரானந்தர், திருமூலர், நந்தி, பிரமமுனி, பிண்ணாக்குமுர், போகர், மச்சமுனி, வாசசனி என்போர் என்று சொல்வது ஒரு வரிசை.

இவர்களுள் பலபெயர்களை நீக்கி சண்டேசர், கருவூர் சித்தர், திருவள்ளுவர், சிவவாக்கியர், மார்க்கண்டர்,

8. கி.பி. 5-6ஆம் நூற்றாண்டு.
9. திருமந்திரம்- பாயிரம் குருபாரம்பரியம்-பாடல் 1 (67).

வால்மீகி, இராமதேவர், காகபுசுண்டர், சுப்பிரமணியர், சூரியானந்தர், பட்டினத்தார், பத்திரகிரியார், சகதீசர், தேரையர், யூகி, தருமமுனி முதலான பலபெயர்கள் சொல்லுவதுமுண்டு. இந்த வரிசையில் பல பெயர்கள் பிற்காலச்சேர்க்கை. காலத்தால் பின்வந்த தலைமுறையினர் முன்னோர் பெயரை வைத்துக்கொள்வதுமுண்டு. அகத்தியர், திருமூலர், திருவள்ளுவர் என்ற பெயர்களை இவ்வாறு கருதவேண்டும்.

இந்தச் சித்தர்களின் பெயரால் யோகம், ஞானம், மருத்துவம், சோதிடம், மந்திரம், தந்திரம் இவையெல்லாம் சேர்ந்து வழங்கப்பெறும். ஏனாதி சித்தர், காளைச்சித்தர், கம்பளிச் சித்தர், சடாதாரச்சித்தர் என்றெல்லாம் இப்பட்டியல் வளர்ந்து கொண்டே போவதைக் காணலாம்.

சித்தர்கள் **பதினெண்மர்** என்று கூறுவது மிகப்பழமை யான வழக்கு. ஆனால் இன்று ஐம்பதிற்கும் மேற்பட்டவர் சித்தர்பட்டியலில் இடம் பெறுகின்றனர். முதன்முதலில் சித்தர்களின் தொகையைக் கணக்கிட்டு உரைத்தவர் காலத் தில் பதினெட்டு சித்தர் இருந்திருக்கலாம்; அல்லது சித்தர் களில் பதினெட்டு பேரே வரலாற்றுச் சிறப்புடையவராகத் தெரிந்திருக்கலாம். அதனால் நெடுங்காலமாகவே **'பதினெண் சித்தர்'** என்ற மரபு நிலவி வருகின்றது. ஆனால் அந்த எண்ணிக்கையைக் கடந்து சித்தர்பலர் காலந்தோறும் தோன்றிவருகின்றனர்.

இருபதாம் நூற்றாண்டிலும் சித்தர் பலர் உள்ளனர். பாரதியாரும் தம்மைச் சித்தர் என்றே சொல்லிக் கொள்ளுகின்றார்.

**எனக்கு முன்னே சித்தர்பலர் இருந்தார் அப்பா**
**யானும் வந்தேன் ஒருசித்தர் இந்தநாட்டில்**[10]

10. பா. க: பாரதி அறுபத்தாறு-1.

இவ்வாறு தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டபின்னர் குள்ளச்சாமி, கோவிந்தசாமி, யாழ்ப்பாணச்சாமி, குவளைக் கண்ணன் முதலிய துறவிகளின் சித்தியைப் பற்றிக் குறிப்பிடுவதைக் காணலாம்.

**இயற்பெயரை இழந்தவர்கள்:** சித்தர்களில் பலர்தம் இயற்பெயரை இழந்து, வாழ்ந்த இடத்தின் பெயரால் வழங்கப்பெற்றனர். பட்டினத்தார், கருவூரார், கொங்கணர், இடைக்காடர் ஆகியோர் இடத்தின் பெயரையே பெற்றுள் ளனர். பாடியபாடல் வகை, சொல்லாட்சி முதலியவற்றால் பெயர் பெற்றோர் அகப்பேய்ச்சித்தர், பாம்பாட்டிச் சித்தர், குதம்பைச் சித்தர், அழுகுணிச் சித்தர் முதலியோர்.

பொதுமக்கள் சித்தர்கள் வாழ்ந்த மலைகளைத் தம் நினைவில் வைத்துப் போற்றி வருகின்றனர். சித்தர்களோடு தொடர்புடைய இருப்பிடங்களையும் காணமுடிகின்றது.

அகத்தியர்-பொதியமலை; திருமூலர்-சிதம்பரம்; அகப்பேய்ச் சித்தர்-விருத்தாசலம்; நந்திதேவர்-சீகாழி; தன்வந்திரி-வைத்தீசுவரன் கோயில்; கமலமுனி-திருவாரூர்; வால்மீகி-எட்டுக்குடி; பாம்பாட்டிச் சித்தர்-திருக்கடவூர்; மருதமலை என்றும் கூறுவர். போகர்-பழநிமலை; சுந்தரானந்தர்-மதுரை; மச்சமுனிவர்-திருப்பரங்குன்றம்; இராமதேவர்-அழகர் மலை; குதம்பைச் சித்தர்-திருக்கழுக் குன்றம்; இடைக்காடர்-திருவண்ணாமலை; பதஞ்சலி-இராமேசுவரம்; சட்டை முனி-திருவரங்கம்; கருவூர்ச் சித்தர்-கருவூர்; கொங்கணர்- திருப்பதி; பட்டினத்தார்-திருவொற்றியூர்.

சித்தர்களின் பெயரும் அவர்கள் வாழ்ந்த இடங்களும் பொதுமக்களால் இன்றும் நினைவில் வைத்துப்போற்றப் பெறுகின்றன.

**சித்தர் செய்தபணிகள்:** சித்தர்கள் தம்மை உயர்த்திக் கொண்டதோடு உலகமக்களையும் உயர்த்துவதற்கு நற்பணிகள் பல மேற்கொண்டனர்

*(1) காயசித்தி பெறுவது:* இது இந்த உடலை அழியாது பாதுகாத்து மரணத்தை வெல்வதாகும்.

கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு **(269)**

என்ற திருக்குறளையும் (தவம்-அதிகாரம்) ஈண்டுக் கருதலாம். இப்படிப்பட்ட முயற்சி தமிழ் நாட்டில் மட்டுமன்றி உலகெங்குமே நிகழ்ந்து வந்துள்ளது, சென்ற நூற்றாண்டில் நம்மிடையே வாழ்ந்த இராமலிங்க அடிகள் இச்சித்தியில் ஈடுபட்டிருந்தார் என்றும். அவருடைய மறைவும் இந்த முயற்சியில் ஓர் அங்கமே என்றும் பல பெரியோர் கருதுவர். காயகற்பம் தேடிய ஒருவரை ஆங்கிலக் கவிஞரான இராபர்ட் பிரௌனிங் தம் கவிதை யொன்றில் குறிப்பிட்டுள்ளார் **"அளகேசன் நிகராக அம் பொன்மிக வைத்தபேரும்-நேசித்துரசவாத வித்தைக்கு அலைந்திடுவர், நெடுநாள் இருந்த பேரும்-நிலை யாகவே இன்னும் காயகற்பம் தேடி நெஞ்சு புண்ணான வர்**[11] என்பது தாயுமான அடிகளின் அமுதவாக்கு.

(2) இந்த சித்தர்கள் இரசவாதம், மருத்துவம்[12] மந்திரம் என்பவற்றிலும் வல்லவர் என்ற ஒரு கருத்து உண்டு. இவை ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாவிடினும் எல்லாமே உடலை அழியாது காப்பதாகிய காயகற்பம் தேடுவது என்ற பொதுமுயற்சியைக் குறித்தன. சித்தர் எதையும் செய்யலாம்,

11. தா.பா: பரிபூரணானந்தம் - 10
12. போகநாதர் என்ற சித்தர் பெயரால் பல மருத்துவச் சிறுநூல்கள் வழங்கிவருகின்றன. இவர் பழநிமலைமீது சமாதி கொண்டார் என்றும். அந்தச்சமாதியின்மீதே முருகன் ஆலயம் நிறுவப்பெற்ற தென்றும், போகருடைய தவவலிமை யின் காரணமாகவே அந்த இடத்தில் முருகப்பெருமான் வரப்பிரசாதியாய் அடியவர்கட்கு இன்றும் அருள் வழங்குகின் றான் என்றும் மக்கள் நம்புகின்றனர்.

*அட்டமாசித்தி கைவரப்பெற்றமையால் இவர்கள் செய்வது மனிதர் செயலுக்கு அப்பாற்பட்டது என்ற கொள்கையும் உண்டு. இக்கொள்கையால் வந்த கேடு கஞ்சா, மது முதலான தீமைகள். இக்கேட்டைக் கண்டித்த பிற்காலச் சித்தரும் உளர். கடுவெளிச்சித்தர்*[13] *என்பார்,*

கஞ்சாப் புகைபிடி யாதே–வெறி
காட்டி மயங்கிய கட்குடி யாதே!
அஞ்ச வுயிர்மடி யாதே–பத்தி
அற்றவஞ் ஞானத்தின் நூல்படி யாதே(29)

*என்று குறிப்பிட்டுப் பாடியிருப்பது ஈண்டு நினைவு கூரத்தக்கது.*

*(3)* ***கூடுவிட்டுக் கூடு பாய்தல்*** *என்பது சித்தர் செயல்களுள் ஒன்று. அருணகிரிநாதர் மனிதக் கூட்டைவிட்டுக் கிளிக் கூட்டினுள் புகுந்தார் என்ற ஒரு வரலாறு உண்டு. ஆனால் சித்தர்கள் பெயர்களுள் இவர் பெயரை எவரும் சேர்த்ததில்லை. இதனால் சித்தர்கள் தொகை வழக்கு இவர்காலமாகிய 15-ஆம் நூற்றாண்டுக்கு முன்னதாகவே அமைந்து விட்டது என்று கருதலாம்.*

## 1. பதினெண் சித்தர்கள்

*இவர்கள் யாவர் என்ற ஆராய்ச்சியுள் புகாமல் சம்பிரதாயமாக அறியப்பட்டவர்களை மட்டிலும் ஈண்டுக் காட்டுவேன்.*

*(1)* ***சிவவாக்கியர்:*** *தமிழ் நாட்டில் வாழ்ந்த யோகசித்தர்களுள் ஒருவர். சித்தர்களுள் தலைசிறந்தவர்.*[14] *இவர்பற்றிய வரலாறு எதுவும் தெரியவில்லை. திருமூலரின் திரு*

13. இவர் பற்றிய குறிப்புகள் பின்னர் காட்டப் பெற்றுள்ளது பக். 778.
14. பதினான்காம் நூற்றாண்டு (பிற்பகுதி)

விளக்காகத் தோன்றவில்லை; தாயுமான அடிகளால் குறிப்பிடப்பெறும் பெருமைபெற்றவர். இவர் பாடல்களில் வடசொற்கள் அதிகம். பேச்சு நடையும் மரூஉ மொழியும் மிகுதி. சில இடங்களில் எதுகையைக் கவனியாமல் சந்த ஓட்டத்திற்கே முக்கியத்துவம் தருபவர்.

சிவவாக்கியர் பாடல்களில் பொதுவாய் அக்காலத்தில் பலரிடம் வழங்கிய 'மாதரைப் பழித்தல்' என்ற கருத்து காணப்பெறவில்லை. இஃது அவருக்குரிய சிறப்பு. சிறந்த இல்லறவாழ்க்கையைக் கடைப்பிடித்து வாழ்ந்திருப்பார் என்று கருத இடம் உண்டு.

இவர் பாடல்களில் திருமுறைத் தொடர்கள் பல பயின்று வருகின்றன. முறையாக குகன், ஐங்கரன், எம்பிரான், அம்மை ஆகியோரை நாடுவதைக் குறிப்பிடு வார். திருவைந்தெழுத்து அகார உகாரங்கள் முதலியன சொல்லப்பெறுகின்றன. (2)

பல பாடல்களில் குழூஉக்குறியாகப் பல தொடர்கள் வருகின்றன. சரியாக எவரும் உரை எழுதாததால் இவை விளங்காப் புதிர்களாக உள்ளன. எ.டுகள்.

வட்டமான வட்டிலே
வளர்ந்தெழுந்த அம்புலி **(183)**

மூலமாம் குளத்திலே
முளைத்தெழுந்த கோரையை **(153)**

நாலொடாறு பத்துமேல்
நாலும் மூன்றும் இட்டபின் **(172)**

என்று வருவனவற்றில் இதனை உணரலாம்.[15]

---

15. பாட்டெண்கள்-சித்தர் பாடல்கள் (மணிவாசகர் பதிப்பகம் என்பதில் உள்ளவாறுகாட்டப்பெறுகின்றன). இப்பதிப்பில் 524 பாடல்கள் உள்ளன.

*உருவ வழிபாட்டைக் கடிபவர்.* *இதனை விளக்கப் பல பாடல்கள் உள்ளன.*

'கோயிலாவது ஏதடா? குளங்களாவது ஏதடா? . . .
கோயிலும், மனத்துளே குளங்களும் மனத்துளே'! (34)

செங்கலும் கருங்கலும் சிவந்த சாதிலிங்கமும்
சிவந்த சாதிலிங்கமும் செம்பிலும் தராவிலும்
சிவன் இருப்பன் என்கிறீர். (35)

*என்பவை காண்க. இதற்கு முத்தாய்ப்பான ஒரு பாடல்.*

நட்டகல்லைத் தெய்வம்என்று
நாலுபுட்பம் சாத்தியே
சுற்றிவந்து முணுமுணென்று
சொல்லுமந்திரம் ஏதடா?
நட்டகல்லும் பேசுமோ
நாதன்உள் இருக்கையில்!
சுட்டசட்டி சட்டுவம்
கறிச்சுவை அறியுமோ!

*இதில் உருவ வழிபாட்டைக் கடிவதைக் காணலாம்.* **'ஒன்றே குலம்! ஒருவனே தேவன்'** *என்ற திருமூலர் கருத்து எடுப்பாகத் திகழ்வதையும் காணலாம். "தில்லை நாயகனும் அவன்; திருவரங்கனும் அவன்" (55), "இடத்துன் கண் சந்திரன், வலத்துன்கண் சூரியன், இடக்கை சங்கு சக்கரம், வலக்கை சூலம் மான் மழு..." (53); "அம்மை அப்பன் உப்பு நீர் அரிஅயன் அரனுமாய்" (144) என்பன போன்று பாசுரப்பகுதிகள் இக்கூற்றுக்கு அரண் செய்யும்.*

***சைவசித்தாந்தக் கருத்துகள்:*** *பல்வேறு வகைக் கருத்துகள் நிரம்பிய இவர்தம் பாடல்கள் பலவாக இருப்பினும், சைவசித்தாந்தக் கருத்துகள் கொண்ட பாடல்கள் அதிகமாகவே உள்ளன.*

***சிவாயம்:*** *சிவாயம்பற்றி ஏராளமான பாடல்கள் உள்ளன. எடுத்துக்காட்டுகளாகச் சில:*

இன்பமற்ற யோகியை இருளும்வந்து அணுகுமோ!
செம்பொன் அம்பலத்துளே தெளிந்த சிவாயமே(43)

முத்தியற்று மூலமற்று மூலமந்தி ரங்களும்
வித்தைஇத்த ஈன்றவித்தில் விலைவந்ததே சிவாயமே(45)

ஊனமற்ற சோதியோடு உணர்வுசேர்ந்து அடக்கினால்
தேன்அகத்தின் ஊறல்போல் தெளிந்ததே சிவாயமே(84)

முரண்டெழுந்த சங்கின்ஓசை மூலநாடி ஊடுபோய்
அரங்கன்பட்ட ணத்திலே அமர்ந்ததே சிவாயமே! (97)

வீதிபோகும் ஞானியை விரைந்துகல் எறிந்ததும்
பாதகங்கள் ஆகவே பலித்ததே சிவாயமே(169)

கன்றல்நின்ற செம்பொனைக் களிம்பறுத்து நாட்டினால்
அன்று தெய்வம் உம்முளே அறிந்ததே சிவாயமே(181)

ஆதிஅந்த மூலவிந்து நாதம்மேவி நின்றதும்
ஆதிஅந்த மூலவிந்து நாதமே சிவாயமே(189)

உருக்கலந்து நின்றபோது நீயும்நானும் ஒன்றலோ?
திருக்கலந்த போதலோ தெளிந்ததே சிவாயமே(200)

அஞ்சும்அஞ்சும் அஞ்சுமே ஆதரிக்க வல்லிரேல்
அஞ்சும்அஞ்சும் உம்முளே அமர்ந்ததே சிவாயமே(217)

*என்பன காண்க.*

***ஐந்தெழுந்து மந்திரம்:*** *சைவர்கட்கே உரியது 'நமசிவாய' என்பது. பல பாடல்களில் இது பகரப் பெற்றுள்ளது.*

சிவாயம் என்ற அட்சரம் சிவன் இருக்கும் அட்சரம்
உபாயம் என்று நம்புதற்கு உண்மையான அட்சரம் (72)

நமச்சிவாய அஞ்செழுத்து நம்முளே இருக்கவே
நமச்சிவாய உண்மையை நன்குஉரைசெய் நாதனே(104)

ஓம் நமசி வாயமே உணர்ந்து மெய் உணர்ந்தபின்
ஓம் நமசி வாயமே உணர்ந்து மெய் தெளிந்தபின்
ஓம்நமசி வாயமே உணர்ந்துமெய் உணர்ந்தபின்
ஓம்நமசி வாயமே உட்கலந்து நிற்குமே! (109)

ஆதிஅந்த மூலவிந்து நாதம்ஐந்து பூதமாய்
ஆதிஅந்த மூலவிந்து நாதம்ஐந் தெழுத்துமாய்
ஆதிஅந்த மூலவிந்து நாதம்மேவி நின்றதும்
ஆதிஅந்த மூலவிந்து நாதமே சிவாயமே (189)

சிவாயம் அஞ்செழுத்திலே தெளிந்துதேவ ராகலாம்
சிவாயம் அஞ்செழுத்திலே தெளிந்துவானம் ஆளலாம்
சிவாயம் அஞ்செழுத்துளே தெளிந்துகொண்ட வான்பொருளை
சிவாயம் அஞ்செழுத்துளே தெளிந்துகொள்ளும் உண்மையே (201)

அஞ்சும்அஞ்சும் அஞ்சும்அஞ்சும் அல்லல்செய்து நிற்பதும்
அஞ்சும்அஞ்சும் அஞ்சுமே அமர்ந்துளே இருப்பதும்
அஞ்சும்அஞ்சும் அஞ்சுமே ஆதரிக்க வல்லிரேல்
அஞ்சும்அஞ்சும் உம்முளே அமைந்ததே சிவாயமே (217)

மூலம் என்ற மந்திரம் முளைத்த அஞ்செழுத்துளே
நாலுவேதம் நாவுளே நவின்றஞான மெய்யுளே
ஆலம்உண்ட கண்டனும் அரிஅயனும் ஆதலால்
ஓலம்என்ற மந்திரம் சிவாயமல்லது இல்லையே (305)

மெய்ச்சதுர மெய்யுளே விளங்குஞான தீபமாய்
உச்சரிக்கும் மந்திரம் ஓம்நம சிவாயமே (398)

*என்பன போன்ற ஏராளமான பாடல்கள் **ஐந்தெழுத்து மந்திரத்தை** அம்பலப்படுத்தி நிற்கும்.*

***சிவபெருமான்:*** *சில பாடல்களில் சிவபெருமானைக் குறிப்பிட்டுப் பேசுவர் சிவவாக்கியர்.*

சுற்றும்ஐந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி
சக்தியும் சிவனுமாக நின்றதன்மை ஓர்கிலீர்
சத்தியாவது உம்முடல் தயங்குசீவ னுட்சிவம்
பித்தர்காள் அறிந்திலீர் பிரான்இருந்த கோலமே(304)

*இதன் கருத்தையே இரண்டு பாடல்களில் இப்பாடலின் பிறிதொரு தோற்றமாக, பிரதிபிம்பமாக, அமைத்துப் பாடியுள்ளார்.*

சத்தியாவது உன்னுடல் தயங்குவேன் உட்சிவம்
பித்தர்காள் இதற்குமேல் பிதற்றுகின்றது இல்லையே
சுத்திஐந்து கூடம் ஒன்று சொல்லிறந்த தோர்வெளி
சச்திசிவமும் ஆகிநின்று தண்மையாவது உண்மையே **(397)**

உருத்தரித்த போதுசிவன் ஒக்கநின்ற உண்மையும்
திருத்தமுள்ளது ஒன்றிலும் சிவாயஅஞ் செழுத்துமாம்
இருந்துநின்று உள்ளடக்கி ஏகபோகம் ஆனபின்
கருத்தினின்று உதித்ததே கபாலம் ஏந்தும் நாதனே **(379)**

***சிவபெருமான் இருப்பிடம்:*** *அவன் எங்கும் இருப்பவன். கோயில் குளம் முதலியவற்றைத் தேடிப்போக வேண்டா. அவன் நம்முளே இருக்கின்றான் என்பதை உணருமாறு ஓதுகின்றார்.*

தீர்த்தலிங்க மூர்த்திஎன்று தேடிஓடும் தீதரே
தீர்த்தலிங்கம் உள்ளில்நின்ற சீவனைத் தெளியுமே
தீர்த்தலிங்கம் உம்முளே தெளிந்துகாண வல்லீரேல்
தீர்த்தலிங்கம் தான்அதாயச் சிறந்ததே சிவாயமே**(479)**

காணவேண்டும் என்றுநீர் கடல்மலைகள் ஏறுவீர்
ஆணவம் அதல்லவோ அறிவில்லாத மாந்தரே?

வேணும்என்று அவ்வீசர்பாதம் மெய்யுளே தரிப்பிரேல்
தாணுவாக நின்றசீவன் தான்சிவம் அதாகுமே(476)

*வீடுபேறு பற்றிய கருத்து:* *இதனை விளக்கவும் பல பாடலகள் உள்ளன.*

அணுவினோடு அண்டமாய் அளவிடாத சோதியைக்
குணமதாகி உம்முளே குறித்து நோக்கில் முத்தியாம்(285)

*இதே அடிகள் பாடல் 477-லும் அமைந்துள்ளன. இங்கு 'அகண்டமாய்' என்பது ஒரு சிறு மாற்றம்.*

வேதம்நாலும் பூதமாய் விரவும்அங்கு நீரதாய்ப்
பாதமே இலிங்கமாய்ப் பரிந்தபூசை பண்ணினால்
காதினின்று கடைசிறந்து கட்டறுத்த ஞானிகள்
ஆதிஅந்த முங்கடந்து அரியவீடு அடைவரே! (127)

*அடுத்து சைவசித்தாந்த சாதனங்களாக* ***சரியை, கிரியை, யோகம், ஞானம்*** *என்ற நிலைகளைக் குறிப் பிட்டு அவற்றால் அடையும் பலன்களையும் தெரிவிக் கின்றார்.*

தெளிந்தநற் சரியைதன்னில் சென்றுசா லோகம்பெறும்
தெளிந்தநற் கிரியைபூசை சேரலாம் சாமீபமே
தெளிந்தநல்ல யோகம்தன்னில் சேரலாகும் சாரூபம்
தெளிந்தஞானம் நான்கிலும் சேரலாம் சாயுச்சயமே(436)

*என்ற பாடலில் சரியை-சாலோகம். கிரியை-சாமீபம், யோகம்-சாரூபம், ஞானம்-சாயுச்யம் பெறுவதைக் காட்டுகின்றார் என்பதை அறியலாம்.*

***சாதிவேற்றுமை:*** *இதனை மிகவும் கடிந்து சாடுகின்றார்.*

பறைச்சியாவது ஏதடா? பணத்தியாவது ஏதடா?
இறைச்சிதோல் எலும்பினும் இலக்கமிட்டு இருக்குதோ?

பறைச்சிபோகம் வேறதோ? பணத்திபோகம் வேறதோ?
பறைச்சியும் பணத்தியும் பகுத்துபாரும் உம்முளே! (39)

சாதியாவது ஏதடா? சலம்திரண்ட நீரெலாம்
பூதவாசல் ஒன்றலோ? பூதம்ஐந்தும் ஒன்றலோ?
காதில்வாளி காரைகம்பி பாடகம்பொன் ஒன்றலோ?
சாதிபேதம் ஓதுகின்ற தன்மைஎன்ன தன்மையோ? (46)

மேதியோடு ஆவுமே விரும்பியே புணர்ந்திடில்
சாதிபேத மாம்உருத் தரிக்கும்ஆறு போலவே
வேதம்ஓது வானுடன் பறைச்சிசென்று மேவிடில்
பேதமாய்ப் பிறக்கிலாத வாறதென்ன பேசுமே(461)

*முன்னிரண்டு அடிகளில் குறிப்பிட்டது தவறு; இதை கபிலரகவலில்,*

பெற்றமும் எருமையும் பிறப்பினில் வேறே
அவ்விரு சாதியில் ஆண்பெண் மாறிக்
கலந்து கருப்பெறல் கண்ட துண்டோ?

*என வரும் அடிகளில் மறுக்கப்பெறுவதையும், நடைமுறையில் இது நடைபெறாததையும் கண்டு தெளியலாம். பின்னிரண்டு அடிகளில் உள்ள நிகழ்ச்சி நடைபெறக்கூடியது. இன்று அரசியல் அலுவலில் அமர்வதற்கு திருக்குலத் தோரும் பார்ப்பனரும் கலப்பு மணம்புரிந்து கொள்வதைக் காணலாம். கபிலரே மேற்குறிப்பிட்ட அடிகளைத் தொடர்ந்து,*

ஒருவகைச் சாதியாம் மக்கட் பிறப்பில்ஈர்
இருவகை யாகநீர் இயம்பிய குலத்து
ஆண்பெண் மாறி அணைதலும் அணைந்தபின்
கருப்பொறை யுயிர்ப்பதும் காண்கின் றிலீரோ?
எந்நிலத் தெந்தவித் திடப்படு கின்றதோ

அந்நிலத் தந்தவித் தங்குரித் திடுமால்
மாறிவே றாகும் வழக்கமொன் றிலையே[15]

என்ற அடிகளில் கூறியிருப்பதைக் கண்டு தெளியலாம். நான்மறையும், சாத்திரங்களும் ஆகமங்களும் சாதி வேற்றுமையைக் கூறுவதைச் சுட்டிகாட்டுகின்றார். (463)

இன்னும் வேதியர், நிலையாமை பிறப்பு-இறப்பு, பரம்பொருள் சடங்குகள் வெறுப்பு போன்ற பல்வேறு செய்திகளை இவர்தம் பாடல்களில் காணலாம். பொதுவாக இவர் போலிகளைக் கண்டித்தவர். ஆண்டவனை உள்ளத்தில் உணர்ந்து ஒழுகாதவரையில் புறப்பூசனைகள் வெறும் வேடம், பயனொன்றும் தாரா என்பதும் இவர்தம் கொள்கை. இதனால் இவர் உருவவழிபாட்டை வெறுப்பவர் என்றும்சொல்வர். ஆயினும் இவர்தம் பாடல்கள் சிவபரம்பொருளையும் ஐந்தெழுத்தையும் போற்றுவனவாக உள்ளன. இவர் சாதிபேதங்களைக் கடந்தவர்.

இவர் பலசித்தர்களும் சிவஞானிகளும் சமயத்தலைவர்களும் வாழ்ந்திருந்த காலத்தில் உடன் வாழ்ந்து அரிய ஞானப்பாடல்களை அருளிய சித்தரும் ஞானியும் ஆவர். நுட்பமான கருத்துகளையும் பாமர மொழியிலேயே பாடினார். இதுபற்றியே முறையாகச் சைவசித்தாந்தம் பாடியவர்கள் இவர் நூலைப் பயின்றதில்லை; இவர் வேதாந்தி என்றுகூடக் கூறிவிட்டனர்.

*(2) பட்டினத்தார்:* தமிழ் இலக்கிய வரலாற்றில் இரண்டு பட்டினத்தார்கள் காணப்பெறுகின்றனர். முதல் பட்டினத்தார் நம்பியாண்டார் நம்பியால் குறிப்பிடப் பெற்றவர்.[16] இவர் பாடிய ஐந்து பிரபந்தங்கள் பதினோராம் சைவத் திருமுறையில் தொகுக்கப் பெற்றுள்ளன. இரண்டாவது

15. கபிலரகவல்-அடிகள் (68-77)
16. பத்தாம் நூற்றாண்டின் இறுதி.

பட்டினத்தார் பல பாடல்கள் பாடினார். இவை **'பட்டினத்துப் பிள்ளையார் பிரபந்தத் திரட்டு'**[17] என்று தொகுப்பில் காணப்பெறுகின்றன. இவருடைய காலமே சித்தர்கள் வாழ்ந்தகாலம். இருவருடைய வரலாறுகளும்[18] பின்னிப்பிணைந்து காணப்பெறுகின்றனவாதலால் சித்தர் பட்டினத்தாரின் வரலாறு ஈண்டு எடுத்துக் கொள்ளப்பெற வில்லை. இவருடைய பாடல்கள் மட்டிலுமே காட்டப் பெறுகின்றன.

(i) **கோயில் திருவகவல்:** இதில் மூன்று அகவற்பாக்கள் உள்ளன. முதல் அகவல் பிறவியைப் பழித்து **'செம்பொன் அம்பலவனை நினைமின்மனனே'** என்று உபதேசிப்பது.

நினைமின் மனனே! நினைமின் மனனே!
சிவபெரு மானைச் செம்பொன்அம் பலவனை
நினைமின் மனனே!...
.........................................................
உலகம்பொய் வாழ்க்கையை உடலைஒம் பற்க!
பிறந்தன இறக்கும் இறந்தன பிறக்கும்
தோன்றின மறையும் மறைந்தன தோன்றும்
பெருத்தன சிறுக்கும் சிறுத்தன பெருக்கும்
உணர்ந்தன.

என்பன போன்ற கருத்துகள் விரிவாக நெஞ்சினை ஈர்க்கும்படி அமைந்து,

---

17. பதினான்காம் நூற்றாண்டின் இறுதி
18. மூவராக எழுதப்பெற்றுள்ளன: (1) பிற்காலத்துப் பெரியார் ஒருவர் 'பட்டினத்துப் பிள்ளையார் புராணம்' என்ற நூலும் (2) தொழுவூர் வேலாயுத முதலியார் 'திருவெண்காட்டடிகள்' என்ற நூலும் (3). தண்டபாணி சுவாமிகள் தாம் பாடிய 'புலவர்புராணத்தில்' பல புதிய கதைகளையும் சேர்த்துப் பாடிய 'பட்டினத்தார் சரித்திரம்' என்பவை.

கடிமலர் கொன்றைச் சடைமுடிக் கடவுளை
ஒழிவுஅருஞ் சிவபெரும் போக இன்பத்தை;
.................................................................
எனதுஅற நினைவுஅற இருவினை மலம்அற
வரவொடு செலவு மருள்அற இருள்அற
இரவொடு பகல்அற இகபரம் அறஒரு
முதல்வனைத் தில்லையுள் முளைத்தெழும் சோதியை
அம்பலத்து அரசனை ஆனந்தக் கூத்தனை
நெருப்பினில் அரக்கென நெக்குநெக்கு உருகித்
திருச்சிற் றம்பலத்து ஒளிரும் சிவனை
நினைமின் மனனே! நினைமின் மனனே!
சிவபெரு மானைச் செம்பொன்அம் பலவனை
நினைமின் மனனே! நினைமின் மனனே! **(1)**

*என்று முடிவது.*

(ii) ***இரண்டாவது*** *யாக்கையைப் பழித்து ஆண்டவனை ஆனந்தத் தாண்டவம் காட்டி ஆட்கொள்ளுமாறு வேண்டுவது.*

காதளவு ஓடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கில் புண்உடல் நாடும்
காதலும் கருத்தும்அல் லால்நின் இருதாள்
பங்கயம் சூடப் பாக்கியம் செய்யாச்
சங்கடம் கூர்ந்த தமியேன் பாங்கு இருந்து
அங்கொடு இங்கொடு அலமரும் கள்வர்
ஐவர் கலகம்இட்டு அலைக்கும் கானகம்
சலமறப் பேழை; இருவினைப் பெட்டகம்
வாதபித்தம் கோழை குடிபுகும் சீறூர்;
ஊத்தைப் புன்தோல் உதிரக் கட்டளை

நாற்றப்பாண்டம்; . . . . . . . . . . .
ஆடும் கயிற்றால் ஆடும் பம்பரம்

ஓயா நோய்க்குஇடம் ஓடும் மரக்கலம்;
மாயா விகாரம் மரணப் பஞ்சரம்

. . . . . . . . . . . . . . . . . . . . . . .

காற்றில் பறக்கும் காணப் பட்டம்

. . . . . . . . . . . . . . . . . . . . . . .

சதுர்முகப் பாணன் தைக்கும் சட்டை

. . . . . . . . . . . . . . . . . . . . . . .

காமக் கனலில் கருகும் சருகு

. . . . . . . . . . . . . . . . . . . . . . .

அந்தரத்து இயங்கும் இந்திர சாபம்;
அதிரும் மேகத்து உருவின் அருநிழல்
நீரில் குமிழி, நீர்மேல் எழுத்து;
கண்துயில் கனவில் கண்ட காட்சி;
அதனினும் பொல்லா மாயக் களங்கம்

. . . . . . . . . . . . . . . . . . . . . . .

ஆனந்தத் தாண்டவம் காட்டி
ஆண்டுகொண்டு அருள்கைநின் அருளினுக்கு அழகே (2)

*என்பது இப்பாடல்.*

(iii) ***மூன்றாவது*** *பாடல் இவ்வளவு மாசு படித்ந உடலை விட்டு உயிர் நீங்கும் காலத்து தாம் இறைவனுக்கு அடைக்கலம் என்று கூறுவது.*

பாற்கடல் கடையப் படுகடும் வெண்ணெயைக்
திருமிடற்று அடக்கிய சிவனே அடைக்கலம்!
அடங்கலும் அடக்கிடும் கடுந்தொலைக் காலனைக்
கால்எடுத்து அடக்கிய கடவுள்நின் அடைக்கலம்

*என்று தொடங்கி உடலைப் பற்றியும் மனத்தைப்பற்றியும் பல்வேறு இழிநிலைகளை எடுத்துக்காட்டி,*

வெளியிடை உரும்இடி இடித்தென வெறித்துஎழும்
கடுநடை வெள்விடைக் கடவுள்நின் அடைக்கலம்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
மறையவர் தில்லை மன்றுள்நின்று ஆடிக்
கருணை கொண்டு அலையெறி கடலே அடைக்கலம்;
தேவரும் முனிவரும் சென்றுநின்று ஏத்தப்
பாசிழைக் கொடியொடு பரிந்தருள் புரியும்
எம்பெரு மான்நின் இணைஅடிக்கு அபயம்;
அம்பலத்து அரசே அடைக்கலம் உனக்கே! (3)

என்று முடிவது.

(iv) ***நான்காவது அகவல் 'கச்சித் திருஅகவல்'*** எனப் பெயர் பெறும். இது "மக்களே, போகவாழ்வை விடுங்கள்; பச்சிலையிடினும் பக்தர்க்கு இரங்கி மெச்சிச் சிவபதம் வீடருள்பவனை இணையடி இறைஞ்சுமின்'' என்று அறிவுறுத்துவது.

(v) ***திருஏகம்பமாலை:*** இது காஞ்சி ஏகம்பநாதரைப் பாடல்தோறும் ***'கச்சி ஏகம்பனே'*** என விளித்துத் துதிக்கும் கட்டளைக்கலித்துறை யாப்பில் அமைந்த 40 பாடல்களைக் கொண்டது. பல்வேறு கருத்துகள் அமைந்த எளிமையான பாடல்கள். எனினும், சிறப்பான பொருள் பொதிந்தவை.

***தம்பிழை பொறுக்குமாறு*** பல பாடல்கள்; அவற்றுள் ஒன்று;

கல்லாப் பிழையும் கருதாப்
பிழையும், கசிந்துஉருகி
நில்லாப் பிழையும், நினையாப்
பிழையும்,நின் அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும், துதியாப்
பிழையும், தொழாப்பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்
வாய்கச்சி ஏகம்பனே (9)

*என்பது. கொடை செய்து பிறருக்கு உதவாதவர்களைப் பல பாடல்கள்; அவற்றுள் ஒன்று:*

பிறக்கும் பொழுது கொடுவந்தது
　　இல்லை பிறந்துமண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவது
　　இல்லை; இடைநடுவில்
குறிக்கும்இச் செல்வம் சிவன்தந்தது
　　என்று கொடுக்க அறியாது
இறக்கும் குலாமருக்கு என்சொல்லு
　　வேன் கச்சி ஏகம்பனே. (7)

*உடலை வெறுத்தும் பேசுவது பற்றிய பல பாடல்கள்; அவற்றுள் ஒன்று:*

ஊற்றைச் சரீரத்தை ஆபாசக் கொட்டிலை ஊன்பொதிந்த
பீற்றல் துருத்தியைச் சோறிடும் தோற்பையைப் பேசரிய
காற்றில் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல் செய்தே
ஏற்றுத் திரிந்துவிட்டேன்இறை வாகச்சி ஏகம்பனே (27)

*என்பது,*

*தீமை செய்து கொண்டே காலம் கழிப்பவர்களைப் பற்றிப் பல பாடல்கள்; அவற்றுள் ஒன்று:*

ஓயாமல் பொய்சொல்வர் நல்லோரை
　　நிந்திப்பர் உற்றுப்பெற்ற
தாயாரை வைவர் சதிஆயி
　　ரம்செய்வர் சாத்திரங்கள்
ஆயார் பிறர்க்குஉப காரம்செய்
　　யார்தமை அண்டினர்க்குஒன்று
ஈயார் இருந்துஎன்ன போய்என்ன
　　காண்கச்சி ஏகம்பனே (19)

*என்பது.*

*நிலையாமையை வற்புறுத்திக் கூறுவதுபற்றிப் பல பாடல்கள்; அவற்றுள் ஒன்று:*

ஊரும் சதம்அல்ல; உற்றார்
சதம்அல்ல; உற்றுப்பெற்ற
பேரும் சதம்அல்ல; பெண்டிர்
சதம்அல்ல; பிள்ளைகளும்
சீரும் சதம்அல்ல; செல்வம்
சதம்அல்ல; தேசத்திலே
யாரும் சதம்அல்ல; நின்தாள்
சதம்கச்சி ஏகம்பனே **(13)**

*என்பது.*

*தம் பற்றற்ற நிலையை ஒரு பாடலில் பேசி, அந்த ஆனந் தக் காட்சியில் தாம் இருக்கும் நிலையைப் பகருகின்றார்.*

பூதங்கள் அற்றுப் பொறிஅற்றுச்
சார்ஐம் புலன்கள்அற்றுப்
பேதம்குணம் அற்றுப் பேராசை
தான்அற்றுப் பின்முன்அற்றுக்
காது அங்கரணங் களும்அற்று
ஆனந்தக் காட்சியிலே
ஏதம் களைத்துஇருப் பேன்இறை
வா!கச்சி ஏகம்பனே**(31)**

*பெண்களைக் கடிதல்பற்றி நிறையப் பாடல்கள் உள்ளன; அவர்களைக் கடுமையாகச் சாடுகின்றார்.*

பெண்ணாகி வந்துஒரு மாயப்பிசாசம்
பிடித்திட்டு என்னைக்
கண்ணால் வெருட்டி முலையால்
மயக்கிக் கடிதடத்துப்
புண்ணாம் குழிஇடைத் தள்ளிஎன்
போதப்பொருள் பறிக்க

எண்ணாது உனைமறந் தேன்இறை
வா!கச்சி ஏகம்பனே (23)

முட்டற்ற மஞ்சளை எண்ணெயில்
கூட்டி முகம்மினுக்கி
மெட்டுஇட்டுப் பொட்டுஇட்டுப் பித்தளை
ஓலை விளக்கியிட்டுப்
பட்டப் பகலில் வெளிமயக்
கேசெய்யும் பாவையர்மேல்
இட்டத்தை நீதவிர்ப் பாய்இறை
வா!கச்சி ஏகம்பனே(29)

*என்பவற்றில் இதனைக் காணலாம்.*

*பெண்கள் கூட்டத்தையே இங்ஙனம் வெறுத்துப் பேசுவது மிகவும் வருத்தத்தைத் தருகின்றது. இயற்கையில் எல்லாப் பிராணிகளிலும் ஆணே பெண்ணை நாடுகின்றது; பெண் ஆணை நாடிஅலைவதில்லை. ஒவ்வொருவரும் தம்மை அழகுபடுத்திக் கொள்வது இயற்கை. ஆண் தன்னை அழகுபடுத்திக் கொள்வதில்லையா? துறவியரும் மனிதர்களே; எதைவேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் பேசலாம் என்பது நியாயம் அன்று.*

(vi) ***திருஏகம்ப விருத்தம்:*** *இதில் ஒரே ஒரு பாடல்தான் உள்ளது. அது,*

அன்னை எத்தனை எத்தனை அன்னையோ
அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ
பின்னை எத்தனை எத்தனை பெண்டிரோ
பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ
முன்னை எத்தனை எத்தனை சென்மமோ
மூட னாய்அடி யேனும் அறிந்திலேன்
இன்னும் எத்தனை எத்தனை சென்மமோ
என்செய் வேன்கச்சி ஏகம்ப நாதனே.

*ஒரு பாட்டாயினும் ஒப்பற்ற பாட்டு; சிந்தனையைச் சிறகடித்துப் பறக்கச் செய்யும் பாட்டு.*

(vii) ***தில்லை முதலிய பல தலங்களில் பாடியவை***[19]: *இப்பாடல்கள் கட்டளைக்கலித்துறை, விருத்தம், வெண்பா. முதலான பலவகை யாப்புகளில் அமைந்தவை.*

ஊட்டுவிப் பானும் உறங்குவிப்
பானும்இங்கு ஒன்றோடுஒன்றை
மூட்டுவிப் பானும் முயங்குவிப்
பானும் முயன்றவினை
காட்டுவிப் பானும் இருவினைப்
பாசக் கயிற்றின்வழி
ஆட்டுவிப் பானும் ஒருவன்உண்
டேதில்லை அம்பலத்தே**(11)**

*என்பது.* ***தில்லையைப்*** *பற்றிய* ***இருபது*** *பாடல்களுள் ஒன்று.*

வாளால் மகவுஅரிந்தது ஊட்டவல்
லேன்அல்லன்; மாதுசொன்ன
சூளால் இளமை துறக்கவல்
லேன்அல்லன்; தொண்டுசெய்து
நாள்ஆறில் கண்இடந்து அப்பவல்
லேன்அல்லன்; நான்இனிச்சென்று
ஆளாவது எப்படி யோதிருக்
காளத்தி அப்பனுக்கே **(3)**

*என்பது* ***காளத்தி அப்பன்****பற்றிய ஆறு பாடல்களில் ஒன்று.*

---

19. பட்டினத்தார் தம் சீடர்பத்திரகிரியார் முத்தி அடைந்த பின்னர் திருத்தலங்கள் தோறும் சென்று இறைவனைப் பாடியதாக வரலாறு.

நீறுஆர்த்த மேனி உரோமம்
சிலிர்த்துஉளம் நெக்குநெக்குச்
சேறுஆய்க் கசிந்து கசிந்தே
உருகிநின் சீரடிக்கே
மாறாத் தியானம்உற்று ஆனந்தம்
மேற்கொண்டு மார்பில்கண்ணீர்
ஆறாய்ப் பெருகக் கிடப்பதுஎன்
றோகயி லாயத்தவனே (5)

*இது **கயிலாயத்தைப்** பற்றிய **எட்டுப்பாடல்களில்** ஒன்று.*

யாவரே இருந்தும் யாவரே வாழ்ந்தும்
யாவரே எமக்குஉற வாயும்
தேவரீர் அல்லால் திசைமுகம் எனக்கும்
திருஉளம் அறியவேறு உளதோ?
பாவலன் ஒருவன் செந்தமிழ்க்கு இரங்கிப்
பரவையார் ஊடலை மாற்ற
ஏவலன் ஆகி இரவெலாம் உழன்ற
இறைவனே ஏகநா யகனே (2)

*இது **திருவெண்காட்டைப்** பற்றிய **மூன்று** பாடல்களில் ஒன்று.*

***'பொது'*** *என்ற தலைப்பில் 61 பாடல்கள் உள்ளன. எல்லாமே அற்புதமானவை.*

உடைகோ வணமுண்டு உறங்கப்
புறத்திண்ணை உண்டுஉணஇங்கு
அடைகாய் இலைஉண்டு, அருந்தத்தண்
ணீர்உண்டு அருந்துணைக்கே
விடைஏறும் ஈசர் திருநாமம்
உண்டுஇந்த மேதினியில்

வடகோடு உயர்ந்தென்ன தென்கோடு
சாய்ந்து என்ன வான்பிறைக்கே(1)

கைஒன்று செய்ய விழிஒன்றுநாடக்
கருத்துஒன்று எண்ணப்
பொய்ஒன்று வஞ்சக நாவொன்று
பேசப் புலால்கமழும்
மெய்ஒன்று சாரச் செவிஒன்று
கேட்க விரும்பும்யான்
செய்கின்ற பூசைஎவ் வாறுகொள்
வாய்வினை தீர்த்தவனே(4)

மாடுஉண்டு கன்றுஉண்டு மக்கள்உண்டு
என்று மகிழ்வதுஎல்லாம்
கேடுஉண்டு எனும்படி கேட்டுவிட்
டோம்இனிக் கேள்மனமே
ஓடுஉண்டு கந்தைஉண்டு உள்ளேஎழுத்து
ஐந்தும் ஓதஉண்டு
தோடுஉண்ட கண்டன் அடியார்நமக்குத்
துணையும் உண்டே (18)

என்செயல் ஆவது யாதுஒன்றும்
இல்லை இனித்தெய்வமே
உன்செய லேஎன்று உணரப்பெற்
றேன்இந்த ஊன்எடுத்த
பின்செய்த தீவினை யாதுஒன்றும்
இல்லைப் பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோஇங்ங
னேவந்து மூண்டதுவே (22)

அஞ்சுஅக் கரம்எனும் கோடாலி
கொண்டுஇந்த ஐம்புலனாம்
வஞ்சப் புலக்காட்டை வேர்அற
வெட்டி வளங்கள்செய்து

விஞ்சத் திருத்திச் சதாசிவம்
என்கின்ற வித்தை,இட்டுப்
புஞ்சக் களைபறித் தேன்வளர்த்
தேன்சிவ போகத்தையே **(46)**

மைஆடு கண்ணியும் மைந்தரும்
வாழ்வும் மனையும்செந்தீ
ஐயாநின் மாயை உருவெளித்
தோற்றம் அகிலத்துஉள்ளே
மெய்யாய் இருந்தது நாள்செல
நாள்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கன
வாய்மெல்லப் போனதுவே**(52)**

*இந்தப்பாடல்கள் அனைத்திலும் இவர் உலக வாழ்க்கையின் நிலையாமை, அடியவர் சிறப்பு, பக்தியின் சாதனை, அருளின் அநுபவம்,போலிகிரியைகளின் பழிப்பு, உண்மையான அன்பின் உயர்வு ஆகியவற்றை மிகச் சிறப்பாகப் பாடியுள்ளார். இப்பாடல்கள்* **'திருமுறையின் பிழிவு'** *என்று சொல்லினும் மிகையன்று. சிறந்த கருத்துகள், எளிய கற்பனை, சொற்பொருள் அடுக்கு, நன்கு உணரத்தக்க உவமை உருவகம் முதலியவற்றால் திகழும் இப்பாடல்களைக் கற்போர் மனத்திலும் கல்லாதோர் நாவிலும் எளிதில் நின்று நிலவுகின்றன. சாத்திரங்களின் நுண் பொருளும் பதி பசுபாச உண்மைகளும் எளிமையாக ஈண்டுச் சொல்லப் பெற்றுள்ளன.*

*ஒவ்வொரு பாடலும் ஒரு மாணிக்கம் போல் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலும் சிறப்பு என்றாலும் தில்லை காளத்தி பற்றிய பாடல்கள் மிகவும் சிறப்பாக உள்ளன. உள்ளத்தில் இறைவன் உறைகின்ற முறையை உணர்ந்த பெருமிதம் பாடல்கள் தோறும் காணப்பெறும்.* ***காதற்ற ஊசியை*** *மூன்று பாடல்களில் குறிப்பிடுவர்.*

*இவர் உலகிற்கு செய்கின்ற உபதேசத்தை,*

ஒன்றென்று இரு;தெய்வம் உண்டுஎன்று
இரு;உயர் செல்வம்எல்லாம்
அன்றுஎன்று இரு;பசித் தோர்முகம்
பார்;நல் அறமும்நட்பும்
நன்றுஎன்று இரு;நடு நீங்காம
லேநமக்கு இட்டபடி
என்றுஎன்று; இருமன மேஉனக்
கேஉப தேசம்இதே(20)

*என்றப் பாடலில் காணலாம்.*

*இவர் போலிக் கிரியைகளைப்பற்றிச் செய்யும் பழிப்பை,*

எட்டுத் திசையும் பதினாறு
கோணமும் எங்கும்ஒன்றாய்
முட்டித் ததும்பி முளைத்துஓங்கு
சோதியை மூடர்எல்லாம்
கட்டிச் சுருட்டிக் கக்கத்தில்
வைப்பர் கருத்தில்வையார்
பட்டப் பகலை இரவுஎன்று
கூறிடும் பாதகரே(30)

*என்ற பாடலில் தெளியலாம்.*

*இவர் உண்மை ஞானம் தெளிந்தவர் என்ற தோற்றத்தை,*

பேய்போல் திரிந்து பிணம்போல்
கிடந்துஇட்ட பிச்சைஎல்லாம்
நாய்போல் அருந்தி நரிபோல்
சுழன்றுநன் மங்கையரைத்
தாய்போல் கருதித் தமர்போல்
அனைவர்க்குத் தாழ்மைசொல்லிச்

சேய்போல் இருப்பர்கண் டீர்உண்மை
ஞானம் தெளிந்தவதே (35)

என்ற பாடலில் காட்டுவதைக் கண்டு மகிழலாம்.

இவர் கண்ணுதல் அப்பன் இருக்கும் இடத்தை,

சொல்லிலும் சொல்லின் முடிவிலும்
வேதச் சுருதியிலும்
அல்லிலும் மாசுஅற்ற ஆகாயம்
தன்னிலும் ஆய்ந்துவிட்டோர்
இல்லிலும் அன்பர் இடத்திலும்
ஈசன் இருக்கும்இடம்
கல்லிலும் செம்பிலுமாஇருப்பான்
எங்கள் கண்ணுதலே (6)

என்ற பாடலில் காட்டி நம்மை மகிழ்விப்பர். இஃது உருவ வழிபாட்டைக் கடிவது அன்று; இறைவன் எங்கும் இருப்பான் என்று இறைவனின் வியாபகத்துவத்தைக் காட்டுவதாகும்.

அடுத்து சில தலங்களைப் பற்றிய ஒருசில பாடல்கள் ஈண்டுத் தரப்பெறுகின்றன.

**திருவொற்றியூர்:**

ஒடுவிழுந்து சீப்பாயும் ஒன்பதுவாய்ப் புண்ணுக்கு
இடுமருந்தை யான்அறிந்து கொண்டேன்–கடுஅருந்தும்
தேவாதி தேவன் திருவொற்றி யூர்த்தெருவில்
போவார் அடியிற் பொடி.

**திருவாரூர்:**

ஆரூரர் இங்கிருக்க அவ்வூர்திரு நாளன்று
ஊர்ஊர்கள் தோறும் உழலுவீர்!–நேரே

உளக்குறிப்பை நாடாத ஊமர்காள் நீவிர்
விளக்குஇருக்கத் தீத்தேடு வீர்.

***திருவையாறு:***

மண்ணும் தணல்ஆற; வானும் புகைஆற
எண்ணரிய தாயும் இளைப்புஆறப்—பண்ணும்அயன்
கைஆற வும்அடியேன் கால்ஆற வும்காண்பார்
ஐயா திருவையா றா.

***திருக்குற்றாலம்:***

காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பால்உண் கடைவாய்ப் படுமுன்னே—மேல்விழுந்தே
உற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு.

***அன்னை இறந்தபோது:***[20]

முந்தித் தவம்கிடந்து முந்நூறு நாள்சுமந்தே
அந்திபக லாய்ச்சிவனை ஆதரித்துத்—தொந்தி
சரியச் சுமந்து பெற்ற தாயார் தமக்கோ
எரியத் தழல்மூட்டு வேன் (2)

வட்டிலிலும் தொட்டிலிலும் மார்மேலும் தோள்மேலும்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து—முட்டச்
சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டும் தாய்க்கோ
விறகிலிட்டுத் தீமூட்டு வேன் (3)

நொந்து சுமந்துபெற்று நோவாமல் ஏந்திமுலை
தந்து வளர்த்துஎடுத்துத் தாழாமே—அந்திபகல்
கையிலே கொண்டுஎன்னைக் காப்பாற்றும் தாய் தனக்கோ
மெய்யிலே தீமூட்டு வேன் (4)

20. தகனக்கிரியை செய்யும் முன் பாடியவை (10 பாடல்கள்)

முன்னை இட்டதீ முப்பு ரத்திலே
பின்னை இட்டதீ தென்இ லங்கையே
அன்னை இட்டதீ அடிவ யிற்றிலே
யானும் இட்டதீ மூள்க மூள்கவே (7)

*ஒரு திருமணத்தில் சிலர் வேண்டுகோளின்படி மணமக்களை நோக்கிப் பாடியது:*

நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியம் தேடி
நலம்ஒன்றும் அறியாத நாரியரைக் கூடி
பூப்பிளக்க வருகின்ற பூற்றீசல் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைக் பெறுவீர்;
காப்பதற்கும் வகைஅறிவீர் கைவிடவும் மாட்டீர்;
கவர்பிறந்த மரத்துளையில் கால்நுழைத்துக் கொண்டே
ஆப்புஅதனை அசைத்துவிட்ட குரங்கதனைப் போல
அகப்பட்டீர்; கிடந்துஉழல அகப்பட் டீரே.

*என்பதாகும்.*

***(3) பத்திரகிரியார்:*** *துளுவ நாட்டைச் சேர்ந்த மன்னர் இவர். பத்திரிகிரி அரசர் என்ற பெயருடன் ஆட்சி செய்து வந்த இவர் பட்டினத்தாரைக் கழுவேற்ற முயன்றபோது தோற்று அவருக்கு அடிமையாகி, அரச போகங்களைத் துறந்து, அவரையே குருவாக ஏற்று, தொண்டுகள் செய்து முக்தி அடைந்தவர்.*[21] *இவருடைய வரலாற்றைப் பட்டினத்தார் வரலாற்றுடன் படித்துஅறியலாம்.*

***திருப்புலம்பல்:*** *இந்நூல் பத்திரகிரியாரால் அருளப் பெற்றது.* ***'திருப்புலம்பல்'*** *என்றும்* ***'மெய்ஞ்ஞானப் புலம் பல்'*** *என்றும் பெயர்பெற்று வழங்குகின்றது. 235 கண்ணிகள் கொண்டது. இதன் கண்ணிகள் ஒவ்வொன்றும்* ***'எக்காலம்'*** *என்று முடிவது.*

---

21. 16-ஆம் நூற்றாண்டு இறுதி.

ஓட்டுடன் பற்றின்றி உலகைத் துறந்த செல்வப்
பட்டினத்தார் பத்திரகிரி பண்புணர்வ தெந்நாளோ?[22]

*என்று பத்திரகிரியாரைப் பாராட்டுவர் தாயுமான அடிகள்.*

கண்ணால் அருவி கசிந்துமுத்துப் போல்உதிரச்
சொன்ன பரம்பொருளை எண்ணுவது எக்காலம்? (60)

ஆகம் மிகவுருக அன்புருக என்புருக
போக அநுபூதி பொருந்துவதும் எக்காலம்? (61)

குறியாகக் கொண்டு குலம் அளித்த நாயகனைப்
பிரியாமல் சேர்ந்து பிறப்பறுப்பது எக்காலம்? (136)

இன்னவென்று சொல்லவொண்ணா
எல்லையற்ற வான்பொருளைச்
சொன்னதென்று நான்அறிந்து
சொல்வதினி எக்காலம்? (160)

*என்பவை போன்ற கண்ணிகள் இறையநுபவத்தைக் குறிப்பிடுகின்றன.*

அத்தன் இருப்பிடத்தை ஆராய்ந்து பார்த்துநிதம்
செத்த சவம்போலத் திரிவதினி எக்காலம்? (21)

வேதாந்த வேதம்எல்லாம் விட்டொழித்தே நிட்டையிலே
ஏகாந்த மாக இருப்பதினி எக்காலம்? (32)

அட்டாங்க யோகம்அதற் கப்பாலுக் கப்பாலாய்
கிட்டாப் பொருள்அதனைக் கிட்டுவதும்எக்காலம்? (149)

அல்லும் பகலும்என்றன் அறிவைஅறி வால்அறிந்து
சொல்லும் உரைமறந்து தூங்குவதும் எக்காலம்? (156)

*என்பன போன்ற கண்ணிகள் யோகநிலையைக் குறிப்பிடுகின்றன.*

22. தா.பா. எந்நாட்கண்ணி - அடியார் வணக்கம் - 25

தித்திக்கும் தெள்ளமிழ்தைச் சித்தாந்தத்து உட்பொருளை
முத்திக்கு வித்தை முதல்நினைப்பது எக்காலம்? (31)

நட்ட நடுவில்நின்று நல்திரோ தாயிஅருள்
கிட்டவழிகாட்டிக் கிருபை செய்வது எக்காலம்? (81)

பாசத்தை நீக்கிப் பசுவைப் பதியில்விட்டு
தேசத்தின்உள்ளே நினைந்திருப்பது எக்காலம்? (151)

செம்பில் களிம்புபோல் சிவத்தை விழுங்கிமிக
வெம்பிநின்ற மும்மலத்தை வேறுசெய்வது எக்காலம்? (180)

சாகாச் சிவனடியைத் தப்பாதார் எப்போதும்
போகாஉடல் அகன்று போவதென்பது எக்காலம்? (183)

*என்பன போன்ற கண்ணிகள் சைவசித்தாந்தக் கருத்து களைச் சாற்றுவனவாக அமைகின்றன.*

ஐந்து பொறிவழிபோய் அலையும்இந்தப் பாழ்மனத்தை
வெந்து விழப்பார்த்து விழிப்பதுஇனி எக்காலம்? (84)

*என்பது புலன்களைப்பற்றிய கண்ணி.*

அருளாய் உருவாகி ஆதிஅந்தம் ஆகின்ற
குருவாக வந்துஎனை ஆட்கொண் டருள்வது எக்காலம்? (117)

சாவாமல் செத்திருந்து சற்குருவின் பொன்னடிக்கீழ்
வேகாமல் வெந்திருக்க வேண்டுவதும் எக்காலம்? (137)

*இவை இரண்டும் குருவைப் பற்றிய கண்ணிகளாகும்.*

எண்ணூறு யுகம்இருந்தும் எய்தாத வீடுபெற
வெண்ணீறு பூசி விளங்குவதும் எக்காலம்? (27)

செஞ்சலத்தி னால்திரண்ட சென்னமோட் சம்பெறவே
சஞ்சலத்தை விட்டுஉன்னைச் சரண்அடைவது எக்காலம்? (164)

அத்துவிதம் போலும் என்றன் ஆத்துமத்தின் உள்ளிருந்து
முத்தி தரநின்ற முறைஅறிவது எக்காலம்? (201)

*இவை போன்ற கண்ணிகள் வீடுபேற்றைச் சுட்டுபவை யாகும்.*

தந்தைதாய் மக்கள் சகோதரரும் பொய்எனவே
சிந்தைதனில் கண்டு திருக்கறுப்பது எக்காலம?(13)

இன்றுளோர் நாளை இருப்பதுவும் பொய்யெனவே
மன்றுளோர் சொல்லும் வகையறிவது எக்காலம்?(34)

பொல்லாத காயம்அதைப் போட்டு விடுக்குமுன்னே
கல்ஆவின் பால்[23] கறப்பக் கற்பதுஇனிஎக்காலம்? (198)

*இவை நான்கும் நிலையாமைக் கருத்தை நிலைநாட்டும் கண்ணிகள்.*

*பாமர மக்கள் இந்நூலை நன்கு கற்றுப்பாடி வந்துள்ளர். இக்காரணம் பற்றி இந்நூலுள் நூலுக்குப் பொருந்தாத பல கண்ணிகள் இடைச்செருகலாகப் பிற்காலங்களில் சேர்க்கப்பெற்றன. அக்கால இயல்பையொட்டி மாதரைப் பழித்தல் என்ற கருத்துப்படி,*

கால்காட்டிக் கைகாட்டிக் கண்கள் முகம்காட்டி
மால்காட்டும் மங்கையரை மறந்துஇருப்பது எக்காலம்? (9)

பெண்ணினல்லார் ஆசைப் பிரமையினை விட்டொழித்து
கண்ணிரண்டும் மூடிக் கலந்திருப்பது எக்காலம்? (10)

வெட்டுண்ட புண்போல் விரிந்தஅல்குல் பைதனிலே
தட்டுண்டு நிற்கை தவிர்வதுவும் எக்காலம்?(11)

*என்பனபோன்ற கண்ணிகள் இடைச்செருகலாக அமைந்துவிட்டன என்று கருதலாம்.*

---

23. கல் ஆவின்பால் - உயிர் என்னும் பசுவினிடம் கறக்கின்ற ஞானப்பால்.

*(4) பாம்பாட்டிச் சித்தர்:* இவர் பாண்டி நாட்டில் பிறந்து சட்டைமுனியிடம் தீட்சைபெற்றார் எனக் கூறுவர்.[24] இவர் திருக்கோகர்ணத்தில் பிறந்து கொங்கு நாட்டிலுள்ள மருதமலையில்[25] புகழுடன் வாழ்ந்து வந்தார் எனவும், இவர் வாழ்ந்த சின்னங்களை இன்றும் அம்மலையில் காணலாம் என்றும் சிலர் கூறுவர்.

இவருடைய பாடல்கள் எளியநடை, சொல்நயம் தெளிந்த உவமை கொண்டவை.

நாதர்முடி மேலிருக்கும் நாகப்பாம்பே
நச்சுப்பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே.

என்று இன்றும் மக்கள் வாயில் தாண்டவமாடும் புகழ் பெற்ற பாடல் இவருடையது. பாம்பாட்டுவோர் பிடாரர். இவர்களே பாம்பாட்டிகள். **'ஆடு பாம்பே'** என்று பாம்பை ஆட்டுவிப்பதுபோல் அபிநயம் பிடித்துப் பாடுவதால் இவர் **'பாம்பாட்டிச்சித்தர்'** என்ற பெயர் பெற்றார். இவர் பாடிய 129 பாடல்கள் இன்றும் வழக்கில் உள்ளன. **'பதினெண்சித்தர் பாடல்கள்'** என்ற தொகுப்பு நூலிலும் இடம் பெற்றுள்ளன.

**இவை:** கடவுள் வணக்கம் 9; குருவணக்கம்10; பாம்பின் சிறப்பு5; சித்தர் வல்லபம்10; சித்தர் சம்வாதம் 5; பொன்னாசை விலக்கல்10; உடலின் குணம்10; அகப்பற்று நீக்கல் 32; இறுதியில் மீண்டும் சித்தர் வல்லபம், 18 பாடல்கள்; இவை எண்சீர் விருத்தங்களாக அமைந்துள்ளன.

இப்பாடல்கள் சம்பிரதாயக் கருத்துகளை நுவல்வதாகத் தோன்றினாலும் அடிப்படையில் ஆழ்ந்த தத்துவம் கொண்டவை. பாம்புவடிவாக மண்டலித்துள்ள குண்டலினி சக்தியை எழுப்பி அதன்மூலம் ஆன்ம சொரூப தரிசனமும்

24. 15-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர்.
25. கோயம்புத்தூருக்கு அருகில் உள்ளது.

*பாத தரிசனமும் செய்வதை இந்தப் பாடல்கள் குறிப்பிடு கின்றன. பாடல்கள் அனைத்திலும் எளிமையான உவமை கள் கையாளப்பெற்றுள்ளன.*

*தொடக்கம்:*

தெளிந்து தெளிந்து தெளிந்து ஆடுபாம்பே சிவன்
சீர்பாதங்கண்டு தெளிந்து ஆடுபாம்பே!
ஆடுபாம்பே; நெளிந்து ஆடுபாம்பே; சிவன்
அடியினைக் கண்டோமென்று ஆடுபாம்பே! (1)

*என்று இப்பகுதி முதற்பாடலாகத் தொடங்கி,*

எவ்வுயிரும் எவ்வுலகும் ஈன்று புறம்பாய்
இருந்துதிரு விளையாட்டு எய்தியும் பின்னர்
அவ்வுயிரும் அவ்வுலகும் ஆகியும் நின்ற
ஆனந்த வெள்ளங் கண்டு ஆடுபாம்பே!(9)

*என்ற ஒன்பதாம் பாடலில் முடிகின்றது.*

*அடுத்து வருவது* ***'குருவணக்கம்'*** *என்பது. இதில் பத்துப் பாடல்கள் அடக்கம். இதில் சற்குரு, பொய்க்குருக்கள், வேதம் கடந்த மெய்ப்பொருள், போதப்பொருள், கூடு விட்டுக் கூடுபாயும் கொள்கையுடைய குரு முதலிய செய்திகள் குறிப்பிடப் பெறுகின்றன. இப்பகுதியில்,*

சாற்றுமுடல் பொருள்ஆவி தத்தமாகவே
தானம்வாங்கி நின்றஎங்கள் சற்குருவினைப்,
போற்றிமனம் வாக்குக்காயம் மூன்றும்பொருந்தப்
புகழ்ந்து புகழ்ந்துநின்று ஆடுபாம்பே! (10)

கற்பகாலம் கடந்தாதி கர்த்தாவோடும்
கடமழி யாதுவாழும் காரணக்குரு
பொற்பதமே தஞ்சமென்று போற்றுதல்செய்து
பூரணச் சிந்தையோடு ஆடுபாம்பே!(18)

*என்ற இரண்டு பாடல்கள் அற்புதமானவை.*

'*பாம்பின்சிறப்பை*' *ஐந்து பாடல்கள் பேசுகின்றன. இதில் உள்ள,*

நாதர்முடி மேலிருக்கும் நாகப்பாம்பே!
நச்சுப்பையை வைத்திருக்கும் நல்லபாம்பே!
பாதலத்தில் குடிபுகும் பைங்கொள்பாம்பே!
பாடிப்பாடி நின்றுவிளை யாடுபாம்பே! (20)

*என்ற முதற்பாடலின் முதல்இரண்டுஅடிகள் மக்கள் மனத்தில் மாறாத இடம்பெற்றுள்ளன; மனக்காதால் கேட்ட வண்ணம் உள்ளன.*

**'சித்தர்வல்லபத்தை'***ப் பதினைந்து பாடல்களில் (25-39) எடுத்துரைக்கின்றன. இவற்றுள் சில பாடல்கள் சித்தரே பேசும் பாணியில் அமைந்துள்ளன. அனைத்தும் அற்புதப் பாடல்களே. எதனை எடுப்பது எதனை விடுவது என்ற சங்கடமான நிலை.* **இரண்டை** *மட்டிலும்காட்டுவேன்.*

தூணைச்சிறு துரும்பாகத் தோன்றிடச் செய்வோம்
துரும்பைப் பெருந்தூணாகத் தோற்றச்செய்குவோம்
ஆணைப்பெண்ணும் பெண்ணைஆணும் ஆகச்செய்குவோம்
ஆரவாரித்து எதிராய் நின்று ஆடுபாம்பே (27)

*முதல் இரண்டு அடிகள் 'அணிமா, மகிமா' என்ற சித்திகளையும் இரண்டாவது இரண்டடிகள் படைப்பில் மாற்றம் செய்யும் அற்புத ஆற்றலையும் குறிப்பிடுகின்றன.*

மூண்டெறியும் அக்கினிக்குள் மூழ்கி வருவோம்
முந்நீருள் இருப்பினும் மூச்ச டக்குவோம்
தாண்டிவரும் வன்புலியைத் தாக்கி விடுவோம்
தார்வேந்தன்முன்புநீ நின்று ஆடுபாம்பே! (29)

*இப்பாடல் தாயுமான அடிகளின்* **'கந்துகமதக்கரியை வசமாய் நடத்தலாம்'** *(தேசோமயா-8) என்ற பாடலின் சாயைபோல் அமைந்திருப்பதைக் கண்டு மகிழலாம். வேறு*

*சில பாடல்களும் (20, 32, 34) இப்பாணியிலேயே அமைந்து நம்மை மகிழ்விக்கின்றன.*

*பொருளாசை, பெண்ணாசை இவற்றை விலக்கல், அகப்பற்றை நீக்கல், உடலின் குணம் முதலியனபற்றிய செய்திகளையும் ஈண்டுக்காணலாம். அகப்பற்றை நீக்குதல் பற்றி பதினெட்டு (112-129) எண்சீர் விருத்தப் பாடல்களும் உள்ளன. சான்றாக மூன்றைக் காட்டுவேன்.*

ஓங்காரக் கம்பத்தின் உச்சி மேலே
உள்ளும் புறம்பையும் அறிய வேண்டும்
ஆங்காரக் கோபத்தை அறுத்து விட்டே
ஆனந்த வெள்ளத்தைத் தேக்கிக் கொண்டே
சாங்காலம் இல்லாமல் தாணு வோடே
சட்டதிட்ட மாய்ச்சேர்ந்து சாந்த மாகத்
தூங்காமல் தூங்கியே, சுகம் அடைந்து
தொந்தோம் தொந்தோம் என்று ஆடுபாம்பே !**(116)**

காயக் குடத்திலே நின்ற பாம்பைக்
கருணைக் கடலிலே தியங்க விட்டு
நேயச் சுழுமுனை நீடு பாய்ச்சி
நித்தியமான வத்துவை நிலைக்க நாடி
மாயப் பெருவெளி தன்னில் ஏறி,
மாசற்ற பொருளினை வாய்க்கத் தேடி
ஆயத் துறைகடந் தப்பாற் பாழின்
ஆனந்தோம் சேர்ந்தோம் என்று ஆடுபாம்பே !**(118)**

மூலத் தலத்திலே நின்ற கருத்தை
முற்றும் சுழுமுனை தன்னில் ஊடே
மேலத் தலத்திலே விந்து வட்டம்
வேலை வழியிலே மேவி வாழும்
பாலத் திருத்தாய்க் கருணை யதனால்
பரகதி ஞான சொரூப மாகி

ஆலச் சயத்து மாலுடன் நின்றே
ஆனந்தம் சேர்ந்தோம் என்று ஆடுபாம்பே (119)

*சித்தர்பாடல்களில் எண்சீர் விருத்தப் பாடல்கட்கு ஒரு தனிப்பெருமை உண்டு.*

*(5)* **இடைக்காட்டுச் சித்தர்:** *இவர் பாடிய பாடல்கள் 130. இவை பல்வேறு வகைச் சந்தங்களில் அமைந்துள்ளன. இவர் இடைக்காடு என்ற ஊரினர் போலும் என்று கருத இடந்தருகின்றது.* **'தாண்டவக் கோனே,' 'கோனே' 'கோனாரே'** *என்று இவர் பாடிய பாடல்கள் அமைந்திருப் பதால், இவர் கோனார் (இடையர்-யாதவர்) வகுப்பினர் என்றும் கருதப்பெறுபவர்*[26]. *இவர் கொங்கணச் சித்தரின் சீடர்.*[27] *இவர் பிறவி வரலாறு ஒன்று கொங்கு* **மண்டல சதகத்தில்** *(38) உள்ளது.*

*கொற்றவனூரில் வாழ்ந்த இடையர் சிறுவன் ஒருவன். மலைச்சாரல்பக்கம் ஆடுமேய்க்கச் சென்றவன், மாலையில் வீடு திரும்பவில்லை. இரவு முழுவதும் தனிமையில் வருந்திக்காலம் போக்கினான். பொழுது புலர்ந்ததும் பசி அதிகமாயிற்று. ஒரு காட்டுக்கொட்டையை எடுத்து ஒரு கல்லின்மீது வைத்து மற்றொரு கல்லால் அதை உடைக்கவே, கீழிருந்த கல்லில் குருதி பெருகிற்று. இதனைக் கண்ட சிறுவன் ஊழ்வினைப் பயனால் இது* **'சிவலிங்க வடிவம்'** *என்று உணர்ந்து அதனைக் கட்டிக் கொண்டு தன் வசமற்றுக் கண்ணீர் உகுத்தபடி அங்கிருந்தான்.*

*பிள்ளை வீடு திரும்பாதது கண்டு அவனுடைய தந்தை இரவெல்லாம் தேடி அங்கு வந்து தன் மகனின் நிலைகண்டு*

---

26. நகைச்சுவை மன்னர் என். எஸ். கிருட்டிணன் 'தாண்டவக் கோனே' என்ற தொடர் அமைத்துப் பாடித் தமிழுலகத்தை மகிழ்வித்தமை ஈண்டு நினைவிற்கு வருகின்றது.
27. 15-ஆம் நூற்றாண்டு

வியப்பெய்தினான். மகன் சிவலிங்கத்தைவிட்டு பிரிய மனம் வராமையால் அங்கேயே ஒரு கொட்டகை அமைத்து அவ்விடத்தைக் கோயிலாக்கினான். தந்தையும் மகனுடன் சேர்ந்து வழிபட்டு வந்து உரிய காலத்தில் சிவப்பேறு எய்தினான். சிறுவனும் நெடுநாள் தங்கியிருந்து பெரிய ஞானியாகவும் சித்தராகவும் விளங்கினான். இடையர் குலத்தைச் சார்ந்தவனாதலால் **'இடைஞானி'** எனவும், **இடைக்காட்டுச் சித்தராகவும்** பெயர் பெற்றான். இவருடைய திருமேனி கொற்றவனூர் திருக்கோயிலில் இன்றும் பூசிக்கப்பெறுகிறது; இவர் குலத்தாருக்கு அக்கோயிலில் சில மரியாதைகள் நடைபெறுகின்றன.

இன்னொரு கதையும் உண்டு. மலைச்சாரலில் இவர் வழக்கம்போல் ஆடுமேய்த்துக் கொண்டிருந்தபோது நவசித்தருள் ஒருவர் (கொங்கணர்?) வந்து பால் வேண்ட, அவருக்கு இவர் பால் முதலியன வழங்கி உபசரித்தார் என்றும், அதற்கு ஈடாக அச்சித்தர் ஞான உபதேசம் செய்து விட்டு ஏகினார் என்றும், அதன் விளைவாக இவர் சகல சித்திகளும் அடைந்து சித்தரானார் என்றும் கூறப் பெறுகின்றது.

நாட்டில் ஒருமுறை மழையின்றிப் பஞ்சம் ஏற்பட்டு ஆடுமாடுகள் கூடத் தீவனம் இன்றித் துயரடைந்தபோது இவர்தம் சித்துக்களினால் அவற்றைக் காத்ததுடன் கோள் நிலைகளையும் மாற்றியமைத்து மழைபெய்யச் செய்து உயிரினங்களைக் காப்பாற்றினார் என்றும் மற்றொரு கதையும் உண்டு.

***இவர் பாடல்கள்:*** காப்புச் செய்யுளுடன் தொடங்கு கின்றது. முதலில் தாண்டவக்கோன் தோன்றி இறை யுணர்வு பற்றிப் பத்துப் பாடல்கள் பாடுகின்றார்.

எல்லா உலகமும் எல்லா உயிர்களும்
எல்லாப் பொருள்களும் எண்ணரிய
வல்லாளன்ஆதி பரம சிவனது
சொல்லால் ஆகுமே கோனாரே (1)

*என்பது முதற்பாடல். ஒவ்வொரு பாடலும்* ***'கோனாரே'*** *என்று இறும். பின்னர் நாராயணக்கோன் தாண்டவக் கோனை விளித்துப் பாடுகின்றார்.*

மனமென்னும் மாடுஅடங்கில் தாண்டவக் கோனே–முத்தி
வாய்த்ததென்று எண்ணேடா தாண்டவக்கோனே (13)

சினமென்னும் பாம்பு இறந்தான்தாண்டவக்கோனே?–யாவும்
சித்தியென்றே நினையேடா தாண்டவக் கோனே (14)

*இதன்பின் நாராயணக்கோன் தோன்றி 14 பாடல்களில் பசுவை விளித்து,*

ஆதிபகவனையே–பசுவே!
அன்பராய் நினைப்பாயேல்
சோதி பரகதிதான்–பசுவே!
சொந்தமது ஆகாதோ? (33)

ஐயன் திருப்பாதம்–பசுவே!
அன்புற்று நீபணிந்தால்
வெய்ய வினைகள் எல்லாம்–பசுவே!
விட்டோடும் கண்டாயே (41)

சொல்லென்னும் தற்பொருளாம்–பசுவே!
சோதியைப் போற்றாக்கால்
இல்லென்னும் முத்திநிலை–பசுவே!
எப்பொருளும் சொல்லுமே (46)

*என்று பாடுகின்றான்.*

*பின்னர் கோன் வந்து குழலூதுகின்றான்.*

தொல்லைப் பிறவி தொலைக்கார்க்கு முத்திதான்
இல்லையென்று ஊதுகுழல்—கோனே
இல்லையென்று ஊதுகுழல் (96)

*இங்ஙனம் 12 பாடல்கள் நடைபெறுகின்றன. அடுத்து வருவது பால் கறத்தல் பற்றியது. இதில்,*

சாவாது இருந்திடப் பால்கற—சிரம்
தன்னில் இருந்திடும் பால்கற
வேவாது இருந்திடப் பால்கற—வெறு
வெட்ட வெளிக்குள்ளே பால்கற (107)

*இப்பாடலுடன் ஆறு பாடல்கள் நடைபெறுகின்றன. பிறகு வருவது **'கிடைகட்டுதல்'** பற்றியது. இதில்,*

இருவினையாம் மாடுகளை ஏகவிடு வோனே—உன்
அடங்குமன மாடொன்றை அடக்கிவிடு கோனே(113)

*என்ற பாடலுடன் 10 பாடல்கள் அடங்கியுள்ளன. தொடர்ந்து வரும் 8 பாடல்களில் நித்தியம் நேர்படுகின்றது. இதில்,*

நித்தியமானது நேர்படி லேநிலை கோனே!—என்றும்
நிற்குமென்றே கண்டு நிச்சயங்காண் எங்கள் கோனே (128)

*என்பது ஒரு பாடல். இப்பகுதியில் சைவசித்தாந்தக் கருத்துகளே பூரணமாய்ச் சொல்லப்பெற்றுள்ளன.*

*இவர்தம் பாடல்களில் இந்தப் பகுதிக்குப் பொருத்தம் இல்லாத வேறு பல பகுதிகள் இடையே பெய்யப் பெற்றுள்ளன. பலரொடு கிளத்தல், நெஞ்சொடு கிளத்தல், அறிவொடு கிளத்தல் என்பன சில பகுதிகள். அடுத்து* **'தும்பீ பற'** *என்று இறும்பாடல்கள்* **'சித்தத்தொடுகிளத்தல்'** *என்ற தலைப்பில் உள்ளன. பின்பு குயிலோடு கிளத்தல், மயிலொடு கிளத்தல், அன்னத்தொடு கிளத்தல் அமைகின்றன. இவற்றுள் மயிலொடு கிளத்தல் மிகவும் இனிமை*

*யானது. ஆட்டத்திற்குரிய அற்புதப் பாடல்கள் அமைந்த பகுதி இது.*

ஆடுமயி லேநட மாடுமயிலே—எங்கள்
ஆதியணி சேடனென்று ஆடுமயிலே
கூடுபோகு முன்னங்கதி கொள்ளுமயிலே—என்றும்
குறையாமல் மோனநெறி கொள்ளு மயிலே **(87)**

*என்ற பாடலை ஆட்டத்திற்குரிய இசையோடு பாடி அநுபவிக்கலாம்.*

*பின்னர் நெஞ்சொடு கிளத்தல் (மனத்தொடு கிளத்தல்) என்ற பகுதியிலுள்ள இறுதிப் பாடல்* ***"என்றும் தான் சாவாமற் கற்பதே கல்வி"*** *என்ற அவ்வையார் வாக்கை நினைப்பூட்டுகின்றது.*

பேசாது இருப்பதற்குத் தான்கற்ற கல்வியன்றோ
வாகான மெய்க்கல்வி வகுத்தறிநீ கல்மனமே **(66)**

*என்பது காண்க. பிற சித்தர் பாடல்கள் அனைத்தையும் விட இப்பாடல்கள் சித்தர் நெறியில் இருக்கும் இன்பத்தை மிகத் தெளிவான சொற்களால் விளக்குகின்றன. இப் பாடல்கள் ஆட்டத்திற்கும் அமைந்தன என்று தோன்று கின்றது. இவர் பாடிய சந்தமும்* ***'ஆடுபாம்பே'*** *என்று பாடிய பாடல்களின் சந்தமும் ஒன்றாகவே இருப்பது கண்டு மகிழத்தக்கது.*

***(6) அகப்பேய்ச்சித்தர்:*** *மனத்தைப் பேய் என்று உருவகப்படுத்திப் பாடியமையால் இச்சித்தர்* ***'அகப் பேய்ச் சித்தர்'*** *என வழங்கப்பெறுகின்றார்*[28] *மனத்தை ஒரு பேயாகக் கருதி அதற்குப் பெண் உருவம் நல்கி அதனைத் தம்முன் நிறுத்திப் பாடல்களைப் புனைந்துள்ளார். ஒவ்வொரு பாடலும் 'அகப்பேய்' என்ற விளியுடன்*

28. 15-ஆம் நூற்றாண்டு

*அமைந்துள்ளது. அச்சு ஏடுகளில்* ***'அகப்பைச் சித்தர்'*** *என்றிருப்பது பிழை.*

*இவர் படைப்பில் 90 கண்ணிகள் அடங்கியுள்ளன. மனம் பேய்போல் கட்டுப்படாமல் அலைகின்ற படியால் மனம் பேயாக உருவகப்படுத்தப்பெற்றது. இவர்தம் பாடல்கள் பல்வேறு சமயக் கருத்துகள்-குறிப்பாக சைவசித்தாந்தக் கருத்துக்கள்-பொதிந்துள்ளன.*

நஞ்சுண்ண வேண்டாவே—அகப்பேய்
நாயகன் தாள் பெறவே
நெஞ்சு மலையாதே—அகப்பேய்
நீஒன்றும் சொல்லாதே— **(1)**

*என்பது முதற்பாடல்.*

*ஐம்பெரும் பூதங்களின் உற்பத்தியைப் பற்றிச் சில பாடல்கள் பேசுகின்றன.*

பிருதிவி பொன்னிறமே—அகப்பேய்
பேதமை அல்லவடி
உருவது நீரடியோ—அகப்பேய்
உள்ளது வெள்ளையடி **(11)**

தேயு செம்மையடி—அகப்பேய்
திடனது கண்டாயே
வாயு நீலமடி—அகப்பேய்
வான்பொருள் சொல்வேனே. **(12)**

*இப்பாடல்களுள் பிருதிவி, தேயு, வாயு அமைந்திருப்பதைக் காணலாம்.*

நாத வேதமடி—அகப்பேய்
நன்னடம் கண்டாயோ
பாதம் சத்தியடி—அகப்பேய்
பரவிந்து நாதமடி **(3)**

விந்து நாதமடி—அகப்பேய்
மெய்யாக வந்ததடி
ஐந்து பெரும்பூதம்—அகப்பேய்
அதனிடம் ஆனதடி. (14)

*இப்பாடல்களில் நாதம், விந்து ஐம்பெரும்பூதங்கள் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்.*

*இங்ஙனமே அகார உகார மகாரங்கள்; சரியை கிரியை யோகம், ஞானம்; பாசம், பசு, சைவம், ஆணவம்; சும்மா இருத்தல், அருள் பெறுதல், வாசியிலேறுதல், தன்னையறிதல் முதலான பொருள்களைக் குறிப்பிட்டுப் பாடுதலைக் காணலாம். பலசெய்திகள் உள்ளமையால், பொருள் சிதறிக் கிடக்கின்றது. சைவ சிந்தாந்த நெறியில், சித்தர்மொழியில் பாடியுள்ளமையால் அவை பாமரமக்கள் நாவிலும் தாண்டவமாடுகின்றன.*

***(7) அழுகுணிசித்தர்:*** *இச்சித்தரின் பாடல்கள் 32. பாடல்கள் அழகும் அணிநயமும் இனிமையும் கொண்டவை. அதனால் அழகுச் சித்தர் என வழங்கப் பெறுகின்றார்.*[29] *இப்பெயர் மருவி* ***'அழுகணிச்சித்தர்' 'அழகுணிச்சித்தர்'*** *என்றும் வழங்கப்பெறுகின்றது ஒரு குழந்தையைக்* ***'கண்ணம்மா'*** *என்று விளித்துக் கேட்கும் முறையில் பாடல்கள் அமைந்துள்ளன.*

மூலப் பதியடியோ மூவிரண்டு வீடதிலே
கோலப் பதியடியோ குதர்க்கத் தெருநடுவே
பாலப் பதிதனிலே தனலாய் வளர்த்தகம்பம்
மேலப் பதிதனிலே எனகண்ணமா!
விளையாட்டைப் பாரேனோ! (1)

*என்பது முதற்பாடல். இங்ஙனம் கலித்தாழிசையில் பாடல்கள் யாவும் அமைந்துள்ளன. ஈண்டுக்* ***'கண்ணம்மா'*** *என்று*

---

29. 15-ஆம் நூற்றாண்டு

விளிப்பது இறைவனை. இவ்வகைப்பாடல்களே பிற்காலத்தில் பாரதியாருக்குக் *'கண்ணன் பாட்டு'* அமையக் கை கொடுத்து உதவின என்று கருதுவதில் தவறில்லை.

பாடல்கள் யாவும் ஏதோ ஒரு தத்துவத்தின் அடிப்படையில் அமைந்துள்ளன. சித்தரின் பாட்டல்லவா? வீண் சொற்களுக்கு இங்கு இடம் இல்லை.

எண்சாண் உடம்படியோ ஏழிரண்டு வாயிலடி
பஞ்சாயக் காரர்ஐவர் பட்டணமும் தானிரண்டு
அஞ்சாமற் போகின்றாய் ஆக்கினைக்குத் தான்பயந்து
நெஞ்சார நில்லாமல் என்கண்ணம்மா!
நிலைகடந்து வாடுறண்டி! (2)

ஊற்றைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுதில்லை
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுமென்றால்
ஊற்றைச் சடலம்விட்டே என்கண்ணம்மா!
உன்பாதம் சேரேனோ! (8)

வாழைப் பழந்தின்றால் வாய்நோகும் என்றுசொல்லித்
தாழைப் பழந்தின்று சாவெனக்கு வந்ததடி
தாழைப் பழத்தைவிட்டுச் சாகாமற் சாகவல்லோ
வாழைப் பழம்தின்றால் என்கண்ணம்மா!
வாழ்வெனக்கு வாராதோ! (9)

பையூரி லேயிருந்து பாழூரிலே பிறந்து
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன்,
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறிந்தால்
பையூரும் மெய்யூரும் என்கண்ணம்மா!
பாழாய் முடியாவோ! (10)

காயப் பதிதனிலே கந்தமூலம் வாங்கி
மாயப் பணிபூண்டு வாழும் சரக்கெடுத்தே

ஆயத் துறைதனிலே ஆராய்ந்து பார்க்குமுன்னே
மாயக் கருளோலை என்கண்ணம்மா!
மடிமீதில் வீழ்ந்ததென்ன? (29)

புல்ல ரிடத்திற்போய்ப் பொருள்தனக்குக் கையேந்திப்
பல்லை மிகக்காட்டிப் பரக்க விழிக்கிறண்டி
பல்லை மிகக்காட்டாமல் பரக்க விழிக்காமல்
புல்லரிடம் போகாமல் என்கண்ணம்மா
பொருளெனக்குத் தாராயோ? (31)

*என்ற பாடல்களில் ஆழங்கால்பட்டு அநுபவித்தால் அதில் படிந்துள்ள தத்துவம் பளிச்சிடுவதைக் காணலாம்; கண்டு மகிழலாம். இவை யாவும்* ***ஐந்து அடிகள் கொண்ட கலித்தாழிசைப் பாடல்கள்.*** *இவற்றில் இரண்டாம் அடி மூன்றாம் அடியாக மடங்கி வருகின்றது. முன்னிலைப் படுத்தி விளிக்கும் சொல்* ***"என் கண்ணம்மா"*** *என்று வருகின்றது. இவையன்றி வேறு வகையான எட்டுப் பாடல்கள் சில அரசாங்க தொன்னூல் நிலைய ஏடு ஒன்றில் காணப்பெறுகின்றன.அவற்றுள் அடிகள் மடங்கி வரவில்லை. தனிச்சொல்லாகிய விளியும்* ***"ஆத்தாடி"*** *என்று வரக் காண்கின்றோம்.*

ஐங்கரனைத் தெண்டனிட்டேன்–ஆத்தாடி
அருளுடைய வேணுமென்று
தாங்காமல் வந்தொருவன் –ஆத்தாடி
தற்சொரூபம் காட்டி என்னை (33)

புத்தி கலங்கியடி–ஆத்தாடி
போந்தேன் பொறிவழியே
பக்தியறியாமல்–ஆத்தாடி
பாழில் கவிழ்ந்தேனே. (40)

*என்ற பாடல்களில் இந்நிலையைக் காணலாம்.*

*(8) **குதம்பைச்சித்தர்:*** *குதம்பை என்பது மகளின் காதில் அணியும் ஓர் அணி. குதம்பை அணிந்த பெண்ணை மகடூஉ முன்னிலையாகக் '**குதம்பாய்**' என்று விளித்து இச்சித்தர் பாடியமையால் 'குதம்பைச் சித்தர்' என்று பெயர் பெறுகின்றார். இவர் பாடிய கண்ணிகளின் தொகை 32. இவை எளிய இனிய சொற்களாலானவை. ஆயினும் ஆழ்ந்த பொருள்பொதிந்தவை.*

வெட்ட வெளிதன்னை மெய்யென்று இருப்போர்க்குப்
பட்டயம் ஏதுக்கடி–குதம்பாய்
பட்டயம் ஏதுக்கடி? (1)

*என்பது முதற்பாடல். இவர்தம் பாடல்கள் மிகுபுகழ் பெற்ற பாடல் ஒன்று உண்டு. அது.*

மாங்காய்ப்பால் உண்டு மலைமேல் இருப்போர்க்குத்
தேங்காய்ப்பால் ஏதுக்கடி குதம்பாய்
தேங்காய்ப்பால் ஏதுக்கடி? (28)

*என்பது. உண்மையறிவைப் பெற்று இறைவனை நாடியிருக்கும் மெய்ஞ்ஞானிக்கு உலகப்பொருள்களும் சடங்குகளும் வேண்டுவதில்லை என்பது இதன் கருத்து.*

மெய்ப்பொருள் கண்டு விளங்கும்மெய்ஞ்ஞானியர்க்குக்
கற்பங்கள் ஏதுக்கடி–குதம்பாய்
கற்பங்கள் ஏதுக்கடி? (2)

*சித்த நெறியினர் காயகற்பம் தேடி அலைய வேண்டிய தில்லை என்பது இதன் கருத்து.*

*யோகநெறி, பத்திநெறி, புறப்பூசை முதலியவற்றைப் பழிப்பன போன்ற பாடல்கள் பல இங்கு உள்ளன. சித்தர் மரபுக்கு ஏற்ப இவர்இவை அனைத்தையும் கடந்த மேல் நிலையில் உள்ளவராதலால் கீழ்ப்பட்ட நிலைகள் வேண்டக் கடவன அல்ல என்பது இவர் கருத்துப்படப் பாடுவார்.*

நித்திரை கெட்டு நினைவோடு இருப்பார்க்கு
முத்திரை ஏதுக்கடி—குதம்பாய்
முத்திரை ஏதுக்கடி? (6)

*என்பதில் இதனைக் காணலாம். இங்குச் சுழுத்திநிலை அடைந்தோர்க்கு பூசனைகளால் விளையும் பயனில்லை என்பது கருத்தாகும். மெய்ஞ்ஞானியரைப் பற்றிப் பல பாடல்கள்:*

முக்கோணந் தன்னில் முளைத்தமெய்ஞ் ஞானிக்குச்
சட்கோணம் ஏதுக்கடி—குதம்பாய்
சட்கோணம் ஏதுக்கடி? (17)

முத்தி பெற்றுள்ளம் முயங்குமெய்ஞ் ஞானிக்குப்
பத்தியம் ஏதுக்கடி—குதம்பாய்
பத்தியம் ஏதுக்கடி? (19)

அட்டாங்க யோகம் அறிந்தமெய்ஞ் ஞானிக்கு
முட்டாங்கம் ஏதுக்கடி—குதம்பாய்
முட்டாங்கம் ஏதுக்கடி? (21)

வேகம் அடங்கி விளங்குமெய்ஞ் ஞானிக்கு
யோகந்தான் ஏதுக்கடி—குதம்பாய்
யோகந்தான் ஏதுக்கடி? (22)

செத்தாரைப் போலத் திரியுமெய்ஞ் ஞானிக்கு
கைத்தாளம் ஏதுக்கடி?—குதம்பாய்
கைத்தாளம் ஏதுக்கடி? (24)

*இப்பாடல்கள் யாவும் சீவன் முத்தர் நிலையைக் குறிப்பனவாகக் கருதலாம்.*

*ஆடம்பரங்கள் வேண்டா, விழா வேண்டா, சிறப்பான தனியுடை வேண்டா என்பன போன்ற கருத்துகளைக் கூறி உள்ளத் துறவினால் வரும் அத்துவித நிலையே உயர் வானது என்பதை எல்லாப் பாடல்களிலும் வற்புறுத்துவர்*

*இந்தச் சித்தர். பாமரமக்கள் மொழியில் பாடியிருந்த போதிலும் குழூஉக் குறியாயுள்ள ஆழ்ந்த பொருள் எளிதில் விளங்காப் புதிர்களாக* (Mysterious) *உள்ளன.*

*(9)* ***கடுவெளிச்சித்தர்:*** *கடுவெளி என்பது மனவாக்குக் கடந்த பரவெளி; அதாவது பரம்பொருள் நிலை*[30]*. இக்கடுவெளியைப் பாடியதால் இவருக்குக் கடுவெளிச் சித்தர் என்ற திருநாமம் வழங்குவதாயிற்று.*[31] *இவர் பாடியது 34 கண்ணிகள் கொண்டதொரு ஆனந்தக் களிப்பு. இப்பாடல்கள் மக்களிடையே பெரும்புகழ் பெற்றதனால் இத்தகையை யாப்புக்கு* ***'ஆனந்தக் களிப்பு'*** *என்ற பெயரே தமிழ் இலக்கியத்தில் நிலைத்து விட்டது.*

பாபஞ்செய் யாதிரு மனமே—நாளைக்
கோபஞ்செய் தேயமன் கொண்டோடிப் போவான்
பாவஞ்செய் யாதிரு மனமே.

*என்ற பல்லவியுடன் தொடங்குகின்றது இவர் பாடல்.*

சாபம் கொடுத்திட லாமோ?—விதி
தன்னை தம்மாலே தடுத்திடலாமோ?
கோபம் தொடுத்திட லாமோ?—இச்சை
கொள்ளக் கருத்தைக் கொடுத்திடலாமோ? (1)

*என்று 'சரணம்' தொடங்கி நடைபெறுகின்றது. இவர் பாடல்கள் மிகுபுகழ் பெற்று சாதாரண மக்கள் நாவிலும் தாண்டவமாடுவது,*

நந்த வனத்திலோ ராண்டி—அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
கொண்டுவந் தானொரு தோண்டி—மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி (4)

---

30. கடுவெளி என்பதற்கு ஓயாது கடுகி இயங்கிக் கொண்டிருக்கும் மூச்சு என்றும் பொருள் கூறுவர்.
31. 15-ஆம் நூற்றாண்டு

*என்ற பாடலாகும் ஆன்மா பெறுவதற்கரிய மானிட யாக்கையைப் பெற்று அதனை வீணடிப்பது இவண் சொல்லப்பெற்ற கருத்தாகும்.*

*குருவின் சொற்படி நடந்து உய்ய வேண்டும் என்பதை,*

மெய்க்குரு சொற்கட வாதே–நன்மை
மென்மேலும் செய்கை மிகவடக் காதே
பொய்க்கலை யால்நட வாதே–நல்ல
புத்தியைப் பொய்வழி தனில்நடத் தாதே (11)

*என்ற பாடலில் தெளிவிக்கின்றார். உலகப்பற்றைத் துறந்து, குருவின் சொற்படி நடந்து, எவரிடத்தும் அன்புகாட்டி வாழ்ந்தால் பரமானந்தம் சித்திக்கும் என்பது இச்சித்தரின் கருத்து. சித்தநெறி என்ற பெயரால் ஏற்பட்டுள்ள தவறுகளை இவர் கடிகின்றார்.*

சிவமன்றி வேறே வேண்டாதே–யார்க்குத்
தீங்கான சண்டையைச் சிறக்கத் தூண்டாதே
தவநிலை விட்டுத் தாண்டாதே–நல்ல
சன்மார்க்க மில்லாத நூலை வேண்டாதே (26)

*என்ற பாடலில் இப்போக்கைக் காணலாம்.*[32]

நல்ல வழிதனை நாடு–எந்த
நாளும் பரமனை நத்தியே தேடு
வல்லவர் கூட்டத்தில் கூடு–அந்த
வள்ளலை நெஞ்சினில் வாழ்த்திக் கொண்டாடு(6)

வேதவிதப்படி நில்லு–நல்லோர்
மேவும் வழியினை வேண்டியே செல்லு
சாத நிலைமையே சொல்லு–பொல்லாச்
சண்டாளக் கோபத்தைச் சாதித்துக் கொல்லு (8)

32. காலத்தால் சித்தர் நெறியில் இவர் ஏனையோருக்குப் பிற்பட்டவர் என்று நினைக்கத் தோன்றுகின்றது.

*என்பன போன்ற பாடல்கள் நல்வழியில் ஆற்றுப் படுத்துபவை.*

நல்லவர் தம்மைத் தள்ளாதே–அறம்
நாலெட்டில் ஒன்றேனும் நாடித்தள் ளாதே
பொல்லாங்கில் ஒன்றுங் கொள்ளாதே–கெட்ட
பொய்மொழிக் கோள்கள் பொருந்த விள்ளாதே (7)

பிச்சையென் றொன்றுங்கே ளாதே–எழில்
பெண்ணாசை கொண்டு பெருக்கமா ளாதே
இச்சைய துன்னையா ளாதே–சிவன்
இச்சைகொண் டவ்வழி யேறி மீளாதே (9)

*என்பன போன்ற பாடலகள் அல்வழியைத் தவிர்க்க வேண்டுபவை.*

பாரில் உயர்ந்து பத்தி–அதைப்
பற்றின பேர்க்குண்டு மேவரு முத்தி
சீரில் உயர்அட்ட சித்தி–யார்க்கும்
சித்திக்கு மேசிவன் செய்லினால் பத்தி (18)

பத்தி எனும்ஏணி நாட்டித்–தொந்த
பந்தமற் றவிடம் பார்த்ததை நீட்டிச்
சத்தியம் என்றதை யீட்டி–நாளும்
தன்வச மாக்கிக்கொள் சமயங்க ளோட்டி (31)

எங்கும் சுயம்பிர காசன்–அன்பர்
இன்ப இதயத் திருந்திடும் வாசன்
துங்க அடியவர் தாசன்–தன்னைத்
துதிக்கிற் பதவி அருளுவான் ஈசன் (34)

*என்ற மூன்று பாடல்களை நம் சிந்தையில் இருத்து அநுசந்தித்த வண்ணம் இருப்போமாக.*

*(10)* ***கொங்கணச் சித்தர்:*** *இவர்* ***'கொங்கண நாயனார்' 'கொங்கணநாதர்'*** *என்ற பெயர்களாலும் வழங்கப் பெறுவர்.*[33] *கொங்கு நாட்டைச் சேர்ந்தவராதலின் இப்பெயர்கள் பெற்றார். இவரைப் போதருடைய சீடர் என்று சிலர் கருதுவர். இளம்பெண்களை முன்னிறுத்தி இச்சித்தர்* ***'கும்மி யடியுங்கடி'*** *என்று கூறிப் பாடும் பாடல்கள்* ***'வாலைக் கும்மி'*** *என வழங்கப்பெறுகின்றது. மருத்துவம்* ***'இரச வாதம்'*** (Alchemy) *'யோகம்' பற்றியும்கூட இவர் பாடல்கள் அமைந்துள்ளன.*

*இவர் பாடிய 'வாலைக் கும்மி' மிக்க பிரசித்திபெற்றது. இது பிற்காலத்தில் பெரிதும் வழங்கிவருகின்ற கும்மி மெட்டில் 110 கண்ணிகளைக் கொண்டது. பாடல்தோறும்* ***'வாலைப்பெண்ணே'*** *என்று விளித்துப் பாடுகின்றார். அஞ்செழுத்தைப் பலமுறை குறிப்பிடுகின்றார். அவ்வையின் நீதிகளை நான்குமுறை குறிப்பிடுகின்றார். பல பாடல்கள் யோகமார்க்கத்துக்குரிய குழூஉக் குறிகளைக் கொண்டவை. எனினும் இவர் சொல்லும் உலகியல் நீதிகளும் கருதத்தக்கன.*

ஆதியில் ஐந்தெழுத் தாயினாள் வாலைப்பெண்
ஐந்தெழுத் துமென்று பேரானாள்;
நாதியி னூமை யெழுத்தவள் தானல்ல
ஞான வகையிவள் தானானாள் **(13)**

ஊமையெழுத்தே உடலாச்சு–மற்றும்
ஓமென் றெழுத்தே யுயிராச்சு
ஆமிந் தெழுத்தை யறிந்துகொண்டு விளை
யாடிக் கும்மியடியுங்கடி **(14)**

செகம் படைத்ததும் அஞ்செழுத்தாம் பின்னும்
சீவன்படைத்தும் அஞ்செழுத்தாம்

33. கி.பி. ஏழாம் நூற்றாண்டு.

உகமு டிந்ததும் அஞ்செழுத்தாம் பின்னும்
உற்பன மானதும் அஞ்செழுத்தாம் (15)

சிதம்பர சக்கரந் தானறி வாரிந்தச்
சீமையி லுள்ள பெரியோர்கள்
சிதம்பர சக்கர மென்றால் அதற்குள்ளே
தெய்வத்தை யல்லோ அறியவேணும் (21)

ஊத்தைச் சடலமென் றெண்ணா தேயிதை
உப்பிட்ட பாண்டமென் றெண்ணாதே
பார்த்த பேருக்கே ஊத்தையில் லையிதைப்
பார்த்துக்கொள் உன்றன் உடலுக்குள்ளே (24)

வாலைக்கு மேலான தெய்வமில்லை மானங்
காப்பது சேலைக்கு மேலுமில்லை
பாலுக்கு மேலான பாக்கியமில்லை வாலைக்
கும்மிக்கு மேலான பாட லில்லை. (75)

இன்றைக் கிருப்பதும் பொய்யல்ல வேவீடே
என்வாழ்க்கை யென்பதும் பொய்யல்லவே
அன்றைக் கெழுதின படிமுடியும் வாலை
ஆத்தாளைப் போற்றடி வாலைப் பெண்ணே! (78)

பெண்ணாட்டி யாவதும் பொய்யல்லவோ பெற்ற
பிள்ளைக ளாவதும் பொய்யல்லவோ?
கொண்டாட்ட மானதகப்பன்பொய் யேமுலை
கொடுத்த தாயும் நிசமாமோ? (80)

தாயும் பெண்டாட்டியும் தான்சரி யேதன்யம்
தாமே யிருவருந் தாங்கொடுத்தார்
காயும் பழமும் சரியா மோஉன்றன்
கருத்தைப் பார்த்துக்கொள் வாலைப் பெண்ணே! (81)

ஏழைப் பனாதிக னில்லையென் றாலவர்க்கு
இருந்தா லன்னங் கொடுக்க வேண்டும்

நானையென் றுசொல்ல லாகா தேயென்று
நான்மறை வேத முழங்குதடி (86)

பஞ்சை பனாதி யடியாதே அந்தப்
பாவந் தொலைய முடியாதே
தஞ்சமென் றோரைக் கெடுக்கா தேயார்க்கும்
வஞ்சனை செய்ய நினையாதே (87)

சிவன்ற னடியாரை வேதியரைச் சில
சீர்புல ஞானப் பெரியோரை
மவுன மாகவும் வையாதேஅவர்
மனத்தை நோகவும் செய்யாதே (89)

சாதி பேதங்கள் சொல்லுகி றீர்தெய்வம்
தானென் றொருவுடல் பேதமுண்டோ?
ஓதிய பாலதி லொன்றாகி யதிலே
உற்பத்தி நெய்தயிர் மோராச்சு. (95)

பல்லா யிரங்கோடி யண்டமு தல்பதி
னான்கு புவனமும் மூர்த்திமுதல்
எல்லாந் தானாய்ப் படைத்தவ ளாம்வாலை
எள்ளுக்குள் எண்ணெய்போல் நின்றவளாம் (107)

ஆறு படைப்புகள் வீடு கசைசூத்ர
அஞ்செழுத் துக்கும் வகையறிந்து
கூறு முயர்வல வேந்தரன் துரைவள்ளல்
கொற்றவன் வாழக்கொண் டாடுங்கடி (109)

ஆடுங்கள் பெண்டுக ளெல்லோ ருமந்த
அன்பான கொங்கணர் சொன்னதமிழ்
பாடுங்கள் சித்தர் களெல்லோ ரும்வாலை
பரத்தைப் போற்றிக்கொண் டாடுங்கடி (110)

*(11) **சட்டை முனி:** சட்டையிட்டே இருந்தமையால் இவருக்கு இப்பெயர் எற்பட்டது போலும். 12க்கு மேற்பட்ட*

*நூல்கள் இவர் பெயரால் கிடைக்கின்றன. யாவும் ஞானம், ஞானநூல் சாத்திரம் நிகண்டு என்ற பெயருடையவை. யாவும் மருத்துவம் யோகம் இரசவாதம் பற்றியவை. சட்டைமுனி ஆயிரத்தில் ஒரு பாடல்.*

நிற்குணமாய் நிர்மலமாய் நிரஞ்சனமு மாகி
நேரான பூரணமாய் மனமெட் டாத
சற்குணமாய்ச் சமரசமாய்த் தானுந் தாண்டி
சச்சிதா னந்தவெளிக் கப்பால் நின்ற
தற்குணமாய் எனையாண்ட தன்மயத்தைப் போற்றிச்
சமரசமாய் வேதாந்த வாதஞ் சொல்வேன்
நற்குணமாம் சனகாதி ரிஷிகள் பாதம்
நலம்பெறவே நாவில் வைத்துப் பாடுவேனே

*பூசை முறைகளைப்பற்றிப் பலபாடல்கள் இவர் நூல்களில் காணப்பெறுகின்றன.*

*(12) **திருவள்ளுவர்:** திருக்குறளாசிரியரின் பெயரிலுள்ள இச்சித்தர் வேறானவர். இவரது **திருவள்ளுவர் ஞானம்** என்ற நூல் காப்புச் செய்யுளுடன் இருபது பாடல்களைக் கொண்டுள்ளது. எண்சீர் விருத்தம், கட்டளைக் கலித்துறை, தரவு கொச்சம், நேரிசை வெண்பா யாப்புகளில் இவை அமைந்துள்ளன. ஒரு சில பாடல்களைக் காட்டுவேன்.*

யோனிக் குள்ளாசை யொழியாது
தனித்தியம் உங்களுயிர்
தேனிக்குள் இன்பம் சுகாதித
மோவரும் சிற்றின்பத்தில்
ஊனற்றுக் காயம் உடலற்றுப்
போம்பொழுது ஒன்றறியா
ஈனர்க்குச் சொர்க்கம் சுடுகாடு
ஒழியஇனி இல்லையே (8)

இந்தவுடல் காயம் இறந்துவிடும் இவ்வுலகில்
வந்தவழி தானறியா வாழ்க்கை—இந்தவுடல்
அற்பக் குழியில் அரவம் இருப்பதெனும்
கற்பகத்தைக் காண்டிடுமோ காண் (9)

சுழியறியார்க் கென்ன சுகமறியார்க் கென்ன
வழியறியார்க் கென்ன எய்துமாறு—சுழியறியா
மூலமறிந் தவ்வழியில் முத்தியடை யார்க்குநமன்
காலனவர்க் கேமரணம் காண் (11)

காயசித்தி யாலெனது கன்மவினை போக்கியபின்
மாயசித்தி மூலசுழி வாய்க்குமே—காயசித்தி
மூலப் புளியால் முதல்தீட்சை யாச்சுதுஇனிக்
காலமென்னி ரண்டாண்டில் காண்(14)

*(13) **அகத்தியர்:** அகத்தியர் என்ற பெயரில் ஒவ்வொரு காலத்திலும் சிலர் வாழ்ந்துள்ளனர். இவர்கள் முனிவர் களாகவும் புலவர்களாகவும் மருத்துவர்களாகவும் சோதிடர்களாகவும் இருந்தவர்கள். ஞானம் என இரு தனிப்பாடல்களும் ஞானம் 2, ஞானம் 6, 9, 13, 16 என்ற ஐந்து சிறு நூல்களும் உள்ளன. யாவும் யோகம், ஞானம் என்ற பொருள்கள் பற்றியவை.*

*ஞானம்-5இல் முதல்பாட்டு: கலை பதினாறு என்கின் றார். இவை மேதாதி உன்மனாந்தமான சோடசக்கலை களாயிருக்கலாம். ஞானம் 9 என்பது வாழ்க்கைக்குரிய நல்லுபதேசம் போல் உள்ளது. இதன் இறுதிப்பாடல்:*

சத்தியமே வேணுமடா மனித னானால்
சண்டாளஞ் செய்யாதே தவறி டாதே
நித்தியகர் மம்விடாதே நேமம் விட்டு
நிட்டையுடன் சமாதிவிட்டு நிலைபே ராதே
புத்திகெட்டுத் திரியாதே பொய்சொல் லாதே
புண்ணியத்தை மறவாதே பூசல் கொண்டு

கத்தியதோர் சள்ளிட்டுத் தர்க்கி யாதே
கர்மியென்று நடவாதே கதிர்தான் முற்றே

*ஞானம் 13 யோகம் பற்றிய நுட்பமான பல பொருள்களைப் பேசுகிறது. நடை சாமானிய நடையாயினும், பொருள் சிறப்புடையது.*

ஏகமெனும் ஓரெழுத்தின் பயனைப் பார்த்து
எடுத்துரைக்கும் இவ்வுலகில் எவரும் இல்லை
ஆகமங்கள் நூல்கள்பல கற்றுக் கொண்டு
அறிந்த மென்பார் மவுனத்தை; அவனை நீயும்
வேகாத்தலை சாகாக்கால் விரைந்து கேளு;
அதைஎடுத்து உரைப்பவனே ஆசா னாகும்;
தேகமதில் ஓரெழுத்தைக் காண்போன் ஞானி;
திருநடனம் காணமுத்தி சித்தி யாமே.

*ஓரெழுத்து என்பது பிரணவம்; இதை இந்து மதத்தின் பிரிவுகளான எல்லாச் சமயங்களும் மிகவும் போற்றிக் கூறுகின்றன.*

*ஞானம்-16 என்பது இரசவாதம், யோகம், உலகநீதி எல்லாம் கலந்து சொல்வது. அதில் ஒரு பாடல்:*

பிழைப்பதற்கு நூல்பலவும் சொல்லா விட்டால்
பூரணத்தை அறியாமல் இறப்பா ரென்றும்
உடுப்பதற்கு நூல்கட்டிப் போடா விட்டால்
உலகத்தில் புத்திகெட்டு அலைவார் என்றும்
தழைப்பதற்குச் சாதிஎன்றும் விந்து என்றும்
தந்தைதாய் பிள்ளை என்றும் பாரி என்று
உழைப்பதற்குச் சொன்னதல்ல கெதிவே றில்லை
உத்தமனே அறிந்தோர்கள் பாடி னாரே.

*இவ்வாறு பாடியவர்கள் சாமானிய அறிவுடைய புலவரேயானாலும், எதுகை மோனைஅமைத்தும் சீர்தளை கெடாமலும், ஓசையும் பொருந்துமாறும் பாடியிருப்பது*

சிந்திக்கத்தக்கது. இவர்கட்கு எழுத்து இலக்கணம் புலமை நிரம்ப இல்லாவிட்டாலும், கேள்விஞானம் குறைவறப் பொருந்தியிருந்தமையால் அதை வைத்தே இவ்வாறு பாட முடிந்திருக்கிறது.

*(14)* ***திருமூல சித்தர்:*** *திருமந்திரம் பாடிய திருமூலர் வேறு; அவர் பாடிய நூல் சைவத்திருமுறைகளில் பத்தாவதாகச் சேர்க்கப்பெற்றுள்ளது.*[34] *இது கலிவிருத்தம் என்ற ஒரே யாப்பில் பாடப்பெற்ற பனுவல்.*

**'திருமூலர் ஞானம்'** என்பது சித்தர் கோவையுள் சேர்க்கப் பெற்ற நூல். இது பதினொரு பாடல்களைக் கொண்டது. அந்தாதித் தொடையில் அமைந்தது. ஒவ்வொரு பாடலிலும் **'மூலம்'** என்ற சொல்வருகிறது. பிற்காலத்தில் யோகம் ஞானம் முதலான பொருள்கள் பற்றி யார் பாடினாலும் திருமூலர் பாடல் என்றே பெயரிட்டு விட்டார்கள் என்று சொல்லத் தோன்றுகின்றது. இந்த நூல் பிரணவத்தையும் ஓங்காரத்தையும் சொல்கிறது.

மூலமெனும் ஆதார வட்டந் தானே
முச்சுடரு முக்கோண மூன்று நாடிச்
சீலமெனும் சிவலிங்க பாத தீர்த்தம்
திருவடியும் திருமேனி நடமு மாகும்
கோலமுடன் அண்டமெலாம் தாங்கிக் கொண்டு
கொழுந்துவிட்ட கம்பமதாய் மேலே நோக்கி
ஆலமுண்ட கண்டமெலாந் தானாய் நின்ற
அகாரமுதல் அவ்வெழுத்தை அறிந்து பாரே (3)

இது **மூன்றாவது** பாடல். **இறுதிப்பாடல்** இது.

மேவியதோர் சற்குருவின் பாதந் தன்னை
மெய்ஞ்ஞான மென்றதனை மேவிக் கொண்டு

34. திருமுறை இலக்கியங்கள் (இயல்-3) காண்க.

ஆவியுடல் காயமெல்லாம் அறிந்து பார்த்து
அத்தனார் வடிவமென்றே அறிந்து கொண்டு
பாவனையுள் ஆனதெல்லாம் விட்டு நீங்கிப்
பகலிரவு அற்றிடத்தே கருத்தை வைத்துச்
சீவனையும் சிவன்தனையும் ஒன்றாய்த் தானே
திருமூலர் பாதமொன்றித் திடமாய்க் காணே (11)

*இதில் பாடிய **ஆசிரியர் பெயர்** குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்.*

*(15) **சுப்பிரமணியர்:** இவர் பெயரால் **'சுப்பிரமணியர் ஞானம்'** என்ற ஒரு நூல் சித்தர் கோவையுள் சேர்ந்துள்ளது. முருகனாகிய சுப்பிரமணியர் அகத்தியமுனிக்கு உபதேசித்த ஞானம் எனப் பொருள்படும். அச்சில் 32 பாடல்கள் உள்ளன. பஞ்சாக்கர மந்திரத்தின் பலநிலைகளை இரண்டு பாடல்கள் பகர்கின்றன. பஞ்சாக்கர மந்திரம் பற்றிய ஒருபாடல்.*

ஆமப்பா நமசி வாய நமவென்றே
அன்பின்வய நமசிவய நமசி யென்று
நாமப்பா தலைகாலால் மாறிக் கொண்டு
சங்கையுடன் கால்தலையில் மாறிக் கொள்ளு
ஆமப்பா நமசிவய சிவயநம வென்றும்
அதன்பிறகு சிவயநம சிவநம என்றும்
ஓமப்பா நமசிவய என்று மாற
உண்மையென்ற ஆதாரம் சித்தி யாமே (18)

*இதில் 'சிவாயநம' என்ற தொடர் வெவ்வேறு வடிவத்தில் வந்துள்ளதைக் கண்டு மகிழலாம்.*

*நான்கு பாடல்கள் (20, 21, 22, 23) பீஜமந்திரம் செபித்தலைச் செப்புகின்றன. அவற்றில் ஒன்று:*

கொள்ளப்பா விபூதியைநீ தரித்துக் கொண்டு
கூர்மையுடன் கால்தலையாய் மாறிக் கொண்டு

சொல்லப்பா ஓங்கிலிரீங் கென்றென் றோது
சுத்தமுடன் ரிங்கிலிமங் கென்றென் றோது
வில்லப்பா மங்கிலிசிங் கென்றென் றோது
விவரமதாய்த் தோற்றுமடா செய்கை யாவும்
உள்ளப்பா மங்கிலிங் கென்றென் றோது
உத்தமனே சிங்கிலிமங் கென்றென் றோது (22)

*சக்தி தியானம் முக்கியமாய்ச் சொல்லப் பெறுகின்றது. ஒருபாடல் இது பற்றி:*

காணவே சக்தியவள் தியானம் கேளு
கருவாகச் சொல்லுகிறேன் கருத்தாய்க் கேளு
பூணவே உரைத்திடுவாய் அங்கிங் கென்று
புத்தியுடன் பதினாறு வுருவே செய்து
தோணவே விபூதிதூ ளிதமே பூசிச்
சுத்தமுடன் பராசக்தி நிர்த்தஞ் செய்வாள்
ஊணவே இப்படியே தியானம் பண்ணி
உண்மையுடன் பிராணரய வுறுதி பாரே (28)

*ஒரு பாடலில் குழூவுக்குக் குறியாகச் சில சொற்கள் அமைகின்றன.*

நில்லப்பா சதுரகிரி முடியிற் சென்று
நிலையான பொதிகையிலே வாச மாகி
உள்ளப்பா தானாகி விண்ணென்று ஊணி
உன்மனத்தில் நினைந்ததொரு மந்திரம் தன்னைச்
சொல்லப்பா தியானமுடன் செபிக்கும் போது
சுத்தமுடன் சித்திக்கும் சும்மா நின்று
செல்லப்பா அட்டாங்க யோகத் தேகிச்
சிவாயகுரு பாதமதில் தெளிவாய் நில்லே (31)

*என்பதில் இவற்றைக் காணலாம். இது அட்டாங்க யோகத்திற்கும் வழிவகுக்கின்றது.*

*(16) வால்மீகர்: '**ஞானம் பதினாறு**' என்ற நூல் பாடியவர். 11-ஆம் பாடலில் தம் பெயரைக் குறிப்பிடுகின்றார். இந்நூற் பாடலில் பதினாறு என்பதை இருமுறை (11,15 பாடல்கள்) கூறுகின்றார். வாலையைத் துதிக்கின்றார். சிவகாமி என்றே பாடுகின்றார். ஞானயோகத்தைக் கூறி போலிக் குருக்களையும் காட்டுகின்றார். இராமாயணம் பாடிய பெயரை இவருக்கு வைத்தார் போலும்.*

ஆமம்பா வுலகத்தில் பெருநூல் பார்த்தோர்
அவரவர்கண் டதையெல்லாம் சரியை என்பார்
ஓமப்பா கல்செம்பைத் தெய்வம் என்றே
உருகுவார் பூசிப்பார் கிரியை என்பார்
வாமப்பா யோகம்என்று கனிகாய் தின்று
வாய்பேசா ஊமையைப்போல் திரிகு வார்கள்
காமப்பா ஞானமென விண்டு மேலும்
காக்கை பித்தன் மிருகம்போல கத்துவாரே (4)

*இதில் சரியை, கிரியை, யோகம், ஞானம் பற்றிய குறிப்புகளைக் காணமுடிகின்றது.*

தானென்ற வுலகத்தில் இல்லா விட்டால்
தன்பெருமை யாலழிந்து சகத்தில் வீழ்வார்
ஊனென்ற வுடம்பெடுத்தால் எல்லாம் வேணும்
உலகத்தி லவரவர்கள் பாடை வேணும்
மானென்ற சிவகாமி சிவனும் கூடி
மாமுனிவர் முகம்பார்த்து மறைநூல் சொன்னார்
தேனென்ற சிவகாமி அருளி னாலே
திரட்டினார் வெகுகோடி தேச பாடை (9)

*என்ற பாடலில் '**சிவகாமி**' என்ற சொல் குறிப்பிடப் பெறுகின்றது.*

*(17) **இராம தேவர்:** சிவபூசையால் சகல சித்திகளையும் பெற்றவர் இச்சித்தர். இவர் நாகையில் வீற்றிருந்ததாகச்*

*சொல்வர். இவர் மருத்துவத்திலும் தேர்ந்தவர். **'இராம தேவர் வைத்தியம்'** என்று அது சிறப்புப் பெற்றது. வைத்திய நூல் ஒன்றும் இவர் செய்ததாகச் சொல்லப் பெறுகின்றது. **'இராமதேவர் பூசாவிதி'** என்பது பத்துப் பாடல் அடங்கிய ஒரு சிறுநூல்; அந்தாதித் தொடை யில் அமைந்தது. வாலையைப் பூசிப்பதும் உருச்செபிப்பதும் கூறுவது.*

ஆதியென்ற மணிவிளக்கை யறிய வேணும்
அகண்டபரி பூரணத்தைக் காண வேணும்
சோதியென்ற துய்யவெளி மார்க்க மெல்லாம்
சுகம்பெறவே மனோன்மணியென் ஆத்தாள் தன்னை
நீதியென்ற பரஞ்சோதி ஆயி பாதம்
நிற்குணத்தி நின்றகலை யாரும் காணார்
வேதியென்ற வேதாந்தத் துள்ளே நின்று
விளங்குவதும் பூசையிது வீண்போ காதே (1)

*என்பது **முதல்** பாடல். ஒரு பாடல் யோகத்தைப் பற்றி கூறுகின்றது.*

தானென்ற மூலமுடன்சித்தி பண்ணு
தனதான நூற்றெட்டுக் குள்ளே சித்தி
ஆனென்ற அண்டர்பதி யெட்டு மாடும்
அறுபத்து நால்மூலி யெல்லா மாடும்
கோன்என்ற கோடிசித்துக் கணத்தி லாடுங்
குணமாக ரேவதிநாட் செய்ய நின்று
வானென்ற அட்டமியில் செய்ய நன்று
வளர்பிறையில் செய்தவனே யோகி யாமே (9)

*இந்தநூலில் தம் பெயரை **'ராமனுடை வாக்கியம்'** (பாடல்-8) என்ற தொடரால் குறிப்பிடுகின்றார்.*

இவர் பெயரால் மருத்துவம், சோதிடம் இரசவாதம், வசியம் ஆகிய துறைகளில் 27க்கு மேற்பட்ட நூல்கள் சிறியனவும் பெரியனவுமாக வழங்குகின்றன.

*(18) **கருவூர்ச் சித்தர்:*** இவர் கருவூரில் பார்ப்பனர் குலத்தில் பிறந்தவர்; சிவனடி மறவாத சித்தர். காயசித்தி கைவந்தவர். பல அற்புதங்கள் செய்து காட்டியவர். இவரைப் பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. தஞ்சை பெரிய கோயில் சிவலிங்கத்திற்கு அட்டபந்தனம் செய்தவர். இவர் தமது குருவாக திருமூலர், சட்டைமுனி, போகநாதர், பதஞ்சலி என்போரைக் குறிப்பிடுகின்றார்.

***'கருவூரார் பூசாவிதி'*** என்பது இவருடைய சிறப்பான நூல்; அந்தாதியாக 30 பாடல்களும் காப்பு ஒன்றும் உடையது இந்த நூலில் ஆசிரியர் வாலையை வழிபடுகின்றார். வாலையாவது ஒரு சக்திபேதம். பருவமடையாத இளம் பெண்ணைச் சத்தியாகக் குறிப்பிடுவது சாக்தத்தில் ஓர் அம்சமாகும். ஆசிரியர் இதையே குறிப்பிடுகின்றார். 'பூணாத பணிபூண்டு சிறுபெண்ணாகப் போதமென்றும் பொருள் பறிக்க வருவாள்'(13), என்றும், 'தேனென்ற மொழிச்சியிவள் சித்தர்க்கெல்லாம் சிறுபிள்ளை பத்து வயதுள்ளதேவி (4) என்றும் பாடுவதைக்காணலாம். ஞானத் தால் ஞான வடிவான இறைவியைக் கற்றவர்களுக்கு நாரேது, பூவேது வாசமேது நல்ல புஷ்பந்தானேது, பூசையேது (10).

யோக மார்க்கத்தில் செல்லும்போது அங்குக் காண்கின்ற ஒளியையும் ஒலியையும் மந்திரங்களையும் குறிப்பிட்டுச் சொல்கின்றார். பெண்ணாசையை விட்டுத் துறவு பூண்டு செய்வோர் பூசையெல்லாம், மனம் அடங் காத போது பயனற்றது என்கின்றார்.

புகலுவார் வேதமெல்லாம் வந்த தென்று
பொய்பேசிச் சாத்திரங்கள் மிகவும் கற்றே
அகலுவார் பெண்ணாசை விட்டோ மென்றே
அறிவுகெட்டே ஊர்தோறும் சுற்றிச் சுற்றி
சகலமும் வந்தவர்போல் வேடம் பூண்டு
சடைமுடியும் காசாயம் தன்னைச் சாற்றி
இகலுமனம் அடங்காமல் நினைவு வேறாய்
எண்ணமெலாம் பெண்ணாசை பூசை தானே **(16)**

*என்பது காண்க.*

*ஒரு பாடலில் எட்டு அடிகளிலும் 'வீடு' என்ற முடிவும் (25), அடுத்த பாடலில் 'வாசல்' என்ற முடிவும் (27) அமையும்படி பாடியுள்ள சிறப்புமகிழ்ச்சியூட்டவல்லதாக உள்ளது. நூல் முழுதும் குழூஉக்குறியாகவே உள்ளது. இருப்பினும் ஓரளவு யோகமார்க்கம் அறிந்தவர்க்கு இது சிறந்த நூலாக அமைகின்றது.*

*'**கருவூரார் வைத்தியம்**' என்பது இவர் செய்த மற்றொரு நூல். இவர் செய்தவையாக வேறு பல நூல்களும் இருத்தல் கூடும்.*

## 2. சித்தர்கள்—பிறர்

*(1) **அவ்வையார்:**[35] இப்பெயரில் நான்கிற்கு மேற்பட்டவர்கள் உள்ளனர். இங்கு நாம் குறிப்பிடும் அவ்வையார் சித்தர்கணங்களில் ஒருவர். கருவிலே திருவுடையவர்; ஞானநாட்டமே கொண்டு வாழ்ந்தவர். மெய்கண்ட சாத்திரங்கள் தோன்றிய காலத்தையடுத்துத் தமிழ்நாட்டில் ஒரு பெரிய பக்தி வெள்ளம்-இறை நினைவு என்ற பேராறு பெருக்கெடுத்து ஓடியது. அக்காலத்துத் தோன்றிய புலவர்கள் பலர் தாங்களும் இவ்வெள்ள மயமாகவே*

35. 14-ஆம் நூற்றாண்டு

ஆயினர். அவ்வையாரும் இந்த நிலைக்கு விலக்கல்லர். பல காலத்திலிருந்த பல அவ்வையார் சரித்திரங்களோடு பிணைத்துள்ள செய்திகளையும் பாடல்களையும் சீர்தூக்கி ஆய்ந்தால் நாம் கருதும் அவ்வைக்கு உரியனவாக மூன்று தனிப்பாடல்களைத் தேர்ந்து கொள்ளலாம். அவற்றின் வரலாறுகள் மட்டும் நாம் குறிப்பிடும் அவ்வையாரோடு தொடர்பு கொண்டன வாய்க் கருதலாம்.

(அ) இரண்டு பாடல்களை மட்டிலும் ஈண்டு எடுத்துக் கொள்வோம். அவ்வையார் தம்மை மதியாத சங்கப் புலவர்களை நோக்கித் தம்முடைய ஐந்து விரல்களைக் குவித்தும் மூடியும் கொஞ்சம் திறந்தும் சுட்டுவிரலொன்றை மட்டிலும் நீட்டியும் சில குறிகளைக்காட்டி "இவற்றிற்குப் பொருள் என்ன?' என்று வினவினார். அவர்கள் அவ்வையார் கருத்தை அறியாதவர்களாய், ஒரு பெண் ணின் நிலையை வருணித்து ஒருவெண்பா சொல்லினர். அது கேட்ட அவ்வையார் 'நீங்கள் சொல்லியது தவறு' என்று அவர்கள்மனம் வருந்தி புழுங்கிவெட்கம் அடையும் படி,

ஐயம் இடுமின் அறநெறியைக் கைப்பிடிமின்
இவ்வளவேனும் அன்னம் இட்டுண்மின்—தெய்வம்
ஒருவனே என்றும் உணரவல் லீரேல்
அருவினைகள் ஐந்தும் அறும்.

என்ற வெண்பாவால் தாம் கருதிய பொருளை வெளி யிட்டார்.

(ஆ) ஒருவர் ஊண், கல்வி, வீரம், காட்சி என்பவற்றுக்கு இலக்கணம் கேட்டபோது அவ்வையார் அடியிற் காணும் பாட்டைப் பாடி விளக்கம் அளித்தார்.

ஒன்றாகக் காண்பதே காட்சி; புலனைந்தும்
வென்றான்தன் வீரமே வீரமாம்—என்றும்தான்

சாவாதே கற்பதே கல்வி; தனைப்பிறர்
ஏவாமல் உண்பதே ஊண்.

உலக வாழ்க்கையில் சுதந்திரமாக இருந்த அவ்வையார் ஆன்ம சுதந்திரத்திற்காக இப்பாடல் பாடினார் என்பது பெரிதும் ஏற்கக் கூடியதே.

அவ்வை என்ற பெயரைச் சூழ்ந்து வழங்கும் கதைகளுள் இவை மட்டும் நாம் கருதுங்காலத்தில் வாழ்ந்த அவ்வையின் இயல்புக்குப் பொருந்துவனவாகலாம்.

**(இ) அவ்வை குறள்**[36]**:** தமிழ் நாட்டில் ஆன்மநெறியில் ஈடுபட்டோர் அனைவரும் நெடுங்காலமாகப் பயில்கின்ற ஒரு சிறுநூல் இது. **'வீட்டுநெறிப்பால்'** என்றும் இது பெயர் பெறும். அறம், பொருள், இன்பம் என்ற மூன்று உறுதிப் பொருள்களையும் **'முப்பால்'** என்ற மறுபெயருடைய திருக்குறளில் திருவள்ளுவர் பாடிமுடித்து நான்காவது உறுதிப்பொருளாகிய வீட்டைப்பாடாது விட்டார்; ஆகவே அவரது தமக்கையாகிய அவ்வையார் வீட்டுப்பாலைக் குறட்பாவினால் பாடிச் சேர்த்தார் என்று பெரியோர் பணிப்பர். முந்தியது திருக்குறள் ஆகையால் இந்நூல் **'ஞானக்குறள்'** என்று பெயர் பெற்றது. இவ்வழக்காறு சுவையுடையதாயினும் வரலாற்றுணர்ச்சிக்குப் பொருந் தாது.

**'அவ்வைக்குறள்'** 31 இயல்களையும் திருக்குறள் போல் அதிகாரத்திற்குப் பத்துப்பாடல்களாக 310 பாடல்களையும் கொண்டது. **'வீட்டு நெறிப்பால்'**, **'திருவருட்பால்'**, **'தன்பால்'** என்ற மூன்று பகுப்புகளையுடையது. இவற்றின் இயல்தொகை முறையே 10, 10, 11 என்பவையாகும்.

---

36. இதன் காலம் 1300.

முத்திக் கவ்வையார்சொல் முந்நூற்றுப் பத்தும்உன்
சித்தத்தே வைத்துத் தெளி.

என்ற பாடல் அவ்வைக் குறளின் சிறப்பை உணர்த்தும். முத்திக்குரியதென்று கூறிய இந்நூலை 'யோகநூல்' என்று சொல்வதுமுண்டு. நாடிதாரணை, வாயு தாரணை, அங்கிதாரணை முதலாக இந்நூல் பகுதிகள் யோக நெறியை உரைப்பதால் இக்கருத்தும் பொருந்துவதாகும்.

அச்சிட்ட அவ்வைக்குறள் பதிப்புகளில் இரண்டு பாடல்கள். அவையடக்கம் என்ற தலைப்புடன் காணப்படு கின்றன.

நல்லார் பிறர்குற்றம் நாடார்; நலம்தெரிந்து
கல்லார் பிறர்குற்றம் காண்பரோ? –அல்லாத
என்போல்வார் என்னை இகழ்வரோ? என்கவிக்கு
பின்பாரோ காண்பர் பிழை?

ஈதல்அறம் தீவினைவிட் டீட்டல்பொருள் எஞ்ஞான்றும்
காதல் இருவர் கருத்தொருமித்து– ஆதரவு
பட்டதே இன்பம்; பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

அவ்வையார் தனிப்பாடலாக இவற்றைப் பாடினார் என்பது வரலாறு. 'தமது தம்பியார் இயற்றிய திருக்குறளில் இல்லாததும் சிந்தையும் மொழியும் செல்லா நிலைய மாகிய வீட்டின் உண்மையை விளக்கவேண்டி, முதலில் அப்புருஷார்த்தம் நான்கினையும் சுருக்கி 'ஈதலறம்' என்ற வெண்பாவால் விளக்கி, பின்னர் அவ்வீட்டின் உண்மையை 310 குறள்வெண்பாவால் பாடி முடித்து அதற்கு 'ஞானக்குறள்' என்று பெயர் தந்தார். இவ்வாறு பாடிய தனிப்பாடலை, பின்வந்தோர் குறளில் எடுத்து அமைத்துக் கொண்டார்கள் என்று தோற்றுகின்றது.

**(ஈ) விநாயகர் அகவல்:** அவ்வையார் பாடிய மற்றொரு தோத்திர-சாத்திர நூல் **"சீதக்களப"** என்று தொடங்கும் விநாயகர் அகவல். இஃது எழுபத்திரண்டு அடிகளைக் கொண்ட ஒரு சிறு நூல்.

இதுபற்றி ஒரு பழமையானஒரு வரலாறு உண்டு. அது: "சுந்தரமூர்த்தி நாயனாருடனே கயிலாயத்துப் பரமசிவனுடைய சந்நிதானத்தில் **'ஆதியுலா'** அரங்கேற்ற எழுந்தருளும் சேரமான்பெருமாள்நாயனார் அவ்வையாரை அழையாமல் வந்துவிட்டோமே என்று நினைத்தார். அஃது இச் **'சீதக்களப'** என்கிற இந்த அகவலைக் கொண்டு விநாயகரைப் பூசித்துக் கொண்டிருந்த அவ்வையாருக்குத் தெரிந்தது. தாமும் அவர்களுடனே கயிலாயத்துக்குப் போக வேண்டுமென்கிற விருப்பங்கொண்டு துரிதமாகப் பூசை செய்தார். விநாயகர் "அவ்வையே? நீ கிரமப்படி பூசை செய். அவர்களுக்கு முன்னதாகவே நீ போய்க் கயிலாயம் சேரும்படி செய்வோம்" என, அவ்வையார் அவ்வாறே பூசைசெய்து முடித்தார். உடனே விநாயகக் கடவுள் தமது துதிக்கையாலெடுத்துவிடக் கயிலாயத் தடைந்தனர். பின்பு வந்து சேர்ந்த சேரமான் பெருமாள் நாயனாரும் அவ்வையாரைக் கண்டு அதிசயப்பட்டார். அச்சமயத்தில் அவ்வையார் சொன்ன கட்டளைக் கலித்துறை.

மதுர மொழிநல் உமையாள்
புதல்வன் மலர்ப்பதத்தே
முதிர நினைய வல்லார்க்கரி
தோமுகில் போல்முழங்கி
அதிர நடந்திடும் யானையும்
தேரும் அதன்பின்வரும்
குதிரை யுங்காதலங் கிழவியும்
காதம் குலமன்னனே

இந்தக் கவி சாதாரண வரலாற்றாராய்ச்சிக்குப் பொருந் துவதன்று. அன்றியும் வரலாற்றுச்செய்தி ஒன்றையும் விடாது. குறிப்பிடும் பெரியபுராண ஆசிரியர் இவ்விரு நாயன்மார் வரலாற்றிலும் இத்தகையதொரு செய்தியை உரைக்கவில்லை.

ஆயினும், இவண் குறிப்பிட்ட **'சீதக்களப'** என்ற விநாய கர் அகவல் இன்று வழக்கில் உள்ளது. இச்சிறு நூலை சைவமக்கள் இன்று நாள்தோறும் பாராயணம் செய்வதை நியமமாகக் கொண்டுள்ளனர். இது தோன்றிய நாள்முதல் விநாயக சதுர்த்தியன்று மக்கள் விநாயகரை முறையாகப் பூசித்து அவர் திருமுன் இப்பாடலை ஓதிவருகின்றனர். இது விநாயகமூர்த்தியைப் பரம்பொருளாகக் கொண்டு அப்பெருமான்திருவடியை அடைவதற்கான யோக நெறியை கூறுகின்றது. இதில் கூறியுள்ள சமயக் கருத்துகள் யாவும் சித்தாந்த சமயக்கருத்துகள். இவை மெய்கண்ட சாத்திரங்களின் மூலம் உருவாகிய கருத்துகளே. சாத்திரத் தொடர்பின்றேல் கருத்துகள் இவ்வுருவம் பெற்றிரா. ஆதலால் இந்நூல் சாத்திரத்திற்குப் பின்வந்ததேயாகும்.[37]

*(2)* **ஏனாதிச் சித்தர்:** 'ஏனாதி' பண்டை நூல்களினால் படைத்தலைவனுக்குரியதொரு சிறப்புப் பட்டம் என்று அறிகின்றோம். ஆனால் பிற்காலத்தில் குலத்தால் இழிந்தவர் என்று அக்காலத்தார் கருதிய சில குலத்தாருக்கு உரிய சொல்லாக ஆகிவிட்டது. சித்தர்கள் தாழ்ந்த பொருள்களை முன்னிலைப்படுத்தி உரைக்கு முறைமையில் அப்பொருள்களுக்குப் பாடலில் ஓர் ? (கேள்விக் குறி) பிறக்கின்றது. அதுபோல இச்சித்தர் நாவிதர், வண்ணார் என்று பிற்காலத்தில் பொருள்படுகின்ற 'ஏனாதி' என்ற சொல்லை முன்வைத்துப் பாடியதால் ஏனாதிக்குச் சிறப்பு உண்டாகின்றது.

37. 14-ஆம் நூற்றாண்டு

*இச்சித்தர் பாடியனவாகப் பத்துப்பாடல்கள் தொன் னூல் நிலையத்திலுள்ள ஓர் ஏட்டில் காணப்பெறுகின்றன இவை அச்சுப்படிகளில் இல்லை. பாடல்கள் தாழிசை யாப்பால் அமைந்தவை. முற்பாதி சித்தர் கேட்கும் வினாவாகவும் பிற்பாதி ஏனாதி கூறும் விடையாகவும் அமைந்துள்ளன.*

வேதாக மத்தின் விசும்பதனுள் புக்கு
மெய்கண்ட ஏனாதி, என்கொண்டு வந்தீர்?
பேதாதி பேதச் சமயப் பிணக்கைப்
பிசைந்துள் ளடக்கும் வியன்கொண்டு வந்தேன்.

என்றும் பிறப்பும் இறப்பும் எமக்கில்லை
என்கின்ற ஏனாதி என்கொண்டு வந்தீர்?
குன்றும் பதங்களும் குன்றாப் பதங்களும்
கூடவிழுங்கும் குளிகைகொண்டு வந்தேன்.

தானாதனா தந்த னானாதனா வென்று
சாற்றிய ஏனாதி, என்கொண்டு வந்தீர்?
ஊனாய் உயிராய் உறவாய் இருக்கும்
ஒப்பிலா மெய்ஞ்ஞானம் கொண்டல்லோ வந்தேன்

அன்புக்குள் அன்பாய் அறிவாய் இருக்கும்
அறிவுள்ள ஏனாதி என்கொண்டு வந்தீர்?
முன்செய் தவத்தின் முறையின் வழியே
முடிவில்லா மெய்ஞ்ஞானம் கொண்டல்லோ வந்தேன்.

*(3) **காளைச்சித்தர்:** இவருடைய பாடல்கள் எட்டு; தொன்னூல் நிலையத்து ஏட்டுப் படிகளில் காணப் பெறு கின்றன. அச்சில் வரவில்லை. இவர் காளையைப் பூட்டி உழவுகோலைக் கையில் கொண்டு ஏர் உழுது பயிர்த் தொழில் செய்வதாக ஞானப்பொருள்களை உருவகம் செய்து பாடுவதால் இப்பெயர் பெற்றது. 'காளச்சித்தர்' என்றும் இவர் பெயர் வழங்கும். இவர்தம் பாடல்கள்:*

எல்லாரும் கொல்லையுழ—என்தோழா
  என்கணவன் பள்ளமுழ
பள்ளம் பழுத்தளவோ—என் தோழா
  பார்த்து வரப் பிள்ளையீரே.

முன்னோரும் பின்னோரும்—என்தோழா
  மூவணையும் ஓரணைதான்
முன்னோர் உழுதுவிட—என்தோழா
  முகவெள்ளைக் காளையடா.

சந்திரரும் சூரியரும்—என் தோழா
  சந்திபண்ணும் பொய்கையிலே
இந்திரனை நோக்கியடா—என்தோழா
  எடுத்தேன் உழக்கோலை

*இச்சித்தர்களுடைய காலம் இன்னதென்று சொல்ல முடியவில்லை. அனைவரும் கிட்டத்தட்ட ஒருகால எல்லைக்குள் புகழோடு விளங்கினர் என்ற கருத்து ஏற்கக் கூடியதாதலால் இவர்கள் காலமும் 15–ஆம் நூற்றாண்டு எனக் கருதலாம்.*

***(4) நந்திதேவர்:*** *இவர் பெயர்* ***நந்தீசுவரர்*** *எனவும் வழங்கும். இவர் செய்த நூல்கள் யாவும் இரசவாதமே. அபூர்வமாய் ஒன்று வைத்தியம்; ஒன்று பூசாவிதி. பூசாவிதி என்பது 12 பாடல்களுடையது. எல்லாப் பாடல்களும் கேளப்பா, பாரப்பா என்றே தொடங்குவன. விக்கினேசர், சண்முகம், சிவம், தேவி விஷ்ணு பூசை சொல்லி, பின் ரேசகம், பூரகம் கும்பகம் பூசைகளும் சொல்கிறார். தேவிபூசைக்குரிய பாடலொன்று மட்டும் கேளப்பா என்று தொடங்கவில்லை. அப்பாடல் இது.*

தானான சிவத்தினிடை பூசை சொன்னேன்
  வன்மையுள்ள சத்தியுடை பூசைகேளு

வானான யிமமென்றுங் கும்ப கத்தில்
வட்டவள மாகவொரு மனதாய் நின்று
ஆனான கதம்பகத் தூரிபுஷ்பம் வைத்து
அப்பனே பால்பழங்கள் வஸ்து வைத்து
மானான தேவியைத்தான் தோத்த ரித்து
மைந்தனே சாஷ்டாங்கஞ் சரணம் பண்ணே (4)

*இதிலுள்ள பாடல்கள் யாவும் அந்தாதித் துறையில் அமைந்துள்ளன.*

# 8. பிற சான்றோர் இலக்கியங்கள்

*இப்பகுதியில் (1) தாயுமான அடிகள், (2) இராமலிங்க அடிகள் (3) தண்டபாணி அடிகள். (4) சுப்பிரமணிய பாரதியார் (5) கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை இவர்களின் படைப்புகளில் உள்ள சைவநூல்கள் அறிமுகம் செய்யப்பெறுகின்றன.*

## 1. தாயுமான அடிகள் (1608–1652)

*தமிழகம் பண்டு தொட்டு இன்றுவரை அருளாளர் பலரைத் தோற்றுவித்து அரிய புகழைப் பெற்று வந்துள்ளது. அத்தகைய அருளாளர் வரிசையில் பிற்காலத்துத் தோன்றிய சான்றோர்களில் குறிக்கத்தக்கவர் தவத்திரு **தாயுமான அடிகள்**.*

(i) ***வரலாறு:*** *தாயுமானவர் 17–ஆம் நூற்றாண்டில்[1] திருச்சிராப்பள்ளியில் தோன்றியவர். தந்தையார்* **கேடிலியப்ப பிள்ளை;** *தாயார்* **கெசவல்லியம்மை;** *இவர்கட்கு இரண்டாம் பிள்ளையாகப் பிறந்தவர். இளமையில் சிற்றம்பலதேசிகரிடம் கல்வி பயின்றார். பின்னர் பல தமிழ் இலக்கிய இலக்கண நூல்களையும் வடமொழி நூல்களையும் கற்றுணர்ந்தார்.*

---

1. தமிழிலக்கியச் சான்றோர் பிறப்பு. வளர்ப்பு, காலம் சரியாக இல்லை. தமிழ்க்கலைக்களஞ்சியத்தில் இவரது காலம் 18-ஆம் நூற்றாண்டு (1705-1742) எனக்குறிக்கப் பெற்றுள்ளது.

இளமையில் இவர் உள்ளம் பக்திநெறியை நாடியது. இறைவன்பால் பேரன்பு பூண்டிருந்தார். திருச்சி மலைக் கோட்டையில் கோயில் கொண்டிருக்கும் தாயுமானவரை நாடோறும் வழிபட்டு வந்தார்.

திருச்சியை ஆண்ட நாயக்கர் அரண்மனையில் கணக் கெழுதும் அலுவலில் ஈடுபட்டிருந்தநார். அப்போது அங்குச் சாரமாமுனிவர் மடத்தில் தங்கியிருந்த மௌன குருவை நாடி அவரிடம் சித்தாந்த நூல்களையும் யோக ஞானமுறைகளையும் கற்றுணர்ந்தார்; நிட்டைப் புயிற்சியிலும் ஈடுபட்டார்.

இவரது உடல் அழகையும் பொலிவையும் கல்வியறிவை யும் கண்ட பெண் அரசி இவர்மீது காதல் கொண்டாள். இதனால் அவர் அரண்மனைப் பணியினின்றும் தம்மை விடுவித்துக் கொண்டு விராலிமலை சென்று அங்குச் சித்தர் பலரைக் கண்டு அளவளாவினர். இதன்பயனாக இவர் மனம் துறவுநெறியை நாடியது. இறைநெறிபற்றியும் துறவின் மேன்மைபற்றியும் பல பாடல்கள் பாடி மகிழ்ந்தார். பல தலங்கள் சென்று பல பாடல்களைப் பாடினார். இவர் அன்னையும் அண்ணனும் வற்புறுத்தியதனால் தமக்கு மனம் இல்லாத நிலையிலும் 'திருமணம்' செய்து கொண்டார். ஓர் ஆண்மகவும் பிறந்தது. அதற்குச் **'கனக சபை'** எனத் திருநாமம் இட்டனர்.

சிலகாலம் சென்ற பின்னர் இல்லறத்தை அடியோடு துறந்து கடுந்துறவை மேற்கொண்டு கோவணாண்டி கோலத்தில் வெளியேறினார். மீண்டும் திருச்சி வந்து மௌனகுருவை அடைந்து உபதேசம் பெற்று அருட் கவியானார். பின்னர் சிவத்தலங்கள் பலவற்றிற்கும் சென்று சிவபெருமானைப் போற்றிப் பரவிப் பல பாடல்களைப் பாடினார்.

இறுதியாக இராமநாதபுரம் சென்று 'காட்டூரணி' என்னும் இடத்தில் புளியமரம் ஒன்றின்கீழ்த் தங்கி நிட்டையிலிருந்து பேரின்ப சமாதிநிலையை அடைந்தார்.

**காலம்:** அடிகள் சமாதிநிலையை அடைந்தபொழுது இவரது மாணாக்கர்கள் சிலர் பாடல்களைப் பாடினர். அவற்றுள் 'துகளறு சாலி வருடம்' எனத் தொடங்கும் பாடலை ஆதாரமாகக் கொண்டு அடிகளின் காலம் (1608-1662) எனப் பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை கூறுவர். டாக்டர் வ. சுப. மாணிக்கணாரும் இவர் காலம் 17-ஆம் நூற்றாண்டே என்பர்.

(ii) **அருளிச்செயல்கள்:** இவர்பாடிய பாடல்கள் அனைத்தையும் தொகுத்து நூலாக வெளிவந்துள்ளது. இவற்றில் தருமபுரம் ஆதினப் பதிப்பு சிறப்பாக அமைந்துள்ளது.

இவர் பாடல்கள் 56 தலைப்புகளில் அமைந்துள்ளன. 1 முதல் 42 தலைப்புகளில் உள்ளவை 635 பாடல்கள்; சற்றுக் கடினமானவை. 43 முதல் 51 முடிவுள்ளவை **'கண்ணிகள்'** வடிவில் அமைந்தவை. பராபரக்கண்ணி, பைங்கிளிக் கண்ணி, எந்நாட்கண்ணி போன்றவை. இவற்றின் தொகை 678. பாமரர்களும் படித்து அநுபவிக்கத் தக்கவை; எனினும் புலவர்களின் உணர்வுக்கும் தட்டுப் படாதவையும் இங்கு உள்ளன. இவை தவிர 52. நின்றநிலை, 53. பாடுகின்ற பனுவல் 54. வண்ணம்; 55 அகவல், 56 ஆனந்தக்களிப்பு என்ற தலைப்புகளில் 42 பாடல்கள் உள்ளன. இவற்றுள் பல பாமர மக்களும் சுவைத்து மகிழத்தக்கவை. ஆக இவர் அருளியவை 653+658+42=1235 பாடல்களாகும். இப்பாடல்களைச் சில தலைப்புகளில் நோக்குவோம்.

*(அ) கடவுள்:* இவர் கண்ட கடவுட்காட்சி விண்ணையும் மண்ணையும் இணைக்கும் திருக்காட்சியாகும்: தொடக்கத்தில் **'திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்'** என்ற தலைப்பில் வரும் மூன்று பாடல்களிலும் இக்காட்சியைக் கண்டு மகிழலாம்.

அங்கிங்கு எனாதபடி எங்கும்பிரகாசமாய்,
அனந்தபூர்த்தியாகி,
அருளொடு நிறைந்ததுஎது? தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடியெல்லாம்

தங்கும் படிக்கிச்சை வைத்து, உயிர்க்கு உயிராய்த்
தழைத்தது எது? மனவாக்கினில்
தட்டாமல் நின்றதுஎது? சமயகோ டிகளெலாம்
தம்தெய்வம் எம்தெய்வம் என்று

எங்கும் தொடர்ந்துஎதிர் வழக்கிடவும் நின்றதுஎது?
எங்கணும் பெருவழக்காய்,
யாதினும் வல்லஒரு சிந்துஆகி, இன்பமாய்,
என்றைக்கும் உள்ளதுஎது,மேல்

கங்குல்பகல் அறநின்ற எல்லைஉள்ளதுஎது?அது
கருத்திற்கு இசைந்ததுஅதுவே;
கண்டன எலாம்மோன உருவெளியது ஆகவும்
கருதிஅஞ் சலிசெய்குவாம்(1)

*என்பது முதல் பாடல்.*

ஊர்அனந் தம்;பெற்ற பேர்அனந் தம்;சுற்றும்
உறவுஅனந்த தம்;வினையினால்
உடல்அனந்த தம்;செய்யும் வினைஅனந் தம்;கருத்
தோஅனந் தம்;பெற்றேபேர்

சீர்அனந் தம்சொர்க்க நரகமும் அனந்தம்;நல்
தெய்வமும் அனந்தம்;பேதம்

திகழ்கின்ற சமயமும் அனந்தம்;அத னால்ஞான
சிற்சக்தி யால்உணர்ந்து,

கார்அனந் தம்கோடி வருஷித்தது எனஅன்பர்
கண்ணும்விண் ணும்தேக்கவே,
கருதரிய ஆனந்த மழைபொழியும் முகிலை;நம்
கடவுளைத், துரியவடிவைப்

பேர்அனந் தம்பேசி மறைஅனந் தம்சொலும்
பெரியமௌ னத்தின்வைப்பைப்,
பேசரும் அனந்தபத ஞானஅனந்தம்ஆம்
பெரியபொரு ளைப்பணிகுவாம் (2)

*என்பது இரண்டாம் பாடல். இந்த இரண்டிலும் அக்காட்சியைக் காணலாம்.*

*மூன்றாம் பாடலிலும் இறைவனை **'அத்துவித வஸ்து'**, **'சொற்பிரகாசத்தனி'**, **'தத்துவ சொரூபம்'** என்றெல்லாம் உருவகமாகப் பேசகின்றார். இங்கு இறைவனைப் **'பெரிய பொருள்'** என்று சுட்டுவது அத்வைதம் குறிப்பிடும் 'பிரம்மம்' (மிகப்பெரியது, இதற்குமேல் பெரிய பொருள் இல்லை) என்பதன் மொழிபெயர்ப்பு-தமிழாக்கம்.*

*பொருள் **வணங்கம்(3)** என்ற மூன்றாம் தலைப்பிலுள்ள பாடல்களில் இறைவனை உருவகங்களாலே சுட்டுவதைக் காணலாம். **'துரியநிறைசுடர்' 'சுகாரம்பப் பெருவெளி'** (1); **'இகபரமும் உயிர்க்குஉயிர்', 'அகம் மகிழவரும்தேன்', 'முக்கனி' 'கற்கண்டு'** (4); **'மாத்தூ வெளி', 'துரியவாழ்வு' 'தீதுஇல் பரம்ஆம் பொருள்'** (5); **'பொருளாகக் கண்ட பொருள் எவைக்கும் முதற் பொருள்' 'அன்பர் மிடிதீரப் பருகவந்த செழுந்தேன்' 'பூரண ஆனந்தம்'** (7); **'அருமறையின் சிரப்பொருள்' 'கற்பனை கடந்த செல்வம்' 'துரியநடுஊடு இருந்த பெரியபொருள்'** (8) இங்கும் **'பெரிய பொருள்'***

*(பிரம்மம்) என்று வந்திருப்பதைக் காணலாம். இரண்டாம் தலைப்பு (2) **'பரிபூரணானந்தம்'** என்பது. இதிலுள்ள பத்துப்பாடல்களும் இறைவனை **'பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கம் அறநிறைகின்ற பரிபூரணானந் தமே'** என்று சுட்டி முடிகின்றன.*

*'**எங்கும் நிறைகின்ற பொருள்**' (10) என்ற தலைப்பில் வரும் பதினொரு பாடல்களும் இறைவனை **'இகபரம் இரண்டிலும் உயிரினுக்கு உயிராகி எங்கும் நிறைகின்ற பொருளே'** என்று சுட்டியுரைக்கும் போக்கி லேயே அமைந்துள்ளன.*

*மேலும் கடவுளைச் சுட்டும் போக்கிலேயே தலைப்பு களும் அமைந்துள்ளன. (எ.டு) **'கருணாகரக் கடவுள்'(6) ஆனந்தமானபரம்(8), சுகவாரி(9), 'சச்சிதானந்த சிவம்'(11)** எல்லாவற்றிலும் தலைப்பின் பெயராலேயே பாடல்களும் இறுகின்றன.*

*மாதிரிக்குச் சில பாடல்களைக் காண்போம்.*

அண்டபகி ரண்டமும் மாயா விகாரமே;
அம்மாயை இல்லாமலே
ஆம்எனவும் அறிவும்உண்டு; அப்பாலும் அறிகின்ற
அறிவினை அறிந்துபார்க்கின்,

எண்திசை விளக்கும்ஒரு தெய்வஅருள் அல்லாமல்
இல்லைஎனும் நினைவும்உண்டு;இங்கு
யான்எனது அறத்துரிய நிறைவாகி நிற்பதே
இன்பம்எனும் அன்பும்உண்டு;

கண்டன எலாம்அல்ல என்றுகண் டனைசெய்து
கருவிகர ணங்கள்ஓயக்,
கண்மூடி ஒருகணம் இருக்கவென் றால்பாழ்த்த
கர்மங்கள் போராடுதே

—பரிபூரணா (3)

ஆழாழி கரைஇன்றி நிற்கஇலையா?கொடிய
ஆலம்அமுது ஆகஇலையோ?
அக்கடலின் மீதுவட அனல்நிற்க இல்லையோ?
அந்தரத்து அகிலகோடி

தாழாமல் நிலைநிற்க இல்லையோ மேருவும்
தனுவாக வளையஇலையோ?
சப்தமே கங்களும் வச்சிரதரன் ஆணையால்
சஞ்சசிரத் திடஇல்லையோ?

வாழாது வாழவே இராமன்அடி யால்சிலை
மடமங்கை ஆகஇலையோ?
மணிமந்தரம் ஆதியால் வேண்டுசித் திகள்உலக
மார்க்கத்தில் வைக்கஇலையோ?

பாழான என்மனம் குருகஒரு தந்திரம்
பண்ணுவது உனக்கு அருமையோ?
—பரிபூரணா 9

*அனைத்தும் இறைவன் ஆணையால் நடைபெறுகின்றன என்பதைக் காட்டுவது இப்பாடல்.*

விண்ணாதி பூதம்எலாம் தன்அகத்தில்
அடக்கிவெறு வெளியாய்; ஞானக்
கண்ணாரக் கண்டஅன்பர் கண்ஊடே
ஆனந்தக் கடலாய்; வேறுஒன்று
எண்ணாத படிக்குஇரங்கித் தானாகச்
செய்துஅருளும் இறையே!உன்தன்
தண்ணாரும் சார்ந்தஅருள் தனைநினைந்து
கரமலர்கள் தலைமேல் கொள்வோம்
—பொருள் வணக்கம்—9

பண்ணேன் உனக்கான பூசைஒரு வடிவிலே
பாவித்து இறைஞ்ச,ஆங்கே

பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி,அப்
பனிமலர் எடுக்கமனமும்

நண்ணேன், அலாமல்இரு கைதான், குவிக்கஎனின்
நானும்,என் உளம்நிற்றிநீ;
நான்கும் பிடும்போது அரைக்கும் பிடுஆதலால்
நான்பூசை செய்யல்முறையோ?

விண்ணேவிண் ஆதியாம் பூதமே நாதமே
வேதமே வேதாந்தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தேஅவ் வித்தின்முளையே

கண்ணே கருத்தேஎன் எண்ணே எழுத்தே
கதிக்குஆன மோனவடிவே

–கருணாகரக்–6

சுத்தமும் அசுத்தமும்; துக்கசுக பேதமும்
தொந்தமுடன் நிர்த்தொந்தமும்;
தூலமொடு சூக்குமமும் ஆசையும் நிராசையும்;
சொல்லும்ஒரு சொல்லின்முடிவும்;

பெத்தமொடு முத்தியும்; பாவமொடு அபாவமும்;
பேதமொடு அபேதநிலையும்;
பெருமையொடு சிறுமையும் அருமையொடு எளிமையும்
பெண்ணினுடன் ஆணும்;மற்றும்

நித்தமும் அநித்தமும்; அஞ்சனநி ரஞ்சனமும்;
நிட்களமும் நிகழ்சகளமும்;
நீதியும் அநீதியும்; ஆதியொடு அநாதியும்;
நிர்விடய விடயவடிவும்;

அத்தனையும் நீஅலதுஎன் அத்தனையும் இல்லையெனின்
யாங்கள்உனை அன்றிஉண்டோ?

–ஆனந்தமானபரம்–5

*இவையாவும் இறைவன் நிலையை இயம்பும் பாடல்கள்.*

*(ஆ) ஆன்மா: அடிகள் தம்மைப்பற்றிக் கூறியன யாவும் ஆன்மாபற்றிக் கூறியனவாகக் கருதலாம்.*

பட்டப் பகல்பொழுதை இருள்என்ற மருளர்தம்
பட்சமோ எனதுபட்சம்;
பார்த்தஇடம் எங்கணும் கோத்தநிலை கலையாது
பரமவெளிஆக ஒருசொல்

திட்டமுடன் மௌனியாய் அருள்செய்து இருக்கவும்
சேராமல் ஆராகநான்
சிறுவீடு கட்டிஅதில் அடுசோற்றை உண்டுஉண்டு,
தேக்குசிறி யார்கள்போல

நட்டனைய தாக்கற்ற கல்வியும் விவேகமும்
நல்நிலையம் ஆக உன்னி,
நான்என்று நீஎன்று இரண்டுஇல்லை என்னவே,
நடுவே முளைத்தமனதைக்

கட்டஅறி யாமலே வாடினேன்; எப்போது
கருணைக்கு உரித்துஆவனோ?

—கருணாகரக்–4

ஆணிலே பெண்ணிலே என்போல ஒருபேதை
அகிலத்தின் மிசைஉள்ளதோ?
ஆடிய கறங்குபோல் ஓடிஉழல் சிந்தையை
அடக்கிஒரு கணமேனும்யான்

காணிலேன் திருஅருளை; அல்லாது மௌனியாய்க்
கண்மூடி ஒடுமூச்சைக்
கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெம்
கனலினை எழுப்ப,நினைவும்

பூணிலேன், இற்றைநாள் கற்றதும் கேட்டதும்
போக்கிலே போகவிட்டுப்
பெரய்உலகன் ஆயினேன் நாயினும் கடைஆன
புன்மையேன், இன்னம் இன்னம்

வீணிலே அலையாமல், மலைஇலக்கு ஆகநீர்
வெளிப்படத் தோற்றல்வேண்டும்
—சித்தர்கணம்—7

கொல்லாமை எத்தனை குணக்கேட்டை நீக்கும்,அக்
குணம்ஒன்றும் ஒன்றிலேன்பால்
கோரம்எத் தனைபட்ச பாதம்எத் தனை,வன்
குணங்கள்எத் தனை,கொடியபாழ்ங்

கல்லாமை எத்தனை, அகந்தைஎத் தனை;மனக்
கள்ளம்எத் தனை,உள்ளசற்
காரியம் சொல்லிடினும் அறியாமை எத்தனை
கதிக்குஎன்று அமைத்த அருளில்

செல்லாமை எத்தனை, விர்தாகோட்டி என்னிலோ
செல்லும்எத் தனை,முயற்சி
சிந்தைஎத் தனைசலனம் இந்த்ரசா லம்போன்ற
தேகத்தில் வாஞ்சைமுதலாய்

அல்லாமை எத்தனை அமைந்தனை, உனக்குஅடிமை
ஆனேன், இவைக்கும்ஆளோ?
—ஆனந்தமானபரம்—1

கல்லேனும் ஐயஒரு காலத்தில் உருகும்என்
கல்நெஞ்சம் உருகஇலையே;
கருணைக்கு இணங்காத வன்மையையும் நான்முகன்
கற்பிக்க ஒருகடவுளோ?

வல்லான் வகுத்ததே வாய்க்கால் எனும்பெரு
வழக்குக்கு இழுக்கும்உண்டோ

வானமாய் நின்றுஇன்ப மழையாய் இறங்கிஎனை
வாழ்விப்பது உன்பரன் காண்;

பொல்லாத சேய்எனில் தாய்தள்ளல் நீதமோ?
புகலிடம் பிறிதும் உண்டோ?
பொய்வார்த்தை சொல்லிலோ திருஅருட்கு அயலுமாய்ப்
புன்மையேன் ஆவன்,அந்தோ

சொல்லால் முழக்கிலோ சுகம்இல்லை, மௌனியாய்ச்
சும்மா இருக்க அருளாய்;

—சுகவாரி—3

முத்தனைய மூரலும் பவளவாய் இன்சொலும்
முகத்து இலகு பசுமஞ்சளும்
மூர்ச்சிக்க விரகசன் னதம்ஏற்ற இருகும்பம்
முலையின்மணி மாலைநால

வைத்துஎமை மயக்கி,இரு கண்வலையை வீசியே
மாயா விலாசமோக
வாரிதியில் ஆழ்த்திடும் பாழான சிற்றிடை
மடந்தையர்கள் சிற்றின்பமோ

புத்தமிர்த போகம் புசித்துவிழி இமையாத
பொன்நாட்டும் வந்தது என்றால்,
போராட்டம் அல்லவோ பேரின்ப முக்திஇப்
பூமியில் இருந்து காண

எத்தனை விகாரம்வரும் என்றுசுகர் சென்ற
இவ்வுலகம் அறியாததோ;

—எங்கும் நிறைகின்ற பொருள்—10

இனிஏது எமக்குஉன் அருள்வருமோ எனக்கருதி
ஏங்குதே நெஞ்சம் ஐயோ
இன்றைக்கு இருந்தாரை நாளைக்கு இருப்பார்என்று
எண்ணவோ திடம் இல்லையே;

அநியாய மாய்இந்த உடலைநான் என்றுவரும்
அந்தகற்கு ஆளாகவோ?
ஆடித் திரிந்துநான் கற்றதும் கேட்டதும்
அவலமாய்ப் போதல்நன்றோ?

கனியேனும் வறியசெங் காயேனும் உதிர்சருகு
கந்தமூ லங்களேனும்
கனல்வாதை வந்துஎய்தின் அள்ளிப் புசித்துநான்
கண்மூடி மௌனியாகித்

தனியே இருப்பதற்கு எண்ணினேன்; எண்ணம்இது
சாமிநீ அறியாததோ?

—சச்சிதானந்தசிவம்—5

*குருநாதர்: தமக்கு ஞானோபதேசம் செய்த மௌன குருவை வணங்கும் நிலையில்* **மௌனகுருணக்கம்** *(5) என்ற தலைப்பில் பத்துப்பாடல்கள் அமைந்துள்ளன.* **'மௌனகுருவே'** *என விளித்தும், ஒவ்வொரு பாடலினும்* **'மந்தர குருவே யோக தந்த்ர குருவே, மூலன் மரபில் வருமௌனகுருவே!'** *என விளித்தும் தம்மைக் கரையேற்றுமாறு வேண்டுகின்றார். அவரும்* **'சும்மா இரு'** *என்று உபதேசித்ததாக வரலாறு. அதனை நினைந்து இவர் கூறியதாக ஒரு பாடல்;*

கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாம்
கரடிவெம் புலிவாயையும்
கட்டலாம்; ஒருசிங்கம் முதுகின்மேல் கொள்ளலாம்;
கட்செவி எடுத்தாட்டலாம்;

வெந்தழலின் இரதம்வைத்து ஐந்துலோ கத்தையும்
வேதிந்து விற்றுஉண்ணலாம்
வேறுஒருவர் காணாமல் உலகத்து உலாவலாம்;
விண்ணவரை ஏவல்கொளலாம்

சந்ததமும் இளமையோடு இருக்கலாம்; மற்றுஒரு
சரீரத்தி லும்புகுதலாம்;
நீர்மேல் நடக்கலாம்; கனல்மேல் இருக்கலாம்
தன்நிகர்இல் சித்திபெறலாம்;

சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற
திறம்அரிது;

—தேசோமயானந்தம்–8

*என்று கதறித் தம் உறுதியற்ற நிலைக்கு வருந்துகின்றார்.*

***குருவைப் பாராட்டுதல்:*** *'மௌனகுரு வணக்கம்' -பத்துப் பாடல்களிலும் குருவின் அருளைப் பல்வேறு விதமாகப் போற்றுவதைக் காணலாம். தம் ஆசைகள் அனைத்தையும் நிர்த்தூளிபட உதறச் செய்தும், பாசஇருளை ஒழித்தும், முகபடாம் போன்ற மாயையை நூறியும் சின்மயானந்த சுகவெள்ளம் படிந்து குருவருள் பாயச்செய்தும் தம்மை ஒரு ஞானமத்தகஜம் எனப்பார்ப்போர் கருதும்படி வளர்த்தமையை நினைவு கூர்ந்து போற்றுகின்றார் (1)*

'சிந்தைஅற நில்என்று சும்மா இருத்தி,மேல்
சின்மயா னந்தவெள்ளம்
தேக்கித் திளைத்துநான் அதுவாய் இருக்கநீ
செய்சித்ரம் மிக நன்றுகாண் (2)

*என்றும்,*

மின்அனைய பொய்யுடலை நிலைஎன்றும்; மைஇலகு
விழிகொண்டு மையல்பூட்டும்
மின்னார்கள் இன்பமே மெய்என்றும்; வளர்மாட
மேல்வீடு சொர்க்கம் என்றும்;

பொன்னைஅழி யாதுவளர் பொருள்என்று போற்றிஇப்
பொய்வேடம் மிகுதிகாட்டிப்

பொறை,அறிவு, துறவு,ஈதல் ஆதிநல் குணம்எலாம்
போக்கிலே போகவிட்டுத்;

தன்னிகரி லோர்பாதி பாழ்பேய்ப் பிடித்திடத்
தரணிமிசை லோகாயதன்
சமயநடை சாராமல் வேதாந்த சிந்தாந்த
சமரச சிவாநுபூதி

மன்ன,ஒரு சொல்கொண்டு எனைத்தடுத்து ஆண்டு அன்பின்
வாழ்வித்த ஞானகுருவே (4)

*என்றும், இன்னும் பலவிதமாகவும் பக்திப்புகழ் மாலை களைச் சூட்டி மகிழ்தல் காணலாம்.*

***(இ) பாடல்களின் இயல்புகள்: ஆகாரபுவனம்** (14)* *ஆகாரபுவனம்-புலனுக்குத் தோன்றும் இந்த உலகம். இப்பகுதி அடிகளின் ஆன்ம வாழ்க்கை வரலாற்றைக் குறிப்பிடுவதாகக் கருதலாம். இவர் கண்ட சமரச சன்மார்க்கக் கொள்கையும் மோனமார்க்கக் கொள்கையும் மோனநெறியும் இப்பகுதியில் தெளிவுறுத்தப் பெறுகின்றன. இப்பகுதி எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தயாப் பாலான 33 திருப்பாடல்களை உடையது. இவை 'பாரதி அறுபத்தாறு' உருவாக அடிஎடுத்துக் கொடுப்பதற்கு வழியாக அமைந்ததாகவும் கருதலாம்.*

*முதல் ஏழு பாடல்களில் (1–7) இறைவனுடைய பெருமைகள் இயம்பப் பெறுகின்றன (எ–டு)*

ஒன்றுஆகிப் பலஆகிப் பலவாக் கண்ட
ஒளிஆகி வெளிஆகி உருவும் ஆகி
நன்றுஆகித் தீதுஆகி மற்றும் ஆகி
நாசமுடன் உற்பத்தி நண்ணாது ஆகி
இன்றுஆகி நாளையுமாய் மேலும் ஆன
எந்தையே எம்மானே என்றுஎன்று ஏங்கிக்
கன்றுஆகிக் கதறினர்க்குச் சேதா ஆகிக்
கடிதினில்வந்து அருள்கூரும் கருணை விண்ணே! (6)

அருள்பழுத்த பழச்சுவையே கரும்பே தேனே
ஆர்அமிர்தே எண்கண்ணே அரிய ஆன
பொருள் அனைத்தும் தரும்பொருளே கருணைநீங்காப்
பூரணமாய் நின்ற ஒன்றே புனித வாழ்வே
கருதரிய கருத்ததனுள் கருத்தாய் மேவிக்
காலமும்தே சமும்வகுத்துக் கருவி ஆதி
விரிவினையும் கூட்டிஉயிர்த் திரளை ஆட்டும்
விழுப்பொருளே யான்சொலும்விண் ணப்பம் கேளே! (7)

*அடுத்து வரும்* **ஐந்து** *பாடல்கள் (8–12) சைவசமயம், பிற சமயங்களைத் தழுவிச் செல்லும் பாங்கை எடுத் தோதுகின்றன எடு:*

சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறு
சமயசங்கே தற்பொருளும் தான்ஒன்று ஆகப்
பன்மார்க்க நெறியினிலும் கண்டது இல்லை;
பகர்வுஅரிய தில்லைமன்றுள் பார்த்த போதுஅங்கு
என்மார்க்கம் இருக்குதுஎல்லாம் வெளியே என்ன
எச்சமயத் தவர்களும்வந்து இறைஞ்சா நிற்பர்;
கல்மார்க்க நெஞ்சம்உள எனக்கும் தானே
கண்டவுடன் ஆனந்தம் காண்டல் ஆகும் (12)

*அடுத்துவரும்* **நான்கு** *பாடல்கள் (13–16) சைவ சமய தத்துவங்களான பதி, பசு, பாசம் பற்றிய கருத்துகளைக் குறிப்பிடுகின்றன. தொடர்ந்து வரும்* **ஏழு** *பாடல்களில் (17–23) பாசம்பற்றி வருந்தும் உயிரை அப்பாசக் கட்டிலிருந்து விடுவிக்கவல்ல ஞானம் அருள இறைவன் மௌனகுருவாய்த் தோன்றி உபதேசித்தவற்றைக் குறிப்பிடு கின்றன. எ–டு (குருவாய் வந்து)*

வந்துஉடல் பொருள்ஆவி மூன்றும் தன்மை
வசம்எனவே, அத்துவா மார்க்கம் நோக்கி,
ஐந்துபுலன் ஐம்பூதம் கரணம்ஆதி
அடுத்தகுணம் அத்தனையும் அல்லை அல்லை;

இந்தஉடல் அறிவுஅறியா மையும்நீ அல்லை;
யாதுஒன்று பற்றின்அதன் இயல்பாய்நின்று
பந்தம்அறு பளிங்குஅனைய சித்து நீஉன்
பக்குவம்கண்டு அறிவிக்கும் பான்மை யேயாம்(18)

தான்ஆன தன்மயமே அல்லால் ஒன்றைத்
தலைஎடுக்க ஒட்டாது; தலைப்பட்டு ஆங்கே
போனாலும் கர்ப்பூரத் தீபம் போலப்
போய்ஒளிப்பது அல்லாது புலம்வேறு இன்றாம்;
ஞானாகா ரத்தினொடு ஞேயம் அற்ற
ஞாதுருவும் தழுவாமல் நழுவி நிற்கும்;
ஆனாலும் இதன்பெருமை எவர்க்குஆர் சொல்வார்;
அதுஆனால் அதுஆவர்; அதுவே சொல்லும் (22)

*அதன்பின் வரும்* ***ஒன்பது*** *பாடல்கள் (24–32) பேரின்பச் சுவையைக் காட்டும். மறைத்த இறைவனாகிய ஆன்ம நாயகனை மீண்டும் அடையத் தவிக்கும் அடிகளின் ஆன்ம வேட்கையைப் புலப்படுத்தும் பாங்கில் அகத்துறைப் பாடல்களாக அமைந்து கற்போர் நெஞ்சைக் கனிவிக்கும் பான்மையுடையனவாய் உள்ளன. ஒரு சிலவற்றை ஈண்டுக் காண்போம்.*

பாராதி விண்அனைத்தும் நீயாச் சிந்தை
பரியமட லால்எழுதிப் பார்த்துப் பார்த்து
வாராயோ என்ப்ராண நாதா என்பேன்;
வளைத்துவளைத்து எனைநீயா வைத்துக்கொண்டு
பூராயமேல்ஒன்று அறியா வண்ணம்
புண்ணாளர் போல்நெஞ்சம் புலம்பிஉள்ளே
நீராள மாய்உருகிக் கண்ணீர் சோர
நெட்டுயிர்த்து மெய்மறந்துஓர் நிலையாய் நிற்பன் (24)

2. ஞானாகாரத்தினொடு ஞேயம்-காணுதலுடன், காணப்படும் பொருள்; ஞாதுருவும் - காண்போனும்.

கருதரிய விண்ணேநீ எங்கும் ஆகிக்
கலந்தனையே உன்முடிவின் காட்சி ஆக
வருபொருள்எப் படியிருக்கும் சொல்வாய் என்பேன்;
மண்ணேஉன் முடிவில்எது வயங்கும் ஆங்கே
துரியஅறி வுடைச்சேடன் ஈற்றின் உண்மை
சொல்லானோ சொல்என்பேன்; சுருதி யேநீ
ஒருவரைப்போல் அனைவ ருக்கும் உண்மை ஆம்முன்
உரைஅன்றோ உன்முடிவை உரைநீ என்பேன் (27)

உரைஇறந்து பெருமைபெற்றுத் திரைக்கை நீட்டி
ஒலிக்கின்ற கடலேஇவ் உலகம் சூழக்
கரைஇன்றி உன்னை வைத்தார் யாரே என்பேன்;
கானகத்தின் பைங்கிளிகாள்! கமலம் மேவும்
வரிசிறைவண்டு இனங்காள்ஓ திமங்காள்! தூது
மார்க்கம் அன்றோ நீங்கள்இது வரையிலேயும்
பெரியபரி பூரணமாம் பொருளைக் கண்டு
பேசியதுஉண் டோஒருகால் பேசும் என்பேன் (28)

தேவர்தொழும் வாதவூர்த் தேவே என்பேன்
திருமூலர் தேவேஇச் சகத்தோர் முக்திக்கு
ஆவல்உறச் சிவஎன்வாக் குடனே வந்த
அரசேசும் மாஇருந்துஉன் அருளைச் சாரப்
பூவுலகில் வளர்அருண கிரியே, மற்றைப்
புண்ணியங்காள் ஓஎன்பேன்; புரைஒன்று இல்லா
ஓவியம்போல் அசைவுஅறவும் தானே நிற்பேன்
ஓதரிய துயர்கெடவே உரைக்கும் முன்னே. (31)

ஓதரிய சுகர்போல ஏன்ஏன் என்ன
ஒருவர்இலை யோஎனவும் உரைப்பேன், தானே
பேதம்அபே தம்கெடவும் ஒருபே சாமை
பிறவாதோ, ஆல்அடியில் பெரிய மோன
நாதன்ஒரு தரம்உலகம் பார்க்க இச்சை
நண்ணானோ, என்றுஎன்றே நானா ஆகிக்

காதல்மிகு அணிஇழையார் எனவா டுற்றேன்
கருத்தறிந்து புரப்பதுன்மேல் கடன்முக் காலும் (32)

*இறுதியாக 'வாழிப்' பாட்டு அமைகின்றது.*

***தேன்முகம் (15):*** *சிவபெருமானின் முதன்மையையும் சித்தாந்தத்தின் மேன்மையையும் விளக்கும் பத்துப் பாடல்கள்-அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங் களாலானவை. பாடல்கள் அந்தாதித் தொடையில் அமைந்தவை.*

கண்டனஅல்ல என்றே
கழித்திடும் இறுதிக் கண்ணே
கொண்டது பரமா னந்தக்
கோதுஇலா முக்தி, அத்தால்
பண்டையின் படைப்பும் காப்பும்
பறந்தன மாயை யோடே
வெண்தலை விழிகை காலில்
விளங்கிட நின்றான் யாவன்? (3)

அல்லல் ஆம் தொழில்ப டைத்தே,
அடிக்கடி உருஎ டுத்தே,
மல்லல்மா ஞாலம் காக்க
வருபவர் கடவுள் என்னில்,
தொல்லைஆம் பிறவி வேலை
தொலைந்திடாது இருள்நீங் காது
நல்லது மாயை தானும்
நான்என வந்து நிற்கும் (6)

*என்பவை இரண்டு பாடல்கள்.*

***பன்மாலை (16):*** *எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தத் தாலான பத்துப் பாடல்களைக் கொண்டது இப்பகுதி. இறைவன்மீது பக்தர்கள் தொடுக்கும் பாமாலையைப்*

*பற்றிப் பகர்வது இப்பகுதி. பாடல்கள் அந்தாதித் தொடையில் அமைந்தவை.*

வடிவுஅனைத்தும் தந்தவடிவு இல்லாச் சத்த
வான்பொருளே; எளியனேன் மனம்ஆம் மாயைக்
குடிகெடுக்கத் துசம்கட்டிக் கொண்ட மோன
குருவேஎன் தெய்வமே கோதுஇ லாத
படிஎனக்குஆ னந்தவெள்ளம் வந்து தேக்கும்
படி,எனக்குஉன் திருக்கருணை பற்று மாறே
அடிஎடுத்துஎன் முடியில்இன்னம் வைக்க வேண்டும்;
அடிமுடி ஒன்று இல்லாத அகண்ட வாழ்வே! (3)

*என்பது இதன் **மூன்றாம்** பாடல்.*

***பொன்னை மாதரை (18):*** *என்று தொடங்கும் இப் பகுதி **எழுபத்தெட்டு** கலிவிருத்தங்களாலானது. அடிகளார் இறைவனைநேரில் வேண்டும் பாங்கில் இப்பாடல்கள் நடைபெறுகின்றன.*

என்றும் உன்னை இதய வெளிக்குளே
துன்ற வைத்தன னே;அருள் சோதிநீ
நின்ற தன்மை நிலைக்குஎன்னை நேர்மையாம்
நன்று தீதுஅற வைத்த நடுவதே (9)

எனக்கு ளேஉயிர் என்ன இருந்தநீ
மனக்கி லேசத்தை மாற்றல் வழக்குஅன்றோ?
கனத்த சீர்அருள் காட்சிஅு லால்ஒன்றை
நினைக்க வோஅறி யாதுஎன்தன் நெஞ்சமே (16)

தூயது ஆன துரிய அறிவுஎனும்
தாயும் நீ,இன்பத் தந்தையும் நீஎன்றால்
சேய தாம்இந்தச் சீவத்திரள் அன்றோ?
ஆயும் பேரொளி ஆன அகண்டமே! (43)

*என்பன இதில் **மூன்று** பாடல்கள்.*

***ஆரணம்(19):*** *ஆரணம்-வேதம். இதுபற்றிப் பத்துப் பாடல்கள் எழுசீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்த யாப்பில் அமைந்துள்ளன. வேதத்தை வீதியாகவும் ஆகமத்தைக் குதிரையாகவும் கொண்டு இறைவனை நோக்கி ஆன்மா செய்யும் பயணம் இப்பகுதியில் நுவலப்பெறுகின்றது.*

உள்ளமே நீங்கா என்னைநீ வாஎன்று
  உலப்புஇலா ஆனந்தம் ஆன
வெள்ளமே பொழியும் கருணைவான் முகிலே;
  வெப்புஇலாத் தண்அருள் விளக்கே;
கள்ளமே துரக்கும் தூவெளிப் பரப்பே;
  கருஎனக் கிடந்தபாழ் மாயப்
பள்ளமே வீழாது, எனைக்கரை ஏற்றிப்
  பாலிப்பது உன்அருள் பரமே **(4)**

*என்பது இதன் **நான்காம்** பாடல்.*

***வம்பனேன் (21):*** *இவ்வாறு தொடக்கும் இப்பகுதி அறுசீர் விருத்த யாப்பில் அமைந்த பத்துப் பாடல்களைக் கொண்டது.*

இருநிலம் ஆதி நாதம்
  ஈறதுஆம் இவைக டந்த
பெருநிலம்ஆய தூய
  பேரொளிப் பிழம்பாய் நின்றும்;
கருதரும் அகண்டா னந்தக்
  கடவுள்!நின் காட்சி காண
வருகஎன்று அழைத்தால் அன்றி
  வாழ்வுஉண்டோ வஞ்ச னேற்கே? **(3)**

*ஐம்பெரும்பூதங்களையும் நாத தத்துவத்தையும் கடிந்து ஒளிப்பிழம்பாய் நிற்பவன் இறைவன் என்பதை இப்பாடல் குறிப்பிடுகின்றது.*

வஞ்சனை அழுக்காறு ஆதி
வைத்திடும் பாண்டம் ஆன
நெஞ்சனை; வலிதில் மேல்மேல்
நெக்குநெக்கு உருகப் பண்ணி;
அஞ்சலி செய்யும் கையும்
அருவிநீர் விழியும் ஆகத்,
தஞ்சம்என்று இரங்கிக் காக்கத்
தற்பரா பரம்உ னக்கே! (4)

*வாழ்க்கையில் எக்கறையும் படாமல் வாழ்ந்த அடிகள் தம்மைத் தாழ்த்திக் கூறுகின்றார். வைணவத்தில் இதனை* ***'நைச்சியாநு சந்தானம்'*** *என்று வழங்குவர். இங்ஙனமே மணிவாசகப்பெருமான், நம்மாழ்வார் போன்ற ஞானச் செல்வர்களும் தம்மைத் தாழ்த்திக் கூறிச் செல்வதையும் காணலாம்.*

***ஆசையெனும்(24):*** *இங்ஙனம் தொடங்கும் இப் பகுதியில் விருத்தம், துறை முதலிய பல்வேறு பாவினங்களில்* ***நாற்பது*** *பாடல்கள் அடக்கம். பாடல் வடிவங்களில் மாற்றம் உள்ளதுபோல் பாடப்பொருளும் ஆசை, நிட்டை, இல்லறம், துறவறம், பரம், வீடு எனச் சமயத்தொடர்பான பலபொருள் பற்றி வருகின்றன.*

சாக்கிரமா நுதலினில்,இந் திரியம் பத்தும்,
சத்தாதி, வசனாதி, வாயு பத்தும்
நீக்கம்இல்அந் தக்கரணம், புருட னோடு
நின்றதுமுப் பான்ஐந்து, நிலவும் கண்டத்து
ஆக்கியசொப் பனம்அதனில் வாயு பத்தும்
அடுத்தனசத்து ஆதி,வச னாதி ஆக
நோக்குகர ணம்புருடன் உடனே கூட,
நுவல்வர்இரு பத்தைந்தாம் நுண்ணி யோரே (25)

சுசுப்திஇத யம்தனில்பி ராணம், சித்தம்
சொல்லரிய புருடனுடன் மூன்றது ஆகும்;

வழுத்தியநா பியில்துரியம் பிராண னோடு
மன்னுபுரு டனும்கூட வயங்கா நிற்கும்;
அழுத்திடும்மூ லம்தன்னில் துரியா தீதம்
அதனிடையே புருடன்ஒன்றி அமரும்; ஞானம்
பழுத்திடும்பக் குவர்அறிவர் அவத்தை ஐந்தில்
பாங்குபெறக் கருவிநிற்கும் அவத்தை தானே **(26)**

*இந்த **இரண்டு** பாடல்களில் சாக்கிரம் முதலிய ஐந்து அவத்தைகளும் அந்தந்த அவத்தைகளில் தோன்றும் தத்துவங்களும் குறிக்கப்பெற்றுள்ளன.*

***எனக்கென் செயல்(25):*** இங்ஙனம் தொடங்கும் இப் *பகுதியில் கலி நிலைத்துறை யாப்பில் அமைந்த* ***இருபத்தெட்டுப்*** *பாடல்கள் அடக்கம். அனைத்தும் தத்துவங்கள் ததும்பிப் பொதிந்து நிற்கும் பாடல்கள் அவற்றுள் சில.*

எனக்குள னச்செயல் வேறுஇலை,
யாவும்இங்கு ஒருநின்
தனக்குள னத்தகும்; உடல்பொருள்
ஆவியும் தந்தேன்;
மனத்த கத்துள அழுக்குஎலாம்
மாற்றி,எம் பிரான்நீ
நினைத்தது எப்படி, அப்படி
அருளுதல் நீதம். **(1)**

வேதம் எத்தனை**?** அத்தனை
சிரத்தினும் விளங்கும்
பரத; நித்திய; பரம்பர;
நிரந்தர;பரம;
நாத; தற்பர; சிற்பர
வடிவமாய் நடிக்கும்
நீத; நிர்க்குண**!** நினைஅன்றி
ஒன்றுநான் நினையேன்**.** **(5)**

நெறிகள் தாம்பல பலவுமாய்,
அந்தந்த நெறிக்குஆம்
செறியும் தெய்வமும் பலபல
ஆகவும் செறிந்தால்
அறியும் தன்மைஇங்கு ஆர்?உனை
அறிவினால் அறிந்தோர்
பிறவும் தன்மைஇல் லாவகை
கலக்கின்ற பெரியோய்! (6)

பெரிய அண்டங்கள் எத்தனை
அமைத்து, அதில்பிறங்கும்
உரிய பல்லுயிர் எத்தனை
அமைத்து அவைக்குஉறுதி
வருவது எத்தனை அமைத்தனை,
அமைத்துஅருள் வளர்க்கும்
அரிய தத்துவ! எனக்குஇந்த
வண்ணம்ஏன அமைத்தாய்? (7)

தந்தை, தாய்,தமர், மகவுஎனும்
அவையெலாம் சகத்தில்
பந்தம்ஆம் என்றே, அருமறை
வாயினால் பகர்ந்த
எந்தை நீஎனை இன்னம்அவ்
அல்லலில் இருத்தில்
சிந்தை நான்தெளிந்து எவ்வணம்
உய்வணம்? செப்பாய் (10)

ஒன்ற தாய்ப்பல வாய்,உயிர்த்
திரட்குஎலாம் உறுதி
என்றதாய், என்றும் உளதாய்
எவற்றினும் இசைய
நின்ற தாய்,நிலை நின்றிடும்
அறிஞர்என் நெஞ்சம்

மன்ற தாய்,இன்ப உருக்கொடு
நடித்திடின் வாழ்வேன் **(12)**

பின்னும், முன்னுமாய், நடுவுமாய்
யாவினும் பெரியது
என்னும் தன்மையாய், எவ்வுயிர்த்
திரளையும் இயக்கி,
மன்னும் தண்அருள் வடிவமே!
உனக்குஅன்பு வைத்தும்
துன்னும் இன்னல்ஏன்? யான்எனும்
அகந்தைஏன்? சொல்லாய் **(15)**

மின்னை அன்னபொய் வாழ்க்கையே
நிலைஎன மெய்ஆம்
உன்னை நான்மறந்து எங்ஙனம்
உய்வணம் உரையாய்;
முன்னை வல்வினை வேர்அற
முடித்து என்றும் முடியாத்
தன்னைத் தன்அடி யார்க்குஅருள்
புரிந்திடும் தக்கோய்! **(16)**

உற்று உணர்ந்து,எலாம் நீஅலது
இல்லைஎன்று, உனையே
பற்று கின்றனர்;எந்தை! நின்
அடியர், யான்பாவி
முற்றும் மாயம்ஆம் சகத்தையே
மெய்என, முதல்நான்
அற்றுஇ ருந்திடத் தொழில்செய்வான்
தனிநிகர் ஆனேன் **(28)**

*பாடல்களில் ஆழங்கால்பட்டுப் படித்தால் மணிவாச கப்பெருமானின் செல்வாக்குத் தட்டுப்படும்.*

*பாயப்புலி(27): என்று தொடங்கும் இப்பகுதி கட்டளைக் கலித்துறை யாப்பாலான* ***ஐம்பத்தொன்பது*** *பாடல்களாலானது. வேங்கை ஒன்றைப் பிடிக்க மான்குட்டி ஒன்றைப் பார்வைமானாக அதன் முன் கட்டிவைத்திருப்பதுபோல் உலகப் பொருள்களாகிய படைக்கருவிகள் பலவற்றின்முன் தம்மைத் தனியாக நிற்க வைத்துள்ளதை எண்ணி இறைவனிடம் முறையிடுகின்றார்.*

பாயப் புலிமுனம் மான்கன்றைக்
காட்டும் படி,அகில
மாயைப் பெரும்படைக் கேஇலக்
காஎனை வைத்தனையோ?
நீஎப் படிவகுத் தாலும்நன்
றே,நின் பெருங்கருணை
தாய்ஒத்து அடியர்க்கு அருள்சச்சி
தானந்த தற்பரமே! (1)

வெளியான நீஎன் மனவெளி
யூடு வரவின்,ஐயா
ஒளிஆரும் கண்ணும் இரவியும்
போல்நின்று உலாவுவன்காண்;
அளிஆரும் கொன்றைச் சடைஆட,
அம்புலிஆடக் கங்கைத்
துளிஆட, மன்றுள் நடம்ஆடும்
முக்கண் சுடர்க்கொழுந்தே! (6)

நீங்காது உயிருக்கு உயிர்ஆகி
நின்ற நினைஅறிந்தே,
தூங்காமல் தூங்கின்அல் லாதே
எனக்குச் சுகமும் உண்டோ?
ஓங்காரம் ஆம்ஐந்து எழுத்தால்
புவனத்தை உண்டுபண்ணிப்

பாங்காய் நடத்தும் பொருளே;
அகண்ட பரசிவமே! (9)

வாய்உண்டு வாழ்த்த; மவுனம்செய்
போது மவுனஅருள்
தாய்உண்டு; சேய்என்ன என்னைப்
புரக்கச் சதானந்தம்ஆம்
நீஉண்டு; நின்னைச் சரண்புக
நான்உண்டு;என் நெஞ்சம்ஐயா!
தீஉண்டு இருந்த மெழுகுஅல
வோகதி சேர்வதற்கே (21)

கல்லால் எறிந்தும்கை வில்லால்
அடித்தும் கனிமதுரச்
சொல்லால் துதித்தும்,நல் பச்சிலை
தூவியும், தொண்டர்இனம்
எல்லாம் பிழைத்தனர்; அன்புஅற்ற
நான்இனி ஏதுசெய்வேன்;
கொல்லா விரதியர் நேர்நின்ற
முக்கண் குருமணியே! (22)

ஆரணம் ஆகமம் எல்லாம்
உரைத்த அருள்மவுன
காரண மூலம்கல் ஆல்அடிக்
கேஉண்டு; காணப்பெற்றால்,
பார்அணங் கோடு சுழல்நெஞ்சம்
ஆகிய பாதரசம்
மாரண மாய்விடும்; எண்சித்தி
முக்தியும் வாய்த்திடுமே (25)

சித்த மவுனி, வடபால்
மவுனி,நம் தீபகுண்ட
சுத்த மவுனி எனும்மூவ
ருக்கும் தொழும்புசெய்து,

சத்த மவுன முதல்மூன்று
மௌனமும் தான்படைத்தேன்;
நித்த மவுனம்அல் லால்அறி
யேன்மற்றை நிட்டைகளே. (26)

அழுக்குஆர்ந்த நெஞ்சுஉடை யேனுக்கு,ஐ
யாநின் அருள்வழங்கின்
இழுக்குஆகும் என்றுஎண்ணி யோஇரங்
காத இயல்புகண்டாய்;
முழுக்காதல் ஆகி, விழிநீர்
பெருக்கிய முக்தர்எனும்
குழுக்காண நின்று, நடம்ஆடும்
தில்லைக் கொழுஞ்சுடரே! (34)

அல்லும் பகலும் உனக்கே
அபயம் அபயம்என்று
சொல்லும்சொல் இன்னம் தெரிந்ததுஅன்
றோ?துதிப் பார்கள்மனக்
கல்லும் கரைக்கும் மவுனா!
உனது கருணைஎன்பால்
செல்லும் பொழுதுஅல்ல வோசெல்லு
வேன்;அந்தச் சிற்சுகத்தே (44)

ஆடும் கறங்கும் திரிகையும்
போல அலைந்துஅலைந்து
காடும் கரையும் திரிவதுஅல்
லால்,நின் கருணைவந்து
கூடும் படிக்குத் தவம்முய
லாத கொடியர்,எமன்
தேடும் பொழுதுஎன்ன செய்வார்?
பரமானந்த சிற்சுடரே! (56)

*பாடல்களைக் கருத்தூன்றிப்படித்தால் அருணகிரியாரின் கந்தர் அலங்காரத்தின் செல்வாக்கை இதில் கண்டு மகிழலாம்.*

***உடல் பொய்யுறவு(28):*** *இப்படித்தொடங்கும் இப்பகுதி* ***எண்பத்து மூன்று*** *நேரிசை வெண்பாக்களால் ஆனது. இதில் தாம் அறிந்தவை யாவும் மோன குருவினிடமிருந்தே என்று குறிப்பிடுகின்றார். சில பாடல்கள்:*

உடல்,பொய் உறவுஆயின் உண்மைஉறவு ஆகக்
கடவார்ஆர்? தண்அருளே கண்டாய்;–திடமுடனே
உற்றுப்பார்; மோனன்ஒருசொல்லே உண்மை; நன்றாய்ப்
பற்றிப்பார்; மற்றெல்லாம் பாழ் (1)

சகம்அனைத்தும் பொய்எனவே தான்உணர்ந்தால், துக்க
சுகம்அனைத்தும் பொய் அன்றோ? சோராது –இகபரத்தும்
விட்டுப் பிரியாத மேலான அத்வைதக்
கட்டுக்குள் ஆவதுஎன்றோ? காண். (6)

இகம்முழுதும் பொய்எனவே ஏய்ந்துஉணர்ந்தால், ஆங்கே
மிகவளர வந்தஅருள் மெய்யே; –அகம்நெகிழப்
பாரீர்; ஒருசொல் படியே அநுபவத்தை
சேரீர்; அதுவே திறம் (10)

கல்லேறும் சில்லேறும் கட்டியே றும்போலச்
சொல்ஏறப் பாழ்த்த துளைச்செவிகொண்டு–அல்ஏறு
நெஞ்சன்என நிற்கவைத்தாய்; நீதியோ? தற்பரமே!
வஞ்சன் அல்லேன்நீயே மதி. (15)

மனத்தாலும் வாக்காலும் மன்னஒண்ணா மோன
இனத்தாரே நல்ல இனத்தார்;–கனத்தபுகழ்
கொண்டவரும் அன்னவரே; கூறரிய முக்திநெறிக்
கண்டவரும் அன்னவரே காண். (20)

சொல்லுக்கு அடங்காச் சுகப்பொருளை, நாம்எனவே
அல்லும் பகலும் அரற்றுவதுஎன்?–நல்லசிவ
ஞானமயம் பெற்றோர்கள் நாம்இல்லை என்பர்;அந்தோ
மோனமயம் ஆன முறை (25)

ஐயா அருணகிரி அப்பா; உனைப்போல
மெய்ஆக ஒர்சொல் விளம்பினர்யார்?–வையத்தோர்
சாற்றரிதுஎன்று ஏசற்றார்; தன்அனையாய், முக்கண்எந்தை
நாற்றிசைக்கும் கைகாட்டி னான் (26)

தத்துவப்பே யோடே தலைஅடித்துக் கொள்ளாமல்
வைத்த அருள்மோன வள்ளலையே–நித்தம்அன்பு
பூணக் கருதும்நெஞ்சு; போற்றக் கரம்எழுப்பும்;
காணத் துடிக்கும்இரு கண். (29)

அல்லும் பகலும்பே ரன்புடனே தான்இருந்தால்
கல்லும் உருகாதோ! கல்நெஞ்சே! –பொல்லாத
தப்புவழி ஏன்நினைத்தாய்? சந்ததமும் நீஇறந்த
எய்ப்பிலே ஆனந்த மே. (40)

சும்மா இருக்கச் சுகம்உதயம் ஆகுமே;
இம்மாயா யோகம்இனி ஏன்அடா? –தம்அறிவின்
சுட்டாலே ஆகுமோ? சொல்லவேண் டாம்;கன்ம
நிட்டா; சிறுபிள்ளை நீ! (52)

அவனே பரமும்; அவனே குருவும்;
அவனே அகிலம் அனைத்தும்; –அவனேதாம்
ஆனவரே சொன்னால்; அவரே குருஎனக்கு;
நான்அவனாய் நிற்பதுஎந்த நாள்? (63)

ஞானநெறிக்கு ஏற்றகுரு; நண்ணரிய சித்திமுக்தி
தானம் தருமம் தழைத்தகுரு;–மானமொடு
தாய்எனவும் வந்துஎன்னைத் தந்தகுரு; என்சிந்தை
கோயில்என வாழும் குரு. (82)

***கற்புறுசிந்தை (36):*** *'பூரணானந்த வாழ்வே' என்னும் பத்து அறுசீர் விருத்தங்களால் ஆனது இப்பகுதி; முதல் பாடலின் முதல் தொடரைத் தலைப்பாகக் கொண்டது. இதில் கற்புறு மனைவியைப்போல் இறைவனையே தலைவனாகக் கொண்டு பெண்ணின் பேரின்பம் என்னும் உலகாயதத்திலிருந்து விடுபட்டு இறையருளைப் பெற்று உய்ய வேண்டும் என்று வற்புறுத்தப்பெறுகின்றது.*

கற்புறு சிந்தை மாதர்
கணவரை அன்றி வேறுஓர்
இல்புறத் தவரை நாடார்;
யாங்களும் இன்ப வாழ்வு
தன்பொறி ஆக நல்கும்
தலைவநின் அலது,ஓர் தெய்வம்
பொற்புறக் கருதோம் கண்டாய்;
பூரணா னந்த வாழ்வே! (1)

எண்ணிய எண்ணம் எல்லாம்
இறப்புமேல் பிறப்புக்கு ஆசை
பண்ணிஎன் அறிவை எல்லாம்
பாழ்ஆக்கி, எனைப்பாழ் ஆக்கும்
திண்ணிய வினையைக் கொன்று,
சிறியனை உய்யக் கொண்டால்
புண்ணியம் நினக்கே அன்றோ
பூரணா னந்த வாழ்வே! (5)

## கண்ணிகள்

***(1) பராபரக்கண்ணி (43):*** *இத்தலைப்பின்கீழ் 389 கண்ணிகள் அமைந்துள்ளன. அனைத்தும் பாமரமக்களின் கவனத்தை ஈர்ப்பதோடன்றி படித்தவர்களையும் சிந்திக்க வைக்கும் பான்மையன. இவற்றுள் சில:*

உரைஇறந்த அன்பர்உளத்து ஓங்குஒளியாய் ஓங்கிக்
கரை இறந்த இன்பப் பெருக்கே பராபரமே (6)

ஓடும் இருநிதியும் ஒன்றாகக் கண்டவர்கள்
நாடும் பொருள்ஆன நட்பே பராபரமே (16)

என்புருகி நெஞ்சம் இளகிக் கரைந்துகரைந்து
அன்புருவாய் நிற்க அலந்தேன் பராபரமே (21)

அன்னைஇலாச்சேய்போல் அலக்கண் உற்றேன் கண்ஆர
என்அகத்தில் தாய்போல் இருக்கும் பராபரமே (57)

எவ்வுயிரும் என்உயிர்போல் எண்ணி இரங்கவும்நின்
தெய்வ அருள்கருணை செய்யாய் பராபரமே (65)

நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்அன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே (151)

கொல்லா விரதம்ஒன்று கொண்டவரே நல்லோர்மற்று
அல்லாதார் யாரோ அறியேன் பராபரமே (192)

எல்லாரும் இன்புற்று இருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறுஒன்று அறியேன் பராபரமே (221)

ஐவரொடும் கூடாமல் அந்தரங்க சேவைதந்த
தெய்வ அறிவே சிவமே பராபரமே (252)

பக்தர் அருந்தும் பரமசுகம் யான்அருந்த
எத்தனைநாள் செல்லும் இயம்பாய் பராபரமே (270)

பேசாத மோனநிலை பெற்றுஅன்றோ நின்அருள்ஆம்
வாசாம் அகோசரம்தான் வாய்க்கும் பராபரபமே (284)

அத்வைதம் ஆன அயிக்ய அநுபவமே
சுத்தநிலை அந்நிலையார் சொல்வோர் பராபரமே (293)

அண்டபகி ரண்டம் அறியாத நின்வடிவைக்
கண்டவரைக் கண்டால் கதிஆம் பராபரமே (323)

சிந்தை மயக்கம்அறச் சின்மயமாய் நின்றஉன்னைத்
தந்தஉனக்கு என்னையுந்தான் தந்தேன் பராபரமே (329)

மோனம் தரும்ஞானம் ஊட்டி எனக்குஉவட்டா
ஆனந்த வாழ்க்கை அருளாய் பராபரமே (345)

உருவெளிதான் வாதவூர் உத்தமர்க்குஅல் லால்இனமும்
குருவழிநின் றார்க்கும்உண்டோ கூறாய் பராபரமே (356)

உள்ளம் குழைய உடல்குழைய உள்இருந்த
கள்ளம் குழையஎன்று காண்பேன் பராபரமே (361)

தத்துவம்எல் லாம்அகன்ற தன்மையர்க்குச் சின்மயம்ஆம்
நித்தமுக்த சுத்த நிறைவே பராபரமே (367)

கல்லாதேன் ஆனாலும் கற்றுஉணர்ந்த மெய்யடியார்
சொல்லாதே நின்னைத் தொடர்ந்தேன் பராபரமே (383)

முத்திக்கு வித்துஆன மோனக் கரும்புவழி
தித்தித் திடவிளைந்த தேனே பராபரமே (385)

மண்ணும் மறிகடலும் மற்றுளவும் எல்லாம்உன்
கண்ணில் இருக்கவும்நான் கண்டேன் பராபரமே (387)

*(2) பைங்கிளிக்கண்ணி (44)*[3]*:*

ஆவிக்குள் ஆவிஎனும் அற்புதனார் சிற்சுகம்தான்
பாவிக்கும் கிட்டுமோ சொல்லாய்நீ பைங்கிளியே (3)

ஆரும்அறி யாமல்என்னை அந்தரங்கம் ஆகவந்து
சேரும் படிஇறைக்குச் செப்பிவா பைங்கிளியே (4)

உன்னாமல் ஒன்றுஇரண்டுஎன்று ஓராமல் வீட்டுநெறிக்
சொன்னான் வரவும்வகை சொல்லாய்நீ பைங்கிளியே (7)

ஊரும்இலார் பேரும்இலார் உற்றார்பெற் றாருடனே
யாருமிலார் என்னை அறிவாரோ பைங்கிளியே (8)

3. இத்தலைப்பில் 88 கண்ணிகள் உள்ளன.

எந்தமட லூடும் எழுதா இறைவடிவைச்
சிந்தைமட லால்எழுதிச் சேர்ப்பேனோ பைங்கிளியோ (11)

கண்டதனைக் கண்டு கலக்கம் தவிர்எனவே
விண்டபெரு மானையும்நான் மேவுவனோ பைங்கிளியே (15)

காந்தம் இரும்பைக் கவர்ந்து இழுத்தால் என்னஅருள்
வேந்தன் எமைஇழுத்து மேவுவனோ பைங்கிளியே (17)

சொல்லிறந்து நின்ற சுகரூபப் பெம்மானை
அல்லும் பகலும் அணைவேனோ பைங்கிளியே (24)

தாவியதுஓர் மர்க்கடமாம் தன்னைவிட்டே அண்ணலிடத்து
ஓவியம்போல் நிற்கின்எனை உள்குவரோ பைங்கிளியே
(28)

தொல்லைக் கவலை தொலைத்துத் தொலையாத
எல்லைஇலா இன்பமயம் எய்துவனோ பைங்கிளியே (31)

நீர்க்குமிழி போன்றஉடல் நிற்கையிலே சாசுவதம்
சேர்க்கஅறி யாமல் திகைப்பேனோ பைங்கிளியே (34)

மண்உறங்கும் விண்உறங்கும் மற்றும்உளஎ லாம்உறங்கும்
கண்உறங்கேன் எம்இறைவர் காதலால் பைங்கிளியே (44)

விண்ணவர்தம் பால்அமுதம் வேப்பங்காய் ஆகஎன்பால்
பண்ணியதுஎம் அண்ணல்மயல் பார்த்தாயோ
பைங்கிளியே (52)

உள்ளத்தின்உள்ளே ஒளித்துஇருந்துஎன் கள்ளமெல்லாம்
வள்ளல்அறிந் தால்எனக்கு வாயும்உண்டோ
பைங்கிளியே (55)

ஆகத்தை நீக்கும்முன்னே ஆவித் துணைவரைநான்
தாகத்தின் வண்ணம் தழுவுவனோ பைங்கிளியே (56)

கள்ளத் தலைவர்அவர் கைகாட்டிப் பேசாமல்
உள்ளத்தில் வந்த உபாயம்என்னோ பைங்கிளியே (58)

*(3) **எந்நாட்கண்ணி (45):*** *இதில் தெய்வ வணக்கம், குருமரபின் வணக்கம், அடியார் வணக்கம், யாக்கையைப் பழித்தல், மாதர் மயக்குஅறுத்தல், தத்துவமுறைமை, தன் உண்மை, அருள்இயல்பு, பொருள் இயல்பு, ஆனந்த இயல்பு, அன்பு நிலை, அன்பர்நெறி, அறிஞர் உரை, நிற்கும் நிலை, நிலைபிரிந்தோர் கூடுவதற்கு உபாயம் என்ற **பதினைந்து தலைப்புகளில்** கண்ணிகள் உள்ளன. ஒரு சில தலைப்பு களில் மாதிரிக்கு ஒரு சில கண்ணிகளைக் காண்போம்.*

*(i) **தெய்வ வணக்கம்***

ஆறுசம யத்தும் அதுஅதுவாய் நின்றுஇலங்கும்
வீறு பரைத்திருத்தாள் மேவுநான் எந்நாளோ? (5)

ஆதிஅந்தம் காட்டாது அகண்டிதமாய் நின்று உணர்த்தும்
போதவடிவு ஆம்அடியைப் போற்றுநாள் எந்நாளோ (8)

அஞ்சுமுகம்காட்டாமல் ஆறுமுகம் காட்டவந்த
செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்பது எந்நாளோ? (10)

தந்தைஇரு தாள்துணித்துத் தம்பிரான் தாள்சேர்ந்த
எந்தைஇரு தாள்இணைக்கே இன்புறுவது எந்நாளோ? (11)

*(ii) **குருமரபின் வணக்கம்***

பொய்கண்டார் காணாப் புனிதம்எனும் அத்வைத
மெய்கண்ட நாதன்அருள் மேவுநாள் எந்நாளோ? (4)

பாதிவிருத் தத்தால்இப் பார்விருத்தம் ஆகஉண்மை
சாதித்தார் பொன்அடியைத் தாள்பணிவது எந்நாளோ (5)

சிற்றம் பலம்மன்னும் சின்மயர்ஆம் தில்லைநகர்க்
கொற்றங் குடிமுதலைக் கூறுநாள் எந்நாளோ? (6)

*(iii) **அடியார் வணக்கம்***

பித்தர்இறை என்றுஅறிந்து பேதைபால் தூதுஅனுப்பு
வித்த தமிழ்ச்சமர்த்தர் மெய்புகழ்வது எந்நாளோ? (3)

போதவூர் நாடுஅறியப் புத்தர்தமை வாதில் வென்ற
வாதவூர் ஐயன்அன்பை வாஞ்சிப்பது எந்நாளோ? (4)

ஒட்டுடன் பற்றுஇன்றி உலகைத் துறந்தசெல்வப்
பட்டினத்தார் பத்திரகிரி பண்புஉணர்வது எந்நாளோ? (5)

சக்கர வர்த்தி தவராச யோகிஎனும்
மிக்கதிரு மூலன்அருள் மேவுநாள் எந்நாளோ? (7)

*(v) மாதர் மயக்குஅறுத்தல்*

திண்ணியநெஞ் சப்பறவை சிக்கக் குழல்காட்டில்
கண்ணிவைப்போர் மாயம் கடக்குநாள் எந்நாளோ? (2)

காமனைவா என்றுஇருண்ட கண்வலையை வீசுமின்னார்
நாமம் மறந்துஅருளை நண்ணுநாள் எந்நாளோ? (4)

வீங்கித் தளர்ந்து விழும்முலையார் மேல்வீழ்ந்து
தூங்கும்மதன் சோம்பைத் துடைக்குநாள் எந்நாளோ?(6)

உந்திச் சுழியால் உளத்தைச் சுழித்தகன
தந்தி தனத்தார் தமைமறப்பது எந்நாளோ? (9)

தட்டுவைத்த சேலைப்பூங் கொய்சகத்தில் சிந்தைஎல்லாம்
கட்டிவைக்கும் மாயமின்னார் கட்டுஅழிவது எந்நாளோ?
(10)

ஏழைக் குறும்புசெயும் ஏந்திழையார் மோகமெனும்
பாழைக் கடந்து பயிர்ஆவது எந்நாளோ? (13)

மெய்யில் சிவம்பிறக்க மேவும்இன்பம் போல்மாதர்
பொய்யில்இன்பு இன்றுஎன்று பொருந்தாநாள் எந்நாளோ?
(15)

*(viii) அருள் இயல்பு*

பொய்க்காட்சி ஆன புவனத்தை விட்டுஅருள்ஆம்
மெய்க்காட்சி ஆம்புவனம் மேவுநாள் எந்நாளோ? (2)

ஆதிஅந்தம் காட்டாமல் அம்பரம்போ லேநிறைந்த
தீதுஇல் அருட்கடலைச் சேருநாள் எந்நாளோ? (3)

சூரியர்கள் சந்திரர்கள் தோன்றாச் சுயம்சோதிப்
பூரணதே சத்தில் பொருந்துநாள் எந்நாளோ? (7)

எல்லாம் இறந்தஇடத்து எந்தைநிறைவு ஆம்வடிவைப்
புல்லாமல் புல்லிப் புணருநாள் எந்நாளோ? (16)

எக்கணும்ஆம் துன்ப இருட்கடலை விட்டுஅருள்ஆம்
மிக்ககரை ஏறி வெளிப்படுவது எந்நாளோ? (18)

*(ix) பொருள் இயல்பு*

சிந்தை மறந்து திருஅருளாய் நிற்பவர்பால்
வந்தபொருள் எம்மையும்தான் வாழ்விப்பது எந்நாளோ? (8)

எள்ளுக்குள் எண்ணெய்,போல் எங்கும் வியாபகமாய்
உள்ளஒன்றை உள்ளபடி ஓருநாள் எந்நாளோ? (9)

அடிமுடிகாட் டாதசுத்த அம்பரமாம் சோதிக்
கடுவெளிவந்து என்னைக் கலக்குநாள் எந்நாளோ? (14)

பெண்ஆண் அலிஎனவும் பேசாமல் என்அறிவின்
கண்ணூடே நின்றஒன்றைக் காணுநாள் எந்நாளோ? (18)

நினைப்பும் மறப்பும்அற நின்றபரஞ் சோதி
தனைப்புலமா என்அறிவில் சந்திப்பது எந்நாளோ? (19)

*(x) ஆனந்த இயல்பு*

சித்தம் தெளிந்ததோர் தெளிவில் தெளிவுஆன
சுத்த சுகக்கடலுள் தோயுநாள் எந்நாளோ? (2)

அண்டர்அண்ட கோடி அனைத்தும் உகாந்தவெள்ளம்
கொண்டதுஎனப் பேரின்பம் கூடுநாள் எந்நாளோ? (5)

மண்ணூடு உழன்ற மயக்கம்எல்லாம் தீர்ந்திடவும்
விண்ணூடு எழுந்தசுகம் மேவுநாள் எந்நாளே? (11)

சாட்டைஇலாப் பம்பரம்போல் ஆடும் சடசால
நாட்டம்அற எந்தைசுத்த ஞானவெளி காண்பேனோ? (12)

பஞ்சாய்ப் பறக்கும்நெஞ்சப் பாவியைநீ கூவிஐயா
'அஞ்சாதே' என்றுஇன் னருள்செயவும் காண்பேனோ? (21)

வாக்கால் மனத்தால் மதிப்புஅரியாய் நின்அருளை
நோக்காமல் நோக்கிநிற்கும் நுண்ணறிவு காண்பேனோ? (26)

சட்டைஒத்த இவ்வுடலைத் தள்ளுமுன்னே நான்சகச
நிட்டையைப் பெற்றுஐயா நிருவிகற்பம் காண்பேனோ? (32)

அண்டபகி ரண்டம் அனைத்தும் ஒருபடித்தாக்
கண்டவர்கள் கண்டதிருக் காட்சியையும் காண்பேனோ?
(34)

*(5) ஆகாதோ என்கண்ணி (47)5*

என்னை அறிய எனக்குஅறிவாய் நின்றுஅருள்நின்
தன்னைஅறிந்து இன்பநலம் சாரவைத்தால் ஆகாதோ?
(2)

என்அறிவுக்கு உள்ளே இருந்ததுபோல் ஐயாவே
நின்அறிவுள் நின்னுடன்யான் நிற்கவைத்தால்ஆகாதோ?
(10)

ஆசைச் சுழல்கடலில் ஆழாமல் ஐயாநின்
நேசப் புணைத்தாள் நிறுத்தினால் ஆகாதோ? (12)

விண்ஆரக் கண்ட விழிபோல் பரஞ்சோதி
கண்ஆர நின்நிறைவைக் காணவைத்தால் ஆகாதோ?
(16)

கண்ணாடி போலஎல்லாம் காட்டும் திருவருளை
உள்நாடி ஐயா உருகவைத்தால் ஆகாதோ? (18)

5. இத்தலைப்பில் 21 கண்ணிகள் உள்ளன.

*6. இல்லையோ கண்ணி (48)*[6]

ஏதும் தெரியாது எனைமறைத்த வல்இருளை
நாதநீ நீக்கஒரு ஞானவிளக்கு இல்லையோ? (1)

நாய்க்கும் கடையானேன் நாதாநின் இன்பமயம்
வாய்க்கும் படிஇனிஓர் மந்திரம்தான் இல்லையோ? (4)

*(7) ஆனந்தக்களிப்பு (56)*[7]

இது சிந்துப்பாடல் வகையுள் ஒன்றாக அமைகின்றது.

*சங்கர சங்கர சம்பு—சிவ,*
*சங்கர சங்கர சங்கர சம்பு.*

ஆதி ஆநாதியும் ஆகி—எனக்கு
ஆனந்த மாய்அறி வாய்நின்று இலங்கும்
சோதி மவுனியாய்த் தோன்றி—அவன்
சொல்லாத வார்த்தையைச் சொன்னாண்டி தோழி
சங்கர—1

சொன்னசொல் எதுஎன்று சொல்வேன்—என்னைச்
சூதாய்த் தனிக்கவே சும்மா இருத்தி
முன்னிலை ஏதும்இல் லாதே—சுகம்
முற்றச்செய் தேஎனைப் பற்றிக்கொண் டாண்டி
—சங்கர—2

பேசா இடும்பைகள் பேசிச்—சுத்தப்
பேய்அங்கம் ஆகிப் பிதற்றித் திரிந்தேன்
ஆசா பிசாசைத் துரத்தி—ஐயன்
அடியிணைக் கீழே அடக்கிக்கொண் டாண்டி
—சங்கர—4

6. இதில் 6 கண்ணிகளே அடக்கம்.
7. இத்தலைப்பில் 30 பாடல்கள் உள்ளன.

உள்ளதும் இல்லது மாய்முன்—உற்ற
உணர்வது வாய்உன் உளங்கண்டது எல்லாம்
தள்ளனச் சொல்லிஎன் ஐயன்—என்னைத்
தான்ஆக்கிக் கொண்ட சமர்த்தைப்பார் தோழி
—சங்கர—8

அருளால் எவையும்பார் என்றான்—அத்தை
அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்
இருள்ஆன பொருள்கண்டது அல்லால்—கண்ட
என்னையும் கண்டிலன் என்னேடி தோழி
—சங்கர—13

விளையும் சிவானந்த பூமி—அந்த
வெட்ட வெளிநண்ணித் துட்ட இருள்ஆம்
களையைக் களைந்துபின் பார்த்தேன்—ஐயன்
களைஅன்றி வேறுஒன்றும் கண்டிலன் தோழி
—சங்கர—15

***பாடல்களின் இயல்புகள்:*** *அடிகளார் இருமொழிப் புலமை மிக்கவராதலால் ஏராளமான வடமொழித் தொடர்களும் வடநூற்கருத்துகளும் இவர் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. அருளாளர்களான* ***மாணிக்க வாசகர், திருமூலர்,*** *போன்றவர்களின் கருத்துகளும் சொற்றொடர்களும் இவர்தம் அருளிச்செயல்களில் தலை காட்டுகின்றன. மக்கள் அன்றாட வாழ்வில் அடிபடும் பழமொழிகளும் உவமைத் தொடர்களும் ஆங்காங்கு வரவிநிற்கின்றன.*

*கவிதையைக் கனிவித்துச் செழுமையடையச் செய்வது அதில் பொதிந்துள்ள கற்பனை. இச்சீரிய பண்பு அடிகளாரின் பாடல்களின் ஆங்காங்கு அமைந்துள்ளன. ஒன்றை நினைவு கூரலாம். உடல் ஒரு காடு. அக்காட்டில் வாழும் ஐம்புலன்களாகிய வேடுவர்கள் பொறிகளாகிய ஐந்து வழிகளில் வந்து நின்றுகொண்டு உயிர் என்னும் வழிப்*

போக்களை இழுத்துக் கொடிய காமமாகிய தீயிலே சுட்டு உயிருடன் தின்கின்றனர்.

வாயில்ஓர் ஐந்தில் புலன்எனும் வேடர்
வந்துஎனை ஈர்த்துவெம் காமத்
தீயிலே வெதுப்பி உயிரொடும் தின்னச்
சிந்தைநைந் துருகிமெய்ம் மறந்து
தாயிலாச் சேய்போல் அலைந்ததுஅலைப் பட்டேன்
—சிவன்செயல்—5

என்ற பகுதியில் இதனைக் காணலாம்.

கருத்துகளைத் தெளிவாக்குவதற்குக் கவிஞர்கட்குக் கைகொடுத்துதவுவது **'உவமை'**. இதன் நயத்தை நூலெங்கும் காணலாம். சமயத்தொடர்பான கருத்துகளை விளக்குவ தற்கு இது பெரிதும் பயன்படுவதைப் பாடல்களில் கண்டு மகிழலாம். மனம் கட்டுக்கடங்காதது. அதனை அருளாளர் கள் குரங்கோடு ஒப்பிடுவர். அடிகள் அதனைக் குரங்கு, யானை, வண்ணான், பஞ்சு, காற்றாடி, போன்றவற்றுடன் ஒப்புமை கூறி விளக்குவர். தத்துவக் கருத்துகள் இவர்தம் பாடல்களில் இழையோடுகின்றன. வேதாந்தத்தையும் சித் தாந்தத்தையும் இணைத்துக் கூறுவது இவர்தம் தனிச்சிறப்பு.

தமிழ்ச் சமயவரலாற்றில் தாயுமானஅடிகள் ஒரு திருப்புமுனை. சன்மார்க்கத்திற்கு வீரியவிதையிட்ட வித்தகர். அது பின்னாளில் அருட்பிரகாச வள்ளலார் வாயிலாக சுத்தசமரச சன்மார்க்கமாகச் செழித்தோங்கியது. சமய இலக்கிய வரலாற்றில் பக்திமணம் பரப்பும் சான்றோர்களில் நால்வருக்கு அடுத்து நிற்பவர் அடிகளார். இவர்தம் பாடல்கள் பக்தி இயக்கப் பெருவழியில் பல மைல்கற்கள். தமிழர் வழிபாட்டு நெறியில் பக்தியும் ஞான மும் வைராக்கியமும் இணைந்து கைகோத்துச் செல்லும் பெருவழியாகத் திகழ்கின்றன. இறைஉணர்வுப் பெருவழிக் கோர் கலங்கரை விளக்கமாகவும் அமைகின்றன.

## 2. இராமலிங்க அடிகள் (1823–74)[1]

*(1)* ***வரலாறு:*** *தமிழ்நாட்டில் தென்னார்க்காடு மாவட்டம் சிதம்பரம் வட்டம் சிதம்பரத்துக்கு வடமேற்கே பத்துக்கல் தொலைவிலுள்ள மருதூர் இவர்தம் பிறப்பிடம். தந்தையார்* ***இராமையாபிள்ளை;*** *அன்னையார்* ***சின்னம்மாள். சமயம்****-சைவம்;* ***குலம்****-வேளாண்குலம்;* ***மரபு****-கருணீகர் மரபு. தந்தையார் கிராமக்கணக்கர். சிறார்கட்குப் பாடம் சொல்லும் கணக்காயராகவும் விளங்கினார். சின்னம்மையார் செங்கற்பட்டு மாவட்டம் பொன்னேரிக்கு அருகிலுள்ள சின்னகாவணத் தில் பிறந்து வளர்ந்தவர். இராமையபிள்ளைக்கு ஆறாவது மனைவியாக வாழ்க்கைப்பட்டவர். ஐவரும் மகப்பேறின்றி ஒருவர்பின் ஒருவராக மரிக்கவே இராமையபிள்ளை இவரை ஆறாவ தாக மணம் முடித்தார். இவர்கட்குச் சபாபதி, பரசுராமன் என்ற இரு ஆண்மக்களும் உண்ணாமுலை, சுந்தரம் என்ற இரு பெண்மக்களும் பிறந்தனர்.*

*கி.பி. 1823இல் அக்டோபர் 5 மாலை 5.30 மணி அளவில் பெற்றோருக்கு ஐந்தாவது பிள்ளையாக அடிகள் பிறந்தார் கள். பெற்றோர் இட்ட பிள்ளைத்திருநாமம்* ***இராமலிங்கம்*** *என்பது. இராமையப்பிள்ளை மனைவி மக்களுடன்*

1. அடிகள் தம்மை 'இராமலிங்க சுவாமிகள்' என வழங்காமை வேண்டுமெனத் தடுத்துவிட்டனர். இதனால் வேறு செய்வதறியாது எங்ஙனம் பெருமானைச் சிறப்பித்து வழங்குவது எனச் சிந்தித்து இறுதியாக 'திருவருட் பிரகாச வள்ளலார்' என்னும் 'இராமலிங்கம் பிள்ளை' என்று வழங்கத் தொடங்கினர். இதனை நூலில் கண்ணுற்ற அடிகள் வருந்தினார். பின்னர் ஒருவாறு சமாதானப்பட்டுத் 'திருவருட் பிரகாசவள்ளல் ஆர்?' என்று கேட்கிற இராமலிங்கம் என்று வைத்துக் கொள்ள வேண்டுமோ?" என்றருளினாராம்.

சிதம்பரம் சென்று நடராசப்பெருமானை வழிபட்டார். அப்போது இராமலிங்கத்தின் வயது ஐந்து திங்கள். ஆடலரசனை வழிபட்டபின், சிதம்பர இரகசிய தரிசனத்துக்கு வந்தபோது பிள்ளைப் பெருமான் (கைக்குழந்தை) அன்னையாரின் திருக்கையிலிருந்தார். தீட்சிதர் திரையை விலக்கச் சிதம்பர இரகசியம் தரிசனமாயிற்று. கைக் குழந்தையாகிய அடிகட்கும் தரிசனமாயிற்று. இறைவன் இரகசியத்தை குழந்தையாக இருந்த அடிகட்குக் காட்டியருளினான். இதனை அடிகளே,

தாய்முதலோ ரொடுசிறிய பருவமதில் தில்லைத்
தலத்திடையே திரைதூக்கத் தரிசித்த போது
வேய்வகைமேல் காட்டாதே என்றனக்கே எல்லாம்
வெளியாகக் காட்டியஎன் மெல்உறவாம் பொருளே[2]

என்று தம்திருவாக்காகக் குறிப்பிட்டருளியுள்ளார். இங்ஙனம் அடிகள் ஓராண்டுப் பருவத்தில் பூர்வஞான சிதம்பரமாகிய தில்லையில் ஒரு திரை தூக்கத் தாம் வெளியாகக் கண்ட அநுபவப் பொருளையே தமது நாற்பத்தொன்பதாவது அகவையில் உத்தரஞான சிதம்பரமாகிய வடலூரில் சத்தியஞான சபையில், எழுதிரை நீக்கி ஒளியாகக் காட்டியருளினார்.

அடிகளின் எட்டாம் திங்களில் தந்தை இறந்தார். சின்னம்மையார் பிள்ளைகளுடன் தாம் பிறந்த பொன்னேரிக்குச் சென்றார். சிலகாலம் அங்குத் தங்கிப் பின்னர் சென்னைக்குக் குடிபெயர்ந்தார். மூத்த பிள்ளையாகிய **சபாபதி பிள்ளை** காஞ்சி மகாவித்துவான் சபாபதி முதலியாரிடம் பயின்று புராணச் சொற்பொழி வாற்றுவதில் புகழ் பெற்றார். அந்த வருவாயினால் குடும்பம் நடைபெற்றது.

---

2. ஆறா. திரு. அருள்விளக்க மாலை-44.

*இளமையில்:* முருகப் பெருமானை வழிபடு கடவுளாக வும், ஞானசம்பந்தரை வழபடுகுருவாகவும் திருவாசகத்தை வழிபடுநூலாகவும் கொண்டார்கள் அடிகள்.

*கல்வி:* தமையனார் சபாபதிப்பிள்ளை கல்வியைத் தொடங்கி வைத்தார். தம் ஆசிரியர் காஞ்சி **சபாபதி முதலியாரிடம்** கல்விகற்க அனுப்பிவைத்தார். இராமலிங்க ரின் அறிவுத்திறத்தையும் பக்குவநிலையையும் கந்தகோட் டஞ்சென்று கவிபாடித் துதித்தலையும் கண்ட முதலியார் தாம் கற்பிப்பதைக் கைவிட்டார்.

*ஓதாது உணர்தல்:* அடிகள் எப்பள்ளியிலும் பயின்ற தில்லை. எவ்வாசிரியரிடமும் கற்றாரிலர். கற்கவேண்டிய வற்றை இறைவனிடம் கற்றார். கேட்கவேண்டியவற்றை இறைவனிடமே கேட்டார். இவற்றை அவர்தம் வாக்குகளே அகச்சான்றுகளாக அமைகின்றன.

கற்றதுநின் னிடத்தேபின் கேட்டதுநின் னிடத்தே
கண்டதுநின்னிடத்தேஉட் கொண்டதுநின் னிடத்தே
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
பெரியதவம் புரிந்தேன்என் பெற்றிஅதி சயமே[3]

ான்றும்,

ஓதா துணர உணர்த்திஉள் ளேநின் றுளவுசொன்ன
நீதா நினைமறந் தென்நினைக் கேன்இந்த நீணிலத்தே[4]

என்றும்,

ஓதுமறை முதற்கலைகள் ஓதாமல் உணர
உணர்விலிருந் துணர்த்தி அருள் உண்மைநிலை காட்டி[5]

என்றும் வருதலாலும் பிறவற்றாலும் தெளியலாம்.

---

3. ஐந். திரு.அன்பு மாலை-16.
4. நான். திரு.தனித்திருவிருத்தம்-47

*இளமையில் பாடுதல்:* வீதியில் விளையாடித் திரியும் சிறுபிள்ளைப் பருவத்திலேயே அடிகள் அருட்பாடல் களைப் பாடும் திறம் பெற்றிருந்தார்கள்.

உருவத்தி லேசிறியேனாகி
யூகத்தி லொன்று மின்றித்
தெருவத்தி லேசிறு கல்வீசி
யாடிடச் சென்றஅந்தப்
பருவத்தி லேநல் அறிவளித்
தேஉனைப் பாடச்செய்தாய்[6]

என்பதனாலும்,

பாடும்வகை அணுத்துணையும் பரிந்தறியாச் சிறிய
பருவத்தே அணிந்தணிந்து பாடும்வகை புரிந்து[7]

என்பதனாலும் பிறவற்றாலும் இதனை அறியலாம்.

*அடிகளின் வரலாறு:* இதனைச் சன்மார்க்கதேசிகன் எனும் ஊரன் அடிகள் (1) சென்னை வாழ்க்கை (2) வடலூர் வாழ்க்கை என்ற இருபெரும் பிரிவுகளாகப்பிரித்துப் பேசுவர்.

சென்னை வாழ்க்கை கந்தகே ட்டப் பகுதியில் (1823–1835) அடங்கும். இப்போது அடிகளின் அகவை (1–12). திருவொற்றியூர்ப் பகுதியில் வாழ்வு (1835–1858) அடங்கும். அப்போது அடிகளின்அகவை (12–35). இக்காலத்தில். திருமுறைகள் 1, 2, 3, 5 பாடப்பெற்றன.[8]

5. ஐந். திரு. அன்புமாலை–25
6. மூன். திரு–திருவருள்முறையீடு–48.
7. ஐந்.திரு. அன்பு மாலை–14.
8. திருத்தணிகைப் பகுதிக்குத் தனி இடம் இல்லை. அது கந்த கோட்டப்பகுதி திருஒற்றியூர்ப் பகுதிகளுள் அடங்கும்.

*வடலூர் வாழ்க்கை (1) பூர்வஞான சிதம்பரப்பகுதியில் (1858–1864) அடங்கும். அப்போது அடிகளின் வயது (35–44) (2) உத்தரஞானசிதம்பரம் பகுதியில் (1867–1870) அடங்கும். அப்போது அடிகளின் அகவை (44–47) (37 சித்திவளாகப் பகுதியில் (1870–1874) அடங்கும். அப்போது அடிகளின் அகவை(47–51)*

***(1) சென்னை வாழ்க்கை (1823–1858)***

***(அ) கந்த கோட்ட வழிபாடு:*** *பிள்ளைப் பருவத்தில் ஊர் சுற்றித் திரிந்த அடிகள் நாடோறும் கந்தகோட்டத்திற் குச் சென்று வழிபடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.* ***'தெய்வமணிமாலை'****யும்* ***'கந்தர்சரணப்பத்தும்'*** *முதன் முதலில் அடிகளால் பாடப்பெற்றன. அடிகளால் இவை பாடப்பெற்ற பின்னரே 'அது பொன் னும் மணியும் நவமணியும் கொழிக்கும் தெய்வத்திருக் கோட்டமாகத் திகழ்கின்றது'* ***'கந்தசாமி கோயில்'*** *என்று வழங்கப்பெற்ற தலம்* ***'கந்தக்கோட்டம்'*** *என வழங்கத் தொடங்கியவர் அடிகளே.*

***(ஆ) கண்ணாடியில் முருகன் காட்சி:*** *அண்ணியார் கண்ணீர் வடிக்கக் கண்ட அடிகள் வீடுதங்கிப் படிப்பதாக உறுதிகூற அவர்விருப்பப்படி மேல்மாடியில் ஒதுக்கப் பெற்ற அறையொன்றில் கைநிறைய நூல்களோடும் பூசைப் பொருள்களோடும் புகுந்தார். உண்ணும்காலம் தவிர அறைக்கதவை மூடிக்கொண்டு முருக உபாசனையில் மூழ்கினார். உறக்கமும் அங்குத்தான். ஒருநாள் சுவரிலிருந்த கண்ணாடியில் தணிகைமுருகன் தோன்றிக் காட்சியளித் தான்.*

சீர்கொண்ட தெய்வ வதனங்கள்
  ஆறும் திகழ்கடப்பந்
தார்கொண்ட பன்னிரு தோள்களும்
  தாமரைத் தாள்களும்ஓர்

கூர்கொண்ட வேலும் மயிலும்நற்
 கோழிக் கொடியும்அருட்
கார்கொண்ட வண்மைத் தணிகா
 சலமும்என் கண்ணுற்றதே![9]

*என்ற பாடல்தான் அக்காட்சியைக் குறிப்பதாகும்.*

***(இ) இறைவனால் ஆட்கொள்ளப் பெறுதல்:*** *ஒன்ப தாம் அகவையில் இது நிகழ்ந்தது.*

என்னை—
ஆண்டாறு மூன்றாண்டில் ஆண்டு கொண்ட
 அருட்கடலே என்உள்ளத் தமர்ந்ததேவே[10]

*என்பதும்,*

ஆறோடு மூன்று—
ஆண்டா வதிலே முன்னென்னை
 ஆண்டாய் கருணை அளித்தருளே[11]

*என்பதும் இதற்கு அகச்சான்றுகளாக அமைகின்றன. மேலும் பல பாடல்கள் அடிகளை இறைவன் சிறுபரு வத்தே ஆட்கொண்டருளினான்என்பதற்குச் சான்றுகளாக நிற்கின்றன.*

***(ஈ) ஞானவாழ்க்கை:*** *பன்னிரண்டாம் அகவையில் அடிகளின் ஞானவாழ்க்கை தொடங்குகிறது.*

பன்னிரண்டாண்டு தொடங்கிநான் இன்றைப்
 பகல்வரை அடைந்தவை எல்லாம்[12]

*என்பதும்,*

9. முத். திரு. திருத்தணிகைப் பதிகங்கள். பிரார்த்தனை மாலை-1.
10. நான். திரு. அடிமைப் பதிகம்-3
11. ஆறா. திரு. வாதனை கழிவு-7
12. ஆறா.திரு. பிள்ளைப்பெருவிண்ணப்பம்-126.

பன்னிரண் டாண்டு தொடங்கி இற்றைப் பகலின் வரையுமே
படியில் பட்ட பாட்டை நினைக்கில் மலையும் கரையுமே[13]

என்பதும் இதற்குச்சான்றுகளாக அமைகின்றன.

**(உ) ஒற்றியூர் வழிபாடு:** நாள்தோறும் ஒற்றியூர் சென்று தியாகப்பெருமானையும் வடிவுடை அம்மையையும் வழிபட்டு வந்தவர். இருபத்துமூன்றாண்டுக் காலம் இவ்வழி பாடு தொடர்ந்து நடைபெற்றது. இக்காலத்தில் **'வடிவுடை மாணிக்கமாலை' 'இங்கிதமாலை'** இரண்டாம் திரு முறையில் பெரும்பகுதியும் தோன்றியவை. திருத்தணிகை, திருமுல்லைவாயில் பற்றிய பாடல்களும் இக்காலத்தில் எழுந்தவை.

**(ஊ) திருமணம்:** மூவாசைகளையும் பிள்ளைப்பருவத் திலேயே முற்றத் துறந்த அடிகள் இல்வாழ்வை விரும்ப வில்லை. பாலுண் பருவத்திலேயே இல்வாழ்வில் தமக்கு அருவருப்பு உண்டெனஅடிகள் கூறுவர். **'இதில் அருவருப் பால் உணும் காலையே உளதால்'**'14 என்பது காண்க. உற்றார் வற்புறுத்தலும் ஊழ்வலியும் திருமணத்திற்கு அடிகளை இசையச்செய்தன. தமக்கை உண்ணாமுலை அம்மையாரின் மகள் **தனம்மாள்** மனைவியானார். தொட்டுத்தாலி கட்டினார்களேயன்றி இல்வாழ்வில் ஈடுபட்டார்களல்லர்.

முனித்தவெவ் வினையோ நின்னருட் செயலோ
தெளிந்திலேன் மோகமே லின்றித்
தனித்தனி ஒருசார் மடந்தையர் தமக்குள்
ஒருத்தியைக் கைதொடச் சாந்தே

13. மேலது-மெய்யருள் வியப்பு-78.
14. ஆறா. திரு. பிள்ளைச் சிறுவிண்ணப்பம்-7

குனித்தமற் றவரைத் தொட்டனன் அன்றிக்
கலப்பிலேன்[15]

என்பது அடிகளின் திருவாக்கு.

*(எ) **வித்துவானாக விளங்குதல்:*** கந்தகோட்டத்தையும் திருத்தணிகையையும் திருவொற்றியூரையும் பாடிப்பரவி அருட்கவிஞராக விளங்கி அடிகள் சென்னையில் சிறந்த வித்துவானாகவும் திகழ்ந்தார்கள்.

*(ஏ) **பாடஞ்சொல்லல்:*** தொழுவூர் வேலாயுத முதலியார், இறுக்கம் இரத்தினமுதலியார், பொன்னேரி சுந்தரம் பிள்ளை, காயாறு ஞானசுந்தர அய்யர், பண்டார ஆறுமுக ஐயா ஆகியோர் அடிகளிடம் பாடம் கேட்கும் பேறு பெற்றனர். இவர்களுள்தொழுவூர் வேலாயுத முதலியார் அடிகள் சித்திபெற்றபின்(1874) சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றினார். இறுக்கம் இரத்தினமுதலியார் பள்ளியாசிரியரானார். வீராசாமி முதலியார் சில இலக்கண நூல்களைப் பதிப்பித்தார். சுந்தரம்பிள்ளை புராணச் சொற்பொழிவாற்றுவதில் வல்லவராகத் திகழ்ந்தார். பாடஞ்சொல்லிப் போதகாசிரியராக விளங்கிய அடிகள் சிறுவர்களைச் சேர்த்தும் நீதிநூல்களைப் பயிற்றுவித்தார்கள். இதனை,

தொகுப்புறு சிறுவர் பயிலுங்கால் பயிற்றும்
தொழிலிலே வந்தகோ பத்தில்
சகிப்பிலா மையினால் அடித்தனன் அடித்த
தருணம்தான் கலங்கிய கலக்கம்
வகுப்புற நினது திருவுளம் அறியும்
மற்றும்சில் உயிர்களின் கோபம்
மிகப்புகுந் தடித்துப் பட்டபா டெல்லாம்
மெய்யநீ அறிந்ததே அன்றோ[16]

15. மேலது. பி. பெருவிண்ணப்பம்-43.
16. ஆறா. திரு. ப.பெ. வி. 36.

*என்ற அடிகளின் திருப்பாடலால் அறியலாம்.*

***(ஐ) பதிப்பாசிரியராதல்:*** *அடிகள் ஒழிவிலொடுககம், தொண்டமண்டல சதகம், சின்மயதீபிகை ஆகிய மூன்று நூல்களையும் பதிப்பித்தருளினார்கள்.*

***(ஒ) நூல்கள் இயற்றல்:*** *உரைநடைநூல் அருகித் தோன்றிய அக்காலத்தில்* **'மனுமுறை கண்டவாசகம், 'சீவ காருண்ய ஒழுக்கம்'** *ஆகிய இரண்டையும் அருளினார்கள். முன்னது அவர் காலத்திலேயே (1814) வெளியாயிற்று. பின்னது அடிகள் சித்திபெற்றபின் அச்சேறிற்று.*

***(ஓ) சாற்றுக் கவிகள் அருளல்:*** *பலர் இதைப் பெரும் பேறு போல் பெற்றனர். முத்து கிருட்டிண பிரமம் எழுதிய* **நிட்டாநுபூதி உரைக்கும்,** *மதுரை ஆதீனம் சிதம்பரசுவாமிகள் பதிப்பித்த* **சிதம்பர புராணப்** *பதிப்பிற்கும், மாயூரம் வேதநாயகப் பிள்ளையின்* **நீதிநூலுக்கும்** *அடிகள் சாற்று கவிகள் அருளியுள்ளார்கள்.*

***(2) கருங்குழி வாழ்க்கை: (1858-1867):***

*ஆரவாரம் நிறைந்த சென்னையில் வாழ்வதையும் குடும்பத்தினரோடு வீட்டில் இருப்பதையும் அடிகள் விரும்பவில்லை.*

> கேட்டிலே மிகுந்த சென்னையில் இருந்தால்
> சிலுகுறும் என்னுளம் பயந்தே
> நாட்டிலே சிறிய ஊர்ப்புறங் களிலே
> நண்ணினேன்[17]

*என்பதனால் இதனைஅறியலாம். 1857-இல் ஒருநாள் சென்னை வாழ்வைத் துறந்தார்கள். தில்லையில் அடிகளைக் காண நேர்ந்த கருங்குழி மணியக்காரர்* **வேங்கடரெட்டியார்** *தம்மூருக்கு வருமாறு, அடிகளை*

17. ஆறா. திரு. பி. பெ. வி-58.

*வேண்ட, அடிகளும் கருங்குழியில் அவர் இல்லத்திலேயே தங்கினார்கள்.(1858-1867). 1867-இல் தருமசாலையை வடலூரில் ஏற்படுத்தும்வரை கருங்குழி அடிகளின் உறைவிடமாயிற்று. வள்ளலார் வாழ்வில்* **ரெட்டியார்களின் தொண்டு** *கணிசமானது.*[18] *கருங்குழியில் வாழ்ந்த போது அடிகள் அடிக்கடி சிதம்பரம் சென்று வழிபடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள். கருங்குழியில் வழிபட்ட காலத்தைச்* **'சிதம்பரவழிபாட்டுக் காலம்'** *எனலாம். நான்காம் திருமுறை (வரலாற்று முறையில்) ஐந்தாம் திருமுறையும் ஆறாம் திருமுறையின் முற்பகுதிப் பதிகங்களும் இக்காலத்தில் பாடப்பெற்றவை.*

*(i)* **நீரால் விளக்கெரிந்தது:** *கருங்குழிவீட்டின் அறையில் ஒருநாள் இரவு அடிகள் எழுதிக் கொண்டிருந்த போது விளக்கு மங்கியது. எண்ணெய் செம்பென மயங்கி அடிகள் தண்ணீர் செம்பை எடுத்து விளக்கில் வார்க்க, அஃது இரவு முழுவதும் நன்கு எரிந்தது. இவ்வரலாற்றை அடிகளே ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்கள்.*

மெய்விளக்கே விளக்கல்லால் வேறுவிளக்
  கில்லைஎன்றார் மேலோர் நானும்
பொய்விளக்கே விளக்கெனஉட் பொங்கிவழி
  கின்றோர்ஓர் புதுமை அன்றே
செய்விளக்கும் புகழுடைய சென்னிநகர்
  நண்பர்களே செப்பக்கேளீர்
நெய்விளக்கே போன்றொருதண் ணீர் விளக்கும்
  எரிந்தசந் நிதியின் முன்னே[19]

*என்ற திருப்பாடலில் இதனைக் கண்டுமகிழலாம்.*

18. 'வள்ளலார் பணியில் ரெட்டியார்கள்' (அருள்வடிவேலன் பதிப்பகம், முருகேச நகர், வண்டிபாளையம் அஞ்சல் கடலூர்-607 004) காண்க.
19. நான். திரு. அருள் நிலை விளக்கம்-1.

(ii) ***சத்திய சமரச சன்மார்க்க சங்கம் (1865):*** *அடிகள் இப்பெயரில் ஒரு நெறியை ஏற்படுத்தினார்கள். இதன்படி, கடவுள் ஒருவரே; அவரை உண்மை அன்பால் ஒளி வடிவில் (ஜோதி) வழிபடவேண்டும். சிறுதெய்வ வழிபாடு கூடாது; அத்தெய்வங்களின் பெயரால் உயிர்ப்பலி கூடாது. புலால் உண்ணலாகாது. சாதி சமய முதலிய எவ்வகை வேறுபாடும் கூடாது. எவ்வுயிரையும் தம் உயிர்போல் எண்ணும் ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமையைக் கைக் கொள்ள வேண்டும். ஏழைகளின் பசிதீர்த்தலாகிய சீவ காருண்ய ஒழுக்கமே பேரின்ப வீட்டின் திறவுகோல். புராணங்களும் சாத்திரங்களும் முடிவான உண்மையைத் தெரிவிக்கமாட்டா. இறந்தவரைப் புதைக்க வேண்டும்; எரிக்கக்கூடாது. கருமாதி, திதி முதலிய சடங்குகள் செய்ய வேண்டா. இவையே அடிகளின் சன்மார்க்கக் கொள்கை கள். இவற்றைப் பின்பற்றவும் பரப்பவும் 'சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்' என்ற பெயரில் ஒரு சங்கம் 1865 இல் அடிகளால் நிறுவப்பெற்றது.*

(iii) ***சத்திய தருமசாலை:*** *அடிகளின் கொள்கைகளில் தலையாயது சீவகாருண்யம். சீவகாருண்யத்தை அடிகள் இருவகையாக வற்புறுத்துவர்: (அ)* ***புலால் மறுத்தல்*** *(ஆ)* ***அற்றார் அழிபசிதீர்த்தல்****. இரண்டாவதாகக் குறிப் பிடப்பெற்ற பேரறத்தை நடத்துவதற்காக 23–5–1867 இல் வடலூரில்* ***சத்தியதருமாசாலையை*** *அடிகள் நிறுவினார் கள். சாலையை நிறுவியபின் அதனையே உறைவிடமாகக் கொண்டார்கள் 1870–ஆம் ஆண்டு வரை சாலையிலேயே உறைந்தார்கள்.*

### *3. சித்திவளாக வாழ்க்கை (1870–1874)*

(i) *நாளடைவில் தரும சாலையில் கூட்டம் பெருகியது. அடிகள் தனித்துறையக் கருதினார்கள். வடலூருக்குத் தெற்கே இரண்டுகல் தொலைவில் மேட்டுப்பாக்கத்திற்குச்*

சென்று அங்கே உறையத் தொடங்கினார்கள். அடிகள் உறைந்த இடம்-திருமாளிகை-**சித்திவளாகம்** என்பது. இஃது அடிகளே இட்ட பெயர். சித்தியை (வீடுபேற்றைத்) தரும் இடம் என்பது இதன் பொருள். 1870 முதல் 1874இல் சித்தி பெறும்வரை இங்கேயே உறைந்தார்கள். இத்திரு மாளிகையிலேயே சித்தியும் பெற்றார்கள்.

(ii) **சத்திய ஞானசபை:** கடவுளை ஒளி (அருட் பெருஞ்சோதி) வடிவிற்கண்ட அடிகள் ஒளிவழிபாட்டிற் கென வடலூரில் சத்திய ஞானசபையை நிறுவினார்கள். 1871 (பிரசோற்பத்தி) ஆண்டில் சபை கட்டத் தொடக்கம் செய்யப்பெற்றது. அது 25-1-1872 பிரசோத்பத்தி தைத்திங்கள் 13 நாள்வெள்ளி பூசநாளில் நிறைவு பெற்று அன்று முதல் சபையில் வழிபாடு தொடங்கி நடைபெற்றது. அனைவரும், **'அருட்பெருஞ்சோதி தரிசனத்தை'**க்கண்டு களித்தனர். சத்திய ஞானசபையை **'இயற்கை விளக்கம்'** என்பர் அடிகள்.

அகத்தில் காண்டற்குரிய அநுபவத்தைப் புறத்தில் பாவனையாகக் காட்டுவதே சத்தியஞானசபை. அருட் பெருஞ்சோதியை மறைத்துக் கொண்டிருக்கும் வெவ்வேறு நிறமுள்ள ஏழு திரைகளும் தத்துவப் படலங்களே.[20] நம் மிடமுள்ள அஞ்ஞானமாகிய திரைகள் நீங்கப்பெற்றால் ஆன்ம ஒளியாகிய அருட்பெருஞ்சோதியைத் தரிசிக்கலாம் என்பது கருத்து. அகத்தே நாம் பெற்ற அருட்பெருஞ்சோதி அநுபவத்தையே புறத்தே சபையாகக் காட்டினர்.

திருந்தும் என் உள்ளத் திருக்கோயில் ஞான
சித்தி புரம்எனச் சத்தியம் கண்டேன்[21]

---

20. வெள்ளை ஒளியில் VIGBYOR என்ற ஏழு நிறங்கள் அடங்கி யிருப்பதாக மெய்ப்பித்துள்ளனர் அறிவியலறிஞர்கள். V-Violet; I-Indigo; G-Green; B-Blue; Y-Yellow; O-Orange; R-Red. இந்த ஏழுநிறப் படலங்களே மறைந்து நின்று அருட்பெருஞ் சோதியைக் காட்டுகின்றனவோ?
21. ஆறா. திரு. உண்மை கூறல்-7

சத்திய ஞான சபைஎன்னுள் கண்டனன்
சன்மார்க்க சித்தியை நான்பெற்றுக் கொண்டேன்[22]

என்பன பெருமானின் அருள்வாக்குகள்.

*(iii)* ***சன்மார்க்கக்கொடி:*** *முன்னைய ஞானிகள் எவரும் தம் கொள்கைக்குகந்த தனிக் கொடி கண்டதில்லை[23] அடிகள் ஒருவரே கொடி கண்டவர்கள்.* **'கொடிகட்டிக் கொண்டோம் என்று சின்னம்பிடி'**[24] *என்று பாடியவர் கள். இவர்கண்ட கொடிக்கு* ***'சன்மார்க்கக்கொடி'*** *என்றுபெயர். மஞ்சள், வெள்ளை ஆகிய இருநிறங்கொண்ட சன்மார்க்கக் கொடியை மேட்டுக் குப்பம் சித்திவளாகக் திருமாளிகையில் 22.10.1873 (சீமுக ஆண்டு ஐப்பசித் திங்கள் 7ஆம் நாள் புதன்கிழமை காலை 8 மணிக்கு) முதன்முதலா கக் கண்டு நீண்டதோர் உபதேசத்தையும் செய்தருளினார் கள். இந்த உபதேசம்* ***'மகா உபதேசம்', 'பேருபதேசம்'*** *என்ற திருநாமங்களால் வழங்குகின்றது.*

*(iv)* ***சித்தி அடைந்தது:*** *சன்மார்க்கத்தின் முடிவு சாகாதிருப்பதே. சாகாதிருப்பவனே சன்மார்க்கி என்பது அடிகளின் உபதேசம்.* ***"என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம் தானே"***[25] ***"துஞ்சாதநிலை ஒன்று சுத்த சன்மார்க்கச் சூழலில் உண்டது சொல்லவன்றே***[26] *என்பவை அடிகளின் திருவாய்மொழிகள். அடிகள் சுத்த தேகம், பிரணவ தேகம், ஞான தேகம் என்னும் மூவகை தேகசித்தியையும் பெற்றவர்கள், தேகசித்தி பெற்றார் உடம்புகள், நிலத்தில் விழா. அவை வெளியாய் அருளில்*

---

22. மேலது. அருள் அற்புதம்-4.
23. வைணவதரிசனத்திற்கு கருடக்கொடி உண்டு; சைவத்திற்கு நந்திக்கொடி (?) உண்டு.
24. ஆறா. திரு. சின்னம்பிடி-4.
25. ஆறா. திரு.மரணமிலாப் பெருவாழ்வு.
26. மேலது 21-26

*கலக்கும். அவர்கள் இறைவனோடு இரண்டறக் கலப்பர். அவர்களுக்கு இனிப்பிறப்பு இல்லை; பிறந்த பிறப்பாகிய இப்பிறப்பே இறுதிப் பிறப்பு. இப்பிறப்பில் பெற்ற இத்தேகமே இறுதித்தேகம். இனி ஒரு தேகம் எடுப்பதில்லை. இதுவே நித்தியதேகம். நித்தியதேகம் பெற்ற அடிகள் ஒரு தைப்பூசநாளில் சீமுக ஆண்டு தைத்திங்கள் 19ஆம் நாள் (30-1-1874) வெள்ளிக்கிழமை இரவு 15 நாழிகைக்கு (12 மணிக்கு) தமது திருவறைக்குள் நுழைந்து கதவைத் திருக்காப்பிட்டுக்கொண்டு இரண்டரை நாழிகை யில் இறைவனோடு இரண்டறக்கலந்தருளினார்கள்.*

என்சாமி என்துரை என்உயிர் நாயகனார்
இன்றுவந்து நான்இருக்கும் இடத்தில்அமர் கின்றார்
பின்சாரும் இரண்டரைநா ழிகைக்குள்ளே ஏது
பேர்உடம்பில் கலந்துளத்தே பிரியாமல் இருப்பார்
தன்சாதி உடையபெருந் தவத்தாலே நான்தான்
சாற்றுகின்றேன் அறிந்திதுதான் சத்தியம்சத் தியமே
மின்சாரும் இடைமடவாய் என்மொழிநின் தனக்கே
வெளியாகும் இரண்டரைநா ழிகைகடந்த போதே[27]

*2. **அருளிச் செயல்கள்:** திருஅருட்பாவில் 'திருமுறை' என்பது அதன் பகுதிக்குப் பெயராயிற்று. திருமுறைகளும் அவற்றின் பதிகளும் அவை பாடப்பெற்ற காலவரிசையில்– வரலாற்று முறையில்– வகுக்கவும் அடைவு செய்யப் பெற வும் இல்லை. பொருளமைதி கருதியும் வகுத்திருப்பதாகக் கூறுவதற்கில்லை. திருமுறைகளின் தொகை **ஆறு** என உள்ளத்தில் அமைத்துக்கொண்டு திருமுறைகள் வகுக்கப் பெற்றன.[28]*

27. ஆறா. திரு. சத்திய அறிவிப்பு-4.
28. திருவைந்தெழுத்தோடு ஓங்காரத்தைச் சேர்க்க 'ஓம் சிவாயநம' என ஓங்கார பஞ்சாக்கரத்தின் எழுத்து ஆறாகும். சமயங்கள் ஆறு. அத்துவா ஆறு - இவற்றை உட்கொண்டு திருமுறைகள் ஆறென வகுத்தார் வேலாயுதனார். (அடிகளின் மாணாக்கர்)

*இன்று பெருவழக்காகக் கிடைக்கும் திருஅருட்பா (சமரச சன்மார்க்க ஆராய்ச்சிநிலையம், வடலூர்-607303) வில் உள்ளபடி அமைப்பு வருமாறு:*

| திருமுறை | பதிகம் | பாடல் |
|---|---|---|
| முதல் | 52 | 570 |
| இரண்டாம் | 103 | 1388 |
| மூன்றாம் | 27 | 612 |
| நான்காம் | 41 | 458 |
| ஐந்தாம் | 12 | 238 |
| ஆறாம் | 144 | 2552 |
| | 379 | 5818 |

*இவற்றுள் பதிகப் பாடல்களில் சிலவற்றின் சிறப்பையும் நயத்தையும் காட்டுவோம்.*

## முதல் திருமுறை

*(1) **தெய்வமணிமாலை:** கந்தகோட்டத்து முருகப் பெருமான் மீது பாடியது. இது 31 பாடல்களைக்கொண்டது. முதற்பாடல் '**திருவோங்கு**' எனத்தொடங்குவது. வள்ளல் பெருமான் முதன்முதலாகப் பாடியது இம்மாலை. இதில் மிகப் பெருவழக்காக மக்கள் மனத்தில் நடனமிடும் பாடல் இது.*

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்;
உள்ஒன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவுகல வாமை வேண்டும்;

பெருமைபெரு நினதுபுகழ் பேசவேண்டும்;பொய்மை
பேசா திருக்கவேண்டும்.
பெருநெறி பிடித்தொழுக வேண்டும்;மத மானபேய்
பிடியா திருக்க வேண்டும்;

மருவுபெண் ஆசையை மறக்கவே வேண்டும்;உனை
மறவா திருக்கவேண்டும்;
மதிவேண்டும்; நின்கருணை நிதிவேண்டும்; நோயற்ற
வாழ்வில்நான் வாழவேண்டும்

தருமமிகு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே!
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே (8)

*பிள்ளைப் பெருமான் சிறுவயதில் எவ்வெற்றை இறைவனி டம் வேண்டினார் என்பது இதனால் போதரும்.*[29]

*(2) **கந்தர் சரவணப்பத்து:** இதில் பாடல்கள் **பத்து** அடங்கியுள்ளன.*

கோலக் குறமான் கணவா சரணம்
குலமா மணியே சரணம் சரணம்
சீலத் தவருக் கருள்வோய் சரணம்
சிவனார் புதல்வா சரணம் சரணம்
ஞாலத் துயர்தீர் நலனே சரணம்
நடுவாக்கியநல் ஒளியே சரணம்
காலன் தெறுவோய் சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம் (5)

*என்பது **ஐந்தாவது** பாடல்.*

***திருத்தணிகைப் பதிகங்கள்:** இவற்றில் 3 பிரார்த்தனை மாலை முதல் 52. தனித்திருத்தொகை இறுதியாக **ஐம்பது** பதிகங்கள் அடங்கும். இவற்றுடன் இத்திருமுறையும் நிறைவு பெறுகின்றது.*

---

29. கந்தகோட்டத்தைப் பற்றிப் பல பிரபந்தங்கள் தோன்றியிருப்பதும் வள்ளல்பெருமானின் அருட்பாக்களைத் தவிர, மற்றவை யாவும் பெருவழக்காகப் பயிலப் பெறவில்லை என்பதும் கண்கூடு.

*(3) பிரார்த்தனைமாலை: இது முப்பது பாடல்கள் அடங்கியவை.*

சீர்கொண்ட தெய்வ வதனங்கள்
ஆறும் திகழ்கடப்பந்
தார்கொண்ட பன்னிரு தோள்களும்
தாமரைத் தாள்களும்ஓர்
கூர்கொண்ட வேலும் மயிலும்நற்
கோழிக் கொடியும்அருட்
கார்கொண்ட வண்ணத் தணிகா
சலமும்என் கண்ணுற்றதே (1)

*(கண்ணுற்றதே-இஃது ஒருமைபன்மை மயக்கம்) 'தே'க்குப் பதிலாக 'வே' அமைந்தால் இஃது எற்படாது.*

*இது கண்ணாடிமுன் அடிகள் முருகனை வழிபட்ட போது அப்பெருமான் அவருக்குக் காட்சியளித்த நிலையில் பாடிய பாடல். முன்னையோர் எவரும் கண்ணாடியில் வழிபட்டதாக வரலாறு இல்லை. இஃது அடிகள் வரலாற்றில் ஒரு புதுமையான நிகழ்ச்சி.*

*(7) சீவசாட்சிமாலை: இஃது இருபத்தெட்டு பாடல்களைக் கொண்டது.*

உள்ளமனக் குரங்காட்டித் திரியும் என்றன்
உளவறிந்தோ ஐயா!நீ உன்னைப் போற்றார்
கள்ளமனக் குரங்குகளை ஆட்ட வைத்தாய்
கடையனேன் பொறுத்துமுடி கில்லேன் கண்டாய்
தெள்ளமுதப் பெருங்கடலே தேனே ஞானத்
தெளிவேஎன் தெய்வமே தேவர் கோவே
தள்ளரிய புகழ்தணிகை மணியே சீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே (21)

*இதில் ஒவ்வொரு பாடலில் இறுதியடி **'சீவசாட்சியாய் நிறைந்தருளும் சகசவாழ்வே'** என்று இறுவதைக் கண்டு மகிழலாம்*

*(9) **இரந்த விண்ணப்பம்:** இது தணிகைப் பெருமானை இரக்கும் பாங்கில் **பத்துப்** பாடல்களைக்கொண்டது.*

தேனும் தெள்ளிய அமுதமும்
கைக்குநின் திருவருள் தேன்உண்டே
யானும் நீயுமாய்க் கலந்துற
வாடும்நாள் எந்தநாள் அறியேனே
வானும் பூமியும் வழுத்திடும்
தணிகைமா மலைஅமர்ந் திடுதேவே
கோனும் தற்பர குருவுமாய்
விளங்கிய குமாரசற் குணக்குன்றே (7)

*என்பது **ஏழாவது** பாடல். முருகப் பெருமானுடன் நேரில் பேசுவது போல் அமைந்துள்ளது.*

*(14) **ஆறெழுத்துண்மை:** இதில் அடங்கியவை **பத்துப்** பாடல்கள்.*

துன்னும் மறையின் முடிவில்ஒளிர
தூய விளக்கே சுகப்பெருக்கே
அன்னை அனையாய் தணிகைமலை
அண்ணா உன்றன் ஆறெழுத்தை
உன்னி மனத்தில் உச்சரித்திங்
குயர்ந்த திருவெண் ணீறிட்டால்
சென்னி அணியாய் அடிசேரும்
தீமை ஒன்றும் சேராதே.

*என்பது **ஐந்தாம்** பாடல். ஆறெழுத்து **'முருகாய நம'** என்பது.*

*(18) **புன்மை நினைந்திரங்கல்:** இதில் உள்ளவை பத்துப் பாடல்கள்.*

கண்ணைக் காட்டி இருமுலை காட்டிமோ
கத்தைக் காட்டி அகத்தைக்கொண் டேஅழி

மண்ணைக் காட்டிடும் மாய வனிதைமார்
மாலைப் போக்கிநின் காலைப் பணிவனோ
பண்ணைக் காட்டி உருகும்அ டியார்தம்
பத்திக் காட்டிமுத் திப்பொருள் ஈதென
விண்ணைக் காட்டும் திருத்தணி காசல்
வேல னேஉமை யாள்அருள் பாலனே (8)

*என்பது **எட்டாவது** பாடல். அடிகள் மங்கையரைச் சாடுவது வருந்தத்தக்கது. அழகுடன் மங்கையர் படைப்பு இறைவனுடையது. வமிச விருத்திக்காக ஆணைக்கவரும் நோக்குடையது; வேறு தீய கருத்தால் அன்று. விட்டில் பூச்சிபோல் அதில் மயங்கி விழாமல் இருப்பது ஆணின் பொறுப்பு. கெடுப்பது ஆணே அன்றி பெண் அன்று. ஆண் தன்னை நொந்துகொள்ள வேண்டுமேயன்றி வனிதை யரைத் தூற்றுவது முறையன்று.*

*(19) **திருவடிசூட விழைதல்:** இதில் அடங்கிய பாடல்கள் **பத்து**.*

கல்லாக் கொடிய மடவார்தம்
காமக் குழிக்கண் வீழாமே
நல்லார்க் கெல்லாம் நல்லவநின்
நாமம் துதிக்கும் நலம்பெறவே
சொல்லாற் புனைந்த மாலையொடும்
தொழுது தணிகை தனைத்துதிக்க
வல்லார்க் கருளும் நின்திருத்தாள்
அடியேன் முடிமேல் வைப்பாயே (8)

*என்பது எட்டாவது பாடல் இங்ஙனம் வேண்டுவது தான் முறை.*

(26) ***முறையிட்ட பத்து:** இது **பத்துப்** பாடல்கள் அடங்கிய பதிகம்.*

வடியாக் கருணை வாரிதியாம்
வள்ளல் உன்தாள் மலர்மறந்தே

கொடியா ரிடம்போய்க் குறையிரந்தேன்
கொடியேன் இனிஓர் துணைகாணேன்
அடியார்க் கெளிய முக்கணுடை
அம்மான்அளித்த அருமருந்தே
முடியா முதன்மைப் பெரும்பொருளே
முறையோ முறையோ முறையேயோ. (10)

(28) ***ஆற்றாப் புலம்பல்:*** *இது ஐந்து பாடல்களைக் கொண்டது.*

பொன்பிணிக்கும் நெஞ்சப்
புலையேனை இவ்வுலகில்
வன்பிணிக்கோ பெற்று
வளர்த்தாய் அறிவேனே
என்பிணைத்தார் வள்ளற்
கினிமை பெறும்மணியே
அன்பிணைத்தோர் போற்றும்
அருட்டணிகை மன்னவனே (4)

*என்பது **நான்காம்** பாடல்.*

*(36)* ***அன்பிற் பேதுறல்:*** *இது பத்துப் பாடல்களைக் கொண்டது.*

பவம்எனும் கடற்குள் வீழ்ந்துழன் றேங்கும்
பாவியேன் தன்முகம் பார்த்திங்
கெவையும்நா டாமல் என்னடி நிழற்கீழ்
இருந்திடென் றுரைப்பதெந் நாளோ
சிவம்எனும் தருமக் கடல்அகத் தெழுந்த
தெள்ளிய அமுதமே தேனே
குவிமுலை வள்ளிக் கொடியொடும் தணிகைக்
குன்றமர்ந் திடுகுணக் குன்றே (4)

*என்பது **நான்காம்** பாடல்.*

(37) ***கூடல் இழைத்தல்:*** *இது **பத்து** அகத்துறைப் பாடல்கள் அடங்கியது.*[30]

கல்லால் அடியார் கல்லடி உண்டார்
கண்டார் உலகம் களைவேதம்
செல்லா நெறியார் செல்லுறும் முடியார்
சிவனார் அருமைத் திருமகனார்
எல்லாம் உடையார் தணிகா சலனார்
என்னா யகனார் இயல்வேலார்
நல்லார் இடைஎன் வெள்வளை கொடுபின்
நண்ணார் மயில்மேல் நடந்தாரே **(5)**

*என்பது **ஐந்தாம்** பாடல்.*

(38) ***தரிசனை வேட்கை:*** *இதில் **பத்துப்** பாடல்கள் உள்ளன.*

மாரனை எரித்தோன் மகிழ்திரு மகனை
வாகையம் புயத்தனை வடிவேல்
தீரனை அழியாச் சீரனை ஞானச்
செல்வனை வல்வினை நெஞ்சச்
சூரனைத் தடிந்த வீரனை அழியாச்
சுகத்தினைத் தேன்துளி கடப்பந்
தாரனைக் குகன்என் பேருடை யவனைத்
தணிகையில் கண்டிறைஞ் சுவனே**(6)**

*என்பது ஆறாம் பாடல்.*

(40) ***ஏத்தாப் பிறவி இழிவு:*** ***பத்துப்*** *பாடல்கள் அடங்கிய பதிகம் இது.*

மருட்டு மங்கையர் புழுக்குழி ஆழ்ந்து
வருந்தி நாள்தொறும் மனம்இளைக் கின்றேன்
தெருட்டும் நின்திருத் தணிகையை அடையேன்
சிவபி ரான்பெற்ற செல்வமே நினது

---

30. முதல் திருமுறையில் நான்கு பதிகள் உள்ளன. (அகத்துறை)

அருட்டி றத்தினை நினைந்துநெக் குருகி
அழுது கண்கள்நீர் ஆர்த்திட நில்லேன்
இருட்டு வாழ்க்கையில் இடறிவீழ் கின்றேன்
என்செய் வான்பிறந் தேன்எளி யேனே **(4)**

*என்பது **நான்காம்** பாடல்.*

(48) ***போற்றித் திருவிருத்தம்:*** *இதில் **பதினைந்து** பாடல்கள் அடக்கம்.*

முத்தியின் முதல்வ போற்றி மூவிரு முகத்த போற்றி
சக்திவேற் கரத்த போற்றி சங்கரி புதல்வ போற்றி
சித்திதந் தருளும்தேவர் சிகாமணி போற்றி போற்றி
பத்தியின் விளைந்த இன்பப் பரம்பர போற்றி போற்றி **(10)**

*என்பது **பத்தாம்** பாடல்.*

## இரண்டாம் திருமுறை

*இதில் சில தலைப்புகளிலுள்ள சில பாடல்களைக் காட்டுவேன்.*

(1) ***கருணை விண்ணப்பம்:*** *இதில் அடங்கிய பாடல்கள் **பத்து**. இதில்,*

அருள்ஓர் சிறிதும் உதவுகிலாய்
அதனைப் பெறுதற் கடியேன்பால்
தெருள்ஓர் சிறிதும் இலையேஎன்
செய்கேன் எங்கள் சிவனேயோ
மருளோர் எனினும் தமைநோக்கி
வந்தார்க் களித்தல் வழக்கன்றோ
பொருளோர் இடத்தே மிடிகொண்டோர்
புகுதல் இன்று புதிதன்றே**(4)**

*இது **நான்காம்** பாடல்.*

(3) ***பெருவிண்ணப்பம்:*** ***பத்துப்*** *பாடல்களில் விண்ணப்பம் நடைபெறுகின்றது.*

எண்ணா தெளியேன் செயும்பிழைகள்
எல்லாம் பொறுத்திங் கெனையாள்வ
தண்ணா நினது கடன்கண்டாய்
அடியேன் பலகால் அறைவதென்னே
கண்ணார் நுதற்செங் கரும்பேமுக்
கனியே கருணைக் கடலேசெவ்
வண்ணா வெள்ளை மால்விடையாய்
மன்றா டியமா மணிச்சுடரே **(5)**

*என்பது* ***ஐந்தாம்*** *பாடல்.*

(7) *அபராதத்தாற்றாமை: இது திருவொற்றியூர்பற்றிய பாடல்கள்* ***பத்துக்*** *கொண்டது.*

தூங்கினேன் சோம்பற் குறைவிட மானேன்
தோகையர் மயக்கிடை அழுந்தி
ஏங்கினேன் அவமே இருந்தனன் என்னை
என்செய்தால் தீருமோ அறியேன்
வாங்கிமே ருவினை வளைத்திடும் பவள
மாமணிக் குன்றமே மருந்தே
ஓங்கிவான் அளவும் பொழில்செறி ஒற்றி
யூர்வரும் என்னுடை உயிரே **(2)**

*என்பது* ***இரண்டாம் பாடல்.*** *இவர்தம் பாடலில் அடிக்கடி 'மாதராரிடம் மயங்கி' என்று வருவது வியப்பாக உள்ளது. இவர்தம் வாழ்க்கை வரலாற்றை நோக்கினால் 'மங்கையர் வாசனை' இவரை ஒருநாளும் எட்டவில்லை என்பதுதான் உண்மை.*

(9) ***அருளியல் வினாவல்:*** *திருமுல்லைவாயிலில் பாடிய இப்பதிகம்* ***பத்துப்*** *பாடல்களைக் கொண்டது.*

முன்னிய மறையின் முடிவின்உட் பொருளே
முக்கணா மூவர்க்கும் முதல்வா
மன்னிய கருணை வாரியே முல்லை
வாயில்வாழ் மாசிலா மணியே
அன்னியன் அல்லேன் தொண்டனேன் உன்தன்
அருட்பெருங் கோயில்வந் தடைந்தால்
என்இது சிவனே பகைவரைப் போல்பார்த்
திருப்பதுன் திருவருட் கியல்போ (7)

*என்பது இப்பதிகத்தின் **ஏழாம்** பாடல்.*

*(23) **நமச்சிவாய சங்கீர்த்தன லகரி:** இது திருவொற்றி யூர், திருத்தில்லை என்ற தலங்கள் பற்றியது. இத்திருமுறை யில் பெரும்பாலான பாடல்கள் ஒற்றியூர் பற்றியனவே.*

பெற்ற தாய்தனை மகமறந்த தாலும்
பிள்ளை யைப்பெறும் தாய்மறந் தாலும்
உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்
உயிரை மேவிய உடல்மறந் தாலும்
கற்ற நெஞ்சகம் கலைமறந் தாலும்
கண்கள் நின்றிமைப் பதுமறந்த தாலும்
நற்ற வத்தவர் உள்ளிருந் தோங்கும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே (7)

*என்பது **ஏழாம்** பாடல். இப்பதிகப் பாடல்கள் அனைத் துமே தேவாரத்தில் காணும் நமச்சிவாயப் பதிகப் பாடல் கள் போல் உள்ளத்தை உருக்கும் பெற்றியனவாக உள்ளன.*

*(29) **நெஞ்சைத்தேற்றல்:** பத்துப் பாடல்கள் அமைந்த இப்பதிகம் ஒற்றியூர்பற்றியது.*

கல்லின் நெஞ்சர்பால் கலங்கல்என் நெஞ்சே
கருதிய வேண்டிய தியாதது கேண்மோ
சொல்லின் ஓங்கிய சுந்தரப் பெருமான்
சோலைசூழ் ஒற்றித் தொன்னகர்ப் பெருமான்

அல்லின் ஓங்கிய கண்டத்தெம் பெருமான்
    அயனும் மாலும்நின் றறிவரும் பெருமான்
வல்லை ஈகுவான் ஈகுவ தெல்லாம்
    வாங்கி ஈகுவேன் வருதிஎன் னுடனே (4)

*என்பது **நான்காம்** பாடல்.*

*(39) **நெடுமொழி வஞ்சி:** ஒற்றியூர் பற்றிய இப்பதிகம் **பத்துப்** பாடல்களையுடையது.*

மோகம் என்னும்ஓர் மூடரில் சிறத்தோய்
    முடிவி லாத்துயர் மூலஇல் ஒழுக்கில்
போகம் என்னும்ஓர் அளற்றிடை விழவும்
    போற்று மக்கள்பெண் டன்னைதந் தையராம்
சோக வாரியில் அழுந்தவும் இயற்றிச்
    சூழ்கின் றாய்எனைத் தொடர்ந்திடேல் தொடரில்
ஓகை ஒற்றியூர் சிவன்அருள் வாளால்
    உன்னை வெட்டுவல் உண்மைஎன் றுணரே (6)

*என்பது இதில் ஆறாம் பாடல்.*

*(44) **ஆடலமுதப்பத்து:** திருவொற்றியூரும் திருத்தில்லையும் பற்றிய இப்பதிகத்தில் பத்துப் பாடல்கள் உள்ளன.*

என்ன நான்சொலி நிறுத்தினும் நில்லா
    நேரு கின்றதிவ் எழையேன் மனந்தான்
உன்ன நின்னருள் ஒருசிறி துண்டேல்
    ஒடுக்கி நிற்பனால் உண்மைமற் றின்றேல்
இன்ன தென்றறி யாமல் இருளில்
    இடர்கொள் வேன்அன்றி என்செய்வேன் சிவனே
அன்ன துன்செயல் ஒற்றியூர் அரசே
    அம்ப லத்தினின் றாடல்செய் அமுதே (4)

*என்பது இதில் **நான்காம்** பாடல்.*

*(61) **பழமொழிமேல் வைத்துப் பரிவு கூர்தல்:*** *திருவொற்றியூர் பற்றிய இப்பதிகம் பத்துப் பாடல்களைக் கொண்டது.*[31]

முதல்இ லாமல்ஊ தியம்பெற விழையும்
மூடன் என்னநின் மொய்கழல் பதமேத்
துதல்இ லாதுநின் அருள்பெற நினைந்தேன்
துட்ட னேன்அருட் சுகம்பெறு வேனோ
நுதலில் ஆர்அழல் கண்ணுடை யவனே
நோக்கும் அன்பர்கள் தேக்கும்இன் அமுதே
சிதல்இ லாவளம் ஓங்கிஎந் நாளும்
திகழும் ஒற்றியூர்த் தியாகநா யகனே (7)

*என்பது **ஏழாம்** பாடல். முதல் அடியில் 'முதல் இலார்க்கு ஊதியம் இல்லை' என்ற பழமொழி அமைந்திருத்தல் காணலாம். ஒவ்வொரு பாடலும் ஒரு பழமொழியின் அடியாகப் பிறப்பதை அறியலாம்.*

*(75) **வடிவுடை மாணிக்கமாலை:** இது காப்பு ஒன்றும் நூல் 100-உம் வாழ்த்து ஒன்றும் கொண்ட கட்டளைக் கலித்துறை யாப்பால் அமைந்தது. திருவொற்றியூர் **'வடிவாம்பிகை'** மீது எழுந்த ஒரு பிரபந்தம்.*

சீர்கொண்ட ஒற்றிப் பதியுடை
யானிடம் சேர்ந்தமணி
வார்கொண்ட கொங்கை வடிவாம்
பிகைதன் மலரடிக்குத்
தார்கொண்ட செந்தமிழ் பாமாலை
சாத்தத் தமியனுக்கே
ஏர்கொண்ட நல்லருள் ஈயும்
குணாலய ஏரம்பனே

31. திருமங்கையாழ்வாரின் 'பழமொழியால் பணிந்துரைத்த பாட்டு' (பெரி. திரு 10.9) என்பது இத்துடன் ஒப்பிடல் தகும்.

*என்பது காப்புச் செய்யுள். நூலிலுள்ள ஒவ்வொரு பாடலும் **'வடிவுடை மாணிக்கமே'** என்று இறுகின்றது.*

மலையான் தவம்செய்து பெற்றமுத்
    தேஒற்றி வாழ்கனகச்
சிலையான் மணக்க மணக்குந்தெய்
    வீகத் திருமலரே
அலையான் மலிகடல் பள்ளிகொண்
    டான்தொழும் ஆரமுதே
வலையான் அருமை மகளே
    வடிவுடை மாணிக்கமே (8)

*என்பது ஒரு நயமான பாடல்.*

பொருப்புறு நீலியென் பார்நின்னை
    மெய்அது போலும்ஒற்றி
விருப்புறு நாயகன் பாம்பா
    பரணமும் வெண்தலையும்
நெருப்புறு கையும் கனல்மேனி
    யும்கண்டு நெஞ்சம் அஞ்சாய்
மருப்புறு கொங்கை மயிலே
    வடிவுடை மாணிக்கமே (22)

*என்பது மற்றொரு நயம்செறிந்த பாடல்.*

இட்டார் மறைக்கும் உபநிட
    தத்திற்கும் இன்னும்சற்றும்
எட்டாநின் பொன்னடிப் போதெளி
    யேன்தலைக் கெட்டுங்கொலோ
கட்டார் சடைமுடி ஒற்றிஎம்
    மான்நெஞ்ச கத்தமர்ந்த
மட்டார் குழல்மட மானே
    வடிவுடை மாணிக்கமே (46)

*என்பது பிறிதொரு நயமிக்க பாடல்.*

வேதங்க ளாய்ஒற்றி மேவும்
சிவத்தின் விளைவருளாய்ப்
பூதங்க ளாய்ப்பொறி யாய்ப்புல
னாகிப் புகல்கரண
பேதங்க ளாய்உயிர் ஆகிய
நின்னைஇப் பேதைஎன்வாய்
வாதங்க ளால்அறி வேனோ
வடிவுடை மாணிக்கமே (74)

*என்பது இன்னொரு நயஞ்செறிபாடல். பாடல்கள் யாவும் நயஞ்செறிந்தவையே. காட்டுகளாகச் சில சொல்லிக் காட்டினேன்; அவ்வளவே.*

வாழிநின் சேவடி போற்றிநின்
பூம்பத வாரிசங்கள்
வாழிநின் நாண்மலர் போற்றிநின்
தண்ணளி வாழிநின்சீர்
வாழிஎன் உள்ளத்தில் நீயுநின்
ஒற்றி மகிழ்தருநீ
வாழிஎன் ஆருயிர் வாழ்வே
வடிவுடை மாணிக்கமே (101)

*மாலை என்ற வாழ்த்துப்பாடலுடன் நூல் நிறைவு பெறுகின்றது.*

*(79) **இரங்கன்மாலை:** திருவொற்றியூர் பெருமான் மீது தலைவி இரங்கலாக அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்த யாப்பில் அமைந்த 31 பாடல்களைக் கொண்டது. இதில் மூன்று பாடல்கள் காட்டப்பெறுகின்றன.*

தகைசேர் ஒற்றித் தலத்தமர்ந்தார்
தரியார் புரங்கள் தழலாக்க
நகைசேர்ந் தவரை மாலையிட்ட
நாளே முதல்இந் நாள்அளவும்

பகைசேர் மதன்பூச் சூடல்அன்றிப்
பதப்பூச் சூடப் பார்த்தறியேன்
குகைசேர் இருட்பூங் குழலாய்என்
குறையை எவர்க்குக் கூறுவனே (2)

*என்பது ஒரு பாடல்.*

ஆலம் இருந்த களத்தழகர்
அணிசேர் ஒற்றி ஆலயத்தார்
சால எனக்கு மாலையிட்ட
தன்மை ஒன்றே அல்லாது
கால நிரம்ப அவர்புயத்தைக்
கட்டி அணைந்த தில்லையடி
கோல மதிவாண் முகத்தாய்என்
குறையை எவர்க்குக் கூறுவனே (15)

*என்பது மற்றொரு பாடல்.*

வெற்றை வளைத்தார் திருஒற்றி
மேவி அமர்ந்தார் அவர்எனது
கற்பை அழித்தார் மாலையிட்டுக்
கணவர் ஆனார் என்பதல்லால்
சிற்ப மணிமே டையில்என்னைச்
சேர்ந்தார் என்ப தில்லையடி
கொற்பை அரவின் இடையாய்என்
குறையை எவர்க்குக் கூறுவனே (23)

*என்பது பிரிதொரு பாடல். பாடல்கள் யாவும் **'குறையை எவர்க்குக் கூறுவனே'** என்று முடிகின்றன.*

*இவை தவிர 'நற்றாய் நலத்தல்' என்ற துறையில் (85) அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்த யாப்பில் அமைந்த பத்துப் பாடல்களும் **'புணராவிரகு பொருந்துறு வேட்கையின் இரங்கல்'** என்ற துறையில் (86) 30பாடல்களும், 'தலைவி இரங்கல்' என்ற துறையில் (88) அறுசீர்க்*

*கழிநெடிலடி ஆசிரிய விருத்த யாப்பில் அமைந்த பத்துப் பாடல்களும்* **'அருள் மொழி மாலை'** *(96) என்ற பெயரில் திருவொற்றியூர் பற்றி அறுசீர்க் கழிநெடிலடி விருத்த யாப்பில் அமைந்த 31 பாடல் களைக் கொண்ட ஒருசிறு பிரபந்தமும் (96), உள்ளன. இத்திருமுறையில் அகப்பொருட் பதிகங்கள் மட்டிலும் 23 உள்ளன.* **'இங்கிதமாலை'** *(98) என்ற ஒரு பிரபந்தம் உள்ளது. இத்திருமுறையில். இங்கித மாலை* **'கலைமகள்' வாழ்த்தாக** *ஒரு வெண்பாவும், காப்பாக ஓர் அறுசீர்கழிநெடிலடி விருத்தமும், பாடாண் திணையின்* **'கடவுண்மாட்டு மானிடப்பெண்டிர் நயந்த பக்கம்'** *என்ற தலைப்பில் (வினா-விடையாக) அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்த யாப்பில் 165 பாடல்களும் கொண்டது. எடுத்துக்காட்டுக்கு ஒரு பாடல்.*

கற்றைச் சடையீர்! திருவொற்றிக்
காவல் உடையீர்! ஈங்கடைந்தீர்;
'இற்றைப் பகலே நன்றென்றேன்';
'இற்றை இரவே நன்றெமக்குப்
பொற்றைத் தனத்தாய் கையமுதம்
பொழியாது அலர்வாய் புத்தமுதம்
இற்றைக்கு அளித்தாய்' என்கின்றார்;
இதுதான் சேடி என்னேடி (130)

*எல்லாப் பாடல்களும்* **'இதுதான் சேடி என்னேடி'** *என்ற தொடரால் இறுகின்றன.*

மேலும் இத்திருமுறையில் **'இராமநாமப் பதிகம்'** *(101),* **'வீரராகவர் போற்றிப்பஞ்சகம்'** *(102),* **'இரேணுகை தோத்திரம்'** *(103)*[32] என்ற தோத்திரப்பதிகங்களும் அடங்கி *யுள்ளன.*

32. இது 'சென்னை ஏழுகிணறு' இடத்தில் உள்ள இரேணுகா தேவியின் மீது அமைந்தது. அன்பர் ஒருவர் வேண்டுகோளுக் கிணங்க அருளிச் செய்தது.

## மூன்றாம் திருமுறை

*இதில் **மூன்று** பெரிய தனிப்பாடல்களும்; **மூன்று** தனிப் பிரபந்தங்களும்; **ஐந்து** பதிகங்களும்; சில தோத்திரங்களும் அடங்கியுள்ளன.*

### (1) தனிப்பாடல்கள்

(i) ***திருவடிப்புகழ்ச்சி:*** *இதில் காப்பாக ஒரு நேரிசை வெண்பாவும் நூற்றுத் தொண்ணூற்றிரு அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் ஒரு பாடலும் அடங்கியுள்ளன.*

(ii) ***விண்ணப்பக் கலிவெண்பா:*** *இதில் காப்பாக ஒரு நேரிசை வெண்பாவும் 417 கண்ணிகளடங்கிய ஒரு கலிவெண்பாவும் அடக்கம்.*

(iii) ***நெஞ்சறிவுறுத்தல்:*** *இதில் காப்பாக இருகுறள் வெண்பாக்களும் 703 கண்ணிகளையுடைய ஒரு கலிவெண் பாவும் அடங்கியுள்ளன.*

### (2) தனிப்பிரபந்தங்கள்

***(4) சிவநேச வெண்பா:*** *இந்தவெண்பாப் பிரபந்தத்தில் **102 நேரிசை வெண்பாக்கள்** அடங்கியுள்ளன.*

***(5) மகாதேவமாலை:*** *இதில் காப்பாக அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் ஒன்றும், எண்சீர்க் கழிநெடிலடி விருத்தங்கள் நூறும் அடங்கியுள்ளன. இதில் ஒரு சில பாடல்களைக் காட்டுவேன்.*

இந்தியமாய்க் கரணாதி அனைத்து மாகி
இயல்புருட னாய்க்கால பரமு மாகிப்
பந்தமற்ற வியோமமாய்ப் பரமாய் அப்பால்
பரம்பரமாய் விசுவமுண்ட பான்மை யாகி
வந்தஉப சாந்தமதாய் மவுன மாகி
மகாமவுன நிலையாகி வயங்கா நின்ற

அந்தமில்தொம் பதமாய்த்தற் பதமாய் ஒன்றும்
அசிபதமாய் அதீதமாய் அமர்ந்த தேவே (7)

மலைமேலும் கடல்மேலும் மலரின் மேலும்
வாழ்கின்ற மூவுலகின் வயங்கும் கோவே
நிலைமேலும் நெறிமேலும் நிறுத்து கின்ற
நெடுந்தவத்தோர் நிறைமேலும் நிகழ்த்தும் வேதக்
கலைமேலும் எம்போல்வார் உளத்தின் மேலும்
கண்மேலும் தோள்மேலும் கருத்தின் மேலும்
தலைமேலும் உயிர்மேலும் உணர்வின் மேலும்
தருமன்பின் மேலும்வளர் நாண்மேய்த் தேவே (21)

மத்தேறி அலைதயிர்போல் வஞ்ச வாழ்க்கை
மயலேறி விருப்பேறி மதத்தி னோடு
பித்தேறி உழல்கின்ற மனத்தால் அந்தோ
பேயேறி நலிகின்ற பேதை யானேன்
வித்தேறி விளைவேறி மகிழ்கின் றோர்போல்
மேலேறி அன்பரெலாம் விளங்கு கின்றார்
முத்தேறி உயிர்க்குயிராம் நிறைந்த எங்கள்
உடையானே இதுதகுமோ உணர்கி லேனே (74)

*(6) **திருவருண்முறையீடு:** இது கட்டளைக் கலித்துறை யாப்பாலான 232 பாடல்களைக் கொண்டது. அனைத்தும் உள்ளத்தை உருக்கும் உணர்ச்சிப் பிழம்புகள். சிலவற்றைக் காட்டுவேன்.*

நான்படும் பாடு சிவனே
உலகர் நவிலும்பஞ்சு
தான்படு மோசொல்லத் தான்படு
மோஎண்ணத் தான்படுமோ
காண்படு கண்ணியின் மான்படு
மாறு கலங்கிநின்றேன்
ஏன்படு கின்றனை என்றிரங்
காய்என்னில் என்செய்வனே (9)

நடங்கொண்ட பொன்னடி நீழலில்
நான்வந்து நண்ணுமட்டும்
திடங்கொண்ட நின்புகழ் அல்லால்
பிறர்புகழ் செப்பவையேல்
விடங்கொண்ட கண்டத் தருட்குன்ற
மேஇம வெற்புடையான்
இடங்கொண்ட தெய்வத் தனிமுத
லேஎம் இறையவனே (41)

வாய்மூடிக் கொள்பவர் போலேஎன்
உள்ளத்தை வன்துயராம்
பேய்மூடிக் கொண்டதென் செய்கேன்
முகத்தில் பிறங்குகையைச்
சேய்மூடிக் கொண்டுநற் பாற்கழக்
கண்டும் திகழ்முலையைத்
தாய்மூடிக் கொள்ளுவ துண்டோ
அருளுக சங்கரனே (62)

சேல்வரும் ஏர்விழி மங்கைபங்
காஎன் சிறுமைகண்டால்
மேல்வரு நீவரத் தாழ்ந்தாலும்
உன்றன் வியன்அருட்பொற்
கால்வரு மேஇளங் கன்றழத்
தாய்பசுக் காணின்மடிப்
பால்வரு மேமுலைப் பால்வரு
மேபெற்ற பாவைக்குமே (80)

சொற்றுணை வேதியன் என்னும்
பதிகச் சுருதியைநின்
பொற்றுணை வார்கழற் கேற்றியப்
பொன்னடிப் போதினையே
நற்றுணை யாக்கரை ஏறிய
புண்ணிய நாவரசைக்

கற்றுணை யாதிந்தக் கற்றுணை
யாமென் கடைநெஞ்சமே **(132)**

நிலையறி யாத குடும்பத்
துயரென்னும் நீத்தத்திலே
தலையறி யாது விழுந்தேனை
ஆண்டருள் தானளிப்பாய்
அலையறி யாத கடலேமுக்
கண்கொண்ட ஆரமுதே
விலையறி யாத மணியே
விடேலிதென் விண்ணப்பமே **(220)**

*எல்லாப் பாடல்களுமே நெஞ்சத்தை நீர்ப்பண்டாக்கு பவை.*

## (3) பதிகங்கள்

*(7) **சிகாமணிமாலை:** புள்ளிருக்குவேளூர் (வைத்தீசு வரன் கோயில்)பற்றிய இது பதினைந்து பாடல்களைக் கொண்டது (கட்டளைக்கலித்துறை)*

கல்லேன் மனக்கருங் கல்லேன்
சிறிதும் கருத்தறியாப்
பொல்லேன்பொய் வாஞ்சித்த புல்லேன்
இரக்கம் பொறைசிறிதும்
இல்லேன் எனினும்நின் பால்அன்றி
மற்றை இடத்தில்சற்றும்
செல்லேன் வயித்திய நாதா
அமரர் சிகாமணியே **(3)**

ஊன்கொண்ட தேகத்தும் உள்ளத்தும்
மேவி உறும்பிணியால்
நான்கொண்ட துன்பம் தவிர்ப்பாய்
வயித்திய நாதஎன்றே

வான்கொண்ட நின்அருள் சீரேத்து
கின்ற வகைஅறியேன்
தேன்கொண்ட கொன்றைச் சடையாய்
அமரர் சிகாமணியே **(13)**

*(9) நல்ல மருந்து: இதுபுள்ளிருக்கு வேளூர் வைத்திய நாதனைப்பற்றியது. சிந்துயாப்பாலானது.*

## பல்லவி

நல்ல மருந்திம் மருந்து—சுகம்
நல்கும் வைத்திய நாத மருந்து

## கண்ணிகள்

அருள்வடி வான மருந்து—நம்முன்
அற்புத மாக அமர்ந்த மருந்து
இருளற வோங்கும் மருந்து—அன்பர்க்
கின்புரு வாக இருந்த மருந்து—நல்ல **(1)**

அம்பலத் தாடு மருந்து—பர
மாநந்த வெள்ளத் தழுந்து மருந்து
எம்பல மாகு மருந்து—வேளூர்
என்னுந் தலத்தி லிருக்கு மருந்து—நல்ல **(9)**

*இங்ஙனம் இது 29 கண்ணிகளைக் கொண்டிலங்குவது.*

*(10) **திருவாரூர்ப்பதிகம்:** அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தங்களாலான பத்துப்பாடல்களைக் கொண்டது.*

உள்ளக் கவலை ஒருசிறிதும்
ஒருநா ளேனும் ஒழிந்திடவும்
வெள்ளக் கருணை இறையேனும்
மேவி விடவும் பெற்றறியேன்
கள்ளக் குரங்காய் உழல்கின்ற
மனத்தேன் எனினும் கடையேனைத்

தள்ளத் தகுமோ திருஆரூர்
எந்தாய் எந்தாய் தமியேனே (8)

*என்பது **எட்டாம்** பாடல்.*

***(13) பழமலைப் பதிகம்:*** *இது அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் **பத்துக்** கொண்டது.*

இளைத்த இடத்தில் உதவிஅன்பர்
இடத்தே இருந்த ஏமவைப்பை
வளைத்த மதின்மூன் றெரித்தருளை
வளர்த்த கருணை வாரிதியைத்
திளைத்த யோகர் உளத்தோங்கித்
திகழும் துரியா தீதமட்டும்
கிளைத்த மலையைப் பழமலையிற்
கிளர்ந்து வயங்கக் கண்டேனே (4)

*என்பது இதன் **நான்காம்** பாடல்.*

***(16) திருவண்ணாமலைப் பதிகம்:*** *இது **பத்து** எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தங்கள் கொண்டது.*

பூத்திடும் அவனும் காத்திடு பவனும்
புள்விலங் குருக்கொடு நேடி
ஏத்திடும் முடியும் கூத்திடும் அடியும்
இன்னமும் காண்கிலர் என்றும்
கோத்திடும் அடியர் மாலையின்அளவில்
குலவினை என்றுநல் லோர்கள்
சாற்றிடும் அதுகேட் டுவந்தனன் நினது
சந்நிதி உறஎனக் கருளே (3)

*என்பது இதன் **மூன்றாம்** பாடல்.*

***(22) சித்திவிநாயகர் பதிகம்:*** *இது வழக்கத்திற்கு மாறாக காப்பாகநேரிசை வெண்பா **இரண்டும்** எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம் **பத்தும்** கொண்டது. ஐங்கரத்தானை அற்புதமாகப் பாடிய பாடல்களை உடையது.*

அஞ்சுமுகத் தான்மகன்பால்
அஞ்சுமுகத் தான்அருள்வான்
அஞ்சுமுகத் தான்அஞ்
சணிகரத்தான்—அஞ்சுமுக
வஞ்சரையான் காணா
வகைவதைத்தான் ஓர்அரையோ
டஞ்சரையான் கண்கள்
அவை, (1)

*இது காப்பாக வருவது.*

உள்ளமும் உயிரும் உணர்ச்சியும் உடம்பும்
உறுபொருள் யாவும்நின் தனக்கே
கள்ளமும் கரிசும் நினைந்திடா துதவிக்
கழல்இணை நினைந்துநின் கருணை
வெள்ளம்உண் டிரவு பகல்அறி யாத
வீட்டினில் இருந்துநின் னோடும்
விள்ளல்இல் லாமல் கலப்பனோ சித்தி
விநாயக விக்கினேச் சுரனே (4)

*என்பது இதன்* ***நான்காம்*** *பாடல்.*

*இங்ஙனம் பல அற்புதமான பாடல்களைத் தன்அகத்தே கொண்டு இலங்குவது இம்**மூன்றாம்** திருமுறை.*

## நான்காம் திருமுறை

*இதிலுள்ள சில பதிகங்களையும் அவற்றினுள்ள சில பாடல்களையும் காட்டுவோம்.*

***(2) போற்றித்திருப்பதிகம்:*** *இது எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்* ***பத்துக்*** *கொண்டது. பாடல்கள் யாவும் அந்தாதித் தொடையில் அமைந்திருத்தல் இதன் சிறப்பு.*

மணிமிடற் றமுதே போற்றிஎன் தன்னை
வாழ்விக்க வேண்டுவல் போற்றி
அணிமதி முடியோய் போற்றிஇவ் வேழைக்
கருளமு தருளுக போற்றி
பணிஅணி புயத்தோய் போற்றிநின் சீரே
பாடுதல் வேண்டும்நான் போற்றி
தணிவில்பேர் ஒளியே போற்றிஎன் தன்னைத்
தாங்குக போற்றிநின் பதமே **(2)**

*என்பது இதன் **இரண்டாம்** பாடல்.*

*(5) **எதிர்கொள்பத்து:** இது எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம் **பத்துக்** கொண்டது.*

சுந்தரர்க் காகமுன் தூதுசென் றானைத்
தூயனை யாவரும் சொல்லரி யானைப்
பந்தம்அ றுக்கும்ப ராபரன் தன்னைப்
பத்தர்உ ளங்கொள்ப ரஞ்சுட ரானைப்
மந்தர வெற்பின்ம கிழ்ந்தமர்ந் தானை
வானவர் எல்லாம்வ ணங்கநின் றானை
எந்தமை ஆண்டுநல் இன்பளித் தானை
இன்றைஇ ரவில்எ திர்ந்துகொள் வேனே **(4)**

*என்பது இதன் **நான்காம்** பாடல்.*

*(6) **புறமொழிக் கிரங்கல்:** கட்டளைக் கலித்துறை யாப்பில் அமைந்த **பத்துப்** பாடல்களைக் கொண்டது.*

தெரியாமை யால்சிறி யேன்செய்குற்
றத்தைநின் சித்தமதில்
பிரியாமை வைத்தருள் செய்திலை
யேல்எனைப் பெற்றவளும்
பெரியாசை கொண்டபிள் ளாய்அரன்
என்தரப் பெற்றதென்றே

பரியாசை செய்குவ ளால்அய
லார்என் பகருவதே (4)

*என்பது இதன் **நான்காம்** பாடல்.*

*(9) **உய்கைத் திருப்பதிகம்:** கலிவிருத்த யாப்பில் **பத்துப்** பாடல்களைக் கொண்டது.*

மதியும் கல்வியும் வாய்மையும் வண்மையும்
பதியும் ஈந்தெம்ப சுபதி மெய்ந்நெறிக்
கதியின் வைப்பது நின்கடன் வன்கடல்
வதியும் நஞ்சம்அ ணிமணி கண்டனே (6)

*என்பது **ஆறாம்** பாடல்.*

*(10) **அபராத விண்ணப்பம்:** இஃது அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம் 22 கொண்டது.*

புலையே புரியும் மனம்போன
போக்கே அல்லால் புண்ணியநல்
நிலையே அறியேன் சிறியேனுக்
கருளல் அழகோ நிறைந்தகுண
மலையே மணியே மருந்தேஎன்
வாழ்வே எல்லாம் வல்லோனே
கலையே கருதும் கழலுடையாய்
அருளா மையும்நின் கடன்அன்றே (17)

*என்பது இதன் **பதினேழாம்** பாடல்.*

*(11) **கலிவிண்ணப்பம்:** கட்டளைக் கலித்துறை யாப்பால் அமைந்த **பத்துப்** பாடல்களையுடையது இப்பதிகம்.*

ஊன்செய்த வெம்புலைக் கூட்டின்
பொருட்டிங் குனைமறந்து
நான்செய்த தீமையை நானே
நினைக்க நடுங்குகின்றேன்
ஏன்செய் தனைஎனக் கேளாது
மேலும் இரங்குகின்றாய்

வான்செய்த நாதநின் தண்ணருள்
வண்ணம்என் வாழ்த்துவனே (6)

*என்பது இதன் **ஆறாம்** பாடல்.*

*(13) **சரணப்பதிகம்:** இது கலிநிலைத்துறை யாப்பால் அமைந்த **பதினொரு** திருப்பாடல்களைக் கொண்டது.*

செய்வேன் அவம்அன் றித்தவம்
ஒன்றும்செய் தறியேன்
நைவேன் பிழையா வும்பொறுத்
தருள்நல்கு வாயேல்
உய்வேன் அலதுய் வகைஇன்
றுமன்றோங்கு கின்றாய்
வைவேன் துதிப்பேன் உனைஎன்
றும்மறந்தி லேனே (4)

*என்பது இதன் **நான்காம்** பாடல்.*

*(14) **பொதுத் தனித் திருவெண்பா:** இதில் **பதின் மூன்று** வெண்பாக்கள் உள்ளன.*

நான்சிறியேன் என்னினும்இந் நானிலத்தில் நான்செய்பிழை
தான்சிறிதோ அன்றுலகில் தான்பெரிதே–மான்கரத்தோய்
அங்ஙனமே னும்உன் அருட்பெருமைக் கிப்பெருமை
எங்ஙனம்என் றுள்ளம் எழும். (4)

*என்பது இதன் **நான்காம்** பாடல்.*

*(15) **தனித் திருவிருத்தம்:** இஃது ஒரு தனிப்பிரபந்தம்[32] என்றே சொல்லலாம். **ஐம்பத்தேழு** திருப்பாடல்களைக் கொண்டது. பல்வேறு யாப்புகளால் ஆனது.*

---

32. நம்மாழ்வார் செய்த திருவிருத்தம் என்னும் முதல் பிரபந்தம் என்பதுடன் ஒப்ப நோக்கத்தக்கது. அது கட்டளைக்கலித்துறை யாப்பால் மட்டிலும் அமைந்தது. இதிலோ கட்டளைக் கலித்துறை, எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்,→

நேசனும்நீ சுற்றமும் நீ நேர்நின் றளித்துவரும்
ஈசனும்நீ ஈன்றாளுந் எந்தையும்நீ என்றேநின்
தேசுறுசீர் ஐந்தெழுத்தும் செப்புகின்ற நாயேனை
ஆசகலும் வண்ணம் அருள்புரிந்தால் ஆகாதோ.

*இது நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா 25-வது பாடலாக வருவது.*

வைவம் என்றெழு கின்றவர்
தமக்கும்நல் வாழ்வு
செய்வம் என்றெழு கின்றமெய்த்
திருவருட் செயலும்
சைவம் என்பதும் சைவத்திற்
சாற்றிடும் தலைமைத்
தெய்வம் என்பதும் என்னள
வில்லைஎன் செய்வேன் (35)

*இது கலிநிலைத்துறை 35-ஆவது பாடலாக வருவது. வள்ளலார் கொள்கையைக் குறிப்பிடுவதுபோல் அமைந்துள்ளது.*

***(17) தனித் திருப்புலம்பல்:*** *அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தயாப்பில் அமைந்த* ***நான்கு*** *திருப்பாடல்களைக் கொண்டது.*

கறையோர் கண்டத் தணிந்தருளும்
கருணா நிதியைக் கண்ணுதலை
மறையோன் நெடுமாற் கரியசிவ
மலையை அலையில் வாரிதியைப்

---

→ அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம். கலித்துறை, கலிநிலைத்துறை, நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா, கலிவிருத்தம், நேரிசை வெண்பா, வெண்துறை முதலிய பல யாப்பு விகற்பங்களாலானது.

பொறையோர் உள்ளம் புகுந்தொளிரும்
புனித ஒளியைப் பூரணனாம்
இறையோன் தன்னை அந்தோநான்
என்னே எண்ணா திருந்தேனே (4)

என்பது இதன் நான்காம் பாடல்.

*(22) சிவசிதம்பர சங்கீர்த்தனம்:* இதில் எண்சீர்க் கழி நெடிலடிசந்த விருத்தத்தாலான **ஐந்து** பாடல்கள் அடங்கியுள்ளன.

உலக முஞ்சரா சரமும் நின்றுநின்
றுலவு கின்றபேர் உலகம் என்பதும்
உலகம் இன்றிஎங் கணுநி றைந்தசிற்
கனம்வி ளங்குசிற் ககனம் என்பதும்
இலக ஒன்றிரண் டெனல்அ கன்றதோர்
இணையில் இன்பமாம் இதயம் என்பதும்
திலகம் என்றநங் குருசி தம்பரம்
சிவசி தம்பரம் சிவசி தம்பரம் (1)

என்பது இதன் முதற்பாடல்.

## கண்ணிகள்

இத்தலைப்பில் பாங்கிமார் கண்ணி(26), வெண்ணிலாக் கண்ணி (27), முறையீட்டுக் கண்ணி (28), திருவடிக்கண்ணி (29), பேரன்புக்கண்ணி (30) என்று பல உள்ளன. யாவும் சிந்து, தாழிசை பாவகைகளில் அமைந்தவை. பொதுமக்கள் சுவைக்கத்தக்கவை. பாடியவாய் தேனூறும் பான்மையவை.

இவை தவிர, சிந்து மெட்டில் அமைந்த நடேசர் கொம்மி(31), தாழிசையில் அமைந்த தோழியர் உரையாடல் (32), சிந்து மெட்டில் அமைந்த தெண்டனிட்டேன் (33), இன்னம் தயவு வரவில்லையா(34) என்ற கீர்த்தனைகளும் உள்ளன.

*மேலும் நற்றாய் கவன்றது(36), சல்லாப லகரி(37), தலைமகளின் முன்ன முடிவு (38), வேட்கைக் கொத்து(39) (தலைமகன் பாங்கியொடு கூறல்) போன்ற அகத்துறைப் பாடல்களும் இத்திருமுறையில் அடங்கும்.*

## ஐந்தாம் திருமுறை

*ஆறு திருமுறைகளிலும் குறைந்த எண்ணிக்கைப் பாடல்களை உடையது இத்திருமுறை.*

*(1) அன்புமாலை (31 பாடல்கள்) (2) அருட்பிரகாச மாலை (100 பாடல்கள்) என்ற இரு பிரபந்தங்கள் இதில் அடங்கும். பதிகங்களே பிரபந்தங்கள் எனப் போற்றத்தகும். (3) பிரசாதமாலை (10 பாடல்கள்), (4) ஆனந்த மாலை (10 பாடல்கள்) (5) பத்திமாலை (10 பாடல்கள்) (6) சௌந்தர மாலை (12 பாடல்கள்) (7) அதிசயமாலை (14 பாடல்கள்) (8) அபராதமன்னிப்புமாலை (10 பாடல்கள்) (9) ஆளுடைய பிள்ளையார் அருண்மாலை (11 பாடல்கள்), (10) ஆளுடைய அரசுகள் அருண்மாலை (10 பாடல்கள்), (11) ஆளுடைய நம்பிகள் அருண்மாலை (10 பாடல்கள்) (12) ஆளுடைய அடிகள் அருண்மாலை (10 பாடல்கள்) என்பவையும் இத்திருமுறையில் அடங்கும். நால்வர் பற்றிய மாலைகளில் அவர்தம் அருளிச் செயல்களின் கருத்துகள் ஓரளவு பிரதிபலிக்கும்.*

*அடிகளின் பாடல்களின் நடையும் சொற்பாங்கும், பொருளமைதியும் பிறவும் இத்திருமுறைப்பாடல்களில் பிரதிபலிக்கும். விரிவஞ்சி சான்றுகள் காட்டப்பெறவில்லை இத்துடன் இத்திருமுறை நிறைவு பெறுகின்றது.*

## ஆறாம் திருமுறை

*இத்திருமுறையில் சில பதிகங்களில் சில பாடல்களைக் காணலாம்.*

*(12) **பிள்ளைச் சிறுவிண்ணப்பம்:** இதில் 24 பாடல்கள் அடக்கம்.*

தடித்தஓர் மகனைத் தந்தையீண் டடித்தால்
தாயுடன் அணைப்பள்; தாய்அடித்தால்
பிடித்தொரு தந்தை அணைப்பன்இங் கெனக்குப்
பேசிய தந்தையும் தாயும்
பொடித்திரு மேனி அம்பலத் தாடும்
புனிதநீ ஆதலால் என்னை
அடித்தது போதும் அணைத்திடல் வேண்டும்
அம்மைஅப் பாஇனி ஆற்றேன் **(1)**

*என்பது முதற்பாடல். உள்ளத்தை உருக்குவது. எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தாலானவை இப்பாடல்கள் அனைத்தும்; இதில் 24 பாடல்கள் உள்ளன.*

*(13) **பிள்ளைப் பெருவிண்ணப்பம்:** இதில் அடங்கிய பாடல்கள் 133. அனைத்தும் எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தாலானவை.*

தொகுப்புறுசிறுவர் பயிலுங்கால் பயிற்றும்
தொழிலிலே வந்தகோ பத்தில்
சகிப்பிலா மையினால் அடித்தனன் அடித்த
தருணம்தான் கலங்கிய கலக்கம்
வகுப்புற நினது திருவுளம் அறியும்
மற்றுஞ்சில் உயிர்களில் கோபம்
மிக்புகுந் தடித்துப் பட்டபா டெல்லாம்
மெய்யநீ அறிந்ததே அன்றோ **(36)**

*இது முப்பதாறாவது பாடல்.*

திருவளர் திருஅம் பலத்திலே அந்நாள்
செப்பிய மெய்ம்மொழிப் பொருளும்
உருவளர் திருமந் திரத்திரு முறையால்
உணர்த்திய மெய்ம்மொழிப் பொருளும்

கருவளர் அடியேன் உளத்திலே நின்று
காட்டிய மெய்ம்மொழிப் பொருளும்
மருவிஎன் உளத்தே நம்பிநான் இருக்கும்
வண்ணமும் திருவுளம் அறியும் (118)

*என்பது **நூற்றுப்பதினெட்டாம்** பாடலாகும்.*

*(14) **மாயையின் விளக்கம்:** இதில் அடங்கிய பாடல்கள் பத்து. அனைத்தும் எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள்.*

தளர்ந்திடேல் மகனே என்றெனை எடுத்தோர்
தாய்கையில் கொடுத்தனை அவளோ
வளர்ந்திடா வகையே நினைந்தனள் போன்று
மாயமே புரிந்திருக் கின்றாள்
கிளர்ந்திட எனைத்தான் பெற்றநற் றாயும்
கேட்பதற் கடைந்திலள் அந்தோ
உளந்தரு கருணைத் தந்தையே நீயும்
உற்றிலை பெற்றவர்க் கழகோ (2)

*என்பது **இரண்டாம்** பாடல்.*

*(15) **அபயத்திறன்:** எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள் 28 அடங்கியவை இப்பதிகம். ஒவ்வொரு பாடலும் **'கைவிடேல் எனையே'** என இறுகின்றது.*

புண்ணிலே புகுந்த கோல்எனத் துயரம்
புகுந்தெனைக் கலக்கிய போதும்
கண்ணிலே எனது கருத்திலே கலந்த
கருத்தனே நின்றனை அல்லால்
மண்ணிலே வயங்கும் வானிலே பிறரை
மதித்திலேன் மதிக்கின்றார் தமையும்
நண்ணிலேன் வேறொன் றெண்ணிலேன் உனையே
நம்பினேன் கைவிடேல் எனையே (5)

*என்பது இதன் **ஐந்தாம்** பாடல்.*

***(20) இறைபொறுப்பியம்பல்: பத்துப்** பாடல்களைக் கொண்ட இஃது எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத் தாலானது.*

ஊடல்செய் மதமும் சமயமும் இவற்றில்
உற்றகற் பனைகளும் தவிர்த்தேன்
வாடல்செய் மனத்தால் கலங்கினேன் எனினும்
மன்றினை மறந்ததிங் குண்டோ
ஆடல்செய் பாதம் அறியநான் அறியேன்
ஐயவோ சிறிதும்இங் காற்றேன்
பாடல்செய் கின்றேன் படிக்கின்றேன் எனக்குப்
பரிந்தருள் புரிவதுன் கடனே **(7)**

*இதன் **ஏழாம்** பாடல் இது.*

***(23) சற்குருமணிமாலை:** இது **இருபத்தைந்து** பாடல் களைக் கொண்டது. பாடல்கள் எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தாலானவை. ஒவ்வொரு பாடலும் **'தனிநடராச என் சற்குரு மணியே'** என இறுகின்றது.*

கற்பனை முழுவதும் கடந்தவர் உளத்தே
கலந்துகொண் டினிக்கின்ற கற்பகக் கனியே
அற்பனை யாண்டுகொண் டறிவளித் தறியா
அருள்நிலை தனில்உற அருளிய அமுதே
பற்பல உலகமும் வியப்பஎன் தனக்கே
பதமலர் முடிமிசைப் பதித்தமெய்ப் பதியே
தற்பர பரம்பர சிதம்பர நிதியே
தனிநட ராசஎன் சற்குண மணியே **(21)**

*இதன் **இருபத்தொன்றாம்** பாடல் இது.*

***(27) திருவருள் விழைதல்:** எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களாலான **இருபது** பாடல்களைக் கொண்டது.*

தந்தையும் தாயும் குருவும் யான்போற்றும்
 சாமியும் பூமியும் பொருளும்
சொந்தநல் வாழ்வும் நேயமும் துணையும்
 சுற்றமும் முற்றும்நீ என்றே
சிந்தையுற் றிங்கே இருக்கின்றேன் இதுநின்
 திருவுளம் தெரிந்தது எந்தாய்
நிந்தைசெய் உலகில் யான்உளம் கலங்கல்
 நீதியோ நின்அருட் கழகோ (8)

*இதன் **எட்டாவது** பாடல் இது.*

*(34) **அநுபோகநிலயம்:** இதில் **பத்துப்பாடல்கள்** எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள் அடக்கம்.*

ஏதும்ஒன் றறியாப் பேதையாம் பருவத்
 தென்னைஆட் கொண்டெனை உவந்தே
ஓதும்இன் மொழியால் பாடவே பணித்த
 ஒருவனே என்னுயிர்த் துணைவா
வேதமும் பயனும் ஆகிய பொதுவில்
 விளங்கிய விமலனே ஞான
போதகம் தருதற் கிதுதகு தருணம்
 புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே (7)

*இதன் **ஏழாம்** பாடல் இது.*

*(39) **பொதுநடம் புரிகின்ற பொருள்:** இது எழுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தத்தாலான **இருபது** பாடல் களைக் கொண்டது. ஒவ்வொருபாடலும் **'பொது நடம் புரிகின்ற பொருளே'** என இறுவது.*

அலப்பற விளங்கும் அருட்பெரும் விளக்கே
 அரும்பெருஞ் சோதியே சுடரே
மலர்ப்பிணி அறுத்த வாய்மைஎம் மருந்தே
 மருந்தெலாம் பொருந்திய மணியே

உலப்பறு கருணைச் செல்வமே எல்லா
உயிர்க்குளும் நிறைந்ததோர் உணர்வே
புலப்பகை தவிர்க்கும் பூரண வரமே
பொதுநடம் புரிகின்ற பொருளே (8)

*இதன் எட்டாம் பாடல் இது.*

*(49) **ஆனந்தாநுபவம்:** பன்னிரண்டு வெண்பாக்களால் ஆனது.*

கண்டேன் களித்தேன் கருணைத் திருஅமுதம்
உண்டேன் அழியா உரம்பெற்றேன்—பண்டே
எனைஉவந்து கொண்டான் எழில்ஞான மன்றம்
தனைஉவந்து கொண்டான் தனை (9)

*இது ஒன்பதாம் பாடல்.*

*(55) **ஆன்ம தரிசனம்:** பத்துப் பாடல்களைக் கொண் டது; பத்தும் முத்தானவை. எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தாலானவை.*

களித்தபோ தெல்லாம் நின்இயல் உணர்ந்தே
களித்தனன் கண்கள்நீர் ததும்பித்
துளித்தபோ தெல்லாம் நின்அருள் நினைந்தே
துளித்தனன் சூழ்ந்தவர் உளத்தைத்
தெளிந்தபோ தெல்லாம் நின்திறம் புகன்றே
தெளிந்தனன் செய்கைவே றறியேன்
ஒளித்திரு உளமே அறிந்ததிவ் வனைத்தும்
உரைப்பதென் அடிக்கடி உனக்கே (3)

*என்பது மூன்றாம் பாடல்.*

*(57) **அருள் விளக்கமாலை:** இஃது ஓர் அற்புதமான பிரபந்தம். எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தால் ஆனது. 100 பாடல்களைக் கொண்டது. அனைத்தும் உள்ளத்தை உருக்கும் பாடல்கள்.*

பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் படிக்கப்
பக்கம்நின்று கேட்டாலும் பரிந்துள்உணர்ந் தாலும்
ஈர்த்தாலும் பிடித்தாலும் கட்டிஅணைத் தாலும்
இத்தனைக்கும் தித்திக்கும் இனித்தசுவைக் கரும்பே
வேர்த்தாவி மயங்காது கனிந்தநறுங் கனியே
மெய்ம்மைஅறி வானந்தம் விளங்கும்அருள் அமுதே
தீர்த்தாஎன் றன்பர்எல்லாம் தொழப்பொதுவில் நடிக்கும்
தெய்வநடத் தரசேஎன் சிறுமொழிஏற் றருளே (26)

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே
காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரம்அளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங் கொடுக்கும் நலமே
எல்லார்க்கும் பொதுவில்நடம் இடுகின்ற சிவமே
என்அரசே யான்புகலும் இசையும்அணிந் தருளே (39)

நான்பசித்த போதெல்லாம் தான்பசித்த தாகி
நல்உணவு கொடுத்தென்னைச் செல்வம்உற வளர்த்தே
ஊன்பசித்த இளைப்பென்றும் தோற்றாத வகையே
ஒள்ளியதென் அமுதெனக்கிங் குவந்தளித்த ஒளியே
வான்பதிக்கும் நெடுமாற்கும் நான்முகற்கும் அரிதாம்
வாழ்வெனக்கே ஆகியுற வளம்அளித்த பதியே
தேன்பசித்த மலர்மணமே திருப்பொதுவில் ஞானத்
திருநடஞ்செய் அரசேஎன் சிறுமொழி ஏற்றருளே (49)

உயிர்க்கொலையும் புலைப்பொசிப்பும் உடையவர்கள் எல்லாம்
உறவினத்தார் அல்லர்அவர் புறஇனத்தார் அவர்க்குப்
பயிர்ப்புறும்ஓர் பசிதவிர்த்தல் மாத்திரமே புரிக
பரிந்துமற்றைப் பண்புரையேல் நண்புத வேல் இங்கே
நயப்புறுசன் மார்க்கம்அவர் அடையளவும் இதுதான்
நம்ஆணை என்றெனக்கு நவின்றஅருள் இறையே

மயர்ப்பறுமெய்த் தவர்போற்றப் பொதுவில் நடம் புரியும்
மாநடத்தென் அரசனேஎன் மாலைஅணிந் தருளே (71)

வெம்மாலைச் சிறுவரொடும் விளையாடித் திரியும்
மிகச்சிறிய பருவத்தே வியந்துநினை நமது
பெம்மான்என் றடிகுறித்துப் பாடும்வகை புரிந்த
பெருமானே நான்செய்த பெருந்தவமெய்ப் பயனே
செம்மாந்த சிறியேனைச் சிறுநெறியில் சிறிதும்
செலுத்தாமல் பெருநெறியில் செலுத்தியநற் றுணையே
அம்மானே என்ஆவிக் கானபெரும் பொருளே
அம்பலத்தென் அரசேஎன் அலங்கல் அணிந்தருளே (76)

*என்பன இதில்* **ஐந்து** *பாடல்கள்.*

## அகத்துறைப் பதிகங்கள்

*இத்திருமுறையில் பதினாறு அகத்துறைப் பதிகங்களும் உள்ளன. அவற்றுள் இரண்டினை எடுத்துக் காட்டிப் பாடல் களையும் சுட்டுவோம்.*

*(59) பாங்கி தலைவிபெற்றி உரைத்தல்: இஃது எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தாலான* **பத்துப்** *பாடல்களைக் கொண்டவை.*

ஊராசை உடலாசை உயிர்ப்பொருளின் ஆசை
உற்றவர்பெற் றவராசை ஒன்றுமிலாள் உமது
பேராசைப் பேய்பிடித்தாள் கள்ளுண்டு பிதற்றும்
பிச்சியெனப் பிதற்றுகின்றாள் பிறர்பெயர்கேட் டிடிலோ
நாராசஞ் செவிபுகுந்தால் என்னநலி கின்றாள்
நாடறிந்த திதுஎல்லாம் நங்கைஇவள் அளவில்
நீர்ஆசைப் பட்டதுண்டேல் வாய்மலர வேண்டும்
நித்தியமா மணிமன்றில் நிகழ்பெரிய துரையே (8)

*தோழி தலைவியின் பக்தி நிலையை-தலைவன்மீது கொண்டிருக்கும் பேரன்பை-நற்றாய்க்கோ பிறர்க்கோ*

*உணர்த்துவதாகக் கருதலாம். இஃது இப்பதிகத்தின்* ***எட்டாம்*** *பாடல்.*

***(60) தலைவி வருத்தம்:*** *எண்சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தாலான 24 பாடல்களைக் கொண்டது இப்பகுதி. பல்வேறு விதமாகக் கவலையுறும் தலைவியின் மனநிலை களைப் பாங்குறக் காட்டுவது.*

இச்சைஎலாம் வல்லதுரை என்னைமணம் புரிந்தார்
ஏடிஎனக் கிணைஎவர்கள் என்றஅத னாலோ
எச்சமயத் தேவரையும் இனிமதிக்க மாட்டேன்
என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்
நச்சுமரக் கனிபோலே பாங்கிமனம் கசத்தாள்
நயந்தெடுத்து வளர்த்தவளும் கயந்தெடுப்புப் புகன்றாள்
அச்சமிலாள் இவள்என்றே அலர்உரைத்தார் மடவார்
அண்ணல்நட ராயர்திரு எண்ணம்அறிந் திலனே (5)

தாழ்குழலீர் எனைச்சற்றே தனிக்கவிட்டால் எனது
தலைவரைக்காண் குவல்என்றேன் அதனாலோ அன்றி
ஏழ்கடலிற் பெரிதன்றோ நான்பெற்ற இன்பம்
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
கூழ்கொதிப்ப தெனக்கொதித்தாள் பாங்கி என்னை வளர்த்த
கோதைமருண் டாடுகின்ற பேதைஎனல் ஆனாள்
சூழ்மடந்தை மார்களெலாம் தூற்றிநகைக் கின்றார்
சுத்தர்நட ராயர்திருச் சித்தம்அறிந் திலனே (18)

*என்பன இதில்* ***இரண்டு*** *பாடல்கள்.*

***(62) சிவபதி விளக்கம்:*** *எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தாலான* ***பத்துப்*** *பாடல்களைக் கொண்டது இப்பதிகம். ஒவ்வொரு பாடலும்* ***'வளர் சிவபதியே'*** *என்ற தொடரால் இறுகின்றது.*

நிறைவளர் முறையே முறைவளர் நிறையே
நிறைமுறை வளர்பெரு நெறியே

பொறைவளர் புவியே புவிவளர் பொறையே
புவிபொறை தவளர்தரு புனலே
துறைவளர் கடலே கடல்வளர் துறையே
துறைகடல் வளர்ந்தரு சுதையே
மறைவளர் பொருளே பொருள்வளர் மறையே
மறைபொருள் வளர்சிவ பதியே (6)

*என்பது **ஆறாம்** பாடல்.*

*(65) **உபதேசவினா:** கலித்தாழிசையாலான **பதினொரு** பாடல்களைக் கொண்டது.*

சின்மய வெளியிடைத் தன்மய மாகித்
திகழும் பொதுநடம் நான்காணல் வேண்டும்
என்மய மாகி இருப்பாயோ தோழி
இச்சை மயமாய் இருப்பாயோ தோழி (3)

*என்பது **மூன்றாம்** பாடல்.*

துரியத்திற் கப்பாலும் தோன்றும் பொதுவில்
சோதித் திருநடம் நான்காணல் வேண்டும்
கரியைக்கண் டாங்கது காண்பாயோ தோழி
காணாது போய்ப்பழி பூண்பாயோ தோழி (10)

*என்பது **பத்தாம்** பாடல்.*

*அடுத்து வரும் (67–80), பதிகங்கள் பல்வேறுவகை சிந்துப் பாடல்களால் அமைந்து சுவைதரும் பான்மையனவாய்த் திகழ்கின்றன. தொடர்ந்து வருவது 1596 அடிகளில் நிலைமண்டில ஆசிரியப்பாவால் அமைந்த மிக நீண்ட 'அருட்பெருஞ்சோதி அகவல்' ஆகும்.*

*(134) **மரணமிலாப் பெருவாழ்வு:** எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தாலான 28 பாடல்களைக் கொண்டது.*

நினைந்துநினைந் துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந் தன்பே
நிறைந்துநிறைந் தூற்றெழுங்கண் ணீரதனால் உடம்பு
நனைந்துநனைந் தருளமுதே நன்னிதியே ஞான
நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று
வனைந்துவனைந் தேத்துதும்நாம் வம்மின்உல கியலீர்
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல் கின்றேன்
பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருணம்இதுவே (1)

*என்பது முதற்பாடல். அடிகள் கொள்கையின் ஊற்று வாயாக உள்ள பதிகமாகும் இது.*

நான்உரைக்கும் வார்த்தைஎலாம் நாயகன்றன் வார்த்தை
நம்புமினோ நமரங்காள் நற்றருணம் இதுவே
வான்உரைத்த மணிமன்றில் நடம்புரிஎம் பெருமான்
வரவெதிர்கொண் டவனருளால் வரங்கள்எலாம் பெறவே
தேன்உரைக்கும் உளம்இனிக்க எழுகின்றேன் நீவிர்
தெரிந்தடைந்தேன் உடன்எழுமின் சித்திபெறல் ஆகும்
ஏனுரைத்தேன் இரக்கத்தால் எடுத்துரைத்தேன் கண்டீர்
யானடையும் சுகத்தினைநீர்தான் அடைதல் குறித்தே
(19)

*என்பது பத்தொன்பதாம் பாடல். பாடல்கள் யாவும் படித்தோர் உள்ளத்தோடு-ஆன்மாவோடு-பேசுபவை.*

*(137) திருவடிப் பெருமை: இதனை எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தாலான 45 பாடல்களால் விரித்துரைக்கின்றார் அடிகள்.*

கலைக்கடலைக் கடந்தமுனிக் கணங்களும்மும் மலமாம்
கரிசகன்ற யோகிகளும் கண்டுகொள மாட்டா
தலைக்கடலில் துரும்பாகி அலைகின்றார் மன்றுள்
ஆடுகின்றார் என்பதலால் அவர்வண்ணம் அதுவும்
நிலைக்குரிய திருச்சபையின் வண்ணமும்அச் சபைக்கண்
நிருத்தத்தின் வண்ணமும்இந் நீர்மையன என்றே

மலைக்குநிறை கண்டாலும் காணவொணா தம்ம
வாய்ப்பதர்கள் தூற்றுவதில் வரும்பயன்என் தோழி(11)

*என்பது* ***பதினொன்றாம்*** *பாடல். எம்பெருமானின் திருவடிப் பெருமை எவராலும் அறியவொண்ணாதது என்பதாம்.*

காணுகின்ற ஐங்கருவின் வித்தின்இயல் பலவும்
கருதுறும்அங் குரத்தின்இயல் பற்பலவும் அடியின்
மாணுகின்ற இயல்கள்பல பலப்பலவும் நடுவில்
மன்னும்இயல் பலபலவும் பலப்பலவும் முடியின்
பூணும்இயல் அனந்தவகை புரிந்தபல பலவும்
பொருந்துவதாய் அவ்வவற்றின் புணர்க்கையுந்தான் ஆகி
ஏணுகின்ற அவைகளுக்குட் பற்றாமல் நடிக்கும்
எழிற்கருணை பதிப்பெருமை இயம்புவதார் தோழி (31)

*என்பது* ***முப்பத்தொன்றாம்*** *பாடல். இறைவனின் திருவடிப்பெருமை மிகமிக நுணுக்கமாய் எந்தவித ஆய்வாலும் அறியமுடியாதிருப்பது.*

## அகத்துறைப் பதிகங்கள்

*அடுத்துவரும்* ***ஐந்து*** *பதிகங்கள் அகத்துறைப் பதிகங்களாகும்.*

***(138) தலைவி தலைவன் செயலைத் தாய்க்குரைத்தல்:*** *இஃது எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள்* ***பத்துக்*** *கொண்டது.*

அந்நாள்வந் தென்றனை ஆண்டருள் செய்த
அய்யர் அமுதர்என் அன்பர் அழகர்
நன்னாள் கழிக்கின்ற நங்கைய ரோடு
நான்அம் பலம்பாடி நண்ணுறும் போது
பின்னாள்என் றெண்ணிப் பிதற்றாதே பெண்ணே
பேரருட் சோதிப் பெருமணம் செய்தாள்

இந்நாளே என்கின்றார் என்னடி அம்மா
என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா (4)

*என்பது **நான்காம்** பாடல்.*

*(139) **நற்றாய் செவிலிக்குக் கூறல்:** இஃது எழுசீர்க்கழி நெடிலடி ஆகியவிருத்த யாப்பால் அமைந்த **பத்துப்** பாடல் களைக் கொண்டது.*

சத்திய ஞான சபாபதி எனக்கே
தனிப்பதி ஆயினான் என்றாள்
நித்திய வாழ்வு பெற்றுநான் இன்ப
நிலைதனில் நிறைந்தனன் என்றாள்
பித்தியல் உலகீர் காண்மினோ சித்திப்
பேறெலாம் என்வசத் தென்றாள்
எத்திசை யீரும் ஒத்திவண் வருக
என்றனள் எனதுமெல் லியலே (4)

*என்பது **நான்காம்** பாடல்.*

*(140) **தோழிக்குரிமை கிளத்தல்:** எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்த யாப்பில் அமைந்த **பத்துப்**பாடல்களைக் கொண்டது இப்பதிகம்.*

மடங்கலந்தார் பெறற்கரிய நடத்தரசே நினக்கு
மணவாளர் எனினும்உன்பால் வார்த்தைமகிழ்ந் துரைக்க
இடங்கலந்த மூர்த்திகள்தாம் வந்தால்அங் கவர்பால்
எண்ணம்இலா திருக்கின்றாய் என்கொல்என்றாய் தோழி
மடங்குசம யத்தலைவர் மதத்தலைவர் இவர்க்கும்
வயங்கும்இவர்க் குபகரிக்கும் மதத்தலைவர் களுக்கும்
அடங்குகுடி அல்லடிநான் திருச்சிற்றம் பலத்தே
ஆடல்அடிப் பணிக்கென்றே அமைந்தகுடி அறியே (5)

*என்பது **ஐந்தாம்** பாடல்.*

*(141) **தலைவி கூறல்:** எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்த யாப்பில் அமைந்த **பத்துப்** பாடல்கள் இதில் அடக்கம்.*

என்னைமண மாலையிட்டார் என்னுயிரில் கலந்தார்
எல்லாம்செய் வல்லசித்தர் எனக்கறிவித் ததனை
இன்னஉல கினர்அறியார் ஆதலினால் பலவே
இயம்புகின்றார் இம்புகநம் தலைவர்வரு தருணம்
மன்னியகா லையில்ஆகும் மாளிகையை விரைந்து
மங்கலங்கள் புனைந்திடுக மயங்கிஐயம் அடையேல்
தன்நிகர் தான் ஆம்பொதுவில் நடம்புரிவார் ஆணை
சத்தியம்சத் தியம்மாதே சத்தியம்சத் தியமே (6)

*என்பது **ஆறாம்** பாடல்.*

*(142) **அநுபவ மாலை:** இதில் எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்த யாப்பில் அமைந்த **நூறு** பாடல்கள் அடங்கியுள்ளன.*

அம்பலத்தே திருநடஞ்செய் அடிமலர்என் முதுடிமேல்
அணிந்துகொண்டேன் அன்பொடும்என் ஆருயிர்க்கும் அணிந்தேன்
எம்பரத்தே மணக்கும்அந்த மலர்மணத்தைத் தோழி
என்உரைப்பேன் உரைக்கஎன்றால் என்னளவன் றதுவே
வம்பிசைத்தேன் அன்றடிநீ என்அருகே இருந்துன்
மணிநாசி அடைப்பதனைத் திறந்துமுகந் தறிகாண்
நம்புறுபார் முதல்நாத வரையுள்நாட் டவரும்
நன்குமுகத் தளர்வியத்தார் நன்மணம்ஈ தெனவே (1)

தன்வடிவம் தானாகும் திருச்சிற்றம் பலத்தே
தனிநடஞ்செய் பெருந்தலைவர் பொற்சபைஎங் கணவர்
பொன்வடிவம் இருந்தவண்ணம் நினைத்திடும்போ தெல்லாம்
புகலரும்பே ரானந்த போகவெள்ளம் ததும்பி
என்வடிவில் பொங்குகின்ற தம்மாஎன் உள்ளம்
இருந்தபடி என்புகல்வேன் என்அளவன் றதுதான்

முன்வடிவம் கரைந்தினிய சர்க்கரையும் தேனும்
முக்கனியும் கூட்டிஉண்ட பக்கமும்சா லாதே (32)

*என்பன இதில்* ***இரண்டு*** *பாடல்கள்.*

*(144)* ***சத்திய அறிவிப்பு:*** *இதில் எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தாலான* ***நான்கு*** *பாடல்கள் அடக்கம்.*

தனித்தலைமைப் பெரும்பதிஎன் தந்தைவரு கின்ற
தருணம் இது சத்தியம்காண் சகதலத்தீர் கேண்மின்
இனித்தநறும் கனிபோன்றே என்னுளம்தித் திக்க
இன்னமுதம் அளித்தென்னை ஏழுலகம் போற்ற
மனித்தஉடம் பிதைஅழியா வாய்மைஉடம் பாக்கி
மன்னியசித் தெல்லாம்செய் வல்லபமும் கொடுத்தே
கனித்தசிவா னந்தம்எனும் பெரும்போகம் தனிலே
களித்திடவைத் திடுகின்ற காலையும்இங் கிதுவே (2)

*என்பது இதன்* ***இரண்டாம்*** *பாடல். இப்பகுதியுடன் ஆறாம் திருமுறை நிறைவு பெறுகின்றது.*

## உரைநடைப்பகுதி

*அருட்பிரகாச வள்ளலார் அருளிய உரைநடைநூல்கள், வியாக்கியானங்கள், மருத்துவக் குறிப்புகள், உபதேசங்கள், திருமுகங்கள், அழைப்புகள், அறிவிப்புகள், கட்டளைகள், விண்ணப்பங்கள்-இப்பகுதியுள் அடங்கும்.*

## 3. தண்டபாணிஅடிகள் (1839–1898)

*திக்கெலாம் புகழும் திருநெல்வேலிச் சீமையிலே 1839-இல் தோன்றியவர். தந்தையார்* ***செந்தில்நாயகம் பிள்ளை;*** *தாயார்* ***பேய்ச்சிமுத்தம்மையார்.*** *அடிகளாருக்கு இடப்பெற்ற பிள்ளைத் திருநாமம்* ***சங்கரலிங்கம்*** *என்பது. பிறந்து முதல் அழுதரற்றுதல் முதலிவைகளின்றிக் குழந்தை வாளா கிடந்தது கண்டு கண்டோர் குழவி*

பிழைக்குமோ என்று ஐயுற்றனர். தந்தையார் கனவில் முழுமுதற்கடவுள் தோன்றி திருநீற்றையும் செவ்வந்திமலர் ஒன்றையும் தந்து "குழந்தைக்குச் **சங்கரலிங்கம்** என்று பெயரிட்டு அழைப்பாயாக;[1] அங்ஙனம் செய்தபின் குழந்தை சிறப்புடன் விளங்கும்" என்று திருவாய்மலர்ந்து மறைந் தருளினார். கண் விழித்த செந்தில்நாயகம்பிள்ளை கையில் திருநீற்றையும் மலரையும் கண்டு நீற்றைக் குழந்தைக்கு அணிந்து **'சங்கரலிங்கம்'** என்று பெயரிட்டார். ஐந்தாண் டில் குழந்தையைப் பள்ளியில் சேர்ந்தனர். ஆறாம் ஆண் டின் இறுதியில் தந்தையார் விண்ணுலகேகினார். செந்தில் நாயகத்தின் நண்பர் சீதராம நாயகர் என்பார் குழந்தை யைக் கவனித்து ஆவன செய்தலை மேற்கொண்டார். திருமகள், ஆனை முகக்கடவுள் முதலிய கடவுளரின் அரு மறையையும் வழிபாட்டு முறையையும் சங்கரலிங்கத்துக்குக் கற்பித்தபிறகு 'முருகப்பிரானது ஆறெழுத்து மந்திரத்தையும்' வேல்வழிபாட்டு முறையையும் போதித்தார். பின்னர் பெரிய அன்னையார் ஊராகிய **சுரண்டையை** அடைந்து கல்வி கற்றார்.

**செய்யுள் இயற்றல்:** தாம் தங்கியிருந்த ஊரில் உள்ள அம்மனுக்குச் சிறப்பு வழிபாடு நடைபெற்றது. அம்மனின்

1. ஆழ்வார் திருநகரியில் பிறந்த நம்மாழ்வாரும் பிறந்தபோது இந் நிலையில் இருந்ததாக வரலாறு. திருக்குறுங்குடி நம்பி யின் திருவருளால் அவதரித்த திருக்குழந்தை அழுதரற்றுதல் பால் பருகல் முதலான இயல்பு ஒன்றுமில்லாது கிடந்த குழந் தையைப் பெற்றோர்கள் உள்ளூர் ஆதிநாதப் பெருமாளைச் சேவிக்கச் செய்து அவர்திருமுன் இட, அது அத்திருக் கோயிலுள்ள புளியமரத்தடியில் சென்று அமர்ந்தது. 'சட கோபன்' என்று திருநாமம் இட்டு வளர்த்து வந்தனர் பெற்றோர். பதினாறாண்டு வரை பேச்சின்றி வளர்ந்து வந்தது. இப்படிச் செல்கிறது இவர் வரலாறு- இஃது ஈண்டு நினைக்கத் தக்கது.

பெயர் **'பூமிகாத்தாள்'** என்பது அப்பெயர்க்காரணம் ஒரு வருக்கும் தெரியவில்லை. அந்நாளில் இவருக்கு **அகவை எட்டு**. சங்கரலிங்கத்துக்கும் தெய்வத்திருவருள் உண்டா யிற்று. அம்மனுடைய பெயர்க்காரணம் ஒரு வெண்பா வால் இவருடைய உள்ளத்தில் எழுந்தது. உடனே இவர்,

அமுதங் கடையுநாள் ஆலம் வெடித்துத்
திமுதமெனத் தீயெரித்துச்சென்ற–தமுதமெனத்
தீக்கடவுள் உண்டார் திருக்கண்டத் தைப்பிடித்துக்
காத்ததனால் பூமி காத்தாள்.

என்று பாடி அதன் பொருளையும் விளக்கினார். சில காலம் கழித்து நெல்லைக்குச் சென்று தாம் இயற்றிய பாடல்களை சீதாராம நாயருக்குக் காட்ட, நாயகர் மகிழ்ந்து கொண்டாடினர்.

**துறவுக்கோலம்:** நாட்கள் பல சென்றபின் வள்ளியூர் மலைக்குச் சென்றவர் முருகனை வணங்கிப் பலபாடல் களைப் பாடினார். கல்லாடையும் இலங்கோடு கௌபீனத் தையும் திருமுன்பு வைத்து வழிபாடு செய்து அவற்றைத் தாமே எடுத்து அணிந்து கொண்டார். பின்னர் நெல்லையை அடைந்து தவம் புரிந்து கொண்டிருந்தார். **திருச்செந்தில், திருவுருமாமலை** முதலிய பதிகட்குச் சென்று நூல்கள் பலஇயற்றினார்.

**பல திருப்பெயர்கள்:** சங்கரலிங்கம் அவர்களின் பல் வேறு செயற்பாடுகளினால் பல பெயர்களால் வழங்கப் பெற்றார்.

**(1) முருகதாசர்:** சங்கரலிங்கனாரின் முருகவழிபாடு, அன்பு முதலிய பெருமைகளை உணர்ந்த உலகினர். **'முருக தாசர்'** என்ற ஒரு திருநாமத்தை வழங்கினர்; சிலகாலம் தாம் செய்துவந்த சிறுதெய்வ வழிபாடுகளுக்காக வருந்தி,

எல்லாவற்றையும் முருகனுக்கே உரியதாக்கி அப்பெருமானையே உறுதியுடன் வழிபட்டார்.

முருகன் காட்சி தராததால் தாமிரபரணியாற்றின் நடுவில் உள்ள முருகன் திருக்கோயிலில் தம் பாடல்கள் எழுதிய பெட்டியை வைத்து விட்டு தாம் திருமலை என்னும் திருப்பதிக்குச் சென்று (நெல்லை மாவட்டத்திலுள்ள மலை) முருகனை வணங்கிச் சில பாடல்களை கூறி பிறகு வடக்கில் தலைவைத்து உடலை மலையிலிருந்து உருட்டி விட்டார். உடலுக்கு எத்தகைய ஊறுபாடும் உண்டாக வில்லை. கற்களில் உராய்ந்ததனால் சிறுசிறு காயங்களே ஏற்பட்டன. வடிந்த குருதியில திருநீற்றைப் பூசி மறைத்துக் கொண்டார். இந்நிகழ்ச்சியை மெய்பிப்பதாக அடிகளாரின்,

வடதிசையில் தலைவைத்து
　　மறலிதிசைக் கால்நீட்டி
உடலையந்தத் திருமலையில்
　　உச்சியினின் றுருட்டிவிட்டேன்
விடலையிடும் தேங்காய்போல்
　　வேறுபட்டுச் சிதறாமல்
மடமடெனக் கொண்டங்கோர்
　　மண்தரையில் தங்கியதே.

என்ற பாடல் அகச் சான்றாக அமைகின்றது. ஒரு சைவ வேளாள அன்பர் அடிகளின் உடற்காயங்கள் ஆறுதற்குத் தக்க மருந்துகள் செய்தனர். புண்கள் பெரும்பாலும் ஆறின. நெல்லைக்குத் திரும்பியபோது ஆற்றில் வைத்த பெட்டியிலுள்ள ஏடுகளை நீர் அடித்துக் கொண்டு சென்றதைக் கண்டார். கையிலிருந்த ஏடுகளையும் கிழித்தெறிந்து விட்டார். ஒருநாள் அடிகள் அறிதுயிலில் அமர்ந்திருந்த பொழுது வள்ளியம்மை ஒரு குறப்பெண் வடிவில் தோன்றி அடிகளின் நெற்றியிலும் வாயிலும் திருநீறையிட்டு இடத் தோளில் இருந்த புண்ணில் நீற்றை அப்பிவிட்டு மறைந்தனர்.

*(2) **திருப்புகழ் சுவாமிகள்:*** *அடிகள்* ***அருணகிரி நாதர் பாணியில்*** *முருகன்மீது சந்தம் அமைந்த பாடல்களைக் கணக்கில்லாமல் பாடியதனால்* ***'திருப்புகழ் சுவாமிகள்'*** *என்றும் பெயர் உண்டாயிற்று.*

*(3) **தண்டபாணி அடிகள்:*** *அடிகள் திருநீற்றை உடலெங்கும் பூசி வெள்ளையாடையால் இலங்கோடு. கௌபீனம் அணிந்து இடுப்பில் சிறிய கல்லாடையைச் சுற்றிக் கொண்டு கையில் தடியொன்று பிடித்துக் காட்சி அளித்ததைக் கண்டவர்கள் பழநி முருகனை நினைந்து* ***'தண்டபாணி அடிகள்'*** *என்ற பெயரை வழங்கினர். இதுவே அடிகளின் நிரந்தரப் பெயராகப் பெருவழக்காகி விட்டது.*

*(4) **வண்ணச் சரபம்:*** *வண்ணப் பாடல்களை எண்ண முடியாத அளவிலும் வேறொருவரும் பாடமுடியாத வகையிலும் வெகுவிரைவாகவும் வியக்கத்தக்க வகையிலும் பாடியமையால்* ***'வண்ணச் சரபம்'*** *என்னும் திருப்பெயர் உண்டாயிற்று. இப்பெயர்கள் தோன்றவே* ***'சங்கரலிங்கம்'*** *என்று பெற்றோர் இட்ட பெயர் அடியோடு மறைந்து போய் விட்டது.*

***பலதலங்கள் சுற்றல்:*** *அடிகளார் தம் வாழ்நாளில் பல தலங்களை வழிபட்டும், பலநூல்கள் இயற்றியும் பெரும்பாலும் அவற்றை அரங்கேற்றச் செய்தும் காலங்கழித்தார். சிலதலங்கள்மீது சிலபாடல்கள்:*

***கந்தகோட்டம் முருகன்மீது:*** *சென்னையை அடைந்த அடிகள்* ***சென்னைப்பிள்ளைத் தமிழ், சென்னைக் கந்தர் இதழகலந்தாதி, திருப்புகழ், வண்ணம்*** *முதலியவைகளைப் பாடினார். தாம் பட்ட கடனுக்கு முருகன் பொருள் தருவான் என்று நம்பினார்; நம்பிக்கை வீண் போயிற்று. இதனால் மனம் நொந்த அடிகள்,*

சென்னைநகரக் கந்தா நீ செட்டிகளைச் சேர்ந்தாலும்
உன்னை ஊதாரியென்றே எண்ணினேன்—என்னையவ்வா
றேமாறச் செய்தனையே இன்னுமென்ன செய்வாயென்
பாமாலைச் சொற்கள்கசப் பா.

என்ற வெண்பாவைப் பாடினார்.

***திருவொற்றியூர் காளிமீது:*** திருவொற்றியூர் இறைவன் மீது பதிகங்கள்பாடினார். கோயிலை வலம்வரும்போது வட்டப்பாறை நாச்சியாரைக்கண்டு அவள் கொலைப் பூசையை விரும்புபவள் என்று அறிந்து.

ஒற்றியூர்க் காளி உனக்கேனோ ஊன்விருப்பம்
வெற்றிமழு வானருட்சீர் வேண்டாவோ—சிற்றுயிரைக்
கொல்வார்க்கும் இன்பம் கொடாதான் அவன்கண்டாய்
நல்வார்த்தை சொன்னேன்இந் நாள்.

என்னும் வெண்பாவைப் பாடினார்.

***திருவண்ணாமலையில்*** அடிகள் தன்முற்பிறப்புத் தன்மையை அறிந்து கொள்ள விழைந்தார். ஒரு நாள் முருகன் அடிகளின்கனவில் தோன்றி. "நீ அருணகிரியின் ஒரு கூறாக இவ்வுலகில் தோன்றியுள்ளாய்; அதைக் குறித் துச் சிறிதும் ஐயப்படாதே" என்று கூறி மறைந்தருளினான். இச்செய்தியை அடிகள்,

வல்லைவந் தன்பரைக் காக்குஞ்செவ்
　　வேற்கை வரதனைக்கண்
டெல்லையில் வாக்களிப் பாய்மடி
　　மீதிலிருக்கும் என்னை
தொல்லை அருணகிரிதானென் றன்னவன்
　　சொன்ன துண்மை
இல்லையென் றாற்குமுக் கென்று வெங்
　　கோடை யிடிவிழுந்தே.

என்னும் செய்யுளில் குறிப்பிட்டுள்ளார். திருவண்ணா மலையில் அடிகள் இருந்தபோது தலையில் **'பொடிப்பு'** என்னும் சிறு சிரங்கால் தொல்லைப்பட்டார். முருகனின் இந்தத் திருவிளையாடலைப் பிடிக்காத அடிகள்,

> • கோதுபடாத் தென்னருணைக் கோபுரத்து வேளுறவு
> போதும்போ தும்போதும் போதுமே—வாதுசெயும்
> பொல்லார் பகையும் பொடிப்புநோ யுங்கொடுத்தான்
> நல்லானா னாற்பார்க்க லாம்.

என்ற செய்யுள் பாடினார்.

**கேரளத்தில்:** கேரளம் சென்று அங்குப் பல சந்தர்ப்பங் களில் பல பாடல்கள் பாடியுள்ளார். கேரளத்தில் இருந்த போது ஒருநாள் பட்டினியாக இருக்க நேர்ந்தது. திருமாலே ஓர் அந்தணனாகத் தோன்றி அமுதளித்துச் சென்றார். அடிகள் அந்நிகழ்ச்சியைப் பாராட்டி,

> குருவனப்பும் கண்டறியார் கொச்சிவள நாட்டில்
> பெருவளத்தில் என்னையன்பிற் பேணி—அருமையுடன்
> அன்னங் கொடுக்கவந்த அந்தணனே அந்தவண்ணஞ்
> சொன்னங் கொடுக்கவொண்ணா தோ.

என்ற பாடல் பாடினார்.

ஒருவன் செய்ய இருந்த உயிர்ப்பலியைத் தடுத்தது, அரவு கடியுண்ட பெண்ணை கருடன் துதிபாடி தீர்த்தது, மக்கட்பேறின்றி வருந்தும் ஒருவருக்கு மக்கட்பேறு உண்டாகுமாறு செய்தல்-போன்ற பல நிகழ்ச்சிகள் பாடல்களைத் தந்துள்ளன.

**'தில்லைத் திருவாயிரம்'** பாடி கூத்தப்பெருமானைப் போற்றினார். நூலும் அரங்கேற்றப்பெற்றது. இங்ஙனமே அரங்கநகர் அப்பன்மீதும் **'திருவரங்கத் திருவாயிரம்'** பாடி அரங்கேற்றமும் செய்துள்ளார்.

*திருவாமாத்தூரில் வீடுபேறு:* திருவாமாத்தூர் அடிகளுக்குப் பிடித்தமானதலம். அவ்விடத்தில் திருமடம் ஒன்று அமைத்துக் கொண்டு ஆறெழுத்து மந்திரத்தைக் கோடிக் கணக்கில் உருவேற்றிக் கொண்டிருந்தார். இதன் கடுமை சூட்டுநோய் தந்தது. தொல்லைக் கஞ்சி அடிகள் தம் கொள்கைகளை மாற்றிக் கொள்ளவில்லை. 1898-இல் ஆனித்திங்கள் 23 ஆம் நாள் திருவோணத்தில் தமது நாற்பத் தொன்பதாம் அகவையில் முருகப் பெருமானின் திருவடிவ நீழலை அடைந்தார். அடிகளின் தொண்டர்கள் அடிகளின் திருவுடலைச் சமாதித்து வைத்துத் திருக்கோயில் திருமடம் முதலியன அமைத்து வழிபாடாற்றி வருகின்றனர்.

*அடிகள் காலத்திய அறிஞர்கள்:* அடிகள் **வள்ளல் பெருமானைப்** பலமுறை கண்டு அளவளாவியுள்ளார். **ஆறுமுக நாவலர், மகாவித்துவான் மாம்பழக்கவிச் சிங்க நாவலர், மகாவித்துவான் காஞ்சி சபாபதி முதலி யார்,** அவருடைய மாணவர் **அட்டாவதானம் சபாபதி முதலியார், பூவை கலியாணசுந்தர முதலியார்** முதலிய பலர் அடிகள் காலத்திய அறிஞர்களாவர். தண்டபாணி அடிகள் நூல் அரங்கேற்றம் ஒன்றைச் செய்துவிட்டு அடியார் குழாத்துடன் தெருவில் வந்து கொண்டிருந்த போது பூண்டி அரங்கநாத முதலியார் என்னும் பேரறிஞர் அடிகளைத் தெருவில் கண்டு கிழே விழுந்து வணங்கித் திருநீறு பெற்றுச் சென்றனர். அழுக்காறு கொண்ட சில புலவர்களும் இருந்தனர்.

*படைப்புகள்:* அடிகளால் இயற்றப்பெற்ற நூல்கள் கிழித்தெறிந்தவை போக இப்போது எஞ்சியிருப்பவை 82 ஆகும்.[2]

---

2. பட்டியலை-தமிழ்ப்புலவர் வரிசை ஐந்தாம் புத்தகம் (பகுதி-2) காண்க.

## 4. சுப்பிரமணிய பாரதியார் (1882–1921)

தமிழ்நாட்டில் நெல்லை மாவட்டத்திலுள்ள எட்டய புரத்தில் 1882-இல் பிறந்தார். தந்தையார் **சின்னசாமி அய்யர்**; தாயார் **இலட்சுமி அம்மாள்**. சிறுவயதில் தமிழில் தேர்ச்சி பெற்றிருந்த தம் தந்தையிடம் சிறிது காலம் கற்றார். சிறிது காலம் இந்துக் கல்லூரியில் கற்றார். தந்தையின் மறைவால் கல்லூரிப் படிப்பு நின்றது. தம் அத்தையாருடன் காசிக்குச் சென்று அலகபாத் பல்கலைக் கழகத்தில் புகுமுக வகுப்பில் சேர்ந்து பயின்று அத்தேர்வில் வெற்றி பெற்றார். 12–ஆம் வயதில் திருமணம். மனைவி **செல்லம்மாள்**. இவர்தம் சுயசரிதையில் வாழ்க்கைப்பற்றிய குறிப்புகள் உள்ளன. மதுரை சேதுபதி உயர்நிலைப்பள்ளி யில் சில மாதங்கள் தமிழாசிரியர் பணி. சென்னை வந்து சுதேசமித்திரன் நாளிதழில் சிலகாலம் துணையாசிரியர் பணி. **'இந்தியா'** என்னும் செய்தி இதழ் தொடங்கி உணர்ச்சிபொங்கும் கட்டுரைகள் வரைந்து வான்புகழ் பெற்றார். தேசபக்தியால் ஈர்க்கப்பெற்றார். சிறிது காலம் சிறைவாசம். புதுவையில் பத்தாண்டுக் காலம் வாசம். அங்குதான் சுதந்திர உணர்ச்சி ஊட்டும் பாடல்களை எழுதிக் குவித்தார். இவர்தம் **'குயில்பாட்டு'** இங்குதான் தோன்றியது.

முறையாகத் தமிழ்க்கல்வி பயிலாவிடினும் எப்போதும் கவிதைக் கடலில் மிதந்து கொண்டிருப்பார். தமிழ்க் கவிதை யின் உயிரொளியை அள்ளிப்பருகியிருந்தார். தமிழ்ப் பண்பு அவர் உடன் பிறப்பு. **'விளையும் பயிர் முளையிலே தெரியும்'** என்பதுபோல் கவிதை பொழியும் திறனை பாரதியார் சிறுவயதிலேயே அருளாகப்பெற்றார். இராம லிங்கஅடிகட்குப் பிறகு தோன்றிய இசைக்கவி இப்பெரு மகனாரேயாவர். இராமலிங்க அடிகள் கடவுள் பக்தியால் தம்மிடம் உதித்த உணர்ச்சியைக் கவிதைப் பொருளாகக் கொண்டு இசைநிறைந்த பாடல்களைப் பழைய முறைகளை

அநுட்டித்தும் சில புதிய காவிய உறுப்புகளைக் கையாண்டும் பாடிக் குவித்தார். பாரதியாரின் கவிதாசக்தி கனிந்த நாட்டுப்பற்றான அமுதக்கடலில் பிறந்து நவீன நாகரிக மான வானின் ஒளியைப் பருகி மலர்ந்தது. இங்ஙனம் பாடிக் குவித்த கவிஞர் 1921–இல் செப்டம்பர் 11–இல் புகழுடம்பை விட்டுப் பூத உடம்பைத் துறந்தார். இவர்தம் படைப்புகளை **தேசிய கீதங்கள், தோத்திரங்கள், வேதாந்தப்பாடல்கள், காவியங்கள், தனிப்பாடல்கள்** என்று வகைப்படுத்திப் பலர் வெளியிட்டுள்ளனர்.

***பாரதியார் பாடல்கள்:*** இவற்றில் **'தோத்திரப் பாடல்கள்'** என்ற பகுதியில் சைவம்பற்றிய பாடல்கள் காணப் படுகின்றன. இவற்றை (1) **யாப்புவழி அமைந்த பாடல்கள்.** (2) **இசைப்பாடல்கள்** (கீர்த்தனைகள்) என்ற இரண்டு வகையாகப் பிரித்து நோக்கலாம்.

***(1) யாப்பு வழியில்:*** இவ்வகையில் அமைந்தவற்றை முதலில் காண்போம்.

***(அ) விநாயகர் நான்மணிமாலை:*** இது பல்வேறு யாப்பு களில் அமைந்த **நாற்பது** பாடல்களைக் கொண்டது. அந்தாதித் தொடையில் அமைந்தது. புதுவை மணக்குளத்து விநாயகர்மீது அமைந்தது. சில பாடல்களைக் காண்போம்.

காலைப் பிடித்தேன் கணபதி
    நின்பதம் கண்ணிலொற்றி
நூலைப் பலபல வாகச்
    சமைத்து நொடிப்பொழுதும்
வேலைத் தவறு நிகழாது
    நல்ல வினைகள் செய்துன்
கோலை மனமெனு நாட்டி
    னிறுத்தல் குறியெனக்கே (6)

இது **கலித்துறையால்** அமைந்தது.

எனக்கு வேண்டும் வரங்களை
இசைப்பேன் கேளாய் கணபதி,
மனத்திற் சலன மில்லாமல்,
மதியில் இருளேதோன்றாமல்,
நினைக்கும் பொழுது நின்மவுன
நிலைவந் திடநீ செயல்வேண்டும்,
கனக்குஞ் செல்வம் நூறுவயது
இவையுந் தரநீ கடவாயே (7)

*இது அறுசீர் விருத்தத்தால் அமைந்தது.*

மேன்மைப் படுவாய் மனமேகேள்
விண்ணின் இடிமுன் விழுந்தாலும்
பான்மை தவறி நடுங்காதே,
பயத்தால் ஏதும் பயனில்லை
யான்முன்உரைத்தேன் கோடிமுறை
இன்னும் கோடி முறைசொல்வேன்,
ஆன்மா வான கணபதியின்
அருளுண்டு அச்சம் இல்லையே (23)

*இது **விருத்தயாப்பில்** அமைந்தது.*

நமக்குத் தொழில்கவிதை நாட்டிற் குழைத்தல்
இமைப்பொழுதும் சோரா திருத்தல்—உமைக்கினிய
மைந்தன் கணநாதன் நங்குடியை வாழ்விப்பான்
சிந்தையே இம்மூன்றுஞ் செய் (25)

*இது **வெண்பாவில்** அமைந்தது.*

மொய்க்குங் கவலைப் பகைபோக்கி
முன்னோன் அருளைத் துணையாக்கி,
எய்க்கு நெஞ்சை வலியுறுத்தி
உடலை இரும்புக் கிணையாக்கிப்
பொய்க்குங் கலியை நான்கொன்று,
பூலோ கத்தார் கண்முன்னே,

மெய்க்குங் கிருத யுகத்தினையே
கொணர்வேன், தெய்வ விதியிஃதே (39)

*இஃது அறுசீர் விருத்தத்தில் அமைந்தது.*

*(ஆ)* **தோத்திரப் பாக்கள்:** *இதில் (65)* **'ஆறுணை'** *என்ற தலைப்பில்* **ஆறு** *பாடல்கள் உள்ளன. ஒன்று* **கணநாதன்** *பேரிலும் மற்றொன்று* **பராசக்தி** *பேரிலும், பிறிதொன்று* **வடிவேலன்** *பேரிலும் அமைந்துள்ளன.* **கலைமகளை வேண்டுதல்** *(61), (நொண்டிச் சிந்தில் அமைந்தது) என்பதால்* **ஐந்து** *பாடல்களும்,* **'வெள்ளைத் தாமரை'** *(62) என்ற தலைப்பில்* **பத்துப்**பாடல்களும் *உள்ளன. (61)* **'மூன்றுகாதல்'** *(64) என்ற தலைப்பில் முதலாவது சரசுவதிகாதலாகவும், மூன்றாவது காளிகாதலாகவும் அமைந்துள்ளன.*

*(30)* **'காளிப்பாட்டு'** *என்ற தலைப்பில்* **இரண்டு** *பாடல்கள்: முதலாவது,*

யாது மாகி நின்றாய்–காளி
எங்குநீ நிறைந்தாய்
தீது நன்மை யெல்லாம்–காளி
தெய்வ லீலை யன்றோ?
பூதம் ஐந்து மானாய்–காளி
பொறிகள் ஐந்து மானாய்
போதமாகி நின்றாய்–காளி
பொறியை விஞ்சி நின்றாய் (1)

*என்பது.*

*(31)* **'காளிதோத்திரம்'** *என்ற தலைப்பில்* **ஏழு** *பாடல்கள்.*

எந்த நாளும் நின்மேல்–தாயே,
இசைகள் பாடி வாழ்வேன்
கந்த னைப்ப யந்தாய்–தாயே,
கருணை வெள்ள மானாய்!

மந்த மாரு தத்தில்—வானில்
மலையினுச்சி மீதில்
சிந்தை யெங்கு செல்லும்—அங்குன்
செம்மை தோன்றும் அன்றே! (2)

ஞாயி றென்ற கோளம்—தருமோர்
நல்ல பேரொ ளிக்கே
தேய மீதோர் உவமை—எவரே
தேடி யோத வல்லார்?
வாயி னிக்கும் அம்மா— அழகாம்
மதியின் இன்ப ஒளியை
நேய மோடு ரைத்தால்—ஆங்கே
நெஞ்சி ளக்கம் எய்தும் (6)

*(37) 'ஏ காளீ' என்ற தலைப்பிலும் **இரண்டு** பாடல்கள் உள்ளன. (38) **'மகாகாளியின் புகழ்'** என்ற தலைப்பில் **'காவடிச் சிந்து'** மெட்டில் **மூன்று** பாடல்கள் உள்ளன. இவற்றில்,*

காலமாம் வனத்திலண்டக் கோலமா மரத்தின்மீது
காளிசக்தி என்றபெயர் கொண்டு—ரீங்
காரமிட் டுலவுமொரு வண்டு—தழல்
காலும்விழி நீலவண்ண மூலஅத்து வாக்களென்னும்
கால்களா றுடையதெனக் கண்டு—மறை
காணுமுனி வோருரைத்தார் பண்டு.
மேலுமாகிக் கீழுமாகி வேறுள திசையுமாகி
விண்ணுமண்ணு மானசக்தி வெள்ளம்—இந்த
வித்தையெல்லா மாங்கதுசெய் கள்ளம்—பழ
வேதமா யதன்முனுள்ள நாதமாய் விளங்குமிந்த
வீரசக்தி வெள்ளம்விழும் பள்ளம்—ஆக
வேண்டும் நித்த மென்றனேழை யுள்ளம் (1)

*என்பது இதன் **முதற்** பாடல்.*

*(40) '**முத்துமாரி**' என்ற தலைப்பில் நான்கு பாடல் களும், (41) **தேச முத்துமாரி** என்ற தலைப்பில் **ஏழு** கண்ணிகளும் உள்ளன. இவற்றுள்,*

தேடியுனைச் சரணடைந்தேன் தேசமுத்து மாரீ!
கேடதனை நீக்கிடுவாய், கேட்டவரம் தருவாய் (1)

நம்பினார் கெடுவதில்லை; நான்குமுறை தீர்ப்பு;
அம்பிகையைச் சரண்புகுந்தால் அதிகவரம் பெறலாம் (7)

*என்பன **இரண்டு** கண்ணிகள்.*

*(42) '**கோமதியின் மகிமை**' என்ற தலைப்பிலுள்ள **எட்டுப்** பாட்டில்கள் (எட்டாவது முற்றுப் பெறவில்லை) 'சங்கர நயினார் கோயில் ஆவுடையம்மையின் புகழ், சிவபிரான் தானும் மாலும் ஒரு பொருளென்றுணர்த்தி ஒரு வடிவு காட்டிய சரித்திரம்' (வானவில் பிரசுரம், சென்னை-600 035) என்பதாகும். இவை யனைத்தும் அற்புத மான பாடல்கள்; அறிவியல் பார்வையில் அமைந்தவை.*

தாருக வனத்தினிலே—சிவன்
சரணநின் மலரிடை யுளம்பதித்துச்
சீருறத் தவம்புரிவார்—பர
சிவன்புக ழமுதினை அருந்திடுவார்
பேருயர் முனிவர் முன்னே—கல்விப்
பெருங்கடல் பருகிய சூதனென்பான்
தேருமெய்ஞ் ஞானத்தினால்—உயர்
சிவனிகர் முனிவரன் செப்புகின்றான்; (1)

*என்று முதற்பாடல் தொடங்குகிறது. விரிவஞ்சி அனைத் தும் விடப்பெற்றன. அன்பர்கள் அவற்றைப்படித்து சிவன்பெருமையை உணர்வார்களாக,*

*(12) '**காணிநிலம்**' என்ற தலைப்பிலுள்ள பாடல். '**காணி நிலம் வேண்டும்**' என்று தொடங்கி பராசக்தியை வேண்டுகிறார் பலவற்றை. இறுதியாக,*

பாட்டுத் திறத்தாலே—இவ்வையத்தைப்
பாலித் திடவேணும்

*என்று வேண்டி தன் ஆசையையும் நிறைவு செய்கின்றார்.*

*(17)* **'மகாசக்தி வெண்பா'** *இத்தலைப்பில்* **நான்கு** *பாடல்கள்-வெண்பா யாப்பில் அமைந்தவை.* **இரண்டு** *ஈண்டுத் தரப்பெறுகின்றன.*

தன்னை மறந்து சகல உலகினையும்
மன்ன நிதங்காக்கும் மகாசக்தி—அன்னை
அவளே துணையென்று அனவரதம் நெஞ்சந்
துவளா திருத்தல் சுகம் **(1)**

நெஞ்சிற் கவலை நிதமும் பயிராக்கி,
அஞ்சி யுயிர்வாழ்தல் அறியாமை; —தஞ்சமென்றே
வையமெலாங் காக்கும் மகாசக்தி நல்லருளை
ஐயமறப் பற்றல் அறிவு **(2)**

*(8)* **'ஓம்சக்தி'** *என்ற தலைப்பில்* **நான்கு** *பாடல்களும் (50)* **பாராசக்தி** *என்ற தலைப்பில்* **ஐந்து** *பாடல்களும் உள்ளன.*

*(13)* **'நல்லதோர் வீணை'** *என்ற தலைப்பில்* **இரண்டு** *பாடல்கள்;*

விசையுறு பந்தினைப்போல்—உள்ளம்
வேண்டிய படிசெலும் உடல் கேட்டேன்,
நசையறு மனங்கேட்டேன்—நித்தம்
நவமெனச் சுடர்தரும் உயிர்கேட்டேன்
தசையினைச் தீச்சுடினும்—சிவ
சக்தியைப் பாடுநல் அகங்கேட்டேன்,
அசைவறு மதிகேட்டேன், —இவை
அருள்வதில் உனக்கெதுந் தடையு ளதோ? **(2)**

*என்பது அவற்றுள்* **இரண்டாம்** *பாடல்.*

*(21) **'சக்தி'** என்ற தலைப்பில் **மூன்று** பாடல்கள். இவை எண்சீர்கள் கொண்ட புதியவகைப் பாடல்கள் இவற்றுள்,*

வாழ்வு பெருக்கும் மதியே சக்தி
மாநிலம் காக்கும் வலியே சக்தி
தாழ்வு தடுக்கும் சதிரே சக்தி
சஞ்சலம் நீக்கும் தவமே சக்தி
வீழ்வு தடுக்கும் விறலே சக்தி
விண்ணை யளக்கும் விரிவே சக்தி
ஊழ்வினை நீக்கும் உயர்வே சக்தி
உள்ளத் தொளிரும் விளக்கே சக்தி **(3)**

*என்பது **மூன்றாம்** பாடல்.*

*(22) **'வைய முழுதும்'** என்ற தலைப்பிலுள்ளவை ஏழு கண்ணிகளைக் கொண்டவை. இவற்றுள் **மூன்று** இவண் காட்டப் பெறுகின்றன.*

வைய முழுதும் படைத்தளிக் கின்ற
மகாசக்தி தன்புகழ் வாழ்த்துகின்றோம்;
செய்யும் வினைகள் அனைத்திலு மேவெற்றி
சேர்ந்திட நல்லருள் செய்கவென்றே **(1)**

உயிரெனத் தோன்றி உணவுகொண் டேவளர்ந்
தோங்கிடும் சக்தியை ஓது கின்றோம்;
பயிரினைக் காக்கும் மழையென எங்களைப்
பாலித்து நித்தம் வளர்க்க வென்றே **(4)**

சித்தத்தி லேநின்று சேர்வ துணரும்
சிவசக்தி தன்புகழ் செப்புகின்றோம்;
இத்தரை மீதினில் இன்பங்கள் யாவும்
எமக்குத் தெரிந்திடல் வேண்டுமென்றே **(5)**

*(23) **'சக்தி விளக்கம்'** என்ற தலைப்பில் ஏழு பாடல்கள்: அவற்றுள்,*

ஆதிப் பரம்பபொருளின் ஊக்கம்–அதை
    அன்னை–யெனப்பணிதல் ஆக்கம்;
சூதில்லை காணுமிந்த நாட்டீர்–மற்றத்
    தொல்லை மதங்கள் செய்யுந் தூக்கம் (1)

மூலப் பழம்பொருளின்நாட்டம்–இந்த
    மூன்றுபுவியும்தன் ஆட்டம்;
காலப் பெருங்களத்தின் மீதே–எங்கள்
    காளி நடமுலகக் கூட்டம் (2)

ஆதி சிவனுடைய சக்தி–எங்கள்
    அன்னை அருள்பெறுதல் முக்தி;
மீதி உயிரிருக்கும்போதே–அதை
    வெல்லல் சுகத்தினுக்கு யுக்தி (5)

மூர்த்திகள் மூன்று பொருள்ஒன்று; –அந்த
    மூலப் பொருள்ஒளியின் குன்று;
நேர்த்தி திகழுமந்த ஒளியை–எந்த
    நேரமும் போற்றுசக்தி யென்று (7)

*என்பவை மூன்று பாடல்கள்.*

*(25)* ***'சக்தி திருப்புகழ்'*** *என்ற தலைப்பில் ஒருபுகழ் மாலை. இதில் ஒன்பது பாடல்கள்-மின்வெட்டுபோல.*

சக்திசக்தி சக்தீசக்தீ சக்தீசக்தீ யென்றோது
சக்திசக்தி சக்தீயென்பர்–சாகாரென்றே நின்றோது (1)

சக்திசக்தி என்றேவாழ்தல் சால்பாம் நம்மைச்சார்ந்தீரே
சக்திசக்தி யென்றீராகில்–சாகா உண்மைசேர்ந்தீரே (2)

சக்திசக்தி யென்றால் துன்பம்–தானேதீருங் கண்டீரே
சக்திசக்தி யென்றால்இன்பம்–தானே சேருங் கண்டீரே(6)

சக்திசக்தி வாழீயென்றால்–சம்பத்தெல்லாம் நேராகும்
சக்திசக்தி யென்றால் சக்தி–தாசன்என்றே பேராகும் (9)

*(33) 'மகா சக்தி பஞ்சகம்' என்ற தலைப்பில் ஐந்து பாடல்கள். பஞ்சகம்-ஐந்து கொண்டது.*

கரணமும் தனுவும் நினக்கெனத் தந்தேன்
காளிநீ காத்தருள் செய்யே;
மரணமும் அஞ்சேன்; நோய்களை யஞ்சேன்;
மாரவெம் பேயினை யஞ்சேன்
இரணமும் சுகமும், பழியுநற் புகழும்
யாவுமோர் பொருளெனக் கொள்ளேன்;
சரணமென் றுனது பதமலர் பணிந்தேன்;
தாயெனைக் காத்தலுன் கடனே **(1)**

*என்பது முதல் பாடல்.*

*(34) மகாசக்தி வாழ்த்து என்ற தலைப்பிலும் ஆறு பாடல்கள். இவற்றின் பாணியே தனி. இயற்கை அனைத் துமே சக்தியாகக் காண்கின்றார் கவிஞர்.*

விண்டு ரைக்க அறிய அரியதாய்
விரிந்த வான வெளியென நின்றனை;
அண்ட கோடிகள் வானில் அமைத்தனை;
அவற்றில் எண்ணற்ற வேகம் சமைத்தனை;
மண்ட லத்தை அணுஅணு வாக்கினால்
வருவ தெத்தனை யத்தனை யோசனை
கொண்ட தூரம் அவற்றிடை வைத்தனை;
கோல மேநினைக் காளியென் றேத்துவேன். (1)

பரிதி யென்னும் பொருளிடை யேய்ந்தனை;
பரவும் வெய்ய கதிரெனக் காய்ந்தனை;
கரிய மேகத் திரளெனச் செல்லுவை;
காலு மின்னென வந்துயிர் கொல்லுவை;
சொரியு நீரெனப் பல்லுயிர் போற்றுவை;
சூழும் வெள்ள மெனவுயிர் மாற்றுவை;
விரியும் நீள்கடல் என்ன நிறைந்தனை
வெல்க காளி யெனதம்மை வெல்கவே. (3)

வாயு வாகி வெளியை அளந்தனை
 வாழ்வெ தற்கும் உயிர்நிலை ஆயினை;
தேயு வாகி யொளியருள் செய்குவை;
 செத்த வற்றைக் கருப்பொருள் ஆக்குவை
பாயு மாயிரம் சக்திக ளாகியே
 பாரி லுள்ள தொழில்கள் இயற்றுவை;
சாயும் பல்லுயிர் கொல்லுவை, நிற்பன
 தம்மைக் காத்துச் சுகம்பல நல்குவை. (4)

நிலத்தின் கீழ்பல் லுலோகங்க ளாயினை;
 நீரின் கீழெண் ணிலாநிதி வைத்தனை;
தலத்தின் மீது மலையும் நதிகளும்,
 சாரும் காடும் சுனைகளு மாயினை;
குலத்தி லெண்ணற்ற பூண்டு பயிரினம்
 கூட்டி வைத்துப் பலநலந் துய்த்தனை;
புலத்தை யிட்டிங் குயிர்கள்செய்தாய், அன்னே
 போற்றி போற்றி, நின்னருள் போற்றியே. (5)

*கற்பனைத் தொலைநோக்கியைக் கொண்டு இந்த அகிலத்தையே நோக்கும் கவிஞன் திறன் நம்மை வியக்க வைக்கின்றது.*

*(35) '**ஊழிக்கூத்து**' என்ற தலைப்பில் ஐந்து பாடல்கள் உள்ளன. இதன் மெட்டு படிப்போரைத் திக்குமுக்காடச் செய்யும்.*

வெடிபடு மண்டத் திடிபல தாளம் போட—வெறும்
 வெளியி லிரத்தக் களியொடு பூதம் பாடப்—பாட்டின்
அடிபடு பொருளின் அடிபடு மொலியிற் கூடக்—களித்
 தாடுங் காளீ! சாமுண்டீகங் காளீ!
அன்னை! அன்னை! ஆடுங் கூத்தை
 நாடச் செய்தா யென்னை (1)

*என்பது முதற் பாடல்.*

*(28) **'மகாசக்தி'** என்ற தலைப்பில் மூன்று பாடல்கள். இவற்றில்,*

சந்திர னொளியில் அவளைக் கண்டேன்,
சரண மென்று புகுந்து கொண்டேன்
இந்திரி யங்களை வென்று விட்டேன்
எனதென் ஆசையைக் கொன்று விட்டேன் (1)

*என்பது இதன் முதற்பாடல்.*

*(14) **மகாசக்திக்கு விண்ணப்பம்:** என்ற தலைப்பில் மூன்று பாடல்கள். இவற்றில்,*

மோகத்தைக் கொன்றுவிடு—அல்லா லென்றன்
மூச்சை நிறுத்திவிடு;
தேகத்தைச்சாய்த்துவிடு—அல்லா லதில்
சிந்தனை மாய்த்துவிடு;
யோகத் திருத்திவிடு—அல்லா லென்றன்
ஊனைச் சிதைத்துவிடு;
ஏகத் திருந்துலகம்—இங்குள்ளன
யாவையும் செய்பவளே! (1)

*என்பது முதல் பாடல்.*

*(39) **'வெற்றி'** என்ற தலைப்பில் இரண்டு பாடல்கள்.*

எடுத்த காரியம் யாவினும் வெற்றி,
எங்கு நோக்கினும் வெற்றிமற் றாங்கே
விடுத்த வாய்மொழிக் கெங்கணும் வெற்றி
வேண்டி னேனுக் கருளினள் காளி;
தடுத்து நிற்பது தெய்வத மேனும்
சாரு மானுட மாயினும் அஃதைப்
படுத்து மாய்ப்பள் அருட்பெருங் காளி
பாரில் வெற்றி யெனக்குறு மாறே. (1)

*என்பது முதல் பாடல்.*

*(36) **'காளிக்கு சமர்ப்பணம்'** என்ற தலைப்பில் ஒரே ஒரு பாடல். அது;*

இந்த மெய்யும் கரணமும் பொறியும்
இருபத்தேழு வருடங்கள் காத்தனன்;
வந்த னம்அடி பேரருள் அன்னாய்
வைர வீ!திறற் சாமுண்டி காளி!
சிந்த னைதெளிந் தேனினி யுன்றன்
திருவ ருட்கெனை அர்ப்பணம் செய்தேன்
வந்தி ருந்து பலபய னாகும்
வகைதெ ரிந்துகொள் வாழி யடி!நீ

*என்பது.*

*(15) **அன்னையை வேண்டுதல்:** ஒரே ஒரு தனிப் பாடல்.*

எண்ணிய முடிதல் வேண்டும்;
நல்லவே எண்ணல் வேண்டும்;
திண்ணிய நெஞ்சம் வேண்டும்;
தெளிந்தநல் லறிவு வேண்டும்;
பண்ணிய பாவ மெல்லாம்
பரிதிமுன் பனியேபோல,
நண்ணிய நின்முன் இங்கு
நசித்திட வேண்டும் அன்னாய்!

*என்பது.*

***(2) இசை வழியில் (கீர்த்தனைகள்):*** *இவ்வகையிலும் சைவ இலக்கியங்கள் உண்டு. அவை.*

(2) ***முருகன் பாட்டு:***

முருகா–முருகா–முருகா

*என்று தொடங்குவது.*

***(4) முருகக்கடவுள் மீது கிளித்தூது:***

சொல்ல வல்லாயோ?–கிளியே
சொல்லநீ வல்லாயோ?

*என்று தொடங்குவது.*

*(3) **'வேலன் பாட்டு'** என்ற தலைப்பில் **மூன்று** பாடல்கள். முதல் பாட்டு.*

வில்லினை யொத்த புருவம் வளைத்தனை
வேலவா !

*என்று தொடங்குவது.*

*(20) **சக்திக் கூத்து***

தகத் தகத் தகத் தகதகவென் றாடாமோ?—சிவ
சக்தி சக்தி சக்தியென்று பாடாமோ?

*என்று தொடங்குவது.*

***(24) சக்திக்குஆத்ம சமர்ப்பணம்***

சக்தி தனக்கே கருவி யாக்கு—அது

*என்று தொடங்குவது. இது மிக நீண்டதோர் பாட்டு.*

*சுருக்கமாகக் கூறினால் பாரதியார் பதியின் தடத்த நிலையையே அதிகமாகப் பேசியுள்ளார். தம்மையும் **'சக்திதாசன்'** என்றும் கூறிக் கொள்ளுகின்றார். பாடல், பதிக எண்கள் 'மாபெருங் கவிஞர் பாரதியார் கவிதைகள்' (ரெட்டியார் பதிப்பு - ஐந்திணை வெளியீடு) என்பதில் உள்ளவாறு போடப்பெற்றுள்ளன.*

## 5. தேசிகவிநாயகம் பிள்ளை (1876–1954)

*கன்னியாகுமரி மாவட்டத்தில் சுசீந்திரத்தை அடுத்த **தேரூரில்** பிறந்தார். தந்தையார்-**சிவதாணுப்பிள்ளை;** அன்னையார் **ஆதிலட்சுமி அம்மையார்**. தொடக்கக் கல்வி-**தேரூர்;** ஆங்கிலப் பாடசாலைப் படிப்பு- **கோட்டாறு**. கல்லூரிப்படிப்பு **எப்.ஏ. திருமணம்**. புத்தேரியில் பிறந்த **புனிதவதி** என்ற பெயரையுடைய அம்மையார் வாழ்க்கைத் துணைவியானார். பள்ளி, கல்லூரிகளில் ஆசிரியராகப் பணியாற்றி ஓய்வுபெற்றவர். **தே.வி.** **'கவிமணி'** (பட்டம்) என்ற சுருக்கப்பெயர்களே இவரைக்*

குறிக்கும். நாகர்கோயிலுக்குச் சுமார் இரண்டு கல் வடக்கேயுள்ள புத்தேரியை (மனைவியார் பிறந்த ஊர்) சாந்தி வாழ்க்கைக்குரிய இடமாகக் கொண்டு வாழ்ந்தவர்.[1] இவர் இயற்றிய கவிதைகளின் தொகுப்பு **'மலரும் மாலையும்'** என்பது. இதில் சைவ இலக்கியங்களாக கலைமகள் துதி அஞ்சலி (12 பாடல்கள்), சுசீந்திரமாலை, குமரிப்பகவதி, முருகன் புகழ்மாலை (4 பாடல்கள்) அழகம்மை ஆசிரியவிருத்தம் (10பாடல்கள்) கோயில் வழிபாடு (8பாடல்கள்) காணப்பெறுகின்றன. இவை **'பக்திமஞ்சரி'** என்ற தலைப்பின்கீழ் அமைந்துள்ளன. இவற்றில் சில ஈண்டுக் காட்டப்பெறுகின்றன.

1. **கலைமகள் துதி:** ஒரே ஒரு பாடல்:

நாடிப் புலங்கள் உழுவார்
 கரமும், நயவுரைகள்
தேடிக்கொழிக்கும் கவிவாணர்
 நாவும், செழுங்கருணை
ஓடிப் பெருகும் அறிவாளர்
 நெஞ்சும் உவந்து நடம்
ஆடிக் களிக்கும் மயிலே!
 உன்பாதம் அடைக்கலமே.[2]

இது குமரகுருபரரின் கலைமகள் பற்றிய பாடல்களை விஞ்சி நிற்பதுபோல் தோன்றுகின்றது.

(3) **அஞ்சலி:** இத்தலைப்பின்கீழ் வரும் இரண்டு பாடல் கள்;

பண்ணொழுகு பாடலைப் பாடென் றெனக்குமருள்
 பாலிக்கும் வேளை, இந்தப்
பாரெங்கும் அறியாத கர்வமது பொங்கிப்
 பரந்துளம் விம்ம நிற்பேன்;

1. இந்த இடத்தில்தான் 1948-மே திங்களில் டாக்டர் ரெட்டியார் இவரைச் சந்தித்து அளவளாவினார்.
2. மலரும் மாலையும்-பக்தி மஞ்சரியில் முதல் பாடல்.

அண்ணலுன் திருமுகம் நோக்கிநிற்பேன்; விழிகள்
அருவிநீர் பாய நிற்பேன்;
ஆகாத குணமெலாம் அடியோடு நீங்கநல்
அமுதகுணம் ஓங்க நிற்பேன்;

எண்ணரிய ஆழியைத் தாண்டுபுள்போல் அன்பும்
இறகினை விரிக்கும், அதனால்
ஏத்தியிசை பாடத் தொடங்குவேன்; நீயும்அதில்
இன்புறுவை என்ப துணர்வேன்;

நண்ணுதற் கான்வழி வேறெதுங் கண்டிலேன்;
நானுமென் களிம யக்கால்
நண்பனென் றேயழைக் கின்றனன்; என்னையாள்
நாதனே! ஞான பரனே! (2)

## வேறு

இன்னிசைநீ பாடுமுறை ஏதுமறி யேன்நான்
இரவுபகல் கேட்டின்பம் எய்திவியந் திடுவேன்;
மன்னுலகை ஒளிசெய்வ துன்னிசையின் ஒளியாம்;
வானெங்கும் உலவுயிரும் உன்னிசையின் உயிராம்;
பன்னரிய நின்னிசையின் பாலாறு பொங்கிப்
பாறைகளும் உடைந்துருளப் பாய்ந்தொழுகும் அதனோடு
என்னிசையும் கலந்தொழுக ஏற்றகுரல் காணேன்;
எண்ணிலிசை வலையிலிழுத் தெனை யாளும் இறையே !(4)[3]

*இதனைத் தொடர்ந்து வரும் பாடல்கள் வேறு யாப்பில் அமைந்துள்ளன.*

*(4) **சுசீந்திர மாலை:** ஒரே ஒரு பாடல்தான் 'மாலை' என்ற பெயர் பெற்றுள்ளது.*

திங்களுன் கருணை காட்டும்;
தீக்கண்உன் வெகுளி காட்டும்;

3. மலரும் மாலையும்-6, 8.

கங்கையுன் பெருமை காட்டும்;
    கடுவும்உன் ஆண்மை காட்டும்;
சிங்கம்நுண் தடையைக் காட்டச்
    சிறையனம் இடையைக் காட்டும்;
மங்கையோர் பாகா! தாணு
    மாலயா! சுசிந்தை வாழ்வே![4]

*(5) குமரிபகவதி: இங்கும் ஒரே ஒரு பாடல்தான்.*

தென்னெல்லை காத்தாளும் தேவீ! குமரீ!நின்
பொன்னடியைக் கும்பிட்டுப் போற்றுகின்றேன்—மன்னு புகழ்ச்
செந்தமிழ்நாடு ஒன்றாகித் தேவர்நா டொத்துஉலகில்
சந்ததம் வாழவரம் தா.[5]

*(7) முருகன் புகழ்மாலை: முருகன்-சிவக்குமரன். இவனைப் பற்றி நான்கு பாடல்கள்; மூன்று இவண் தரப் பெறுகின்றன.*

புல்லும் பசுவிற்காம்;பூண்டும் மருந்திற்காம்;
கல்லும் திருக்கோயில் கட்டுதற்காம்;—தொல்லுலகில்
ஏழை எளியேன் ஏதற்காவேன்? செந்திநகர்
வாழும் வடிவேல வா (1)

முத்தையா! வேலா! முருகா! எனவோதும்
சொத்தையே தேடிச் சுகமடைவீர்! —நித்தமிவ்
வீடும் களமும் விளைநிலமும் தோப்புகளும்
மாடும் சதமாடு மா? (2)

---

4. மலரும் மாலையும்-17. சுசிந்தை-சுசிந்திரம். கன்னியாகுமரி மாவட்டத்தில் குமரிமுனைக்கருகிலுள்ள மிகப்பழமையான சிவத்தலம். இங்கு எழுந்தருளியிருக்கும் இறைவனின் திருநாமம் தாணுமாலயன் என்பது. தாணு-சிவன்; மால்-விட்டுணு; அயன்-நான்முகன், இம்மூவரும் சேர்ந்த மூர்த்தி, கடு-நஞ்சு.
5. மலரும் மாலையும்-18.

செந்தில் முருகா! திருமால் மருகா!என்
சிந்தை குடிகொண்ட தேசிகா! –வந்தினிய
பைந்தமிழ்ச் சோலையிலே பாடும் கவிக்குயில்கள்
சந்ததமும் வாழவரம் தா (4)[6]

*(8) **அழகம்மை ஆசிரியவிருத்தம்:** இது **பத்துப்** பாடல்களையும் காப்பாக விநாயகர்மீது அமைந்த பாடலும் கொண்டது. பாடல்கள் யாவும்,*

தென்னிரத புரிவாழும்[7] என்னரிய செல்வமே!
தேவிஅழ கம்மை உமையே!

*என்று முடிவன.*

சீருதவும் நல்லூராம் தேரூர் அழகிதிருப்
பேருதவும் பாவினையான் பேசவே–ஏருதய
மார்த்தாண்ட வேழம் வழுவேதும் வாராமல்
காத்தாண்டு கொள்ளக் கடன்.

*என்பது தேரூரில் எழுந்தருளியிருக்கும் உதய மார்த் தாண்ட விநாயகர்மீதுள்ள காப்பு.*

பொன்னையே பெண்ணையே மண்ணையே எண்ணிஎன்
பொழுதெலாம் போக்கி விட்டேன்;
புண்ணியச்செயலெதும் பண்ணியான் அறிகிலேன்;
பொல்லாங்கு புரியும் நெறியேன்;
முன்னையோர் சொன்னமொழி உன்னாத முழுமூடன்;
மூர்க்கரோ டுறவு கொண்டேன்;
மூவுலகும் என்னையொப் பாரில்லை; இல்லைஇது
முக்காலும் உண்மை, உண்மை;
அன்னையே நின்னையே அல்லாது பின்னையோ
ஆதாரம் வேறு உண்டோ?

---

6. மேலது - 22, 23, 25
7. இரதபுரி–தேரூர். சுசீந்திரத்துக்கு அருகில் உள்ளது. கவிமணி பிறந்த ஊர்.

அறிவற்ற சிறியேனை, அன்பற்ற கொடியேனை
அடிமையாய் ஆண்டு கொள்வாய்;
தென்னையே புன்னையே மன்னிவளர் சோலைஎத்
திக்கிலும் சூழும் ஊராம்;
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே!
தேவியழ கம்மை உமையே (4)

*என்பது **நான்காம்** பாடல்.*

வாணிக்கும் நளினிக்கும் அரியதாய் என்றுன்னை
வாயார வாழ்த்தி நின்றேன்;
மந்தாரம் முல்லைஇரு வாட்சிநீ யென்றுதலை
மாலையின் அணிந்து கொண்டேன்;

கோணுக்குள் வளர்கின்ற குவிலென் றுனைத்தினம்
கோணாது பேணுகின்றேன்;
குளிரான திங்களொடு கொண்டலென் றென்பவக்
கோடையும் தீர வந்தேன்;

மாணிக்கம் வயிரமர கதமும்நீ யென்றென்
மனப் பேடகத்து வைத்தேன்;
வையகத் தெளியேனை ஆட்கொள்ள வந்தகுல
மாதெய்வம் நீயல்ல வோ?

சேணுக்கு நாட்டுபல தூணுக்கு நிகரனெத்
தெங்கிளஞ் சூழும் ஊராம்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே!
தேவியழ கம்மை உமையே! (9)[8]

*என்பது இதன் **ஒன்பதாம்** பாடல்.*

***(9) கோயில் வழிபாடு:*** *கோயில் என்பது சைவர்களால் கருதப்பெறும் சிதம்பரம்; தில்லை. இதன் வழிபாடுபற்றி **எட்டுப்** பாடல்கள். இதில் நான்கு ஈண்டுத்தரப் பெறுகின்றன.*

8. மலரும் மாலையும் - 30, 35

கோவில் முழுதுங்கண்டேன்—உயர்
கோபுரம் ஏறிக்கண்டேன்;
தேவாதி தேவனையான்—தோழி!
தேடியுங் கண்டிலனே (1)

தில்லைப் பதியுங் கண்டேன்—அங்குச்
சிற்றம் பலமும்கண்டேன்;
கல்லைக் கனிசெய்வோனைத்—தோழி!
கண்களாற் கண்டிலனே (6)

கண்ணுக் கினியகண்டு—மனத்தைக்
காட்டில் அலையவிட்டு,
பண்ணிடும் பூசையாலே—தோழீ!
பயனொன் றில்லை, அடி! (7)

உள்ளத்தில் உள்ளான், அடி! —அதுநீ
உணர வேண்டும், அடி!
உள்ளத்தில் காண்பாய்எனில்—கோயில்
உள்ளேயும் காண்பாய்அடி! (8)[9]

*கவிமணி கடவுளைப்பற்றி அதிகமாய்ப் பாட வாய்ப் பில்லை. காலம்பூராவும் ஆசிரியத்தொழிலில் சென்றது. தொழிலையொட்டிக் குழந்தைப் பாடல்கள், சமூகம் பற்றிய பாடல்களை அதிகமாகப் பாடியுள்ளார். தனிப்பட்ட மனிதர்கள்மேல் வாழ்த்துப் பாடல்கள் அதிகமாகப் பாடி யுள்ளார். அவர் காலத்தில் மக்கள் சத்துவகுணம் மிக்க அப்பெருமகனாரிடம் வாழ்த்துப் பாடல்களைப் பெறு வதைப் பெருமையாகக் கொண்டிருந்தனர்.*

9. மேலது - 1, 6, 7, 8

# பின்னிணைப்பு

## பயன்பட்ட நூல்கள்


1. அருணாசலம். மு:தமிழ் இலக்கிய வரலாறு

i. ஒன்பதாம் நூற்றாண்டு (பாகம்-12)-1975.
ii. பத்தாம் நூற்றாண்டு (1972
iii. பதினோராம் நூற்றாண்டு (1971)
iv. பன்னிரண்டாம் நூற்றாண்டு: முதற்பாகம் (1973); இரண்டாம் பக்கம் (1973)
v. பதின்மூன்றாம் நூற்றாண்டு (1970)
vi. பதினான்காம் நூற்றாண்டு (1969)
vii. பதினைந்தாம் நூற்றாண்டு (1969)
viii. பதினாறாம் நூற்றாண்டு. முதற்பாகம் (1967); இரண்டாம் பாகம் (1975); மூன்றாம் பாகம் (1976)

2. இராமலிங்கஅடிகள்: திருவருட்பா- 6 திருமுறைகள். (சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர்-607303, தென்னார்க்காடு மாவட்டம்)
3. சுப்பிரமணி பாரதியார் : பாரதியார் பாடல்கள் எஸ். ஆர் சுப்பிரமணியபிள்ளை வெளியீடு (திருநெல்வேலி-டவுன்)
4. சுப்புரெட்டியார். ந, முத்தமிழ் காவலர் கி.ஆ. பெ. விசுவ நாதம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை-108. (1999)
5. சுப்புரெட்டியார். ந. தாயுமானவர் (கலைஞன் பதிப்பகம், தி.நகர், சென்னை-17)
6. தாயுமானஅடிகள்: தாயுமானவர் பாடல்கள் (பூவைகல யாண சுந்தர முதலியார் உரை (கழக வெளியீடு)
7. தேசிகவிநாயகம் பிள்ளை: மலரும்மாலையும். (பாரி நிலையம்)




**First Paper:** *என்ன ஆச்சரியம்?* **"Enna Aacharyam !" [1949]**

## ஓர் அறிமுகம்

**பேராசிரியர்**

# ந சுப்பு ரெட்டியார்




Books Published : **135 + 1**
Papers Published : **200** [Tamil 173 + English 27]
Endowments established: **10**
Endowment Lectures : **12**
Awards received: **8**
Prizes won : **14**
Titles conferred : **8**

## Masterpieces:

1) **Tamil Payitrum Murai [1957]**
2) **Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]**
3) **Kalvi Ulaviyal Kotpaadukal [1989]**
4) **Vainava Selvam [1995]**

## Financial Aid for publishing the Books:

a ) Tirumala Tirupathi Devasthanams - 21

b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

***Research on Professor's Books***

a) University of Madras - 1993 (leading to PhD)
b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)



பேராசிரியரின் 135 நூல்களில், தெரிவு செய்யப்பெற்ற 100 நூல்கள் (முழுமையாக)
**http://tinyurl.com/nsr100collections**
எனும் இணையதளத்தில் உள்ளன. [freely downloadable]



# India Book of Records

# CERTIFICATE

## CENTENARY CELEBRATIONS OF PROF DR. N SUBBU REDDIAR

**Prof Dr S Ramalingam (born on 13 Oct 1949) Organizing Secretary, Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai, Tamil Nadu, has conceived, designed and meticulously executed 108 Centenary Events throughout Tamil Nadu during the Centenary Year (2015-2016) of Prof. Dr. N Subbu Reddiar who served the cause of education for 65 years andwritten 135 books in various fields (100 books after retirement).**



**Biswaroop Roy Chowdhury**
Chief Editor
**India Book of Records**

**Date: March 19, 2018**

*India Book of Records is registered with the Government of India with RNI no. HARENG/2010/32259.*

*India Book of Records is affiliated to Asia Book of Records and follows Asian Protocol of Records (APRs) as per the consensus arrived at the meeting of the Chief Editors of National Record Books, Ho Chi Minh City, Vietnam.*


ISBN 978-81-939270-3-8
9 788193 927038

